SRI VAISHNAVA SAMPRADAYA GRANTHAMALA—No. 1

Editor :—PROF. P. V. RAMANUJASWAMI, M.A.

ALVARS'

# MANGALASASANA PASURAMS

ON

TIRUV NGADAMUDAIYAN

EDITED WITH COMMENTARY

BY

NYAYA VEDANTA SAHITYA SIROMANI, VIDVAN

T. K. V. N. SUDARSANACHARYA

Assistant Editor

Sri Vaishnava Sampradaya Granthamala

*Sri Venkatesvara Oriental Institute*

PUBLISHED UNDER THE AUTHORITY OF

SRI C. ANNA RAO, B.A.

EXECUTIVE OFFICER

*on behalf of the Board of Trustees, T. T. Devasthanams, Tirupati*




PRINTED AT

TIRUMALA-TIRUPATI DEVASTHANAMS PRESS

TIRUPATI

1953

[Price: Rs. 3

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தமாலை - நெ. 2.

பதிப்பாளர்:—ஸ்ரீ ப. வேம். ராமாநுஜஸ்வாமி, எம், எ.
டைரெக்டர், ஸ்ரீ வேங்கடேச்வரக் கீழ்க்கலை ஆராச்சிக் கழகம்.

ஆழ்வார்கள் அருளிச்செய்த

# திருவேங்கடமுடையான்

# மங்களாசாஸன பாசுரங்கள்

திருப்பதிக் கீழ்க்கலை ஆராச்சிக் கழகத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய
நூல்களின் உதவிப் பதிப்பாளராகிய
ஸாஹித்ய ந்யாய வேதாந்த சிரோமணி
தி. கு. வேம். ந. ஸுதர்சனாசார்ய ஸ்வாமிகளால்
எழுதப்பட்ட உரையுடன்.

திருமலை - திருப்பதி தேவஸ்தான அறநிலையக்கழகத்தின் சார்பாக
செயல்துறைத் தலைவர்
ஸ்ரீ செ. அண்ணாராவ் பி. எ., அவர்களின்
உத்திரவின்படி

திருமலை - திருப்பதி தேவஸ்தான அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

1953

ஸ்ரீ:
ஸ்ரீரஸ்து
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமத்ப்யோ திவ்யஸூரிப்யோ நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை.

இந்த நூலானது—நமது திருவேங்கட முடையான் ஆராய்ச்சி கல்லூரியில் ஏற்பாடு செய்யப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்த மாலையில், தமிழ் லிபியில் வெளிவந்த நூல்களில் முதற்முதல் புத்தகம். இஃது, திருவேங்கட முடையான் விஷயமாக, மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் திருவாய் மலர்ந்தருளின, மங்களாசாஸன பாசுரங்களும், உரையும்.

"திருவேங்கடம்" என்பது திருமால் உகந்தருளின நிலங்களாகிய திவ்ய திருப்பதிகளில் மிகவும் சிறந்த திவ்ய திருப்பதியாம்.

## எம்பெருமானின் மூர்த்தி பேதங்கள்.

எம்பெருமான்—பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரங்கள்—என்னும் ஐந்து வகைகளால் அவ்வவ நிலங்களில் எழுந்தருளியிருந்து, இருள்தருமா ஞாலமாகிய இந்த ஸம்ஸாரத்தில் ஈடுபட்டுத் துன்பப்படும் தனது அடியார்களாகிய சேதநர்களைக் காப்பாற்றுவதற்காக முயற்சியைச் செய்தருளுகிறான்.

[1] "ஸவா ஏஷ புருஷ: பஞ்சதா பஞ்சாத்மா" என்று ச்ருதியிலும் இந்தவகைகள் சொல்லப் பட்டுள்ளன. அவைகளில்—

## பரஸ்வரூபம்.

பரஸ்வரூபமாவது—சுத்த ஸத்த்வமயமான 'ஸ்ரீ வைகுண்ட'மென்னும் பரம பதத்திலே நித்ய ஸூரிகளாலும், முக்தர்களாலும் அநுபவிக்கப்படும் திருமாமகள் கேள்வனின் திருவுருவம்.

1. 'ஸ:—எல்லா உலகங்களுக்கும் காரண பூதனாயிருக்கும், ஏஷ எவ புருஷ:—இந்தப் பரம புருஷன்தான். பஞ்சதா - பரம், வ்யூஹம்—முதலியவகைகளாலும், பஞ்சாத்மா - விஷ்ணு, புருஷன், அநிருத்தன்—முதலியவகைகளாலும் கூடியிருக்கிறான்.

## வ்யூஹஸ்வரூபம்.

வ்யூஹமாவது—திருப்பாற் கடலிலே, பிரமன், சிவன், இந்திரன்—முதலான தேவர்களால் ஸேவிக்கப்படும் மூர்த்தி விசேஷம். இது—விஷ்ணு, புருஷன், ஸத்யன், அச்யுதன், அநிருத்தன்—என்று ஐந்து வகைகளோடு விளங்குகிறது.

## விபவஸ்வரூபம்.

விபவமாவது:—துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவும், சிஷ்டர்களைக் காப்பாற்றுவதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் எம்பெருமான் ஸ்வீகரிக்கும், இராமன், கிருஷ்ணன்—முதலான, அவதாரங்கள்.

## அந்தர்யாமிஸ்வரூபம்.

அந்தர்யாமித்வமாவது:—சேதநங்களிலும், அசேதநங்களிலும் எல்லாப் பொருள்களிலும், உள்ளே புகுந்து, எங்கும் பரவியிருக்கும் ஸ்வரூபம். "இராமட மூட்டுவாரைப் போலே, உள்ளே பதிகிடந்து ஸத்தையை நோக்கிக் கொண்டு போரும்" என்று ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்தார்.

## அர்ச்சாவதாரம்.

அர்ச்சாவதாரமாவது:—அடியார்களுக்கு அபிமதமான வஸ்துவிலே விக்ரஹமாய், எல்லோருக்கும் ஸுலபமாய், மநோரஞ்சகமாய், அடியார்கள் பக்தியுடன் ஸமர்ப்பிக்கும் கைங்கர்யங்களைத் திருவுள்ளம் பற்றி, மிகவும் மகிழ்ந்து, அவர்களுடைய அபேக்ஷிதங்களை பூர்த்தி செய்வதற்காக கோயில்களிலும், வீடுகளிலும், எல்லாக் காலங்களிலும், எல்லா விடங்களிலும், எல்லாராலும் தொழப்படும் எம்பெருமானின் திருவுருவம்.

## அர்ச்சையின் பெருமை.

இவ்வைந்து வகைகளிலும், அர்ச்சாவதாரம் தான்—மிகவும் எளியதாய், கண்டு பற்றுகைக்கும், தங்கள் குறைகளை முறையிடுவதற்கும், அணுகுவதற்கும், அநுகூலமாய்ப் பயன் படுகிறது.

" பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே. ஆழ்வார்கள் பல விடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே. " பூர்ணம்" என்கையாலே எல்லாக் குணங்களும் புஷ்கலங்கள். ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள், இருட்டறையில் விளக்குப்போலே, ப்ரகாசிப்பது இங்கேயிறே. பூர்த்தியையும், ஸ்வாதந்

ர்யத்தையும் குலைத்துக்கொண்டு, தன்னை யநாதரிக்கிறவர்களைத் ாதரித்து நிற்கிற விடம்.

பூகத ஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரண ஜலம்போலே ரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறு போலே விப ங்கள். அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்.

இதுதான், சாஸ்த்ரங்களால் திருத்த வொண்ணாதே, விஷயாந் ரங்களிலே மண்டி, விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்யத்தை ாற்றி, ருசியை விளைவிக்கக் கடவதாய், ருசிபிறந்தால் உபாயமாய், பாய பரிக்ரஹம் பண்ணினால், போக்கியமா யிருக்கும்" என்று அர்ச்சாவதாரத்தின் சீர்மையை ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர் வெகு றப்பாக விளக்கி அருளிச் செய்திருக்கிறார்.

## விக்ரஹாராதனத்தின் கடமை.

விக்ரஹாராதனத்தைப் பல மதத்தினரும் ஒப்புத்துக்கொண்டு இருக்கிறார்கள். வேதத்திலும்:—[1] "அத்ப்ய: ஸம்பூத: ப்ருதிவ்யை ஸாச்ச" [2] "ஹ்ருதா மனீஷா மனஸாऽபி க்லுப்த:" [3] "யுக்தக்ராவா

1. अद्भ्यस्सम्भूतः पृथिव्यै रसाच्च. அத்ப்ய:—ஜலத்தினுடையவும், ப்ரு திவ்யை - பூமியினுடையவும், ரஸாத் - ஸாரமான பாகத்தினால், ஸம்பூத: - உண் டான சிலையானது, விச்வகர்மண: - நான்முகனால், ஸமவர்த்தத - நன்றாக செய்யப்பட்டது. (நான்முகனின் ஸங்கல்பத்தால் பகவானின் திவ்ய மங்கள விக்ரஹ மண்டப ப்ராகாராதிகளின் நிர்மாணத்துக்கு உசிதமான சிலை (கல்லு) உண்டாயிற்று - என்று - கருத்து.) தஸ்ய - அந்த சிலைக்கு, த்வஷ்டா - சிற்பி யானவன், ரூபம் - கர சரணாதிகளோடு கூடிய மனோஹரமான விக்ரஹத்தை, விதததத் - நிர்மித்தான், தத் - அந்த நிர்மாணமானது, புருஷஸ்ய - பரம புருஷ னுடைய. அகரே - உண்டாகப்போகும். விச்வம் - ப்ரஸித்தமான. ஆஜா நம் - ஆவிர்பாவத்திற்கு காரணமா யிருக்கிறது.

2. न सन्दृशे तिष्ठति रूपमस्य, न चक्षुषा पश्यति कश्च नैनम ; हृदा मनीषा मनसाऽभिक्लृप्तो य एतद्विदुरमृतास्ते भवन्ति. அஸ்ய - இந்த பகவானுக்கு, ரூபம் - ரூபமானது. ஸந்த்ருசே - த்ருஷ்டி விஷயமாய், ந திஷ்டதி - இருப்பதில்லை, கச்சித் - எவனும், ஏநம் - இவனை. சக்ஷுஷா - கண்ணால், ந பச்யதி - பார்க்க முடியாது. ஆகிலும், ஹ்ருதா - ச்ருதி ப்ரமாணத்தாலும், மனீஷா - மந் வாதி ஸம்ருதிகளாலும், மநஸா - பார்கவாதி பகவத் சாஸ்த்ரங்களாலும், அபிக் லுப்த: - பிம்ப ரூபமாக. யே - எவர்கள், விது: - தெரிந்துக் கொள்ளுகிறார் களோ, தே - அவர்கள், அம்ருதா: - மோக்ஷத்தை அடைவார்கள்.

3. यतो वीरः कर्मण्यः सुदक्षो युक्तग्रावा जायते देवकामः. வீர: - பகவான், கர்மண்ய: - அர்ச்சனாதிகளால் ஆராதிக்கப்பட்டு, ஸுதக்ஷ: - பக்தர்களின் அபீஷ்டங்களை அருளுமவனாய், தேவகாம: - கிரீடிக்க வேணுமென்று திரு வுள்ளம்பற்றி, யுக்தக்ராவ: - சிலா மூர்த்தியாக, ஜாயதே - ஆகிறான்.

ஜாயதே தேவகாம:" [1] "அச்மாணம் ஆகணம் ப்ரபத்யே" முத லான வாக்யங்களாலும், ஸ்ம்ருதிகளில் :—[2] "ஏதத்ரூபம் ப்ரதிஷ்டாப்ய சுத்தயா சிலயா ந்ருப!" [3] "ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ:" முதலான வாக்யங்களாலும் விக்ரஹாராதனம் சொல்லப்பட்டுள்ளது. [4] "ப்ரவ: பாந்த மந்தஸோ ऽதியாய தே" [5] "பக்த்யா பகவந்தம் நாராயணம் அர்ச்சயேத்" [6] "மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு" என்னும் ப்ரமாணங்கள் "எம்பெருமானுடைய அர்ச்சனம் மிகவும் உபாதேயம்"—என்று அறுதி யிடுகின்றன.

## திவ்ய திருப்பதிகளும்—திருவேங்கடமும்.

திருமாலின் திவ்ய திருப்பதிகள் 108-என்று ப்ரஸித்தமான பொருள். அவைகளில்,—கோயில் (ஸ்ரீரங்கம்)திருமலை, (திருவேங்கடம்) பெருமாள் கோயில் (காஞ்சீபுரம்) என்னும் மூன்று திருப்பதிகள் முக்யமானவை. அவைகளிலும், நடுநாயகமாய், மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் தஞ்சமாயிருப்பதுமன்றி, ஜாதி மத வித்தியாஸமில்

1. अश्मानमाघणं प्रपद्ये. ஆகணம் - சில்பியினால் சாஸ்த்ரோக்தமாக செய்யப்பட்டு, பகவத் சாஸ்த்ரங்களின் விதியைக் கொண்டு ப்ரதிஷ்டாதிகளை செய்யப்பட்ட, அச்மாநம் - சிலா மூர்த்தியான பகவானை. ப்ரபத்யே - சரணம்புகுகிறேன்.

2. एतद्रूपं प्रतिष्ठाप्य शुद्धया शिलया नृप ! तस्मै देह्यखिलान् भोगान् पूर्णो भूत्वा सुपुष्कलान्, अप्राकृताङ्गो विरजाः सात्त्विकोऽयमिति स्मरन् – इति पाद्मे ।

3. सुरूपां प्रतिमां विष्णोः प्रसन्नवदनेक्षणाम्
कृत्वाऽऽत्मनः प्रीतिकरीं सुवर्णरजतादिभिः ।
तामर्चयेत् तां प्रणमेत् तां नमेत् तां विचिन्तयेत्
विशत्यपास्तदोषस्तु तामेव ब्रह्मरूपिणीम् ॥ इति विष्णुधर्मे.

4. प्र वः पान्त मन्धसो धिया ते महेशूराय विष्णवे चार्चत । அந்தஸ: - ஆஹாராதிகளால் வ்ருத்தியடையும் கரணகளேபரங்களை ஸ்ருஜித்து, ப்ரயாந்தம் - ரக்ஷிக்குமவனை. மஹேசூராய - ஸர்வ சக்தனை, விஷ்ணவே - பகவானை, வ: - உங்களுக்கு, தியாய - மோக்ஷப்ராப்திக்காக, அர்ச்சத - பூஜியுங்கள். என்று ருக்வேதத்தில் சொல்லப்பட்டது.

5. अथाग्नौ नित्यहोमान्ते विष्णोर्नित्यार्चा सर्वदेवार्चा भवति .... भक्त्या भगवन्तं नारायणमर्चयेत् – इति वैखानससूत्रे. (வைகாநஸ ஸூத்திரம்.)

6. मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ गीतासु (பகவத்கீதை)

லாமல், எல்லா நாட்டாராலும், எப்பொழுதும் தொழப்படுகிறது—இந்தத் திருவேங்கடம்.

## திருவேங்கடத்தின் பெருமையைக் கூறும் ப்ரமாணங்கள்.

இந்தத் திருவேங்கடமும், திருவேங்கட முடையானின் பெருமையும், வடமொழியில்:—வேத வாக்யங்களிலும், ஆகம க்ரந்தங்களிலும், புராணங்களிலும், இதிஹாஸங்களிலும், காவ்யங்களிலும், ஸ்தோத்ரங்களிலும், தென் மொழியில் :—சங்க நூல்களிலும், இலக்கண நூல்களிலும், இதர நூல்களிலும் சாஸனங்களிலும் ஆழ்வார்கள் திவ்ய ப்ரபந்தங்களிலும், ஆந்திரபாஷையில்:—சாஸநங்களிலும், காவ்யங்களிலும், இலக்கண நூல்களிலும், ஸ்தோத்திரங்களிலும் வர்ணிக்கப்பட்டிருக் கின்றன.

### வேதமும்—திருவேங்கடமும்.

[1] அராயிகாணே விகடே கிரிம் கச்ச ஸதான்வே
சிரிம்பிடஸ்ய ஸத்வபி: தேடபிஷ்ட்வா சாதயாமஸி.

என்று ருக்வேதத்தில் திருவேங்கடமும், அதின் ஸ்வாமியான ஸ்ரீநிவாஸனும் வர்ணிக்கப்பட்டு இருக்கிறார்கள்.

இந்த ஸூக்தத்திற்கு :—

ஹே அராயி - ஏழையே! காணே - குருடனே. விகடே கிரிம்-வேங்கடாசலத்தை. கச்ச - அடைவாயாக. ஸதான்வே - எப்பொழுதும் அந்வேஷணத்தைப்பண்ணும் அவ்விடத்தைச் சென்று, அசஞ்சலமான த்யானத்தைப் பண்ணுவாயாக. சிரிம்பிடஸ்ய - ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்குபீடமான ஸ்ரீநிவாஸனுடைய. ஸத்வபி: - ஸாத்விக குணங்களான. தேபி: - அந்த தயா வாத்ஸல்யாதி கல்யாண குணங்களால். சாதயாமஸி - உன் பாபங்களை நீக்கி பேரின்பத்தைத் தருகிறோம்—என்று அர்த்தம்.

வேதத்துக்கு நிருக்தியை யெழுதின யாஸ்கர், இந்த அர்த்தத்தை யெழுதவில்லையே ? என்றால்—அவருக்கு இது அநபிமத மென்று சொல்ல முடியாது,

1. अरायि ! काणे ! विकटे गिरिं गच्छ सदान्वे ।
शिरिम्बिटस्य सत्त्वभिः तेऽभिष्ट्वा चातयामसि ॥
(ऋग्वेदे १०-१५३-१)

ஏனென்றால் :—

[1] அதோ யத்தாரு ப்லவதே ஸிந்தோ: பாரே அபூருஷம்.
ததாரபஸ்வ துர்ஹண: தேந கச்ச பரஸ்தரம். (10-155-3)

என்னும் ச்ருதிக்கு ஜகந்நாத க்ஷேத்ரபரமாக அர்த்தத்தை அவரே எழுதியிருக்கிறார். ஆகையால், அவருக்கு இது அநபிமதம்—என்று சொல்ல முடியாது. மேலும்,

ஏவம் ஸ்ரீக்ருஷ்ணரூபேண க்ரீடித்ோ வெங்கடாசலே
"அராயி காணே விகடே கிரிம் கச்சே" தி தம் விது:
ஸோऽயம் வேதமய: ஸாக்ஷாத் கிரீச: பங்கஜாசல:.

என்று வேங்கடாசல புராணத்தில் இந்த அர்த்தம் சொல்லப் பட்டிருக்கிறது. ஆக, இந்த ச்ருதி திருவேங்கட முடையான் விஷய மானதே—என்பதில் ஸந்தேஹமே யில்லை.

ரயி: ககுத்மான் விதகத்வி நஷ்டம் ரயிவத்விதானம்
தஸ்மை ககுத்ரே விகடாய பித்ரே ஸ்வாஹா.

என்று பாரமாத்மிக—உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு.

[2] ரயி: - ஐச்வர்ய ஸ்வரூபனும் (பெருஞ்செல்வ ஸ்வரூபன்—என்று கருத்து.) ககுத்மான் - வ்ருஷபாசலத்தில் நித்யவாஸம் செய்பு மவனும் (அல்லது, சிறந்தவனும்), விதகத்விநஷ்டம் - எல்லோருக் கும் எல்லா வரங்களையும் கொடுக்குமவனும். ரயிமத்விதாநம் - ருக்-யஜுஸ்-ஸாம-அதர்வணங்களாகிற வேதங்களில் (ஸத்புருஷர்களுக்கு ஸம்பத்து - வேதங்களே தான் "ஸாஹி ஸ்ரீ ரம்ருதா ஸதாம்" என்று சொல்லப் பட்டிருக்கிறது) ப்ரஸித்தனானவனும், ககுத்ரே - வ்ருஷபா சலத்தின் அக்ரபாகத்தில் இருக்குமவனும். விகடாய - வேங்கடா சலத்தி லிருக்கும் பெருமானுக்கு. ஸ்வாஹா - என் ஆத்மாவை ஸமர்ப்பிப்பேன்—என்று பொருள்.

---

1. अदो यद्दारु प्लवते सिन्धोः पारे व पूरुषम् ।
तदारभस्व दुर्हणः तेन गच्छ परस्तरम् ॥

(ऋग्वेदे ७-१५३-३)

2. रयिः ककुद्मान् विदधत् विनष्टं रयिवद्विधानम् ।
तस्मै ककुत्रे विकटाय पित्रे स्वाहा ॥

(पारमात्मिकोपनिषत्)

## புராணங்களும்—வேங்கடாசலமும்.

"அராயி காணே" என்கிற வேதவாக்யத்திற்கு இதுவே தான் அர்த்த மென்று புராணத்தில் நிர்வசனம் இருக்கிறது.

"ஏவம் ஸ்ரீக்ருஷ்ண ரூபேண க்ரீடிதோ வேங்கடாசலே
அராயி! காணே! விகடே கிரிம் கச்சேதி தம் விது:
ஏவம் வேதமய: ஸாக்ஷாத் கிரீச: பங்கசாசல:" என்று.

மேலும், ஸ்ரீ வேங்கடாசலத்தைப்பற்றி பன்னிரண்டு புராணங்களில் சொல்லப்பட்டு இருக்கிறது. அந்த பாகங்களை யெல்லாம் சேர்த்து "ஸ்ரீவேங்கடாசல மஹாத்ம்யம்" என்ற பெயரால் வெளியிட்டு இருக்கிறார்கள். பவிண்டி—வேங்கடத்துறைவர் - என்பவர் இதைச் சேர்த்தார் - என்று சிலர் சொல்லுகிறார்கள்.

"வேங்கடாசல இதிஹாஸமாலை" என்று ஸ்ரீமான் அநந்தாழ்வான் ஸாதித்ததாக ஒரு க்ரந்தத்தை வெளியிட்டிருக்கிறார்கள். "திருமலை ஒழுகு" என்னும் தமிழ்க்ரந்தமும் ஒன்று இருக்கிறது; அதை கூடிய சீக்கிரத்தில் வெளியிடப் போகிறோம்.

## சாஸநங்களும்—சரித்திரங்களும்.

திருமலைத் திருப்பதி தேவஸ்தானங்களிலிருக்கும் கல்வெட்டுகளை எல்லாம் சேர்த்துச் சமைத்து, ஸ்ரீ ஸாது ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் ஏழு ஸம்புடமாக வெளியிட்டு இருக்கிறார். ஸ்ரீமான் S. க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்கள், இரண்டு ஸம்புடங்களில் திருப்பதியின் சரித்திரத்தைப்பற்றி எழுதி யிருக்கிறார். ஸ்ரீமான் T. K. T. வீரராகவாச்சாரியர் (முதல் ஆசாரிய புருஷர்) திருப்பதியைப்பற்றி எழுதி யிருக்கிறார்.

## ஸ்ரீ வேங்கடாசலமே—திருவேங்கடம்.

வடமொழியில் 'வேங்கடம்' மென்னும் சொல்லுதான் தமிழில் 'வேங்கடம்' ஆகிவிட்டது. 'ஸ்ரீ' என்பது 'திரு' என்று ஆகி விட்டது. "வேங்கடம்" என்பதற்கு இரண்டுவகையாக அர்த்தத்தைப் புராணங்களிலேயே காணலாம். வாராஹ புராணத்தில் :—

[1] "ஸர்வ பாபானி வேம் ப்ராஹு:, கட: தத்தாஹ உச்யதே.
ஸர்வபாபபஹாரித்வாத் வேங்கடாத்ரி ரிதீரித:"

---

1. सर्वपापानि वें प्राहु: कटस्तद्दाह उच्यते ।
सर्वपापपहारित्वात् वेङ्कटाद्रिरितीरित: ॥ (वारा–पु)

என்று, "வேம்" என்கிற சொல்லுக்கு "எல்லாப் பாபங்களும்" என்று, பொருள்—என்றும், 'கட' சப்தத்திற்கு எரித்தல் என்று பொருள்—என்றும், நிரூபிக்கப்பட்டு யிருக்கிறது. வாமன புராணத்தில் :—

[1] வகாரோऽம்ருத பீஜம் து, கட மைச்வர்ய முச்யதே,
அம்ருதைச்வர்ய ஸங்கத்வாத், வேங்கடாத்ரி ரிதி ஸ்ம்ருத:.

என்று. "வேம்" என்ற சொல்லுக்கு 'அம்ருதம்' என்றும் "கட" என்பதற்கு 'ஐச்வர்யம்' என்றும் - பொருள் கூறப்பட்டது. ஸ்ரீநம்மாழ்வார் "வேம் கடங்கள்" என்னும் பாசுரத்தில்—கடங்களெல்லாம், வேம் - தீயினில் தூசாகும் - என்று பொருள் கூறினார்.

## திருவேங்கட முடையானின் பெருமை.

[2] "திருவேங்கடத்தைப் போல வேறொரு திவ்ய திருப்பதி ப்ரஹ்மாண்டத்தில் எங்கும் இல்லை"—என்றும், "திருவேங்கடமுடையானுக்கு நிகரான தெய்வமெதுவும் இல்லை"—என்றும், "கலியுக தெய்வம் திருவேங்கட முடையானே"—என்றும் வாராஹ புராணத்தில் சொல்லப்பட்டு இருக்கிறது.

## ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஆசார்யர்களும் திருவேங்கடமுடையானும்.

ஸ்ரீமத் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைப் பலவகைகளால் நிலை நாட்டின ஸ்ரீபகவத் ராமாநுஜாசார்யர், தமது ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகத்தில் [3] "ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே", என்று திருவேங்கடமுடையானைத் தொழுவதுமன்றி, வேதார்த்த ஸங்க்ரஹத்தைத் திருவேங்கடமுடையான் திருமுன்பே தான் உபந்யஸித்தார். ஸ்ரீவேதாந்தாசார்யரும், திருவேங்கட முடையான் திருவருளைப்பற்றி 'தயா

---

1. वकारोऽमृतबीजं तु कटमैश्वर्यमुच्यते ।
अमृतैश्वर्यसंघत्वात् वेङ्कटाद्रिरिति स्मृतः ॥ (वाम—पु)

2. वेङ्कटाद्रिसमं स्थानं ब्रह्माण्डे नास्ति किञ्चन ।
वेङ्कटेशसमो देवो न भूतो न भविष्यति ॥
कृते वरदराजस्तु त्रेतायां रङ्गनायकः ।
द्वापरे च जगन्नाथः कलौ वेङ्कटनायकः ॥ (वाम—पु)

3. ब्रह्मणि श्रीनिवासे । (श्री. भा. मं. श्लोके)

சதகம்" என்னும் ஸ்தோத்திரத்தில் "ப்ரபத்யே தம் கிரிம்" என்று திருவேங்கடத்தையும், "கம ப்யாநவதிம் வந்தே கருணாவருணாலயம்" என்று திருவேங்கட முடையானையும், ஸ்ரீ ஸ்துதியில் தாயாரையும் அடைக்கலம் புகுந்தார். இன்னமும் அநேக க்ரந்தங்களில் திரு வேங்கட முடையானைப் பாடியிருக்கிறார். அதிகார சங்க்ரஹத்தில்:—

கண்ணனடி யிணையெமக்கு காட்டும் வெற்புக்
கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்புத்
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்புத்
தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்புப்
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்புப்
பொன்னுலகிற் போகமெல்லாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே.

என்றும் திருவேங்கடத்தைச் சிறப்பித்துள்ளார். திருவரங்கத் தமுதனார், இராமாநுஜ நூற்றந்தாதியில், இரண்டு பாசுரங்களில் திரு வேங்கடத்தைக் கூறியுள்ளார். வேறு பல ஆசார்யர்களும் இப்பெரு மானைப்பற்றிப் புகழ் நூல்களும், காவியங்களும், காப்புச் செய்யுட் களும் இயற்றியுள்ளனர்.

விசிஷ்டாத்வைதமும், திருவேங்கட முடையானும் பிணைக்கப் பட்டிருக்கின்றார்கள். விசிஷ்டாத்வைதத்தில் திருவேங்கட முடை யான் விளங்குகின்றான்; திருவேங்கட முடையானால் விசிஷ்டாத் வைதம் விளங்குகின்றது. இதனை, ஆழ்வார் பாசுரங்களில் பரக்கக் காணலாம்.

## திருவேங்கடமும்—தெலுங்கு நூல்களும்,

ஆந்திர நூல்களில் இத் திருவேங்கடத்தையும், திருவேங்கட முடையானையும் பற்றிய வரலாறு (ப்ரசஸ்தி) எந்தக் காலத்திலிருந்து வருகிறது என்பது சொல்லுவதற்குத் தகுந்த ஸரியான பழைய ப்ர மாணங்கள் ஒன்று மில்லை.

ஆந்திர ஸாஹித்யமே, கிரிஸ்து சகத்தின் 11-வது சதாப்தியில் "ஆந்திரவாகநுசாஸநர்" என்று ப்ரஸித்தியை யடைந்த ஸ்ரீ நன்னய பட்டாரகரைத் தொடங்கித்தான் வந்ததாகத் தோன்றுகிறது. அவர் தான் ஆந்திர இலக்கியத்துக்கு ப்ரவர்த்தகர்களில் முதல்வரென்று

தெரியவருகிறது. அதற்கு முந்தியிருக்கும் க்ரந்தங்கள் கிடைக்க வில்லை. ஆகையினால், அதற்கு முந்தித் தெலுங்கு நூல்களில் திரு வேங்கடத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு ஆதார மொன்று மில்லை. நன்னய பட்டர் காலத்திலும், திக்கன காலத்திலும் கூட திருவேங்கடத்தைப் பற்றிய குறிப்புக்கள் எங்கும் கிடையாது.

முதல் முதல் தெலுங்கு பாஷையில் எழுதப்பட்ட முதல் சாஸ னம்[1] (Inscription) விஜயநகர ராஜாவான மஹாமண்டலேச்வ ராகிய மீஸரகண்ட மங்கிதேவ மஹாராஜர் கொடுத்ததாகத் தெரியவரு கிறது. இந்தச் சாஸனம் திருப்பதி தேவஸ்தானம் கல்வெட்டுகளில் 179 - நெம்பரை உடையதாயிருக்கிறது.

தெலுங்கு மொழியில் 'திருமலை தேவ'ருடைய முதல் ப்ரசங்கம் இங்கு காணப்படுகிறது. சுமார் ஏறக்குறைய இதே காலத்தினராகிய 'சம்புதாஸன்' என்று புகழைப் பெற்ற எர்ராப்ரகட என்பவர் (ஆந் திர கவித்ரயத்தில் மூன்றாவது கவியானவர்) தம் ந்ருஸிம்ஹ புராணத் தில் இதை யொரு புண்ய க்ஷேத்ரமாகக் கூறினர். 'காலவன்' என் னும் மஹர்ஷி செய்த யாத்திரைகளை வரிசையாகச் சொல்லிக் கொண்டுவந்து "ஸ்ரீ வேங்கடாசல ஸ்த்தாயி கொலிசெ" (திருவேங் கட மாமலையில் மன்னியிருக்கும் தேவனை தொழுதார்—என்று சொல்லி யிருக்கிறார். இதுதான்—தெலுங்கு நூல்களில் முதல் முத லான குறிப்பாகும். ஆனால், இதில் பெருமாளுடைய விசேஷ சிறப் புகள் ஒன்றும் தெரியவில்லை.

திருவேங்கடத்திற்கு வெகு சமீபத்திலிருக்கும் ப்ராந்தத்தில் இருக்கும் பாகநாட்டில் இருந்த கவிகளான—திக்கன, கேதன, மஞ்சன, மாரன—முதலானோர் யாரும், எங்கும், இந்த வெங்கடா சலத்தைப்பற்றி ஒன்றும் நினைக்கவே யில்லை. காரண மொன்றும் தெரியவில்லை. 12, 13-நூற்றாண்டுகளில் தோன்றிச் சிறந்திருந்த வீரசைவ மதமானது ஆந்திரத்தில் குடிகொண்டதால், விஷ்ணுக்ஷேத் திரமான இதற்கு ப்ரஸித்தி குறைந்து இருக்கும் என்று தெரிய வருகிறது.

---

1. "శ్రీ విజయాభ్యుదయ శకవరుసంబులు 1281 అగునేంటి, వికారిసంవచర ఆషాఢ శుద్ధదశమి మందవారాన, స్వస్తి శ్రీ మహామండలేశ్వర మీసరగండ మంగదేవ మహారాజులు, తిరుమలదేవరకు పటాదిపగగు సువర్ణాది సిఖరమును ఎతించెను మంగళం మహా శ్రీ శ్రీ శ్రీ"

15 சதாப்தியில்—ஸாளுவநரஸிம்ஹராயர் (கி. பி. 1465-1468) காலத்திலிருந்த தாள்ளபாக கவிகளாகிய அந்நமாசாரியர், சின்ன திருவேங்கட நாதர் முதலான கவிகள், திருவேங்கடத்தையும், அதன் நாதனையும் பற்றி மிகவும் ப்ரசாரம் செய்தார்கள். அவர்கள் செய்த தொண்டு மிகவும் அமூல்யமானது.

கி. பி. 1468 - 1478 வரையில் கர்ணாடக ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணிய விரூபாக்ஷ ராயனுடைய ஸேநாதிபதியாயிருந்த ஸாளுவ நரஸிம்ஹ ராயர், 1478-ம் வருஷத்தில் அவருடைய ராஜ்யத்தை ஆக்ரமித்து, 1487-ம் வரை ஸ்வதந்த்ரமாக ஆட்சி செய்தாரென்று தெரியவருகிறது. இந்த ஸாளுவ நரஸிம்ஹ ராயருக்கு, அந்தக் காலத்தில், தாள்ளபாக அந்நமாசார்யர், குருவாகவும், நண்பராகவும் இருந்ததாகத் தெரியவருகிறது. அவருடைய உபதேசத்தைக் கேட்டு, ஸ்ரீ வேங்கடாசலபதியின் திருவருளால் சத்ருக்களை வென்று, விஜயநகர ஆட்சியைக் கைப்பற்றினார்; திருவேங்கடமுடையானுக்கும் அநேக கிராமங்களைத் தானம் செய்தார்.

இப்படி, ஸ்ரீ அந்நமாசாரியர் மூலமாக கடப்பை மண்டலத்தில் தாள்ளப்பாக்க கிராமத்திற்கு சமீபத்திலுள்ள 'டங்குடூரு'க்கு அதிபதியாயிருந்து, க்ரமமாக கர்ணாட ராஜ்யாதிபதியான நரசிங்கராயருடைய கீர்த்தி ப்ரதாபங்களுடன், அவருக்கு இஷ்ட தெய்வதமான திருவேங்கட முடையானின் பெருமையும், புகழும் தெலுங்கு தேசத்திலும் மிக்க பரவியது.

பில்லல [1] மர்ரி பின வீரபத்ரனுடைய ஜைமினி புராணத்தாலும், நந்திமல்லய்ய, கண்டஸிங்கய்ய செய்த [2] வராஹ புராணத்தாலும் ஸாளுவ நரஸிங்கராயர் திருவேங்கட முடையானுடைய ஸேவையில் சிறந்தவர்—என்பது தெரியவருகிறது.

ஸாளுவ நரஸிம்ஹ ராஜாவுக்கு ஸேனநாயகனாயிருந்த துளுவ நரஸிங்கராயர் 1487-ம் வருஷத்தில் கர்ணாடக ராஜ்யாதிபதியானார். இந்தத் துளுவ நரஸிம்ஹ தேவராயர்—"ஆந்த்ர போஜ ராஜன்" என்று புகழ்பெற்ற ஸ்ரீ கிருஷ்ண தேவராயருக்குத் தகப்பனார். ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் திருவேங்கடமுடையானைத் தனக்கு இஷ்ட தெய்வமாகச் சொல்லிக் கொண்டு, அவனைப் பாட்டுடைத் தலைவனாக்கி, ப்ர

1. శ్రీ వేంకటాద్రినాథ దయా వర్ధితరాజ్య (జైమి. భా. 5. ఆ. 1.)
2. శ్రీ వేంకటాద్రిపతి సంసేవా హేవాక పాకనిపుణ (వరా. పు. 2ఆ-1)

ஸித்தமான "ஆமுக்தமால்யதை" என்னும் ஆந்திர ப்ரபந்தத்தைத் திருவேங்கட முடையானுக்கே உரிமையாக்கினர். இப்படிச் செய்தவரில் முதல்வர் ஸ்ரீ க்ருஷ்ண தேவராயரேதான்.

இவர் வைஷ்ணவ மதஸ்தராய், வைஷ்ணவ மதத்துக்கு ஏற்ற "ஆண்டாள்" கதையையே யெடுத்துக் கொண்டு, இந்தப் ப்ரபந்தத்தை யெழுதினர். ஆந்திர பாஷையில் வைஷ்ணவக் கதையுங் கொண்டு, திருவேங்கட முடையானுக்கே உரிமையாக்கப் பெற்ற மிகச் சிறந்த ப்ரபந்தம் இதுவேதான்—என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. இதற்கு முந்தி தாள்ளபாகத்தாருடைய க்ரந்தங்கள் இருந்தன; ஆகினும், அவை உலகவழக்கு நடையில் இருந்தனவேயொழிய, இப்படிப்பட்ட இலக்கிய ப்ரபந்தங்க ளல்ல. அவைகளும் 15-நூற்றுண்டில் தான் உண்டானவை.

இப்படி, தெலுங்கு இலக்கியங்களில் திருவேங்கட முடையான் விஷயத்தையும், ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தையும் இலக்கிய வடிவத்தில் நிலை நாட்டினவர்—ஆந்திர ஸாம்ராஜ்ய துரந்தரராகிய ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் தான்—என்பது திண்ணம்.

## ஸ்ரீ கிருஷ்ணதேவராயரும்—ஆந்திர விஷ்ணுவும்.

கிரீஸ்து சகத்தின் ஆரம்ப ஸமயத்தில் இருந்த சாதவாஹநர்களுடைய ஆந்திர ஸாம்ராஜ்யத்தோடு, அவர்களுடைய தெய்வமான ஆந்திர விஷ்ணுவையும் ப்ரகாசப் படுத்தினவர்—ஸ்ரீ க்ருஷ்ணதேவராயரே தான். இவர் அத்துடன் நிற்காமல், "ஆந்திர தேசத்தில் 'ஸ்ரீகாகுள' க்ஷேத்திரத்தில், அன்று முதல் இன்று வரையிலும், மிகவும் விபவத்தோடு வீற்றிருக்கும் அந்த ஆந்திர விஷ்ணுவேதான்—திருவேங்கடத்தில் திருவேங்கட முடையானாக வீற்றிருக்கிருன்"—என்றும் இந்தச் செய்தியைத் தனக்கு ஸ்வப்பனத்தில் அந்த ஆந்திர விஷ்ணுவே சொன்னதாகவும் எழுதியிருக்கிருர்.

## ஆந்திர விஷ்ணுவின் வரலாறு.

இந்த ஆந்திர விஷ்ணு வென்பவர்—ஐதரேய ப்ராஹ்மணத்தில் விச்வாமித்ரருடைய சாபத்தால் நலிந்த—புண்ட்ர, புளிந்த, மூதி, பாதனூர்யர்களுடனிருந்த ஆந்திர ஜனங்களுக்கு தைவமாயிருந்தார். இவரைப்பற்றின கதைகள் அநேகங்க ளுண்டு. ப்ராசீனாந்திரர்கள், தெற்குத்திக்கை நோக்கி வந்து, முதலில் கிருஷ்ணாநதி தீரத்தில்

ஸ்ரீ காகுளத்தில் அவர்களுடைய ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள்— என்று சரித்திரத்தால் தெரியவருகிறது.

அந்த ஆந்திர விஷ்ணுவேதான்—ஆந்திர ஸாம்ராஜ்ய ஸ்தாபகனான ஸ்ரீ க்ருஷ்ண தேவராயன் ஸ்வப்னத்தில் தோன்றி, "நானேதான் வேங்கடாசலபதியா யிருக்கிறேன்; தேச பாஷைகளில் தெலுங்கு தான் உயர்ந்தது; ஆகையால், வேங்கடாசல பதிக்கு உரிமையாக்கி ஒரு மஹா காவ்யத்தை ஆந்திர பாஷையில் செய்வாயாக" என்று நியமித்தாராம். அந்த நியமனப்படிதான் "ஆமுக்தமால்யதை" என்னும் மஹாகாவ்யத்தை தெலுங்கில் தான் செய்ததாக, ஸ்ரீ க்ருஷ்ணதேவராயர் எழுதியிருக்கிறார். காண்க:—

ఉ॥ ఎన్నిను హూర్తు నన్న, విను, మే మును దాల్చిన మాల్యమిచ్చి న
ప్పిన్నది రంగమందయిన పెండిలి సెప్పుము, మున్ను గొంటి నే
వన్నన దండ యొక్కమగవాఁడిడ, నేను దెలుంగురాయఁడన్
గన్నడరాయ! యక్కొమరుఁగప్పు ప్రియాపరిభుక్తభోక్తఁడన్॥

ఆ॥ తెలుఁగదేలయన్న, దేశంబు దెలుఁగేను,
దెలుఁగువల్లభుండ, దెలుఁగొకండ
యెల్లనృపులుగొలువ నెఱుఁగవే బాసాడి
"దేశభాషలందు దెలుఁగు లెస్స"॥

క॥ అంకితమోయన నీకల
వేంకటపతి యిష్టమైన వేల్పుగుటఁ బదీ
యాంకితము సేయు మొక్కొక
సంకేతము గా కతడ రసజ్ఞుఁ గానే?

என்று,

ஸ்ரீ க்ருஷ்ண தேவராயருடைய வம்சத்தாரான விஜயநகர ராஜாக்களுடைய கைங்கர்யங்களினாலே தான், ஸ்ரீ வேங்கடாசலபதி செல்வமும், கீர்த்தியும் விசேஷமாக மிருந்தன—என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால், அந்தக் காலத்திலிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவ மதாபிமானிக ளாகிய—ஸ்ரீ அல்லஸானி பெத்தன்ன முதலிய கவிகளும், இதர கவிகளும் யாரும், ஸ்ரீ வேங்கடாசலத்தைப் பற்றி, தங்கள் காவ்யங்களில் எழுதினதில்லை. முக்குத் திம்மன்ன—என்னும் கவிமாத்திரம், தன் 'பாரிஜாதாபஹரண' காவ்யத்தில் வேங்கடாசலபதி விஷயமாக மங்கள ச்லோகத்தைப் பண்ணியிருக்கிறார்:—

శ్రీమదికిం బ్రియంబెసఁగఁ జేర్చిన యుత్పలలీల వైజయం
తీమిళితాచ్ఛ కౌస్తుభము నిద్దపుఁగాంతి దనర్చి యాత్మవ
క్షోమణి వేదిఁ బొల్పెసఁగఁ జూడ్కుల పండువు సేయు వేంకట
స్వామి కృతార్థుఁ జేయు నరసక్షితినాథుని కృష్ణరాయనిన్. என்று

பிறகு, தரிகொண்ட வெங்கமாம்பா—என்னும் கவயித்ரியும், இன்னமும் அநேக கவிகள், தங்களுடைய க்ரந்தங்களில், திருவேங்கடத்தையும், திருவேங்கடமுடையானையும் வர்ணித்து இருக்கிறார்கள். அவைகளையெல்லாம் சேர்த்து "ஸ்ரீ வேங்கடேச்வர ஸ்துதி ரத்னமாலை" என்னும் பகுதியில் நமது ஆராய்ச்சிக் கல்லூரியில் வெளியிடப்பட்டிருக்கிறது, அதில் விவரம் காணலாம்.

## ஸ்ரீவேங்கடாசலபதி விஷ்ணுவேதான்.

"திருவேங்கடத்தில் இருக்கும் தெய்வம் ஸ்ரீவிஷ்ணுவேதான்" என்ற ஒரு விஷயம் மாத்திரம் தெலுங்கு க்ரந்தங்களில் நன்றாக தெரிய வருகிறது. "திருவேங்கடமலையில் இருக்கும் தைவம் விஷ்ணுவே தவிர வேறில்லை" என்று ருக்வேதம் முதல்—வேங்கடேச்வர மஹாத்ம்ய மளவும், மற்றுமுள்ள ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலும்—எங்கும் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. 'வேங்கடேச்வர இதிஹாஸ மாலை' யென்னும் ஸம்ஸ்க்ருத க்ரந்தத்திலும், 'திருமலை யொழுகு' என்றும் தமிழ்புத்தகத்திலும் இராமாநுஜர் காலத்தில் சைவர்களுக்கும், வைணவர்களுக்கும் கலஹம் ஏற்பட்டதாகவும் "திருவேங்கடவன் விஷ்ணுவே தான்" என்று ஸித்தாந்தப்படுத்தப்பட்ட தாகவும் தெரிய வருகிறது.

## திருவேங்கடமும்—தமிழ் நூல்களும்.

திருவேங்கடத்தைப் பற்றித் தமிழ் நூல்கள் கூறுகின்றவற்றைச் சிறிது ஆராய்வது ஈண்டைக்குப் பொருத்தமுடையது. ஆதலின், அவற்றை நோக்குவோம்.

ஏறக்குறைய ஆறாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியதும், இப்போதுள்ள தமிழ் நூல்களுள் மிகப் பழையது மாகிய 'தொல்காப்பியம்' என்னும் இலக்கணத்திற்கு, அதன் ஆசிரியராகிய தொல்காப்பியர் காலத்திருந்தவராகிய 'பனம்பாரனார்' என்பார் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளார். அவர் தமிழ் நாட்டிற்கு எல்லை கூறுங்கால் "வடவேங்கடம் தென்குமரி" என்று வேங்கடத்தை வடவெல்லையாகக்

கூறியுள்ளார். கடைச்சங்க நூல்களுள் ஒன்றாகிய அகநானூற்றிலும், இம்மலை,

"கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ அரிது."

என்றும்,

"வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை."

என்றும்,

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்(டு)
ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்."

என்றும்,

சிறப்பிக்கப் பட்டுள்ளது. அகநானூற்றின் காலம் கி. பி, இரண்டாம் நூற்றாண்டென்பர்.

இங்ஙனம் கூறிய தமிழ் நூல்கள் "வேங்கடமலையிலுள்ள பெருமான் யார்?" என்று விளக்கமாக வேனும், குறிப்பாக வேனும் குறிப்பிடவில்லை. ஆனால், திருவேங்கடத்தில் திருவிழாக்கள் நடக்கும் எனவும், அது மிகச் சிறந்த மலை யெனவும் கூறியிருத்தல் காணலாம். இவற்றால், வேங்கட வள்ளலைப்பற்றி அறிந்து கொள்வதற்குப் போதிய ஆதாரம் சங்க நூல்களில் இல்லை. எனினும், கி. பி. ௨-ம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கூறப்படும் சிலப்பதிகாரம், மாங்காட்டு மறையவன் கூற்றாக :—

"வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரமார்பிற் பூண்டு

பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்."

என, "வேங்கடமலையில் எழுந்தருளிய பெருமான்—திருவாழித் திருச்சங்குகளைத் தரித்து முகில் நிறத்தோடு விளங்கும் திருமாலே" என்பதை விளக்கமாகக் கூறுகின்றது.

சமணப் புலவராகிய 'ஐயனரிதனர்' என்பவர், தாம் எழுதிய "புறப்பொருள் வெண்பா மாலை"யில், புலவராற்றுப்படைக்கு மேற்கோளாக :—

"வெறிகொள் அறையருவி வேங்கடத்துச் செல்லின்
நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்கு
இருளீயும் ஞாலத் திடரெல்லாம் நீங்க
அருளீயும் ஆழி யவன்."

என்னும் வெண்பாவில் "திருவேங்கடவன் திருமாலே"—என்று கூறிப் போந்தார்.

இங்ஙனமிருக்க, முதலாழ்வார்களுள் ஒருவராகிய பேயாழ்வார்,

"தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து."

எனவருளிய இவ் வெண்பாவையும்,

"வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடும் நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்."

என்னும் திருமூலநாயனர் திருமந்திரத்தையும்,

"அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூ ரம்மான்
அரியாரும் பாகத் தமுதன்—அரியாரும்
வேங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம்
வேங்கடத்து நோயால் விளிந்து.

எனவரும் கபிலதேவநாயனர் 'சிவபெருமான் திருவந்தாதியை'யும் கொண்டு சைவருட் சிலர், "திருவேங்கட முடையான் சிவபெருமானே" எனக் கூறு முற்படுவர். சைவ நூல்களிலும், வைணவ நூல்களிலும்—இருவரும் ஒருவராங்குத்துள் ஒருவராய் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. அதற்குக் காரணம் :—இறைவன் ஒருவனே

எல்லா மூர்த்திகளேயும் தன் வடிவத்திற் கொண்டிருக்கிருன்—என வும், அவ்வாறு அவ்வடிவங்களேத் தன் திருமேனியில் தரித்துள்ளமை யாற்ருன், அம் மூர்த்திகட்கு இருப்பு உண்டாகின்றது—எனவும், எல்லா வுலகங்களேயும், கடவுளர்களேயும் பெருமான் திருமேனியாக வுடையவ ஞதலால், அவனுக்குப் புறம்பானதும், புறம்பாளுரும் இல்லே—எனவும் கூறுகின்றன அவை. உதாஹரணமாக,

" பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங்கத் தால்திரிவ ரேனும் ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன்."

என்று பொய்கை யாழ்வாரும்,

" மின்போலும் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்
என்போலும் காண்பார்கட் கென்றிரேல்—தன்போலும்
பொற்குன்றும் நீல மணிக்குன்றுந் தாமுடனே
நிற்கின்ற போலும் நெடிது."

என்று காரைக்காலம்மையாரும்,

இடமால் வலந்தா னிடப்பால்
துழாய்வலப் பாலொண் கொன்றை
வடமா லிடந்துகில் தோல்வலம்
ஆழி யிடம் வலமான்
இடமாய் கரிதால் வலஞ்சே
திவனுக் கெழில் நலஞ்சேர்
குடமா லிடம் வலம்
கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே.

என்று சேரமான்பெருமாள்நாயஞரும் கூறி, அரன், திருமால்—ஆகிய இருவர் வடிவமும் ஒரு சேர இருக்கும் நிலேயைச் சிறப்பித்து, வேற் றுமை யடைவுகெடச் செய்துள்ளமை அறிதற்பாற்று.

வேறு சிலர், " சேயோன்மேய மைவரை யுலகமும் " எனத் தொல்காப்பியர், முருகனே மலேகளுக்குத் தெய்வமாகக் கூறியது கொண்டும், அருணகிரி நாதர், " திருவேங்கடத்தி லுறைதரு பெரு மாளே " எனத் தம் திருப்புகழில் முருகன் திருவேங்கடமலேயில் உறைவதாகக் கூறியது கொண்டும், சிவஞான முனிவர், தம் தொல்

காப்பியப் பாயிர விருத்தியுள் வடவேங்கடத்தைத் தமிழ் நாட்டில் வடவெல்லையாகப் பம்பாரனார் கூறியது "செந்தமிழ்ப் பாமாசாரிய னாகிய ஆறுமுகப் பெருமான் வமைப்பு" என்பது கருதியென உரைத்தது கொண்டும், "திருவேங்கடத்திலுறையும் பெருமான் முருகனே" எனக் கூறுவர்.

மலை நிலத்திற்குரிய தெய்வம் முருகன் என்பதே கொண்டு, இம் மலையிலுள்ள பெருமானை முருகன் எனல் பொருந்தாது. கயிலை முதலிய மலைகளில் சிவபெருமானும் இருத்தல்—வெளிப்படை. அன்றியும், பரிபாடல் என்னும் சங்க நூலில் திருமாலும் மலையில் எழுந்தருளி யிருப்பதை,

"புலவரை யழியாப் புகழொடு பொலிந்து
நிலவரை தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்குசை யமையும்
புலவாரய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே ; பலவினும்
நிலவரை யாற்றி நிறைபய னொருங்குடன்
நின்றுபெற நிகழும் குன்றவை சிலவே ;
சிலவினும் சிறந்தன தெய்வம் பெட்புறும்
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே ; குலவரை சிலவினும்
சிறந்தது : கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவே றுருவின் இருதொழில் ஒருவர்த்
தாங்கரு நிலை யோங்கிருங் குன்றம்"

என்னும் அடிகள் விளக்குகின்றன. அஃதாவது—அறிவெல்லையால் அறியப்படாத புகழுடனே விளங்கி, நிலத்தைத் தாங்கும் சக்கரவாளம் முதலாகத் தொல்லிசைப் புலவர்கள் ஆராய்ந்துரைத்த குன்றங்களைப் பொதுவகைப்பால் உரைக்கப் புகுந்தால் பலவாம். அப்பலவற்றுள்ளும் நிலத்திலுள்ளோரது பசித்துன்பத்தை நீக்கி, நிறை பயன்கள் எல்லாவற்றையும் எப்பொழுதும் அவரவர் பெறப் பயன் படும் குன்றுகள் சில. அச்சிலவற்றுள்ளும் தெய்வங்கள் தாமாக விரும்பும் மலர்களையுடைய தடாகங்களும், மேகம்படியும் சிகரங்களும் உடைய குலவரைகள் சில சிறந்தன ; அவற்றுள்ளே, கடலும் கானலும் போல வேறு வேறாகிய நிறத்தினையும், சொல்லும் பொரு

னும் போல வேறுபடாத தொழிலினையும் உடைய மாயோனும், பல் தேவனும் எழுந்தருளியிருக்கும் சோலைமலை சிறந்தது—என்பது.

இதனால், மலையில் மாயோனும் எழுந்தருளி யிருத்தல் அறியப் படும். ஆகவே, "முருகனுக்கே தங்கியிருக்கும் உரிமையுடையது —மலை" என்பது மறுக்கப்படுகின்றது.

அருணகிரிநாதர், திருமலையில் முருகப் பெருமானைப் பாடியிருக் கிறார் என்றால், அது, திருவேங்கடமுடைய திருமாலைக் குறிப்ப தன்று. திருமலைப் பெருமையை அறிவிக்கும் புராணத்தில், 'குமார தாரை' என்னுமிடத்தில், முருகன், திருமாலைக் குறித்துத் தவம் செய்து அருள் பெற்றமையால் அங்கே யிருந்ததாகக் கூறப்படும் அம் முருகப்பிரானை யென்பது—'குமாரதாரை' என்னும் பெயராலும் அமைவுடைத்தாதலின், அத்திருப்புகழுக்குரிய முருகன், திருவேங் கட வள்ளலாகிய திருமால் அல்லன்—என்பது போதரும்; வேதத் தில் "யுவா குமார:" என்று திருமாலைக் "குமரன்" என்னும் சொல் லால் கூறியிருத்தல் அறிக. ஆழ்வார்களும், பலவிடங்களில், திரு மாலை, 'குமரன்', 'இளையோன்' என்று அருளிச் செய்திருத்தலும் அறியத்தக்கது.

சிவஞான முனிவர், அருணகிரியார் திருப்புகழைக் கொண்டே அது முருகனது தலம் எனக் கூறினாரே யன்றிப் பிறிதன்று. நச்சினார்க் கினியாராகிய உரைகாரர், தமிழ் நாட்டின் வட வெல்லையாக வேங் கடத்தைக் கூறியது—"அது நிலங்கடந்த நெடுமுடியண்ணல் உறை யும் வரைப்பாதலின் என்க" என உரைத்ததும், புறச் சமயத்தவர் எழுதிய நூல்களான—சிலப்பதிகாரம், புறப் பொருள் வெண்பாமாலை ஆகியவை உரைத்தனவும், ஆழ்வார்கள் அருளிச் செயல்களும், பிற வும் "திருவேங்கடவள்ளல் திருமாலே" என்பதை உறுதிப் படுத்து கின்றன.

முதலாழ்வார்களும், நம்மாழ்வாரும்—திருமலைத் திருமாலை, அர னென, அவருடைய பாத்துவம் தோன்ற ஒரேவிடங்களில் கூறி யதைமட்டும் கொண்டு, பிறவிடங்களில் பல்கால் அவரைத் திருமா லென்று சிறப்பித்தமையை மறந்து, தம் கருத்தை ஒருவாற்றால் நிலை நாட்டப்புகுதல் சிறிதன்றெனவறிக.

எனவே, "திருவேங்கட முடையான் திருமாலே" என்பது தெளிவு. இப்பெருமான், தீராநோய் தீர்த்தும், அடியார் வேண்டிய

வற்றை வேண்டியவாறே தந்தும், அவர்களை அடைக்கலமாக ஏற்றுக் கொண்டும் அருள்செய்து, மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் தலைவராய்க் கலியுகத்திற் கண்கண்ட தெய்வமாய் விளங்குகின்றார். இவைகளைப் பொதுப்படக் கூறுதலாக,

"வேங்கடத்து மேயானை மெய்வினை நோயெய்தாமல்
தான்கடத்தும் தன்மையால் தான்."
(நான்காம் திருவந்தாதி).

என்றருளி யிருப்பது காண்க.

பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும், வீராகவ முதலியாரும், திருவேங்கடத்து மாலை, திருவேங்கடத் தந்தாதி, என்பனவற்றையும், திருவேங்கடக் கலம்பகத்தையும் முறையே பாடிப் பெருமானது சிறப்பியல்களைப் புலப்படுத்தி உலகிற் குதவி யிருக்கின்றனர். "மேக விடு தூது" என்றொரு நூலும் இப்பெருமான் மீது பாடப்பட்டு நமது கழகத்தாரால் வெளியிடப் பட்டுள்ளது. "திருவேங்கடக் கோவை" முதலிய வேறு பல நூல்களும் இருப்பதாகத் தெரிகிறது.

இப்பெருமானை ஆழ்வார்கள் பலபடியாகச் சிறப்பித்து மங்களா சாசனம் செய்துள்ளனர்.

## ஆழ்வார்களின் வரலாற்றுச் சுருக்கம்.

ஆழ்வார்களின் காலத்தை—வரலாறு கொண்டும், கல்வெட்டு, இலக்கியங்கள்—ஆகியவற்றைக் கொண்டும் L. D. சாமிகண்ணுப் பிள்ளை, வெங்கோபராவ், கோபிநாதராவ், மு. இராகவ ஐயங்கார் ஆகிய பேரறிஞர்கள் புதிய ஆராய்ச்சியின்படி ஒருவாறு முடிவு செய்துள்ளனர்.

திவ்ய சூரி சரிதம், குரு பரம்பரை, ப்ரபந்நாமிர்தம், பெரிய திருமுடி அடைவு, முமுட்சு ஜன கல்பகம், பரம யோகி விலாசம், ஆசார்ய சூக்தி முக்தாவளி—முதலிய சம்பிரதாய நூல்கள் பழைய முறையால் ஆழ்வார்கள் காலத்தை அறுதியிட்டிருக்கின்றன. ஆழ்வார்களின் வரலாற்றை எளிய நடையில் எழுதி வெளியிட முடிவு செய்துள்ளேன். அதில் விவரமாக காணலாம்.

திருவேங்கட முடையான் பாசுரங்களை ஏற்கெனவே நமது ஆராய்ச்சிக் கழகம் வெளியிட்டது எவரும் அறிந்ததே. அப்பாசுரங்களுக்கு உரை எழுதி வெளியிட்டால், எல்லாருக்கும் நன்கு பயன்

படு மென்று கருதி, அடியேன் தற்போதுள்ள பணியை மேற் கொண்ட பின், முதலில், இவ்வுரையைத் தமிழிலும், தெலுங்கிலும் வெளியிட்டுள்ளேன், பூர்வாசாரியர்களின் கருத்துக்களை ஒட்டிச் சுருக்கமாக இத்தமிழ் உரை எழுதப்பட்டுள்ளது. திருவேங்கடவன் 'சுப்ரபாதம்' முதலிய நூல்களுக்கும் தமிழிலும், தெலுங்கிலும் உரை எழுதியுள்ளேன்.

## நன்றி கூறுதல்.

இந்தத் தேவஸ்தானத்தின் அறநிலையத் தலைவரும், கல்வியில்பற் றும், தமிழ்மொழி வளர்ச்சியில் ஆர்வமும், சமயத் தொடர்பான தொண்டுகளில் ஊற்றமும், கடவுள் பக்தியில் ஈடுபாடும் கொண் டவரும் பெருஞ் செல்வருமாகிய உயர்திரு, V. S. தியாகராஜ முதலியார், M.A., அவர்கள் இவ்வகையான, சமய நூல்கள் வெளி வருவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்துவருவதோடு, இந் நூலுக்கு அணிந்துரை எழுதி யுதவியமைக்கும் என் மனமார்ந்த நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் வெளிவருவதற்கு அனுமதியளித்த நம் தேவஸ்தான போர்டு உறுப்பினர்கட்கும், நற்பண்புகளையும், நற்குணங்களையும் பூண்ட நமது எக்ஸிகியூடிவ் ஆபீஸர், ஸ்ரீ C. அண்ணாராவ், B.A., அவர்கட்கும் என் உளமார்ந்த நன்றியைச் செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்த நூலும், இது போன்ற பிற நூல்களும் வெளிவருவதற் குரிய எல்லா முயற்சிகளையும் செய்து, அடியேனை இத்துறையில் ஊக் கிப் பணிகொள்ளும், எளிமை, பொறுமை, அன்பு—முதலிய நற் பண்புகளை யுடைய எங்கள் கழகத் தலைவர் ஸ்ரீ P. V. இராமாநுஜ ஸ்வாமி, M.A., அவர்களுக்கு என்றும் கடமைப்பாடுடையேன்.

இவ்வுரையை முதலிலிருந்து இறுதிவரைப் படித்துப் பார்த்து வேண்டியவற்றைச் செய்து உதவிய ஸ்ரீமான். கோ. பாலசுந்தர நாயகர். M A., அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி யுரியதாகுக.

கல்வி, அடக்கம், ஒழுக்கம்—முதலியவற்றில் நிறைந்த, என் அன்புள்ள மாணவ நண்பரும், உதவியாளருமான வித்வான் சிரோ மணி ஸ்ரீ E. கோபால கிருஷ்ணமாச்சாரியருக்கு, என் மங்களா சாசனத்தோடு கூடிய நன்றியை அறிவிக்கின்றேன்,

நாங்கள் எவ்வித இடையூறுகளை அடிக்கடி செய்தாலும் பொறுமையோடிருந்து, இந்நூலை நன்முறையில் அச்சிட்டளித்த திருமலை-திருப்பதி தேவஸ்தான அச்சகத்தாருக்கும் என் நன்றியைச் செலுத்துகின்றேன்

ஒன்றுக்கும் பற்றாத என்னையும், இப்பணியில் ஈடுபடுத்தி, அறிவாற்றல்களில்லாத எனக்கு, அவற்றை ஒரு சிறிது, தமதருள் மாட்சியால் உதவி, செவ்வையாக என்னைத் திருத்திப் பணிகொண்ட அடியேனது குலதைவமான திருவேங்கடமுடையான் திருவடித் தாமரைகளை என் சென்னிக் கணியாகச் சேர்த்து வணங்குகின்றேன்.

திருப்பதி,
16—3—53.

இங்ஙனம்,
தி. கு. வெம். ந. சுதர்ஸன தாஸன்.

ஸ்ரீ:
ஸ்ரீரஸ்து.
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீ மத்ப்யோ திவ்யஸூரிப்யோ நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம;

## இத்திவ்ய ப்ரபந்தத்தில் அமைந்த

# பாசுரங்களின் வகை.

## (ஆழ்வார்கள்.)

---

| | | |
|---|---|---|
| ஸ்ரீ பொய்கை யாழ்வார் :— | 10 | பாசுரங்கள். |
| ஸ்ரீ பூதத்தாழ்வார் :— | 9 | ,, |
| ஸ்ரீ பேயாழ்வார் :— | 19 | ,, |
| ஸ்ரீ திருமழிசை யாழ்வார் :— | 14 | ,, |
| ஸ்ரீ நம்மாழ்வார் :— | 44 | ,, |
| ஸ்ரீ பெரியாழ்வார் :— | 7 | ,, |
| ஸ்ரீ ஆண்டாள் :— | 16 | ,, |
| ஸ்ரீ குலசேகராழ்வார் :— | 11 | ,, |
| ஸ்ரீ திருப்பாணாழ்வார் ;— | 2 | ,, |
| ஸ்ரீ திருமங்கை யாழ்வார் :— | 63 | ,, |
| மொத்தம். | 195 | பாசுரங்கள். |

## (திவ்ய ப்ரபந்தங்கள்)

| | | |
|---|---|---|
| திருப்பல்லாண்டு :—(பெரியாழ்வார்) | 1 | பாசுரம். |
| முதல் திருவந்தாதி :—(பொய்கையாழ்வார்) | 10 | ,, |
| இரண்டாந் திருவந்தாதி :—(பூதத்தாழ்வார்) | 9 | ,, |
| மூன்றாந் திருவந்தாதி :—(பேயாழ்வார்) | 19 | ,, |
| நான்காந் திருவந்தாதி :—(திருமழிசை யாழ்வார்) | 12 | ,, |
| திருச்சந்த விருத்தம் :— ,, | 2 | ,, |
| திருவிருத்தம் :—(ஸ்ரீ நம்மாழ்வார்) | 8 | ,, |

| | | | |
|---|---|---|---|
| பெரிய திருவந்தாதி :—(ஸ்ரீ நம்மாழ்வார்) | | 1 | பாசுரம். |
| திருவாய்மொழி :— | ,, | 35 | ,, |
| பெரியாழ்வார் திருமொழி :—(பெரியாழ்வார்) | | 7 | ,, |
| நாச்சியார் திருமொழி :—(ஸ்ரீ ஆண்டாள்) | | 16 | ,, |
| பெருமாள் திருமொழி :—(குலசேகராழ்வார்) | | 11 | ,, |
| அமலநாதிபிரான் :—(திருப்பாணாழ்வார்) | | 2 | ,, |
| பெரிய திருமொழி :—(திருமங்கை யாழ்வார்) | | 55 | ,, |
| திருக்குறுந்தாண்டகம் :— | ,, | 1 | ,, |
| திருநெடுந்தாண்டகம் :— | ,, | 3 | ,, |
| சிறிய திருமடல் :— | ,, | 1 | ,, |
| பெரிய திருமடல் :— | ,, | 2 | ,, |
| | மொத்தம். | 195 | பாசுரங்கள். |

(யாப்பு வகை)

| | | |
|---|---|---|
| குறள் வெண் செந்துறை :— | 1 | பாசுரம். |
| நேரிசை வெண்பா :— | 51 | ,, |
| கலி வெண்பா :— | 3 | ,, |
| வெண்டுறை :— | 1 | ,, |
| வஞ்சித் துறை :— | 2 | ,, |
| அறுசீர் விருத்தம் :— | 20 | ,, |
| எழுசீர் விருத்தம் :— | 15 | ,, |
| எண்சீர் விருத்தம் :— | 8 | ,, |
| தரவுகொச்சகக் கலிப்பா :— | 26 | ,, |
| கட்டளைக் கலித்துறை :— | 8 | ,, |
| கலித்தாழிசை :— | 2 | ,, |
| கலிவிருத்தம் :— | 26 | ,, |
| கலிநிலைத் துறை :— | 18 | ,, |
| ஆசிரியத் துறை :— | 14 | ,, |
| மொத்தம். | 195 | பாசுரங்கள். |

ஸ்ரீ:

ஸ்ரீயை நம:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருவேங்கடமுடையான் விஷயமான

# ஆழ்வார்களின் மங்களாசாஸன

# பாசுரங்கள்.



ஸ்ரீமதே பட்டநாதாய நம:

## ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச்செய்த திருப்பல்லாண்டு.

காப்பு.

அவதாரிகை:—ஸ்ரீ பெரியாழ்வார், பகவானுடைய நியமனத்தை சிரஸா வஹித்து, பாண்டிய ராஜாவான ஸ்ரீ வல்லபதேவராயன் சபைக்குச் சென்று, பகவதாவேசபூரிதராய் பரதத்வநிர்ணயம் பண்ணியருளினார். கிழியானது தானாகவே இவருடைய ஸ்ரீ பாதத்தில் வந்து விழுந்தது. அந்த ஆச்சர்யத்தைக் கண்டு மிகவும் சந்தோஷாந்தரங்களாய், மந்த்ரி சாமந்த பரிவார ஸஹிதனான ராஜா இவர் திருவடிகளில் வந்து விழுந்து, பஹுமுகமாய் இவரைச் சத்கரித்து, இவரை யானையின்மேல் ஏறியருளப்பண்ணி, ஊர்வலமாகக் கொண்டு போனான். எம்பெருமானும் தனக்கு அந்தரங்க பக்தரான ஆழ்வாருடைய இவ்வைபவத்தைக் கண்டு மகிழவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி, ஸ்ரீ பூ நீளாதி பிராட்டிமார்களுடன் கருடவாஹநாரூடனாய், சங்க சக்ராதி திவ்யாயுத திவ்யாபரண பூஷிதனாய் ஜனசமூகத்தின் நடுவே வந்து தோன்றினான்.

இதைக் கண்டு பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலைசாய்ந்த வாறே ஆழ்வார் தன்னுடைய நிலையையும் பகவானுடைய நிலையையும் மறந்து, "அப்ராக்ருத திவ்ய மங்களமான இவ்வஸ்து, இருள் தருமாஞாலமாகிய இப்ப்ராக்ருதமண்டலத்திற்கு வந்து சேர்ந்ததே! இந்த வஸ்துவிற்கு என்ன தீங்கு வருமோ, என்ன அவத்யங்கள் வருமோ?" என்று அஸ்தானே பயசங்கை உண்டானவாறே வயிறு பிடிக்க மாட்டாமல், அந்த பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யாதிகளுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா! உன்
செவ்வடி செவ்வி திருக் காப்பு.

பதவுரை :—மல் - மல்லவர்க்கூத்தை. ஆண்ட - வெற்றி கொண்டு நிரஸித்த. திண் - திடமான. தோள் - திருத்தோள்களை உடைய. மணி - நீல ரத்னம் போன்ற. வண்ணா - திருமேனிகாந்தியுடையவனே. பல்லாண்டு - வாழி. பல்லாண்டு - நீடூழி வாழி. பல்லாயிரத்தாண்டு - அநேகம் ஆயிரம் வருடங்களில் வாழி. பலகோடி நூறாயிரம் - கால தத்வமுள்ள வரை வாழி. உன் - தேவரீருடைய. செம் அடி - சிவந்த திருவடிகளின். செவ்வி - அழகுக்கு. திருக்காப்பு - குறைவற்ற ரக்ஷை உண்டாக வேண்டும்.

கருத்து :—வாழ்க தேவரீர். நீடூழி வாழ்க தேவரீர் ஸ்வாமி. ஒருவராலும் அடங்காத சாணூர முஷ்டிகர் என்கிற மல்லர்களை வெற்றி கொண்ட திடமான திருத்தோள்களை உடைய நீல ரத்னம் போன்ற காந்தி உடைய எம்பெருமானே! தேவரீருக்கு அனவரதம் மங்களம் உண்டாக வேண்டும். அநேக ஆயிரம் வருடங்கள், அதாவது காலதத்வமுள்ளளவும், உனது சிவந்த திருவடிகளின் திவ்ய சௌந்தர்யத்திற்குக் குறைவற்ற ரக்ஷை உண்டாக வேண்டும்.

குறிப்பு :—எம்பெருமானைக் கண்ணுற்றதும் ப்ரீத்யதிசயத்தால் அதி சங்கை பிறந்து சௌந்தர்யாதி கல்யாண குணோபேதமான திவ்யமங்கள விக்ரஹத்தோடே வகுத்த ஸர்வசேஷியான உனக்கு இச்செவ்விமாறாதே நித்யமாய்ச் செல்லவேணும் என்று முதல் முதல் "மங்களம் மங்களம்" என்று நடுங்கி ஆத்திரம்பிறந்து இருமுறை சொல்லுகிறார். எப்படி யென்றால், பயப் பட்டார் 'நெருப்பு, நெருப்பு'—என்று பலமுறை கூறுவதுபோல. பல்லாண்டு, பல்லாண்டு என்று பலவருஷங்களிலும், என்று பொருள் கூறுவாரும் உளர்.

நூறாயிரம், என்பதற்கு - நூறாயிரமும் என்று பாடந்தரம், "திண்தோள்" "ஸம்ஹர்த்ருத்வேந தாரகத்வம்" என்றபடி சத்ருவர்க்க நிரஸந ஸாமர்த்யத்தைக் குறிக்கிறது. "பல்லாண்டு" என்ற சப்தத்தால் - நமஸ் சப்தார்த்தத்தைச் சொல்லிற்று. "மல்லாண்ட திண்தோள்"—சௌர்ய வீர்யாதிகுண யோகத்தைச் சொல்லிற்று. "மணிவண்ணா"—என்றதால் விக்ரஹ யோகத்தைச் சொல்லிற்று.

"சேவடி" என்றும் பாடாந்தரம்.

ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே சடகோபாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ப்ரபன்னஜன கூடஸ்தராகிய ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியில் 3 ம் பத்து 3 ம் திருவாய்மொழி—'ஒழிவில் காலம்'

---

(1) அவதாரிகை :—ப்ரபந்ந ஜநகூடஸ்தராகிய ஸ்ரீ நம்மாழ்வார், வடக்குத் திருமலையில் எம்பெருமானைக் கண்டு, அவனுடைய அளவில்லாத அழகில் ஈடுபட்டு, அவனை இங்கேயே அநுபவிக்கத் தீர்மானித்து, தமக்குத் துணையாகத் தம்முடைய நெஞ்சையும், பகவத் பக்தர்களையும் கூப்பிடுகிறார்—"ஒழிவில் காலம்" இத்யாதியில்,

ஒழிவில்கால மெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்
தெழிகுர லருவித் திருவேங்கடத்து
எழில்கொள்சோதி, எந்தை தந்தை தந்தைக்கே. 1

பதவுரை :—தெழிகுரல் அருவி - முழங்குகிற ஓசையை உடைய அருவிகளை உடைய. திருவேங்கடத்து - திருவேங்கட மலையில் இருக்கிற. எழில் கொள்சோதி - அழகைக்கொண்ட திருமேனியை உடைய. எந்தை தந்தை தந்தைக்கு - என்ஸ்வாமிக்கு ஸ்வாமியானவனுக்கு ஸ்வாமியானவனுக்கு. நாம் - நாங்கள். ஒழிவு இல் காலமெல்லாம் - ஓய்வில்லாமல் எல்லாக் காலங்களிலும். உடனாய் - (எல்லா இடங்களிலும் அவனுடன்) கூட இருந்து. மன்னி - (எல்லா அவஸ்தைகளிலும்) அவனை விடாதவர்களாய். வழு இலா - நழுவுதல் இல்லாத. (கைங்கர்யங்களில் ஒரு பாகத்தையும் வேறொருவருக்குக் கொடுக்காதபடி) அடிமை - எல்லாக் கைங்கர்யங்களையும். செய்யவேண்டும் - செய்யவேண்டியது.

கருத்து :—அருவிகள் நிறைந்த திருவேங்கடமலையில் அளவில்லாத அழகுடன் எழுந்தருளியிருக்கும் நம்ஸ்வாமிக்கு, எல்லாக்

காலங்களிலும், எல்லா இடங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும் செய்யத்தகுந்த எல்லாக் கைங்கர்யங்களையும், அவனுக்கு எப்பொழுதும் தாஸபூதர்களாகிய நாம் செய்யவேண்டும். வாருங்கள்.

(2) அவதாரிகை :—பரமபதத்திலேயே போய் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதன்றோ எல்லோருக்கும் ப்ராப்யம். இங்கே கைங்கர்யம் செய்ய ஏன் கூப்பிடுகிறீர்? என்றால் ;—நித்ய ஸூரிகளும் திருமலைக்கு வந்தன்றோ அவன் குணங்களை அநுபவித்து, அவனுக்குக் கைங்கர்யம் செய்கிறார்கள். ஆகையால் இதுவே பரம ப்ராப்யம்—என்கிறார்—"எந்தை தந்தை" இத்யாதியில்.

எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை, வானவர், வானவர்கோனொடும்
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து
அந்தமில்புகழ்க், காரெழி லண்ணலே. 2

பதவுரை :—வானவர் கோனொடும் - நித்ய ஸூரிகளின் தலைவரான ஸ்ரீ விஷ்வக்ஸேநாழ்வாரோடு கூட. வானவர் - நித்ய ஸூரிகள். சிந்து பூ - சமர்ப்பிக்கிற புஷ்பங்கள். மகிழும் திருவேங்கடத்து - (தன்னைத் தொட்ட மாத்திரத்தில்) மலரும்படி செய்கிற திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனாய். கார் எழில் - மேகத்தின் அழகை உடையவனாய் இருக்கிற. அண்ணலே - ஸ்வாமியே. எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் - என்னுடைய ஸ்வாமிக்கும் ஸ்வாமிக்கும் ஸ்வாமிக்கும் ஸ்வாமியா யிருக்கிறவனுக்கு. முந்தை - மேலான சேஷியாய் இருக்கிறான்.

கருத்து :—முடிவில்லாத கீர்த்தியை உடையவனாய், அழகை உடையவனாய், திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிற என் ஸ்வாமி, தன்னுடைய கல்யாண குணங்களினாலே என்னைத் தன்னடியார்க்குத் தாஸனாகச் செய்திருக்கிறான். நித்யஸூரிகளும், அவர்கள் தலைவரான விஷ்வக்ஸேநரும் என்னைப்போலவே அவனுடைய கல்யாண குணங்களிலேயே ஈடுபட்டு, திருமலைக்கு வந்து, புஷ்பங்களாலே அவனை ஆராதிக்கிறார்கள். ஆகையால், அவனுக்குக் கைங்கர்யம் செய்வதே பரமப்ராப்யம். அதற்காக வாருங்கள்.

குறிப்பு :—1. திருவேங்கட முடையானை என்ஸ்வாமிக்கு ஸ்வாமி - என்று சொன்னதாலே, நான் அவர்களுடைய தாஸாநு தாஸன் - என்று அர்த்தம் கிடைக்கிறது.

2. என்ஸ்வாமிக்கு, ஸ்வாமிக்கு, ஸ்வாமிக்கு, ஸ்வாமிக்கு, என்பதாலே - அவன் எல்லார்க்கும் ஸ்வாமி - என்றும், அவனுக்கு வேறு ஒருவனும் ஸ்வாமி யாக இல்லை - என்றும் சூசிக்கப்படுகிறது.

3. ஆழ்வார் தம்மை எம்பெருமானுடைய தாஸர்களுக்குத் தாஸனாகச் சொல்வது - அவனுடைய குணங்களில் ஈடுபட்டு அவனுக்குக் கைங்கர்யம் பண்ணுகிறவர்க ளிடத்தில் கௌரவம் செலுத்தினபடி.

(3) அவதாரிகை :—எம்பெருமான் நாம் அநுபவிக்கும்படி தன்னை நமக்குக் கொடுப்பனோ என்றால், அவன் மிகவும் உயர்ந்த (பரம) உதாரன், தன்னை நித்யஸூரிகள் அநுபவிக்கும்படி கொடுக்க வில்லையோ? என்று சொல்லுகிறார்—"அண்ணல்" இத்யாதியில்.

அண்ணல்மாயன், அணிகொள்செந்தாமரைக்
கண்ணன், செங்கனிவாய்க் கருமாணிக்கம்
தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. 3

பதவுரை :—மாயன் - (தன் அழகுமுதலான திருமேனியின் குணங்களாலே) ஆச்சர்யமானவனாய். அணிகொள் - அலங்காரத்தைக் கொண்ட, செந்தாமரைக் கண்ணன், செம்கனிவாய் கருமாணிக்கம்-செந்தாமரை போன்ற திருக்கண்களையும், சிவந்த கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையும், நீலரத்தினம் போன்ற திருமேனியையும் உடையவனாய். தெள்நிறை - தெளிந்து நிறைந்த. சுனை நீர் - சுனைநீர்களை உடைய. திருவேங்கடத்து - திருவேங்கட மலைமேல், எண்ணில் தொல்புகழ் - கணக்கில்லாத அநாதியான கீர்த்தியை உடையவனாய் இருக்கிற. அண்ணல் - ஸ்வாமியானவன் வான வர் ஈசன் - நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகன். (அவர்கள் தன்னை அநுபவிக் கும்படி தன்னைக் கொடுத்து கொண்டு இருக்கிறவன்.)

கருத்து :—ஆபரணங்கள் இல்லாமலே தானே இயற்கையாகவே (நிரதிசய சௌந்தர்ய விசிஷ்டமாயிருக்கிற) அழகாயிருக்கிற மிகவும் உயர்ந்த திருமேனியை உடையனாய், கணக்கில்லாத இயற்கையா யுள்ள நல்ல குணங்கள் உள்ளவனாய் இருக்கிற எம்பெருமான், நித்ய ஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கும்படி கொடுத்துக் கொண்டு இருக்கிறான். நாமும் அவனை அநுபவிக்கும்படியாகத் திருமலையில் வந்து எழுந்தருளி இருக்கிறான். ஆகையால், நாமும் அவனை அநுப விக்கலாம்.

(4) அவதாரிகை — எம்பெருமான் நித்யஸூரிகளுக்குத் தன்னைக் கொடுத்துக் கொண்டு இருக்கிறான் — என்று சொல்ல வேண்டுமோ? மிகவும் தாழ்ந்த எனக்கும் அதைச் செய்யவில்லையோ? என்று சொல்லுகிறார். — "ஈசன்" இத்யாதியில்.

ஈசன் வானவர்க்கென்பன், என்றால், அது
தேசமோ, திருவேங்கடத்தானுக்கு ?
நீசனேன், நிறைவொன்றுமிலேன், என்கண்
பாசம்வைத்த, பரஞ்சுடர்ச்சோதிக்கே. 4

பதஉரை :— நீசனேன் - தாழ்ந்தவனாய், ஆத்மாவுக்குத் தகாத குணங்களை உடையவனாய்) நிறைவு ஒன்றும் இலேன் - பூர்த்தி (ஆத்மாவுக்குத் தகுந்த குணங்கள்) ஒன்றுமில்லாதவனாய் இருக்கிற, என்கண் - என்னிடத்தில். பாசம்வைத்த - ஸங்கத்தைப் பண்ணினவனான, பரம் சுடர் சோதிக்கு - அளவில்லாத காந்தி உள்ள திருமேனியை உடையவனான திருவேங்கடத்தானுக்கு - திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனுக்கு, வானவர் ஈசன் என்பன் - நித்ய ஸூரிகளுக்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டு இருக்கிறான் — என்று சொன்னேன். என்றால் - இப்படிச் சொன்னால், அது, தேசமோ - தேஜஸ்ஸோ (ஒரு பெருமையோ)

கருத்து :— ஆத்மாவுக்குத் தகாத குணங்களுள்ளவனாய், அதற்குத் தகுந்த குணமில்லாதவனாய் இருக்கிற என்னிடத்திலும் எம்பெருமான் ஸங்கத்தைப் பண்ணிக் கொண்டு இருக்கிறான். இப்படியாகில், "அவன் நித்யஸூரிகளுக்குத் தன்னைக் கொடுத்துக் கொண்டு இருக்கிறான்" என்று சொன்னால், அதனால் அவனுக்கு ஒரு ஏற்றமுண்டாகுமோ?

குறிப்பு :— 1. ஆத்மாவுக்குத் தகாத குணங்களாவன :— உடம்பை ஆத்மாவாக எண்ணுகிற அவித்யையும், அதனால் உண்டான கர்மங்களும், ஆசையும், த்வேஷமும். முன்னிரண்டும் - ஸ்வரூபத்தைப் பற்றினவைகள். பின்னிரண்டும் - ஸ்வபாவத்தைப் பற்றினவைகள்.

2. ஆத்மாவுக்குத் தகுந்த குணங்களாவன :— இரக்கம், பொறுமை - முதலானவைகள்.

(5) அவதாரிகை :— எனக்குத் தன்னை எம்பெருமான் கொடுத்துக் கொண்டு இருக்கிறான் — என்று சொல்லுவதும் அவனுக்கு ஒரு

ஏற்றமோ? அவனுடைய உதாரத் தன்மையின் அளவு இவ்வளவு என்று சொல்ல முடியுமோ? என்று சொல்லுகிறார்—"சோதி" இத்யாதியில்

சோதியாகி, எல்லாவுலகும் தொழும்
ஆதிமூர்த்தி யென்றால், அளவாகுமோ?
வேதியர், முழுவேதத் தமுதத்தைத்,
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. 5

பதவுரை :—வேதியர் - வேதம் படித்தவர்களுடைய. முழு - எல்லா. வேதத்து - வேதங்களாலும். அமுதத்தை - புருஷார்த்தமாகச் சொல்லப் பட்டவனாய். தீது - தோஷம். இல் - இல்லாத. சீர் - கல்யாண குணங்களை உடையவனாய் இருக்கிற திருவேங்கடத்தானை. சோதியாகி - காந்தியுள்ள திருமேனி உடையவனாய். எல்லா உலகும் - உலகத்திலுள்ள எல்லாரும். தொழும் - சேவிக்கும். ஆதி மூர்த்தி - உலகத்தை உண்டுபண்ணினவன். என்றால் - என்று சொன்னால். அளவு - அது அவனுக்கு ஒரு பெருமை. ஆகுமோ - ஆகுமோ? ஆகாது.

கருத்து :—மிகவும் தாழ்ந்தவனான என்னிடத்தில் ஸங்கம் பண்ணுகிறான்—என்று சொன்னேன். அது அவனுக்கு ஒரு பெருமையோ? அவன் மிகவும் உயர்ந்த புருஷார்த்தம்—என்றும் ஒருவித தோஷம் இல்லாதவன்—என்றும், எல்லா நல்ல குணங்களையும் உடையவன்—என்றும், அவன் திருமேனி அழகுக்கு அளவில்லை—என்றும், அவன் உலகத்தை உண்டுபண்ணினவன்—என்றும், இப்படிப்பட்ட அவன் பெருமையை வேதங்கள் அன்றோ பேச வேண்டியவை. தாழ்ந்த நம்மாலே சொல்ல முடியுமோ? மிகவும் உதாரனான அவன் தன் திருவடிகளில் கைங்கர்யம் செய்வதாகிய ஸம்பத்தை உங்களுக்குக் கொடுத்து அருளுவன்.

குறிப்பு :—1. உலகத்தில் தம்மைக்காட்டிலும் தாழ்ந்தவர் இல்லை என்று - ஆழ்வாரின் எண்ணம். ஆதலால், மிகவும் தாழ்ந்த நாம் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யவே, உலகத்தார் எல்லாரும் அவனுக்குக் கைங்கர்யம் பண்ணத் தட்டில்லை என்று நினைத்து "உலகும் தொழும்" என்று அருளிச் செய்தார்.

2. "தீதுஇல்". தோஷமாவது :—தன்னை ஆச்ரயிக்கிறவர்களில் "இவன் உயர்ந்தவன்" என்று அவனைச் சேர்த்துக்கொள்வதும், "இவன் தாழ்ந்தவன்" என்று அவனைத் தள்ளிவிடுவதும்.

(6) அவதாரிகை :—எம்பெருமானுடைய கைங்கர்யம் பண்ணுவதற்கு என்ன உபாயம் என்றால் ;—அதைச் சொல்லுகிறார்—“ வேங்கடங்கள் ” இத்யாதியில்.

வேங்கடங்கள் மெய்ம்மேல் வினைமுற்றவும்,
தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்னல்
ஆம்கடமை, அதுசுமந்தார்கட்கே. 6

பதவுரை :—வேங்கடத்து உறைவார்க்கு - திருவேங்கட மலையிலே எழுந்தருளி இருக்கும் ஸ்ரீநிவாஸனுக்கு, நம வென்னல் ஆம் - “நம:” என்று சொல்லுகையாகிற, கடமை அது - இந்தக் கடமையை, சுமந்தார்க்கு - சுமக்கிறவர்களுக்கு, கடங்கள் - (கடன்போல் கைங்கர்யங்களுக்கு இடைஞ்சல்களான) கர்மங்கள். மேல்வினை - மேலே உண்டாகும் கர்மங்கள், முற்றவும் வேம் - முழுவதும் எரிந்துபோம். மெய் - இது உண்மை. தாங்கள் - (இப்படி இடைஞ்சல்கள்) நீங்கினவர்கள், தங்கட்கு நல்லனவே - தங்களுக்கு இஷ்டமான கைங்கர்யங்களையே செய்வர்.

கருத்து :—எம்பெருமானுக்கு இடைஞ்சல்கள் இல்லாமல் கைங்கர்யம் பண்ணுவதற்கு உபாயம்—திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீநிவாசனுக்கு “நம:” என்று சொல்லுதலே. இது வெகு லகுவான உபாயம். இதை எல்லோரும் செய்யலாம். இது நம்முடைய ஸ்வரூபத்திற்குத் தகுந்த வ்யாபாரம். இதைச் செய்தால், அவன் இதை ஒரு சுமையாக எண்ணிக்கொண்டு, நாம் முன்செய்த கருமங்களையும், மேலே நினைவில்லாமல் செய்யுமவைகளையும் போக்கி விடுவான். இது உண்மை. இப்படி இடைஞ்சல்களைப் போக்கி, நமக்கு இஷ்டமான அவனுடைய கைங்கர்யங்களைச் செய்யலாம்.

(7) அவதாரிகை :—இந்த லாபத்தைப் பெறுவதற்குத் திருவேங்கடமுடையானை வருத்த வேணுமோ? திருமலையே அதை நமக்குக் கொடுக்குமென்று, “ சுமந்து மாமலர் ” இத்யாதியில் சொல்லுகிறார்.

சுமந்து மா மலர் நீர் சுடர் தூபம் கொண்டு,
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும்
நமன்றெழும் திருவேங்கடம் நங்கட்குச்
சமன்கொள் வீடுதரும், தடங்குன்றமே. 7

பதவுரை :—மாமலர், நீர், சுடர், தூபம் கொண்டு - ச்லாக்யமான புஷ்பங்களையும், திவ்ய தீர்த்தங்களையும், திவ்ய தூப தீபங்களையும் (ப்ரீதியுடன்) எடுத்துக்கொண்டு. அமர்ந்து - நிலையாய் இருந்து. (கைங்கர்யத்தையே பிரயோஜனமாக எண்ணி) வானவர் கோனொடும் - நித்ய சூரிகளுக்கு நிர்வாஹகரான (தலைவரான) விஷ்வக்ஸேனருடன், வானவர் - நித்ய ஸூரிகள் நமன்று - நமஸ்காரம்பண்ணி. எழும் - (கைங்கர்யமாகிற லாபத்தை எங்கே அடைந்ததனாலே) வ்ருத்தி அடைகிறார்களோ? (அந்த) திருவேங்கடம் தடம் குன்றமே - திருவேங்கடமாகிற விசாலமான மலையே. நங்கட்கு - நமக்கு. சமன்கொள் வீடு தரும் - தான் செய்யும் கைங்கர்யத்திற்குச் சமமான கைங்கர்யமாகிற மோக்ஷத்தைக் கொடுக்கும்.

கருத்து :—திருவேங்கடமலை எம்பெருமான் திருவடிகளைத் தாங்கிக் கொண்டு, அவனும், ஸ்ரீ லக்ஷ்மியும் இஷ்டப்படி லீலா ரஸத்தை அனுபவிக்கும்படி இடங்கொடுத்துக் கொண்டு இருக்கிறது. அது, தான்செய்யும் கைங்கர்களுக்குச் சமமான கைங்கர்யங்களை, அவைகளைச் செய்ய ஆசையுள்ள நமக்கும், கொடுக்கும். இது எங்கே கண்டோம்? என்றால்;—நித்யசூரிகளும், அவர்களுக்குத் தலைவரான விஷ்வக்ஸேநரும், ஆராதனத்திற்கு வேண்டிய ச்லாக்யமான உபகரணங்களைக் கொண்டு, வேறு பிரயோஜனத்தைத் தேடாதவர்களாய், திருமலைக்கு வந்து, அவனை வணங்கி, கைங்கர்யமாகிற லாபத்தை அடைந்து இருக்கிறார்கள். ஆகையால், நமக்கும் இதைத் திருமலையே கொடுக்கும்.

குறிப்பு :—1. நங்கட்கு—என்றதனால் நம்முடைய குணங்களைப் பார்த்து இதைக் கொடுக்காமல் போவதாகிய குற்றம் இல்லாதபடி மலையே கொடுக்கும்—என்று காட்டப்படுகிறது.

2. வீடு என்பது மோக்ஷம். அது கைங்கர்ய ரூபமானது.

(8) அவதாரிகை :—திருமலை எம்பெருமானுக்கும் ப்ராப்யமாயிருக்கவில்லையோ? அது வேறொன்றைக் கொடுக்க வேண்டுமோ? அதுவே ப்ராப்யமன்றோ? என்று சொல்லுகிறார்—"குன்றமேந்தி" இத்யாதியில்.

குன்றமேந்திக், குளிர்மழை காத்தவன்,
அன்றுஞாலம் அளந்த பிரான் பரன்,
சென்றுசேர் திருவேங்கடமாமலை,
ஒன்றுமே தொழ, நம்வினை ஓயுமே. 8

பதவுரை :—குன்றம் ஏந்தி - (கோவர்த்தனம் என்கிற)மலையை எடுத்து. குளிர்மழை காத்தவன் - குளிர்ந்ததான மழையிலிருந்து (கோகுலத்தை) ரக்ஷித்தவனும், அன்று ஞாலம் அளந்த பிரான் - அதற்கு முன்காலத்தில், திருவடிகளால் உலகத்தை அளந்து உபகாரம் செய்தவனும் இருக்கிற. பரன் - மிகவும் உயர்ந்தவனுகிய ஸர்வேச்வரன். சென்று சேர் - பரமபதத்திலிருந்து வந்து அடைந்திருக்கிற. திருவேங்கடமாமலை ஒன்றுமே - "திருவேங்கடம்" என்கிற பெரிய மலையை ஒன்றையே. தொழ - பஜிக்கவே. நம்வினை ஓயுமே - நம்முடைய பாபங்களும், அதனுல்வரும் க்லேசங்களும், எல்லாம் போய்விடும்.

கருத்து :—எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபத்தினுலும், குணங்களினுலும் கோகுலத்தை ரக்ஷித்தது, த்ரிவிக்ரமனுய்ப் பூமியை அளந்தது, இவை முதலிய கார்யங்களாலும் தங்களுக்கும், மற்றவர் களுக்கும் அளவில்லாத இன்பத்தைக் கொடுக்கிறவன். அவன் பரம பதத்தை விட்டுத் திருமலையில் ஆசையோடு வந்து இருக்கிறுன். இப்படியானுல் அதுவே நமக்கும் ப்ராப்யமன்ருே? வேறு பலனை நாம் தேட வேண்டுமோ? அந்தத் திருமலையை வணங்கவே நம் முடைய க்லேசங்களெல்லாம் தாமாகவே போய்விடும்.

குறிப்பு :—" குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன் " என்றும், மேல் பாசுரத்தில் " ஆயன் " என்றும் ஆழ்வார் அருளிச் செய்திருப்பதால், திரு வேங்கட முடையானுக்குக் " கோவிந்தன் " என்னும் பெயர் ப்ரஸித்தமாக இருக்கிறதென்று தோன்றுகிறது.

(9) அவதாரிகை :—திருவேங்கடமுடையான் அன்ருே நாம் அடையவேண்டியவன் ; திருமலை எப்படி நமக்கு ப்ராப்யமாகிறது ? என்ருல், பதில் சொல்லுகிருர்—" ஓயு மூப்பு "—இத்யாதியில்.

ஓயும்,மூப்புப் பிறப்பு இறப்புப்பிணி,
வீயுமாறுசெய்வான், திருவேங்கடத்து
ஆயன், நாள் மலராம் அடித்தாமரை,
வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கே. 9

பதவுரை :—திருவேங்கடத்து ஆயன் - திருவேங்கட மலையில் எழுந் தருளியிருக்கும் கோபாலன். நாள் மலராம் அடி தாமரை - அப்போது மலர்ந்த புஷ்பத்தைப்போல (ம்ருதுவாயும், அழகாயும் இருக்கும்) தன்னுடைய திருவடித் தாமரைகளை. வாய் உள்ளும், மனது உள்ளும் வைப்பார்கட்கு- வாக்கிலும, மனத்திலும் வைத்துக்கொண்டு (எப்பொழுதும்) அனுசந்திக்கு மவர்களுக்கு. ஓயும் மூப்பு - பல குறைவுகளைச் செய்கிற கிழத்தனம். பிறப்பு -

ஜனனம். இறப்பு - மரணம். பிணி - வியாதி. இவைகள் எல்லாம். வீயுமாறு செய்வான் - நாசம் அடையும்படி செய்வான்.

கருத்து :—திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிற ஸ்ரீநிவாஸனென்கிற கோபாலன், தன் திருவடித் தாமரைகளை எப்பொழுதும் அநுசந்தித்துக் கொண்டு ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களுக்கு, இந்த ஸம்சாரத்திலுள்ள க்லேசங்களாகிற ஜன்ம ஜரா மரணாதிகளை எல்லாம் நாசமாகும்படி செய்வான். இப்படிச் செய்கிற திறமை திருவேங்கட மலையில் வந்திருப்பதாலே அவனுக்கு வந்திருக்கிறது. ஆகையால், அந்த மலையே நமக்கு ப்ராப்யம் எனத் தட்டில்லை.

(10) அவதாரிகை :—கீழ்ச் சொன்ன காரணங்களால் சீக்ரம் திருமலைக்குப் போய் அதை அநுபவியுங்கள்—என்று சொல்லுகிறார்—"வைத்த நாள்வரை" என்கிற பாசுரத்தில்.

வைத்தநாள்வரை எல்லை, குறுகிச்சென்று
எய்த்திளைப்பதன்முன்னம், அடைமினோ
பைத்தபாம்பணையான் திருவேங்கடம்,
மொய்த்தசோலை மொய்பூந்தடம்தாழ்வரே. 10

பதவுரை :—பைத்த பாம்பு அணையான் - (எம்பெருமானுடைய திருமேனியின் ஸ்பர்ச சுகத்தாலே) விஸ்த்ருதமான படங்களை யுடைய ஆதி சேஷனைப் படுக்கையாக உடைய எம்பெருமானுடைய. திருவேங்கடம் - திருவேங்கட மலையினுடைய. மொய்த்த சோலை - எங்கும் நெருங்கியிருக்கிற சோலைகளையுடைய. மொய் பூம் தடம் தாழ்வரே - அழகான புஷ்பங்களை யுடைய விஸ்தாரமான தாழ்வரையையே, வைத்த நாள் - (எம்பெருமானால் இவ்வளவு நாட்கள் இருக்கவேண்டுமென்று சங்கல்பிப்பதாலே) வைக்கப்பட்ட நாட்களுடைய. வரை எல்லை - கடைசி எல்லையானது. குறுகி - கிட்ட வந்து. எய்த்து - கிழத்தனத்தாலே பல குறைவு உண்டாகி. இளைப்பதன் முன்னம் - (மனது) இளைத்துப்போவதற்கு முன்னாலே. சென்று அடைமினோ - போய்ச் சேருங்கள்.

கருத்து:—எம்பெருமான் வாஸம் செய்கிற திருமலையின் சோலைகள் நிறைந்தும், புஷ்பங்களால் அழகாயும் விஸ்தாரமாயுமிருக்கிற தாழ்வரையையே உங்களுடைய ஆயுஸ்ஸு காலம் குறுகி, கிழத்தனத்தால் பலம் குறைந்து, மனது சோர்வதற்கு முன்னாலேயே, சீக்கிரம் போய்ச் சேருங்கள்.

(11) அவதாரிகை :—நிகமனத்தில் இந்தத் திருவாய்மொழியைக் கற்றூர்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறூர் - "தாள் பாப்பி" இத்யாதியில்.

தாள் பரப்பி, மண் தாவிய ஈசனை
நீள் பொழில், குருகூர்ச் சடகோபன் சொல்,
கேழிலாயிரத்து, இப்பத்தும் வல்லவர்,
வாழ்வர் வாழ்வெய்தி, ஞாலம் புகழவே. 11

பதவுரை :—தாள் பாப்பி - திருவடிகளைப் பெரிதாகப் பண்ணிக் கொண்டு. மண் தாவிய - பூமியை அளந்த. ஈசனை - சர்வேச்வரனைப்பற்றி நீள் பொழில் - நீண்ட தோட்டங்களை உடைய. குருகூர் - திருநகரியில் எழுந்தருளியிருக்கிற. சடகோபன் சொல் - ஆழ்வார் அருளிச்செய்த. கேழில் - ஒப்பு இல்லாத. ஆயிரத்து இப்பத்தும் - ஆயிரத்தில் இந்தப் பத்துப் பாட்டுகளையும். வல்லார் - நன்ருக அறிந்தவர்கள். ஞாலம் புகழ - உலகத்தார் ஸ்தோத்ரம் பண்ணும்படி. வாழ்வு - (திருமலையைச் சேர்வதாகிய) வாழ்வை. எய்தி - அடைந்து. வாழ்வர் - உஜ்ஜீவிப்பார்கள். (சுகமாக யிருப்பார்கள்.)

கருத்து :—எல்லா ஆத்மாக்களும் அனுபவிக்கும்படி தன் திருவடிகளைப் பாப்பி, பூமியை அளந்த சர்வேச்வரனைப்பற்றி, ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்தில் இந்தப் பத்துப் பாசுரங்களையும் நன்ருய் அறிந்தவர்கள், எல்லாரும் ஸ்தோத்ரம் பண்ணும்படி எல்லாவற்றிலும் மேம்பட்ட திருமலையாகிற பெரிய சம்பத்தை அடைந்து, சுகமாக உஜ்ஜீவிப்பார்கள்.



*இந்தத் திருவாய்மொழிக்கு சங்க்ரஹமாக*

## ஸ்ரீமத் வேதாந்தாசார்யர் அருளிச்செய்த த்ராவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

---

ஸ்தாநோத்கர்ஷாத் ஸுதீப்தம், ச்ரமஹரவபுஷம், ஸ்வாங்க பர்யாப்தபூஷம்,
தேஜிஷ்டம் நீசயோகாத், ப்ரணமிதபுவனம், பாவனம் ஸந்நதானாம் ।
ப்ராப்த்யர்ஹ ஸ்தானம், அஹ: ப்ரசமனவிஷயம், பந்தவிச்சேதிபாதம்,
பேஜே சீக்ராபியான க்ஷம சுபவஸதிம், லம்பிதார்ச்சாபிமுக்யம் ॥

*ஸ்தாநோத்கர்ஷாத் ஸுதீப்தம் - திருமலையிலே நின்றருளுகையாலே அளவில்லாத காந்தியை யுடையவனுமாய். ச்ரமஹர வபுஷம் - காளமேகம் போலே கண்டார்க்கு ச்ரமஹரமான வடிவழகை உடையவனுமாய். ஸ்வாங்க பர்யாப்த பூஷம் - தாமரை போன்ற தன்னுடைய திருக்கண் மலர் முதலான அவயவங்களினாலே பூஷண யுக்தனுமாய், நீசயோகாத், தேஜிஷ்டம் - அபகர்ஷத்தையும் அபூர்த்தியையுமுடைய தாழ்ந்தவர்களோடு சம்பந்திக்கையாலே மிகவும் விளங்குகிறவனையும். பிரணமித புவனம் - எல்லா வுலகங்களாலும் தொழப்படுகிறவனையும். ஸந்நதானாம் பாவனம் - வணங்கினவர்களை அவர்களுடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கிப் பரிசுத்தமாக்குமவனையும். பிராப்த்யர்ஹ ஸ்தானம் - மோக்ஷத்தைத் தரவல்ல இருப்பிடத்தை யுடையவனுமாயும். அம்ஹ: ப்ரசமன விஷயம் - தன்னை அடைவதற்கு விரோதிகளைப் போக்கவல்ல திவ்ய தேசத்தை உடையவனையும். பந்தவிச்சேதி பாதம் - ஜந்ம ஜரா மரணாதி வியாதிகளைப் போக்கவல்ல திருவடித் தாமரைகளை உடையவனையும். சீக்ராபியான க்ஷமசுப வஸதிம் - மெள்ளப் போகிறோமென்றிராதே தள்ளிக்கொண்டு முன்னே செல்லவேண்டும்படியான திருமலையிலே நித்யவாசம் பண்ணுகிறவனையும் இருக்கிற எம்பெருமானை. பேஜே—ஆழ்வார் "ஒழிவில் காலம் எல்லாம்" என்கிற திருவாய்மொழியிலே தாம் நினைத்தபடியே உகப்போடே கண்டனுபவித்தருளினார்.*

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் திருவடிகளே சரணம்.

*இந்தத் திருவாய்மொழிக்கு சங்க்ரஹமாக*

## ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

ஒழிவிலாக் கால முடனாகி மன்னி
வழுவிலா வாட்செய்ய மாலுக்கு—எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்கநலம் சேர்மாறன்
பூங்கழலை நெஞ்சே புகழ்.

கருத்து :—*சர்வதேச, சர்வகால, சர்வாவஸ்தைகளிலும் அடிமையில் ஒன்றும் நழுவுதலின்றிக்கே சர்வவித கைங்கரியங்களையும் சர்வேஸ்வரனுக்குச் செய்ய வேண்டுமென்று, மஹோந்நதமான சிகரங்களையுடைய திருமலையிலே, திருச்சித்திரகூடத்திலே இருவருமான சேர்த்தியிலே, அனைத்தடிமையையும் செய்யவேண்டுமென்று ஆசைப்பட்ட இளைய பெருமாளைப் போலே, இவரும் அலர்மேல் மங்கையுறைமார்பனுயச் சென்னியோங்கு தண் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளையும் செய்ய வேண்டுமென்று பாரித்த நிரவதிக பக்தியுக்தரான ஆழ்வார், அவர் பூவார் கழலிலே தாம் அடிமை செய்தாற் போலேயே, மனமே! நீயும் அபிராமமாய் புஷ்பம் போலே ம்ருதுவாயுமிருக்கிற திருவடிகளை ஸ்துதித்து உஜ்ஜீவீ—என்று உபதேசிக்கிறார்.*

ஸ்ரீ மணவாள மஹாமுனிகள் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே சடகோபாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியில்
# 6 ம் பத்து 10 ம் திருவாய்மொழி—'உலகமுண்ட'

---

அவதாரிகை :—கீழ்த் திருவாய்மொழியில்—தமக்கு எம்பெருமானுடைய பாஹ்ய ஸம்ஸ்லேஷம் இந்த நிலத்திலேயே கிடைக்க வேண்டும்; அல்லது தம்மை வைகுந்தத்திற்கு அழைத்துக் கொண்டு போக வேண்டும்—என்று ஆழ்வார் உரத்த குரலில் கூப்பிட்டார். அவன் ஒன்றையும் செய்யவில்லை. இனிமேல் அவனைச் சேவிப்பதற்கு அவன் திருவடிகளில் ப்ரபத்தி பண்ணுவதைத் தவிர வேறு உபாயம் இல்லை—என்று தீர்மானித்து, இந்தத் திருவாய்மொழியில் அவனுடைய கல்யாண குணங்களில் ஈடுபட்டு, எல்லா உலகங்களும் தன்னைச் சேவித்து உஜ்ஜீவிக்க வேண்டும் என்று மஹௌதார்யத்தினால் திருவேங்கடமாகிற மஹோந்நதமான மாமலையில் தங்கி இருக்கும் அவனுடைய குணங்களை ஒன்பது பாட்டுகளில் அபிவர்ணித்து, பத்தாவது பாட்டில்—பெரிய பிராட்டி புருஷகாரமாகப் ப்ரபத்தியைப் பண்ணுகிறார்.

(1) அதில் முதல் பாசுரத்தில்—நிகிலஜகத் ரக்ஷணார்த்தமாகத் திருமலையில் நித்ய ஸந்நிஹிதனாய் எழுந்தருளியிருக்கும் தேவரீரை ஸ்வதஸ்ஸித்த சேஷபூதனாகிய அடியேன் சேரத்தக்க உபாயத்தை அருளிச்செய்ய வேண்டும்—என்று ப்ரார்த்திக்கிறார்.

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

உலக முண்ட பெருவாயா! உலப்பில் கீர்த்தி! அம்மானே!
நிலவும் சுடர்சூழொளிமூர்த்தி! நெடியாய்! அடியேன் ஆருயிரே!
திலத முலகுக் காய்நின்ற திருவேங்கடத்து எம்பெருமானே!
குலதொல் அடியேன் உனபாதம் கூடு மாறு கூறாயே. 1

பதவுரை :—உலகம் உண்ட பெருவாயா - உலகங்களை ப்ரளய காலத்தில் (அந்த ஆபத்தினின்றும் ரக்ஷிப்பதற்காக) சாப்பிட்ட (வயிற்றில் வைத்துக் கொண்ட) பெரிய வாயை உடையவனே, உலப்பு இல் கீர்த்தி - முடிவில்லாத (காருண்ய வாத்ஸல்யாதி) கல்யாண குணங்களால் உண்டான புகழை உடையவனே! அம்மானே - ஸ்வாமியே. நிலவும் - விளங்குகிற. சுடர் சூழ் - காந்தியாலே உலகத்தைச் சூழ்ந்து கொண்டு இருக்கிற. ஒளி மூர்த்தி - அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹத்தை உடையவனே. அடியேன் ஆர் உயிரே - எனக்குப் பூர்ணமான ப்ராணனாய் இருக்கிறவனே. நெடியாய் - (வைகுந்தமாகிற) உயர்ந்த உலகத்தில் இருப்பவனே. உலகுக்கு - உலகங்களுக்கு. திலதம் ஆய் நின்ற - திலகம் போல் அலங்காரமாய் நிலையாய் இருக்கிற. திருவேங்கடத்து - திருவேங்கட மலையில் எழுந்தருளி இருக்கும். எம்பெருமானே - என் ஸ்வாமியே. குலதொல் அடியேன் - வம்ச பரம்பரையாக அநாதி காலத்தில் நின்றும் தாஸனான நான். உன் பாதம் - தேவரீருடைய திருவடிகளை. கூடும் ஆறு - சேரும் வழியை. கூறாயே - அருளிச் செய்வாயாக.

கருத்து :—ப்ரளயாபத்தில் கருணையாலே உலகங்களை உன் வயிற்றில் வைத்துக் கொண்டு பத்ரமாக ரக்ஷித்தாய். அளவில்லாத வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், காருண்யம் முதலாகிய திவ்ய கல்யாண குணங்களை உடையவனாய் இருக்கிறாய். ஸ்வபாவமாயுள்ள நிரதிசய காந்தியினாலே உலகங்களை வ்யாபித்து ப்ரகாசிப்பிக்கிற அப்ராக்ருதமான திருமேனியை உடையவனாய் இருக்கிறாய். தேவரீர் எனக்கு ஸ்வாமி; நானோ தேவரீருக்கு வம்ச பரம்பரையாக தாஸன். இதை எனக்கு நன்றாய்க் காட்டி இருக்கிறாய். உன்னைவிட்டு ஒரு க்ஷணமும் ஜீவிக்க மாட்டேன். எல்லாரும் உன்னைச் சேவித்து உஜ்ஜீவிக்கும்படி எல்லா உலகங்களுக்கும் திலக ஸ்தானமாய் இருக்கிற திருவேங்கட மலையில் எழுந்தருளி இருக்கும் ஸ்வாமீ! என்னை உன் திருவடிகளில் சேர்த்தருள வேண்டும்.

(2) அவதாரிகை :—"என்னுடன் சேருவதற்கு உன் பாபங்கள் இடையூறுகளாக இருக்கின்றனவே. அவைகள் கழிந்தாலன்றோ உன்னைச் சேர்த்துக் கொள்ளலாம்" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து அதற்குப் பதில் அருளிச்செய்கிறார்.

கூறாய், நீறாய், நிலனாகிக், கொடுவல் லசுரர் குலமெல்லாம்
சீறா எறியும் திருநேமி வலவா! தெய்வக் கோமானே!

சேறார் சுனைத்தா மரைசெந்தீ மலரும், திருவேங் கடத்தானே!
ஆறா வன்பி லடியேன், உன்னடிசேர் வண்ணம், அருளாயே. 2

பதவுரை :—தெய்வம் கோமானே - தேவர்களுக்கு தலைவனே. கொடு - க்ரூரமான. வல் - பலமுள்ள. அசுரர்குலம் எல்லாம் - அசுரக் கூட்டங்கள் எல்லாவற்றையும். கூறாய் - அநேக துண்டுகளாயும். நீறாய் - (அவைகளும் தெரியாதபடி) தூளியாகவும். நிலன் - (அவைகளும் தெரியாதபடி) வெறுந் தரையாகவும். ஆகி - (ஆக்கி) செய்து. சீறா - (இதைச் செய்தும்) பாம்பைப் போல் சீறிக் கொண்டு. எரியும் - ஜ்வலிக்கிற. திருநேமி - திருவாழியை. வலவா - வலது பக்கத்தில் உடையவனே. சேறு ஆர் - சேறுநிறைந்த. சுனை - சுனைகளில் (மலையில் இருக்கும் சிறு குட்டைகளில்.) தாமரை - தாமரைப் பூக்கள். செம் தீ மலரும் - சிவந்த நெருப்புப் போல் மலருகிற. திருவேங்கடத்தானே - திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கிறவனே. ஆறா - ஒரு போதும் அடங்காததான. அன்பில் - ஆசையை உடையவனான. அடியேன் - தாஸபூதனான நான். உன் அடிசேர் வண்ணம் - உன் திருவடிகளைச் சேரும் வண்ணம். அருளாய் - க்ருபை பண்ணவேண்டும்.

கருத்துரை :—க்ரூரமாய், வெகு பலசாலிகளாய் இருக்கிற அசுரர்களின் கூட்டங்களை உன் திருவாழியைக் கொண்டு இருந்தவிடம் தெரியாமல் நாசம் செய்தாயே. அப்படிச் செய்தும் கோபம் அடங்காமல் சர்ப்பம்போல் சீறிக்கொண்டு இருக்கிற திருவாழியை வலது கையில் தரித்து இருக்கிறவனே! இப்படி உன்னை ஆச்ரயித்த தேவர்களுக்கு உண்டான இடையூறுகளை நீயே போக்கினாய், உன்னிடத்தில் ஆறாத ஆசையுள்ள என்னுடைய இடையூறுகளையும் நீயே போக்க வேண்டும். சேறு நிறைந்த சுனைகளில் சிவந்த நெருப்பைப் போல் தாமரைப் பூக்கள் மலரும் பரம ரமணீயமான திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! மேல்மேல் வளருகிற உன் விஷயமான ஆசையாகிற சமுத்ரத்தில் முழுகி இருக்கிற அடியேன்; உன் திருவடிகளில் சேரும்படி க்ருபை பண்ணவேண்டும்.

குறிப்பு :—செந்தீமலரும் என்பதற்குக் கருத்து—தங்களுடைய காந்தியாலே திருமலை முழுவதும் ப்ரகாசிக்கும்படி அதிக காந்தியுள்ளவைகளாய், குளிர்ந்தவைகளாய்ப் பருத்த தண்டை உடையவைகளாய் மலரும் என்பது.

(3) அவதாரிகை :—மோக்ஷத்தைக் கொடுக்க வேண்டும் என்கிறீரே! அது ஒரு காரணமும் இல்லாமல் கொடுக்க முடியுமோ? என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து அதற்குப் பதில் சொல்லுகிறார்.

வண்ண மருள்கொ ளணிமேக வண்ணா! மாய வம்மானே!
எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே! இமையோ ரதிபதியே!
தெண்ண லருவி மணிபொன்முத் தலைக்கும் திருவேங்கடத்தானே!
அண்ணலே! உன்னடிசேர அடியேற்கு,ஆவா வென்னாயே. 3

பதவுரை:—இமையோர்— தேவர்களுக்கு (நித்யஸூரிகளுக்கு). அதிபதியே - ஸ்வாமியே. வண்ணம் - ஸ்வபாவஸித்தமான. அருள்கொள் - க்ருபையைக் கொண்டவனான. அணி - அழகான. மேகவண்ணா - மேகத்தின் நிறத்தை உடையவனே. மாயா - ஆச்சரியமான கல்யாணகுண சேஷ்டிதங்களையும் திருமேனியையும் உடைய. அம்மானே - ஸ்வாமியே. எண்ணம் - என்மனதில். புகுந்து - ப்ரவேசித்து. தித்திக்கும் - இனியதாய் இருக்கும். அமுதே - அம்ருதமே. தென் நல் அருவி - தெளிந்த நல்ல அருவிகள். மணி - ரத்னங்களையும். பொன் - ஸ்வர்ணத்தையும். முத்து - முத்துக்களையும். அலைக்கும - அலைகளாலே ஒருகரையிலே ஒதுக்கும். திருவேங்கடத்தானே - திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனே. அண்ணலே - ஸ்வாமியாயிருக்கிறவனே. உன் அடி - உன்னுடைய திருவடிகளை. சேர - சேரும்படி. அடியேற்கு - அடியேனுக்கு. ஆ. ஆ. என்னாயே - ஐயோ, ஐயோ என்று க்ருபை செய்யவேண்டும்.

கருத்து:—தேவரீர் நித்ய ஸூரிகளுக்கு ஸ்வாமியாய் இருக்கிறீர். ஆகையினால் உன்னோடு சேருவதற்கு அவர்கள் இருந்த போதிலும் நீலமேகம் போன்ற ஆச்சர்யமான திருமேனியுடன் க்ருபையால் என் மனதில் புகுந்து, எனக்கு நிரதிசய போக்ய பூதனாக இருக்கிறாய். நீ எனக்கு ஸ்வாமி என்றும், நான் தேவரீருக்கு தாஸனென்றும் எனக்குத் தெரிவித்தாய். தெளிந்த ரமணீயமான அருவிகள் அலைகளாலே ரத்னங்களையும், பொன்னையும் முத்துக்களையும் கொண்டுவந்து, கரைகளில் விளங்கும்படி ஒதுக்கும் திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறாய். இவைகளை யெல்லாம் எந்தக் காரணத்தால் செய்தாய்? ஸ்வபாவமாயுள்ள உன் க்ருபையினால் அல்லவா? இவைகளைச் செய்து இருக்கிறாய். அந்த நிர்ஹேதுகமான க்ருபையினால் இப்போதும் "ஐயோ! இவன் வருத்தப் படுகிறானே" என்று இரங்கி, நான் உன்திருவடிகளை வந்து சேரும்படி செய்யவேண்டும்.

(4) அவதாரிகை:—இப்படி ஆழ்வார் ப்ரார்த்திக்க எம்பெருமான் "நான் உன் மனதில் புகுந்தது, நீர் செய்த புண்யத்தை வ்யாஜமாக வைத்துக் கொண்டுதான். இப்போது நீர் வேண்டியதைச்

செய்வதற்கும் ஒரு வ்யாஜம் வேண்டும்'' என்று சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்.

ஆவா! என்னாது, உலகத்தை யலைக்கும் அசுரர் வாழ்நாள்மேல்
தீவாய் வாளி மழைபொழிந்த சிலையா! திருமாமகள் கேள்வா!
தேவா, சுரர்கள், முனிக்கணங்கள், விரும்பும் திருவேங்கடத்தானே!
பூவார் கழல்கள், அருவினையேன் பொருந்து மாறு, புணராயே. 4

**பதவுரை :**— ஆ. ஆ. என்னாது - ஐயோ, ஐயோ! என்று இரக்கமில்லாதேயே, உலகத்தை - உலகத்தில் உள்ளவர்களை. அலைக்கும் - துன்பப்படுத்தும், அசுரர் - அசுரர்களுடைய. வாழ்நாள் மேல் - வாழுகிற நாள்கள் மேல். (ப்ராணன் மேல்.) தீவாய் - நெருப்பை நுனியில் உடைய. வாளி மழை - பாணங்களின் மழையை. பொழிந்த - வர்ஷித்த. சிலையா - வில்லை உடையவனே. திருமாமகள் கேள்வா - பெரிய பிராட்டியாருக்கு நாயகனே. தேவா - ப்ரகாசிக்கிறவனே. சுரர்கள் - நித்ய ஸூரிகளும். முனி கணங்கள் - ரிஷிகளுடைய கூட்டங்களும். விரும்பும் - ஆசைப்படுகிற. திருவேங்கடத்தானே - திருவேங்கடமலையில் இருக்கிறவனே. பூ ஆர் - புஷ்பங்கள் நிறைந்த. கழல்கள் - உன் திருவடிகளை. அருவினையேன் - கொடுமையான பாபங்களைச் செய்த நான். பொருந்துமாறு - சேரும்வழியை. புணராயே - உண்டு பண்ணவேண்டும்.

**கருத்து :**—அசுரர்கள் கொஞ்சமும் இரக்கமில்லாமல் உலகங்களைத் துன்பப்படுத்துவதைப் பார்த்துப் பொறுக்க முடியாமல், அந்த அசுரர்களின் ப்ராணன்களின்மேல் அக்னி முகங்களான பாணங்களை, மேகம் மழையைப் பொழிவதுபோல், வருஷித்து உலகங்களின் உபத்ரவங்களை நீக்கினவனே. அந்த அசுரஜயத்தைக்கண்டு சந்தோஷாதிசயத்தாலே பிராட்டி காடாலிங்கனம் செய்து கொள்ள, அதனாலே மிகவும் ப்ரகாசித்த திருமேனியை உடையவனே, நித்ய ஸூரிகளும், ரிஷிகளும் ஆசைப்பட்டு வந்து சேரும்படியான திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனே! இதுவரையில் தேவரீர் ஏற்படுத்தி இருக்கிற உபாயங்கள் எனக்கு ப்ரயோஜனப்படமாட்டா. உனக்கு விஜயம் வேண்டுமானால், ஒரு புதிய உபாயத்தை உண்டுபண்ணித் தேவரைச் சேவிக்கிறவர்கள் சமர்ப்பிக்கும் புஷ்பங்கள்நிறைந்த உன் திருவடிகளில் என்னைச் சேர்த்து, உலகத்தார் வருத்தத்தை, அசுரர்களை நாசம் செய்து போக்கினதுபோலே, அடியேன் வருத்தத்தையும் போக்க வேண்டும்.

குறிப்பு :—1. சக்ரவர்த்தி திருமகன் கரதூஷணுதிகளைச் சம்ஹரித்துத் திரும்பின சமயத்தில் அவனது வீரஸ்ரீயைக்கண்டு, மிகவும் மகிழ்ந்து, பிராட்டி அவனைக் காடாலிங்கனம் செய்து கொண்டாள். அசுரஜயத்தாலே உண்டான சோபையும், பிராட்டி ஆலிங்கனத்தாலே உண்டான தீப்தியும் சேர்ந்து, அவன் மிகவும் நன்ருய் விளங்கினுன். இது பாட்டில் முதலிரண்டு அடிகளில் சொல்லப்படுகிறது.

2. உலகங்கள் எம்பெருமானுடைய விபூதிகள். அவர்களிடத்தில் ப்ரீதி பண்ணுதது ஒரு குற்றம். அதன் மேல் அவர்களைத் துன்பப்படுத்துகிறது இதனினும் பெரிய குற்றம். இந்த இரண்டு குற்றங்களைச் செய்த அசுரர்களைப் பார்த்துக் கொண்டு எம்பெருமானுல் இருக்கமுடியுமோ?

(5) அவதாரிகை :—"நீர் புதிதாய் ஓர் உபாயத்தை உண்டு பண்ணும் என்று சொல்லுகிறீரோ, அதை என்னுல் செய்ய முடியுமோ" என்று எம்பெருமான் சொன்னதாகத் திருவுள்ளம்பற்றி அதற்குப் பதில் அருளிச்செய்கிருர்.

புணரா நின்ற மரமேழ்,அன்றெய்த ஒருவில் வலவாவோ!
புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே,போன முதல்வாவோ!
திணரார் மேக மெனக்களிறு சேரும்,திருவேங்கடத்தானே!
திணரார் சார்ங்கத்து உனபாதம்,சேர்வ தடியே னெந்நாளே? 5

பதவுரை :—புணரா நின்ற - புணர்ந்து. (ஒன்ருேடொன்று சேர்ந்து) நின்ற. மரம் ஏழு - ஏழு மரங்களையும். (சப்தசால வ்ருக்ஷங்களையும்) அன்று - அப்பொழுது. (மஹாராஜர்க்கு (சுக்ரீவனுக்கு) நம்பிக்கை உண்டுபண்ண வேண்டிய காலத்தில்) எய்த - (அம்பினுல்) துளைத்த. ஒரு வில் வலவா - ஒப்பில்லாத வில்லை உடைய வீரனே. புணரேய் நின்ற - ஒன்றுக்கொன்று சேர்ந்து இருக்கிற. மரம் இரண்டின் நடுவே - இரண்டு மருதமரங்களின் நடுவிலே. போன முதல்வா - ஜகஜ்ஜந்மாதி காரணனே. திணர் ஆர் - கனமாய் இருந்து நிறைந்து இருக்கிற. மேகமென - மேகமோ என்று சொல்லத் தகுந்த. களிறு சேரும் - யானைகள் வந்து சேரும். திருவேங்கடத்தானே; திணர் ஆர் சார்ங்கத்து - த்ருடமாய், பூர்ணமாயுள்ள சாரங்கமென்னும் வில்லையுடைய. உன்பாதம் - தேவரீருடைய திருவடிகளை. அடியேன் - தாஸபூதனுன நான். சேர்வது - அடைவது. எந்நாள் - எந்தநாளோ. ஓ - ஐயோ.

கருத்து :—தேவரீருக்கு முடியாதது ஒன்று உண்டோ? சுக்ரீவனுக்கு உன் சாமர்த்யத்தில் அவிச்வாசம் பிறந்த பொழுது அவனுக்கு நம்பிக்கை உண்டு பண்ணுவதற்காக, ஒன்ருேடு ஒன்று சேர்ந்து லக்ஷ்யம் வைக்க முடியாதபடி மலைபோல் இருந்த ஏழு மரா

மரங்களையும், மலையையும், ஒரே பாணத்தால் துளைத்த வில்லை உடைய வீரனல்லவா நீ? க்ருஷ்ணனாய் அவதரித்து, நெருங்கி இருந்த இரண்டு மருதமரங்களின் நடுவிலே உனக்கு ஒரு துன்பமும் உண்டாகாதபடி சென்று, யமளார்ஜுனபஞ்ஜனம் செய்தவனல்லவா நீ? பரம க்ருபையாலே எல்லா உலகங்களையும் உண்டு பண்ணினவனல்லவா? இவைகள் மேகங்களோ? என்று சந்தேகப்படும்படி பருத்த யானைகளும், மற்றும் மற்றப் ப்ராணிகளும் சஞ்சாரம் பண்ணிக் கொண்டிருக்கும் திருவேங்கடமலையில் எழுந்தருளி இருப்பவனே! தேவரீருடைய திருவடிகளை அடியேன் வந்து சேரும் காலம் எப்போது வருமோ! ஐயோ?

குறிப்பு :—மருத மரங்களின் நடுவே கண்ணன்போனதை ஆழ்வார் தாம் பார்க்கும் போது நடந்ததாக எண்ணி, அவனுக்கு என்னதீங்கு வருகிறதோ? என்று பயந்தார். அவனுக்கு ஒரு கெடுதியும் இல்லாது போன போது, தங்களுடைய பயம் நீங்குவதற்காகவே அவன் அப்படிச் செய்தானென நினைத்துச் சந்தோஷப்படுகிறார்.

(6) அவதாரிகை :—இதுவரையில் எம்பெருமானுடைய திருவடிகளை அடைய வேண்டுமென்று ஆழ்வார் ப்ரார்த்தித்தார். அது எந்தவிடத்தில் என்பதை அருளிச்செய்கிறார்.

எந்நாளே? நாம் மண்ணளந்த இணைத்தாமரை கள்காண்ப தற்கென்று
எந்நாளும் நின்று இமையோர்க ளேத்தி இறைஞ்சி இனமினமாய்
மெய்நா மனத்தால் வழிபாடு செய்யுந் திருவேங்கடத்தானே!
மெய்நநா னெய்தி எந்நாள் உன்னடிக்கண் அடியேன் மேவுவதே. 6

பதவுரை :—மண் அளந்த - பூமியை அளந்த. தாமரைகள் இணை - இரண்டு திருவடித் தாமரைகளை. நாம் - நாங்கள். காண்பதற்கு - சேவிப்பதற்கு. எந்நாள் என்று - எந்தக் காலத்தை உடையவர்கள் என்று. இமையோர் - நித்யஸூரிகள். என்றும் - எப்பொழுதும். இனம் இனமாய் - கூட்டங் கூட்டமாய். நின்று - திருமலையில் இருந்து. ஏத்தி - ஸ்தோத்ரம் செய்து. இறைஞ்சி - வணங்கி. மெய், நா மனத்தால் - உடம்பு வாக்கு மனது ஆகிய இவைகளால். வழிபாடு செய்யும் - கைங்கர்யத்தைச் செய்யும். திருவேங்கடத்தானே - திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனே. அடியேன் நான் - உனக்கே தாஸ பூதனான நான். மெய் - உண்மையாக. எய்தி - அடைந்து. அடிக்கண் - திருவடிகளிலே. மேவுவது - பொருந்துவது. (இடைவிடாது கைங்கர்யம் பண்ணுவது) எந்நாளோ - எந்த நாளோ?

கருத்து :—உன்னுடைய பரத்வத்தை 'எல்லோருக்கும் மேலாய் இருப்பதை) எப்பொழுதும் பார்த்துக் கொண்டு இருக்கிற நித்ய ஸூரிகளும் உன்னுடைய ஸௌசீல்யத்தை (தாழ்ந்தவர்களுடன்கூட இருப்பதை) எப்போது பார்க்கப் போகிறோமோ? என்று ஆசைப் பட்டுத் திருமலைக்குக் கூட்டங் கூட்டமாய் வந்து, உன்னை ஸ்தோத் திரம் பண்ணி, வணங்கி, உடம்பாலும், வாக்காலும், மனத்தாலும், உலகத்தை அளந்த உன் திருவடித் தாமரைகளுக்குக் கைங்கர்யம் செய்கிறார்கள். ஆகையினால், அந்த இடத்திலே உன்னை நான் வந்து அடைந்து இடைவிடாமல் உன்திருவடிகளில் கைங்கர்யம் செய்யும் படி க்ருபைசெய்ய வேண்டும். இப்போது மனத்தால் மாத்திரம் அங்குப் போனதாய் எண்ணிக்கொண்டு இருக்கிறேன். இது உண்மை யாகவே உண்டாகவேண்டும். அந்தக் காலம் எப்போது வருமோ?

குறிப்பு :—உலகத்தை அளந்த காலத்தில், அதிலிருப்பவர்களுடைய குணங்களையும் தோஷங்களையும் பாராட்டாமல், எல்லாருடைய தலைகளையும் எம்பெருமான் தன் திருவடியால் தொட்டான். இந்த ஸௌசீல்யம் என்னும் குணத்தைப் பூமியில்தான் பார்க்கலாம். இங்கேதான் தாழ்ந்தவர்கள் இருக் கிறார்கள். ஆகையால் நித்யஸூரிகள் திருமலைக்கு ஆசைப்பட்டு வருகிறார்கள்.

(7) அவதாரிகை :—"உமக்காக ஒரு புதிதான உபாயத்தை உண்டுபண்ண வேண்டும் என்றும், அது என்னால் முடியும் என்றும் சொன்னீர். அது முடிந்த போதிலும் நீர் சொன்னதைச் செய்தால், 'பக்ஷபாதமுள்ளவன்' என்று பழி உண்டாகும். ஆகையாலே, ஏற் பட்டிருக்கிற ஒரு உபாயத்தைச் செய்யும்" என்று எம்பெருமான் சொன்னதாகப் பாவித்து ஆழ்வார் பதில் சொல்லுகிறார்.

அடியேன் மேவி யமர்கின்ற அமுதே! இமையோ ரதிபதியே!
கொடியா வடு புள்ளுடையானே! கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்பெருமானே!
நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலா தாற்றேனே. 7

பதவுரை :—இமையோர் அதிபதியே - நித்யஸூரிகளின் ஸ்வாமியே. அடு - (ஆச்ரயித்தவர்களுடைய விரோதிகளுக்கு) தாபத்தை உண்டுபண் ணுகிற. புள் - பக்ஷியை (கருடனை). கொடி ஆ உடையானே - கொடியாக வைத்துக் கொண்டிருக்கிறவனே. திருவேங்கடத்து எம்பெருமானே - திரு வேங்கடமுடையானே. செடி ஆர் - செடியைப்போல் நிறைந்து இருக்கிற. (மேன்மேலும் வளருகிற) வினைகள் - பாபங்கள். தீர் - போக்குவதற்கு

மருந்தே - மருந்தாய் இருக்கிறவனே. கோலம் கனி வாய் - பழுத்த கோவைப் பழம்போல் அழகான திருப்பவழத்தை உடைய. பெருமானே - பெரியவனே. (இனியவனுய் இருக்கும் விஷயத்தில் அளவில்லாதவனே) நான் - (இந்த அழகுக்குத் தோற்று அடிமையான) நான். மேவி - ஆசைப்பட்டு. (ஒருக்ஷணமும் உன்னை விட்டுப் பிரிந்திருக்க முடியாமல்) அமர்கின்ற - இடைவிடாமல் நான் அனுபவித்துக் கொண்டிருக்கிற. அமுதே - அம்ருதமே. (பரம போக்ய மானவனே) உனபாதம் - தேவரீர் திருவடிகளை. காண - அனுபவிப்பதற்கு. நோலாது - வேண்டிய புண்ணியத்தைப் பண்ணுமல். (இருந்த போதிலும்) நொடி ஆர் பொழுதும் - ஒரு க்ஷணமும். ஆற்றேனே - ஸஹிக்கமாட்டேன்.

கருத்து :—நித்யஸூரிகளால் சூழப்பட்டு இருக்குமவனாய் இருந்தும், ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம் செய்யும் பெரிய திருவடிமேல் ஏறிக்கொண்டு எனக்காகத் திருமலையில் வந்தாய்; செடிகள் வளருவதுபோல் மேன் மேலும் வளர்ந்து கொண்டு உன்னைப் பார்ப்பதற்கு ப்ரதிபந்தகங்களாய் இருக்கிற என் பாபங்களை, வியாதிகளைத் தீர்க்கும் மருந்து போல், நீ போக்கினாய். அடிகால் கோவைப்பழம் போன்ற திருப்பவழத்தைக்காட்டி வேறு விஷயங்களில் எனக்கிருந்த ஆசையை விலக்கி என்னை உனக்கு அடிமை ஆக்கினாய். ஒருக்ஷணமும் உன்னை விட்டுபிரியாமல் மனதால் உன்னை அம்ருதம் போல் அனுபவித்துக் கொண்டிருக்கும்படி செய்தாய். இவ்வளவு உபகாரங்களைச் செய்த நீ, இந்த உபகாரத்தையும் செய்ய வேண்டாமோ? தேவரீரைக் கண்களால் சேவிக்கும்படியான பாக்யத்தை நான் செய்யாத போதிலும் இதைத் தேவரீர் அனுக்ரஹிக்க வேண்டாமோ? ஒருக்ஷணமும் உன்னைவிட்டுப் பிரிந்து ஆற்றியிருக்க முடியாது.

(8) அவதாரிகை :—நீர் சொன்னபடி யாருக்காவது நான் செய்து இருக்கிறேனே? என்று எம்பெருமான் கேட்டதாகப் பாவித்துப் பதில் சொல்லுகிறார்.

நோலா தாற்றேன் உனபாதம் காண, வென்று, நுண்ணுணர்வின்—
நீலார் கண்டத் தம்மானும், நிறைநான் முகனும், இந்திரனும்,
சேலேய் கண்ணார், பலர்சூழ, விரும்பும் திருவேங்கடத்தானே!
மாலாய் மயக்கி, அடியேன்பால், வந்தாய் போலே வாராயே. 8

பதவுரை :—நுண் உணர்வின் - சூட்சமான புத்தியை உடைய. நீல் ஆர் கண்டத்து - நீலநிறம் நிறைந்த கழுத்தை உடைய. அம்மானும் - முக்ய பூத

ஞனை ருத்ரனும். நிறை - (அவனைக் காட்டிலும் அதிகமான ஞானசக்திகள்) நிறைந்த. நான்முகனும் - சத்ய லோகாதிபதியான ப்ரம்மாவும். இந்திரனும் - தேவலோகாதிபதியான மஹேந்த்ரனும். சேல் ஏய் கண்ணார் - மீன்களை ஒத்து இருக்கிற கண்களை உடைய அவர்கள் மனைவிகளும். பலர் - அநேகம் பேர்கள். சூழ - சூழும்படி. உன்பாதம் - தேவரீருடைய திருவடிகளை. காண - சேவிப்பதற்கு. நோலாது - வேண்டிய புண்யத்தைப் பண்ணாமலும். ஆற்றேன் - (அந்த அனுபவம் இல்லாமல்) ஆறியிருக்கமாட்டேன். (என்று தனித்தனியாகச் சொல்லிக் கொண்டு) விரும்பும் - ஆசைப்படும். திருவேங்கடத்தானே - சேஷாத்ரி நாதனே. மாலாய் - (உன்னைச் சேவிக்காமல்) பைத்தியம் பிடித்து. மயக்கி - மயங்கும்படி செய்து (இருக்கிற தேவரீர்) வந்தாய் போல் - ஸ்ரீ கஜேந்த்ராழ்வானை ஸம்ரக்ஷிப்பதற்கு எழுந்தருளினாற் போலே. அடியேன்பால் - அடியேனிடமும். வாராய் - எழுந்தருள வேண்டும்.

கருத்து :—ஸூக்ஷ்ம புத்தியாயும், ‘ஹாலாஹலம்’ என்கிற விஷத்தை விழுங்கினதினாலே கருப்பாயிருக்கிற கழுத்தை உடையவனும், இப்பேர்ப்பட்ட ஸாஹஸ கார்யங்களைச் செய்யச் சக்தி உள்ளவனாய் இருப்பதால் உலகத்தார்க்குச் சேவ்யனுமாய் இருக்கிற ருத்ரனும், அவனைக்காட்டிலும் அதிகமான ஞானசக்திகளை உடைய சத்ய லோகாதிபதியான நான்முகனும், தேவ லோகாதிபதியான இந்த்ரனும், தேவரீரைச் சேவிக்கும்படியான புண்யங்களில் ஒன்றையும் செய்யாத போதிலும், “அந்த அனுபவம் இல்லாமல் ஜீவித்து இருக்க மாட்டோம்” என்று தனித்தனியே சொல்லிக் கொண்டு, மீன் போன்ற கண்களை உடைய தம் மனைவிகளால் சூழப்பட்டுத் திருமலைக்கு ஆசைப்பட்டு வருகிறார்கள். வந்து தேவரீரைக் கண்ணாரக் கண்டு அனுபவிக்கிறார்கள். அப்படியே அடியேனும் தேவரீரை எப்பொழுதும் ஸந்தர்சித்து அனுபவிக்கும்படி பரமக்ருபையாய் எழுந்தருளவேண்டும். (இப்படி ஆழ்வார் ப்ரார்த்திக்க அப்போதே எம்பெருமான் எழுந்தருளவில்லை. அதைக்கண்டு ஆழ்வார் சொல்லுகிறார்) எப்பொழுதும் அனுபவிக்கும்படி எழுந்தருள இஷ்டமில்லாத போதிலும், ஸ்ரீ கஜேந்த்ராழ்வானை ஸம்ரக்ஷிப்பதற்கு வந்ததுபோல், உன்னைக் காணப்பெறாமல் பைத்யம் பிடித்து மயக்கத்தை அடைந்திருக்கிற அடியேனிடம் ஒரு தடவையாவது எழுந்தருள வேண்டும்.

குறிப்பு :—எம்பெருமானுக்கு இரக்கமுண்டாவதற்காகத் தேவர்கள் தங்கள் மனைவிகளுடன் கூடத் திருமலைக்கு வந்து, எம்பெருமான் திருவடி

களில் விழுகிறார்கள். குடும்பத்தோடு வந்து காலில் விழுந்தால் இரங்காமல் இருக்க முடியாதல்லவா? என்று கருத்து.

(9) அவதாரிகை :—தாமபேக்ஷித்த போதே காணப் பெருமையாலே இப்போதே உன்னைக் காணாவிடில், உயிர் தரிக்கமாட்டேன் என்கிறார் :—

வந்தாய் போலே வாராதாய், வாராதாய் போல் வருவானே!
செந்தா மரைக்கண், செங்கனிவாய், நால்தோ ளமுதே! எனதுயிரே!
சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய் திருவேங்கடத்தானே!
அந்தோ! அடியேன், உனபாதம் அகல கில்லேன் இறையுமே. 9

பதவுரை :—வந்தாய் போலே - வந்தவன் போல், (இருந்து) (உன்னை ஆச்ரயிக்காதவர்களுக்கு) வாராதாய் - கிட்டவாராதவனாய் இருக்கிறவனே. (ஆச்ரயித்தவர்களுக்கு) வாராதாய் போல்-கிட்டவாராதவன் போலே, (இருந்து) வருவானே - கிட்டவருகிறவனே. செந்தாமரைக் கண் - சிவந்த தாமரை போன்ற திருக்கண்களையும். செங்கனி வாய் - சிவந்து அழகாய் இருக்கும் கோவைப் பவழம் போன்ற திருப்பவழத்தையும், அழகாய் நீண்ட நான்கு திருத்தோள்களையும் (உடைய) அமுதே - அம்ருதம் போல் மிகவும் இனிமையானவனே. எனது உயிரே - அடியேன் ப்ராணனே. சிந்தாமணிகள் - சிந்தாமணிகள் போல் இருக்கிற ரத்னங்களுடைய. பகர் - காந்தியானது. அல்லை - இரவை. பகல் செய் - பகலாகச் செய்யும். திருவேங்கடத்தானே - ஸ்ரீ வ்ருஷபாத்ரி நாதனே. அந்தோ - ஐயோ. அடியேன் - தாஸபூதனான நான். உன் பாதம் - தேவரீருடைய திருவடிகளை. இறையும் - ஒரு க்ஷணகாலமும். அகலகில்லேன் - விட்டுப் பிரியமாட்டேன்.

கருத்து :—உன்னை ஆச்ரயிக்காதவர்களுக்குக் கிட்டவருவது போல் தோன்றுகிறாய். ஆனால் அவர்களுக்கு ஸுலபமில்லை. உன்னை ஆச்ரயித்தவர்கள் தமக்குத் தகுந்த உபாயம் ஒன்றும் இல்லாததனால் 'இவன் நமக்குத் துர்லபன்' என்று எண்ணியிருக்க, அவர்களுக்கு ஸுலபனாய் இருக்கிறாய். செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையும், சிவந்த கோவைப் பழம்போன்ற திருப்பவளத்தையும், ஆஜானுலம்பிகளான நான்கு தோள்களையும் உடையவனாய், அம்ருதம் போல் பரம போக்யமாய் இருக்கிறவனே! இந்த லோகாதிசயமான அழகைக்காட்டி உன்னையே எனக்குத் தாரகமாகவும், போஷமாகவும், போக்யமாகவும் செய்துவிட்டாய். சிந்தாமணிகள் போல் கேட்டவர்களுக்கு அபேக்ஷிதங்களைக் கொடுப்பவைகளான ரத்னங்கள் ஸூர்ய

கிரணங்கள் போன்ற தங்களுடைய காந்தியாலே, ராத்ரியைப் பகலாகப் பண்ணும் அதிவைபவோபேதமான திருவேங்கட மலையில் எனக்காக எழுந்தருளி இருக்கிறாய். அடியேனால் உன்னுடைய திருவடிகளை ஒரு க்ஷணமும் விட்டுப் பிரிந்திருக்க முடியாது. ஆகையால், க்ருபையாக என்னை உன் திருவடிகளில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

குறிப்பு :—உடம்பில் உயிர் இருக்கும்படி செய்வது தாரகம்; அந்நம் முதலானவை. உடம்புக்குப் புஷ்டியைச் செய்வது போஷகம்; ஜலம் முதலானவை. ஸுகத்தைக் கொடுப்பவை போக்யங்கள், சந்தன குஸும தாம்பூலாதிகள். ஆழ்வாருக்கு இவைகளெல்லாம் ஸர்வேச்வரனே.

(10) அவதாரிகை :—"ஏதாவதொரு உபாயத்தை நீர் செய்ய வேண்டும்" என்று எம்பெருமான் நியமித்ததாகத் திருவுள்ளம்பற்றி, உபாயங்களில் சிறந்ததான ப்ரபத்தியை ஸாங்கோபாங்கமாகப் பெரிய பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு பண்ணுகிறார்.

அகல கில்லேன் இறையுமென்று, அலர்மேல் மங்கையுறை மார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னை யாள்வானே!
நிகரி லமரர், முனிக்கணங்கள், விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன் றில்லா அடியேன், உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே. 10

பதவுரை :—இறையும் - க்ஷணகாலமும். அகலகில்லேன் - பிரிந்து ஜீவிக்கமாட்டேன் என்று சொல்லிக் கொண்டு. அலர்மேல் - பரம ஸுகுமாரமான தாமரைப் பூவின்மேல் நித்யவாஸம் செய்து கொண்டு மிகவும் ஸ்ப்ருஹணீயையாயிருக்கும். மங்கை - நித்ய யௌவனவதியான பெரிய பிராட்டி. உறை - எப்பொழுதும் வசிக்கிற. மார்பா - ஸுவிசாலமான திருமார்பை உடையவனே! நிகர்இல் - ஒப்பு இல்லாத. புகழாய் - புகழை உடையவனே மூன்று உலகம் உடையாய் - மூன்று உலகங்களுக்கும் நிருபாதிக ஸ்வாமியாய் இருக்கிறவனே. என்னை - (தாழ்ந்தவனான) என்னையும். ஆள்வானே - அந்தரங்கமான கைங்கர்யங்களிலே ஈடுபடும்படி செய்து கொண்டவனே. நிகர் இல் - ஒப்பு இல்லாத. அமரர் - (கைங்கர்யானுஷ்டானபரரான) நித்ய ஸூரிகளும். முனிகணங்கள் - (குணானுபவபரரான) நித்ய ஸூரிகளுடைய கூட்டங்களும், விரும்பும் - மிகுந்த ஆசையுடன் வந்து சேருகிற. திருவேங்கடத்தானே - சேஷாசலாதீசனே. உன் அடிக்கீழ் - தேவரீருடைய திருவடிகளின் கீழே. புகல் ஒன்று இல்லா - வேறு புகலிடம் ஒன்றுமில்லாத. அடியேன் - தாஸபூதனான நான். அமர்ந்து - நிலையாய் (வேறு பிரயோஜனத்தை

ஆசைப்பட்டு அதை உன்னிடம் பெற்றுக் கொண்டு உன்னை விட்டுப் போகிறவர்கள் போலில்லாமல், உன்னையே ப்ரயோஜனமாக எண்ணி நிலையாய் இருந்து) புகுந்தேன் - என்னை ரக்ஷிக்கிற பாரத்தை உன் திருவடிகள் ஸ்வீகரித்ததாக அத்யவஸாயம் பண்ணுகிறேன். (உறுதியாக எண்ணுகிறேன்).

கருத்து :—தாமரைப் பூவின்மேல் அதின் ஸௌகந்த்ய ஸௌகுமார்யங்கள் ஒரு ரூபத்தை எடுத்துக் கொண்டு இருப்பது போல் எழுந்தருளியிருக்கிற நித்ய யௌவனவதியான பெரிய பிராட்டியும் கூட, எப்பொழுதும் உன்னுடன் சேர்ந்திருந்த போதிலும், உன் திருமார்பு ஒவ்வொரு க்ஷணமும் புதிதாய்த் தோன்றி மனோஹரமாய் இருப்பதால், அதை ஒரு க்ஷணமும் விட்டுப் பிரிந்து ஸஹிக்க முடியாது—என்று சொல்லிக் கொண்டு ஸதா ஸர்வ காலமும் அநந்யையாய் வசிக்கிற ஸுவிசாலமான திருமார்பை உடையவனே! அளவில்லாத கருணையாகிய திருக்கல்யாண குணத்தை உடையவனே! மூன்று உலகங்களுக்கும் ஸ்வாமியாய் அவைகளை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு உள்ளவனே! மிகவும் தாழ்ந்தவனான என்னையும் உனக்கு அந்தரங்கமான கிங்கரனாகச் செய்து கொண்டு, உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற கல்யாண குணத்தைக் காட்டினவனே! உன்னுடைய நித்ய கைங்கர்ய ரஸானுபவம் செய்து கொண்டும், உன்னுடைய கல்யாண குணம்ருதத்தை அனுபவித்துக் கொண்டும் இருவக்கப்பட்ட நித்ய ஸூரிகளின் கூட்டங்களும், ஆசைப்பட்டு வந்து ஸேவிக்கும்படி திருமலையில் நீ எல்லாருக்கும் ஸுலபனாய், எழுந்தருளி யிருக்கிறாய். எனக்கு உன்னைத் தவிர வேறு கதியில்லை. ஆகையால், பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு, அவளுடன் நித்ய ஸம்ச்லேஷ ரஸானுபவம் பண்ணிக் கொண்டு வீற்றிருக்கிற தேவரீருடைய திருவடிகளையே உபாயமாக எண்ணி, என்னை ரக்ஷிக்க வேண்டிய பாரத்தை வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் மனதால் சமர்ப்பித்து விட்டேன். இப்பொழுதே என்னுடைய எல்லாப்ரதிபந்தகங்களும் போய், உனக்கு எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும், எல்லா விதமான கைங்கர்யங்களையும், நான் செய்ய வேண்டும்.

குறிப்பு :—1. உலகம் மூன்று உடையாய், என்பதாலே ஸ்வாமித்வமும், என்னை ஆள்வானே—என்பதாலே சௌசீல்யமும், திருவேங்கடத்தானே—என்பதாலே சௌலப்யமும் காட்டப்படுகின்றன.

2. இந்த ஸௌலப்யாதி குணங்கள் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இந்த பூலோகத்தில். ஆகையினாலே நித்ய ஸூரிகளும் இந்த குணங்களை அனுபவிப்பதற்காகத் திருமலைக்கு வருகிறார்கள். என்று " விரும்பும் " என்றதற்குக் கருத்து.

3. இந்தப் பாசுரம் த்வயம் என்கிற மந்த்ர ரத்னத்திற்கு விவரண ரூபமாய் இருக்கிறது. அகலகில்லேன்—என்பதால் " ஸ்ரீமதே " என்கிற பதத்தினுடைய அர்த்தமும், உலகம் மூன்றுடையாய்—இத்யாதியாலே கல்யாண குணங்களைச் சொல்லுவதாலே " நாராயண " பதத்தினுடைய அர்த்தமும் ; உன்னடிக்கீழ்—என்பதாலே " சரணௌ " என்கிற பதத்தினுடைய அர்த்தமும், புகுந்தேன் என்பதினாலே "சரணம்" என்கிற பதத்தின் அர்த்தமும், புகலொன்றில்லா—என்பதாலே " ப்ரபத்யே " என்பதின் அர்த்தமும் சொல்லப்படுகின்றன.

(4) பிராட்டி கண்ணழிவற்ற புருஷகாரமாய் இருக்கிறாள். புருஷகாரமாவது—தோஷவானான சேதநனையும், நிரங்குச ஸ்வதந்த்ரனான ஈஸ்வரனையும், அவர்களுடைய பிடிவாதத்தை மாற்றி, ஒருவரோடு ஒருவரைச் சேர்ப்பிக்கை. சேதநனுக்கு நிருபாதிக மாதாவாகையாலேயும், ஸர்வேஸ்வரனுக்கு நிருபாதிக வல்லபையாகையாலேயும், இவளுடைய வார்த்தையை இருவரும் தட்டமுடியாது. "உபதேசத்தாலே மீளாத போது, சேதநனை அருளாலே திருத்தும் ; ஸர்வேச்வரனை அழகாலே திருத்தும்"—என்பதும் சொல்லப்பட்டது.

(11) அவதாரிகை :—நிகமத்தில் இந்தத் திருவாய்மொழியைக் கற்றார்க்குப் பலன் சொல்லுகிறார்.

அடிக்கீ ழமர்ந்துபுகுந்து, அடியீர்! வாழ்மி, னென்றென் றருள்கொடுக்கும்—
படிக்கே ழில்லாப் பெருமானைப், பழனக் குருகூர்ச் சடகோபன்
முடிப்பான், சொன்ன ஆயிரத்துத், திருவேங்கடத்துக் கிவைபத்தும்
பிடித்தார் பிடித்தார், வீற்றிருந்து, பெரிய வானுள், நிலாவுவரே. 11

பதவுரை :—அடியீர் - கைங்கர்யம் பண்ணுவதில் குதூகலமுடையவர்களே. அடிக்கீழ் - என்னுடைய திருவடிகளின் கீழே. அமர்ந்து - நிலையாய் இருந்து. புகுந்து - ப்ரவேசித்து (படிந்த மனதை உடையவர்களாய்) வாழ்மின் - உஜ்ஜீவியுங்கள். என்று. என்று - இப்படி அடிக்கடி சொல்லிக் கொண்டு. அருள் கொடுக்கும்படி - அனுக்ரஹம் செய்கிற விதத்தில். கேழ் இல்லா - ஒப்பு இல்லாத. பெருமானை - எம்பெருமானைக் குறித்து. பழன - நல்ல வயல்களால் சூழப்பட்ட. குருகூர் - திரு நகரியில் எழுந்தருளி இருக்கிற. சடகோபன் - நம்மாழ்வார். முடிப்பான் - முடிக்கும்படி. (அவனை

அடைந்து க்ருதார்த்தனாக வேண்டுமென்று) சொன்ன - அருளிச் செய்த. ஆயிரத்து - ஆயிரத்துள். திருவேங்கடத்துக்கு - திருவேங்கடமலையின் வைபவத்தை வர்ணிக்கிறவைகளான. இவை பத்தும் - இந்தப் பத்துப் பாசுரங்களையும். பிடித்தார் - ஆச்ரயித்தவர்களை. பிடித்தார் - ஆச்ரயித்தவர்கள், பெரியவானுள் - அனந்த வைபவோபேதமான பரமபதத்தில். வீற்று இருந்து - பெருமை யுடையவர்களாய் இருந்து. நிலாவுவர் - புநராவ்ருத்தி இல்லாமல் நித்யமாய் ஸுகிப்பார்கள்.

கருத்து.—சர்வேச்வரன், கைங்கர்யங்களைச் செய்ய ஆசைப்படுகிறவர்களை "என் திருவடிகளின் கீழ் ப்ரயோஜனாந்தரத்தில் ஆசையற்றவர்களாய்ப் படிந்து இருந்து வாழுங்கள்" என்று உபதேசித்துக் கொண்டு இருக்கிறான். அவன் அளவில்லாத கல்யாண குணங்களை உடையவன். இப்படிப்பட்ட எம்பெருமானை அடைந்து தாம் க்ருதார்த்தராக ஆகவேண்டுமென்று ஆழ்வார் திருமலையின் பெருமையை வர்ணித்துச் சொன்ன இந்தப் பத்துப் பாட்டுகளையும் எப்பொழுதும் அப்யஸிக்கும் பரம பாகவதோத்தமர்களை எவர்கள் ஆச்ரயிப்பார்களோ, அவர்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் அளவில்லாத ஆனந்தத்தைக் கொடுக்கிற வைகுந்தமாநகரில் சென்று பெருமையுடன் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை அடைந்து, திரும்பி வருவது என்பது, இல்லாமல் நிலையாய் விளங்குவர்கள்.

இந்தத் திருவாய்மொழிக்குச் சங்க்ரஹமாக

# ஸ்ரீமத் வேதாந்தாச்சாரியர் அருளிச்செய்த த்ராவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

---

ஆபத்ஸம்ரக்ஷணாத் அர்யுபகரணதயா மேகஸாம்யாதிபூம்நா
ஸ்வாநாம் விச்வாஸ தாநாத் ஸுரகணபஜநாத் திவ்யதேசோபசத்யா |
ப்ராப்யா ப்ராப்யத்வயோகாத் ஸ்வஜனவிஜநயோ: ஸத்ப்ரபத்தவ்ய பாவாத்,
ஊசே நாதம் சரண்யம் ச்ருதிசதவிதிதம் வேங்கடேசம் சடாரி: ||

(1) ஆபத்ஸம்ரக்ஷணாத்—ப்ரளயத்திலே எல்லோரையும் தன் திரு வயிற்றிலே வைத்துக்கொண்டு ரக்ஷித்து அருளுகையாலும், அர்யுபகரண தயா - எதிரிகளின் மேலே சீறி நின்றுள்ள திருவாழியைத் திவ்யாயுதமாக உடையவனாகையாலும். மேகஸாம்யாதி பூம்நா - நீருண்ட மேகத்தின் ஸ்வ பாவத்தை உடையவனாகையாலும். (ஆதிசப்தத்தாலே நிரதிசயகாந்தி யுடைத் தாயிருக்கை சொல்லப்படுகிறது) ஸ்வாநாம் விச்வாஸதாநாத் - தன்னை ஆச்ர யித்தவர்களுக்கு (சுக்ரீவன் முதலானோர்க்கு) விச்வாஸத்தை உண்டாக்குமவ னாகையாலும், ஸுரகணபஜநாத் - இமையோர்கள் (நித்ய ஸூரிகள்) திரள் திரளாக வந்து ஸ்துதிபண்ணி அடிமை செய்ய உத்தேச்யனாய் நிற்கை யாலும், திவ்யதேசோபசத்யா - எல்லோரும் ஆச்ரயிக்கலாம்படி பரம சுலப மாகத் திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்குமவனாகையாலும், ஸ்வஜன விஜநயோ: ப்ராப்யாப்ராப்யத்வயோகாத் - ஆச்ரிதற்கு அரியனைப்போலே எளியனாய், அநாச்ரிதர்களுக்கு எளியனைப் போலே அரியனாய் இருக்கை யாலும். ஸத்ப்ரபத்தவ்யபாவாத் - எல்லாருக்கும் ஆச்ரயிக்கத்தகுந்தவனாய், தன்னை ஆச்ரயித்திருக்கிற பெரிய பிராட்டியாரோடு பிரிவில்லாதவனுமாய் வாத்ஸல்ய, ஸ்வாமித்வ, ஸௌசீல்ய, ஸௌலப்யாதி கல்யாணகுண விசிஷ்ட னாகையாலே, அகிஞ்சனரான எல்லாராலும் ப்ரபதனீயனாகையாலும், ஸர்வ வேதாந்தங்களிலும் ஸுப்ரஸித்தமான மஹா வைபவத்தையுடைய திருவேங் கடமுடையானை ஸர்வலோக சரண்யனாக, "உலகமுண்ட பெருவாயா" என்கிற திருவாய்மொழியிலே, ஆழ்வார், உபபாதித்து அருளினார்.

இந்தத் திருவாய்மொழிக்குச் சங்க்ரஹமாக

# ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

உலகுய்ய மால்நின்ற உயர்வேங் கடத்தே
அலர்மகளை முன்னிட்டு அவன்தன் — மலரடியே
வன்சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே
உன்சரணாய் நெஞ்சமே உள்.

கருத்து :—நெஞ்சே! எல்லா வுலகங்களும் உஜ்ஜீவித்து வாழும்படி ஸர்வேச்வரன் நின்றருளின திருவேங்கடமலையில் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டு, அவன்தன் திருவடித்தாமரைகளை நிரபேக்ஷ உபாயமாக ஸ்வீகரித்த நம்மாழ்வாருடைய திருவடிகளையே உனக்கு உபாயமாக அடைவாயாக.

ஸ்ரீ:
ஸ்ரீமதே குலசேகராய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த பெருமாள் திருமொழி.

## 4 ம் திருமொழி—'ஊனேறு செல்வத்து'

அவதாரிகை :—ஸ்ரீ குலசேகரப் பெருமாள், இதர விஷயங்களில் விரக்தராய், பகவத் பாகவத விஷயங்களில் அத்யந்த ப்ரவணராய் எழுந்தருளி இருந்தார். அவருக்கு எம்பெருமானது கல்யாண குணங்களின் பாவனா ப்ரகர்ஷத்தாலே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி கள் தலை எடுத்து எம்பெருமானைச் சீக்ரமே சேவிக்க வேணுமென்று ஆசை மிகுந்தது. பரமபதத்திலே போய் அநுபவிக்க வேணுமென்றால், இந்தவுடல் போகுமளவும் காத்து இருக்க வேண்டி இருந்தது. அவ்வளவு காலம் கழிக்கமுடியாமல் இருந்தது. எம்பெருமான் இதைக் கண்டு, நாம் திருவேங்கடமலையில் அனைவர்க்கும் எளியவனாய் ஸேவை சாதிக்கத் தங்கி இருக்கிறோம். நீரும் அங்கே வந்து கைகளாளாரத் தொழுது ஆனந்த மடையலாம், என்று நியமித்தார். அந்த நீர்மை யைக் கண்டு திகைத்தவராய், திருவேங்கட முடையான் திருவடி களிலே விழுந்து கைங்கர்யத் துறையை விஞ்யாபித்துக் கொள்கிறார்.

(1) அவதாரிகை :—அருமையான மானிடப் பிறவியும், அதி லேயும் போக பாக்யங்களுடைய அநுபவத்திற்கு யோக்யமான க்ஷத்ரிய ஜன்மமும் எனக்கு வேண்டா. கைங்கர்யத்தில் எல்லை நிலத் துக்கு உறுப்பான ஜந்துவாய்ப் பிறக்கவும் அமையும் என்கிறார்.

தரவு கொச்சகக் கலிப்பா.

* ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்க மிடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே. 1

பதவுரை :—யான் - அவன் சேஷி யென்றறிந்த அடியேன். (நப்பின்னைப் பிராட்டிக்காக) ஆன் ஏறு ஏழ் - ஏழு எருதுகளையும். வென்றான் - ஜயித்த திருவேங்கட முடையான் விஷயத்திலே. அடிமைத்திறம் அல்லால் - கைங்கர்யம் பண்ணுகை ஒழிய. ஊன் ஏறு - ஒவ்வொரு நாளிலும் மாம்ஸாதிகள்வளர்ந்து விடுவதான. செல்வம் - (அநித்யமான) செல்வத்தோடு கூடின. உடல் பிறவி - மானிடப்பிறவியை. வேண்டேன் - ஆசைப்பட மாட்டேன். (பின்னை விரும்புவது யாதெனின்) கூன் ஏறு - தாஸ்யாஸத்தைத் தெரியப் படுத்துவதற்காக வளைந்து இருக்கிற. சங்கம் - ஸ்ரீ பாஞ்ச ஜன்யத்தை. இடத்தான்தன் - தனது இடது திருக்கையிலேதரித்து இருக்கிறவனுடைய. வேங்கடத்து - திருமலையிலே, கோனேரி - திருக்கோனேரியில். வாழும் - வாழ்ந்து கொண்டு இருக்கிற. குருகு ஆய் - நாரைப் பக்ஷியாகவும். பிறப்பேன் - பிறப்பை உடையவனாக ஆவேன்.

கருத்து :—எம்பெருமான் சேஷி யென்றும், அடியேன் அவனுக்குத் தாஸனென்னும் விவேகம் பகவத் பாகவத அனுக்ரஹத்தினால் எனக்குப் பிறந்தது. ஆகையால், நாளுக்கு நாள் வளர்ந்து போகங்களை விளைவிக்கும் மானிடப் பிறவியையும் நிலையில்லாத அாச போகங்களையும் நான் வேண்டேன். நப்பின்னைப் பிராட்டிக்காகக் கொழுத்த எழு எருதுகளை வென்றவனான திருவேங்கட முடையான் திருவடிகளில் நித்யகைங்கர்யத்துக்குப் பெறுப்பாகும் பக்ஷத்தில், அவன் எழுந்தருளி யிருக்கும் திருமலையில் திருக்கோனேரியில் ஒரு நாரையாகவும் நான் வாழ்வேன்.

(2) அவதாரிகை :—ஸ்வர்க்காதி போகங்கள் கிடைத்தால் நீர் என்ன செய்வீர்? என, அவையும் யான் வேண்டேன்—என்று சொல்லுகிறார்:—

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே. 2

பதவுரை :—ஆனாத - அழியாத. செல்வத்து - யௌவனமாகிற செல்வத்தை உடையவரான. அரம்பையர்கள் - ரம்பை முதலான அப்ஸரஸ்ஸுக்கள். தன்சூழ - தன்னைச் சூழ்ந்து நிற்க. வான் ஆளும் - சுவர்க்கத்தைப் பரிபாலிக்கையாகிற. செல்வமும் - சம்பத்தையும். மண்ணரசும் - பூலோகத்தை யாளுவதையும். யான் வேண்டேன் - நான் விரும்பமாட்டேன். தேன் ஆர் - தேன் மிகுந்த.

பூ - புஷ்பங்களையுடைய. சோலை - நந்தவனங்களால் சூழப்பட்ட. திருவேங்கடம் - திருமலையில் உள்ள. சுனையில் - மடுக்களிலே. மீனாய் - மீனாக வாவது. பிறக்கும் - பிறக்கத்தக்க. விதியுடையேன் ஆவேனே - பாக்யத்தை யுடையவனாக ஆவேன்.

கருத்து :—நித்ய யௌவனவதிகளான ரம்பை முதலான அப்ஸரஸ்ஸுக்களை அநுபவிக்கும் ஸ்வர்க்காதி போகங்களையும், பூமியை ஆள்வதாகிற செல்வத்தையும் யான் கொஞ்சமும் விரும்பமாட்டேன். தேன் நிறைந்த புஷ்பங்களோடு கூடிய நந்தவனங்களாலே சூழபட்ட திருமலையில் இருக்கும் சுனைகளில் ஒரு மீனாகவாவது பிறப்பேன்—என்று சொல்லுகிறார்.

(3) அவதாரிகை ;—கீழ் கழிக்கப்பட்ட மானிட ஜன்மமும் பகவத் சேஷத்வத்திற்கு உறுப்பாகப் பெறில், அதையும் நான் விரும்புகிறேன் என்கிறார் :—

பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்து உடனே புகப்பெறுவே னாவேனே. 3

பதவுரை :—பின்னிட்ட - பின்னப்பட்ட. சடையானும் - ஜடா சூடத்தையுடைய பரம சிவனும். பிரமனும் - சதுர்முக ப்ரம்மாவும். இந்திரனும் - மஹேந்த்ரனும். (நான் முன்னே, நான் முன்னே என்கிற எண்ணத்தாலே) துன்னிட்டு - ஒருவர்க்கொருவர் நெருக்கிக் கொண்டு. புகலரிய - ப்ரவேசிக்க வொண்ணாததாய் இருக்கிற. வைகுந்தம் - பரம பதத்திற்கு ஒப்பான. நீள் - மஹோந்நதமான. வாசல் - திருவாசலிலே. மின் - மின்னலை. வட்டம் - வளைந்தாப் போல் இருக்கிற. சுடர் - ஒளியையுடைய. ஆழி - திருவாழியாழ்வானைத் தரித்திருக்கிற. வேங்கடக்கோன் தான் - திருவேங்கட முடையான். உமிழும் - திருப்பவளமாற்றுகிற. பொன் - தங்கமயமான. வட்டில் - கிண்ணியை. பிடித்து - கையிலேந்திக் கொண்டு. உடனே புகப் பெறுவே னாவேனே - கர்ப்ப க்ருஹத்திலே ப்ரவேசித்து எம்பெருமான் அருகே நிற்கத்தக்க பாக்யத்தைப் பெறுவேனாவேனே.

கருத்து :—மிகுந்த பெருமைவாய்ந்தவர்களான ப்ரம்ம ருத்ர மஹேந்த்ராதிகளும் உள்ளே ப்ரவேசிக்க முடியாமல் நெருக்கிக் கொண்டு கிடக்க, பூலோக வைகுண்டமாகிற திருவேங்கடமுடையான் சன்னிதியில், அவனுமிழும் பொற்கிண்ணத்தை ஏந்திக்கொண்டு,

உடனே உள்ளே செல்லும் பாக்யத்தை உடையேனாவேனே. அப்படி யாருமபக்ஷத்தில் மானிடப் பிறவியையும் நான் விரும்புகிறேன் என்கிறார்.

(4) அவதாரிகை:—மனுஷ்ய ஜன்மமானது அஹங்காரத்தைக் கொடுக்கக் கூடிய அரசப் பிறவி முதலானவற்றிற்கும் பொதுவாய் இருக்கும். ஆகையால் அதுவேண்டா. திருவேங்கடமுடையான் கடாக்ஷத்திற்குப் பாத்ரமாகும்படி திருமலையிலே ஒரு செடியாய்ப் பிறப்பதும் அமையும் என்கிறார் :—

ஒண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்குப்
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே. 4

பதவுரை :—ஒண் - ஒளியையுடைய. பவளம் - பவழங்களை. வேலை - கரையிலே கொண்டுவந்து. உலவு - சேர்க்கிற. தண் - குளிர்ந்த. பாற்கடலுள் - திருப்பாற்கடலிலே. கண் துயிலும் - கண் வளர்ந்தருளுகிற. மாயோன் - ஆச்சர்ய குணசேஷ்டிதனான திருவேங்கட முடையானுடைய. கழலிணைகள் - திருவடிகளை. காண்பதற்கு - சேவிப்பதற்காக. பகரும் - தங்கள் பாடுகிற. பண் - இசைக் கனுகுணமாக. வண்டினங்கள் - வண்டின் சமூகங்கள். பண்பாடும் - பண்களைப் பாடா நின்றுள்ள. வேங்கடத்து - திருமலையிலே. செண்பகமாய் நிற்கும் - சண்பக மரமாய் நிற்கத்தக்க. திருவுடையே னாவேனே - சம்பத்து உடையவனாகவாகிலும் ஆவேன் (என்கிறார்.)

கருத்து :—பவழங்களையும், முத்துக்களையும் கரையில் கொண்டு வந்து சேர்க்கும் பெரும் அலைகளோடு கூடியிருக்கும் பாற்கடலுள் கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்ய குண சேஷ்டிதனான திருவேங்கடமுடையான் திருவடிகளைச் சேவிப்பதற்காக மனிதர்களோடு வாசியற வண்டினங்களும் பண்பாடுகிற திருவேங்கடத்தில் ஒரு சண்பக மரமாய் நிற்கத்தக்க பாக்யத்தைப் பெறுவேன் ஆவேன்.

(5) அவதாரிகை :—சண்பகமானால் பரிமளத்துக்காக உள்ளே கொண்டு புகுவர்கள்—என்று ஒரு ப்ரயோஜனத்தைக் கணிசித்தது தாமிறே. அப்படியும் ஒன்றுமில்லாத தம்பகமாக அமையும் என்கிறார் :—

கம்ப மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடையே னாவேனே. 5

பதவுரை :—கம்பம் - கண்டவர்கள் எல்லோரும் நடுங்கும்படியான. மதம் - மதத்தை யுடைய. யானை - யானையினுடைய. கழுத்தகத்தின் மேல் - கழுத்தின் மேலே. இருந்து - ராஜாதி ராஜன் என்னும் பெருமை தோன்ற விருந்து. இன்பு அமரும் - சகல போகங்களையும் புஜிக்கத்தக்க. செல்வமும் - ஸம்பத்தையும். இவ்வரசும் - இந்த ராஜ்யம் ஆளுகையையும். யான் - என்னை அத்தலைக்குச் சேஷபூதன் என்றறிந்த நான். வேண்டேன் - விரும்பமாட்டேன். எம்பெருமான் - எனக்கு உபகாரகனாய். ஈசன் - ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானுடைய. எழில் - அழகிய. வேங்கட மலைமேல் - திருமலையிலே. தம்பகமாய் நிற்கும் - தம்பக மரமாய் நிற்கும். தவமுடையேன் ஆவனே - தபஸ்ஸை உடையவனாக ஆவேனோ.

கருத்து :—கண்டவர்கள் எல்லோரும் நடுங்கும்படி பயங்கரமாய் மதத்தையுடைய யானையின் மேல் ராஜாதிராஜன் என்னும் பெருமைத் தோன்ற வீற்றிருந்து ஸகல போகங்களையும் அனுபவிக்கத்தக்க பெருஞ் செல்வத்தையும், இந்த ராஜ்ய பரிபாலன பாக்யத்தையும் யான் வேண்டேன். பரம உபகாரகனான எம்பெருமானுடைய அழகிய திருமலை மேல் தம்பக மரமாய் நிற்கும் பாக்யத்தை உடையேனாகில் தன்யனாவேன். ஒரு ப்ரயோஜனத்துக்காகாதே அங்கே மூத்தற்றுத் தீய்ந்து போவது ஒரு ஸ்தாவரமாய் நிற்கும் தவமுடையேனாவேனோ. இந்த பாக்யம் பெறுவது அநேக ஜன்மங்களில் ஆர்ஜித்த அருந்தவத்தின் பலமன்றோ !

(6) அவதாரிகை :—ஸ்தாவரமானால் ஒரு நாள் இன்றியே போமிறே. அங்ஙனன்றியே என்றும் ஒக்க உண்டாயிருக்கும் திருமலையில் ஏக தேசமாக வேணும் என்று ஆசைப்படுகிறார் :—

மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தே னாவேனே. 6

பதவுரை :—மின் அனைய - மின் போலே. நுண் - ஸூக்ஷ்மமான. இடையார் - மத்ய ப்ரதேசத்தை யுடையரான. ஊருப்பசியும், மேனகையும், அன்ன

வர்தம் - ஊர்வசியையும், மேனகையும் ஒத்த ஸ்திரீகளுடைய. ஆடலொடு - நர்த்தனங்களோடு. பாடலவை - கானம் முதலாகியவற்றை. ஆதரியேன் - விரும்பமாட்டேன். வண்டினங்கள் - வண்டுகளின் கூட்டங்களானவை. தென்ன எ(ன) - தென தெனனன வென்று ஆலாபத்தோடு. பண்பாடும் - பண்ணிசை பாடுகிற. வேங்கடத்துள் - வெங்கட மென்னும் திருமலையிலே. அன்னனைய - உபமான ரஹிதமான. பொற்குவடாம் - பொன் மலையிலே ஒரு ப்ரதேசமாக இருக்கத்தக்க. அருந்தவத்தன் ஆவேனே - அரிய தபஸ்ஸை யுடையவனாக ஆவேனோ.

கருத்து :—மின்னல் போல் மிகவும் ஸூக்ஷ்மமான இடையை யுடையவராய், ஸௌந்தர்ய ராசிகளாகிய ஊர்வசி, மேனகை முதலாகிய தேவ ஸ்த்ரீகளைப் போன்ற தருணீ மணிகளுடைய திவ்ய கான நர்த்தனாதிகளை நான் ஒருகாலும் விரும்பமாட்டேன். வண்டினங்கள் பூவிலுள்ள தேனைப் பானம் செய்து, சந்தோஷாதிரேகத்தாலே தென்னன வென்று பண்ணிசை பாடுகிற திருவேங்கட முடையான் பொன்மலையிலே ஒரு ப்ரதேசமாய் நிற்கும் அருந்தவ முடையேன் ஆவேனோ.

(7) அவதாரிகை :—திருமலையில் ஒரு ப்ரதேசமானால் ஏற வல்லார் அநுபவித்து, மாட்டாதார் இழக்குமதா யிருக்குமிறே? அப்படியின்றியே எல்லோருக்கும் அநுபவ யோக்யமா யிருக்கும் கானாறாக வேணும் என்று ஆசைப்படுகிறார் :—

வானாளு மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே. 7

பதவுரை :—வான் - ஆகாசப் பரப்பை யெல்லாம். ஆளும் - ஆளுகிற. மா - பெருமை தங்கிய. மதி போல் - சந்த்ரனை யொத்த. வெண்குடை கீழ் - வெண் கொற்றக் குடை நிழலிலே. மன்னவர் தம் கோனாகி - ராஜாதி ராஜனாய். வீற்றிருந்து - பெருமை தோன்ற விருந்து. கொண்டாடும் - எல்லா ஜனங்களாலும் கொண்டாடத்தக்க. செல்வு - சம்பத்தை. அறியேன் - மனஸ்ஸாலும் ஒரு பொருளாக நினைத்தறியேன். தேன் ஆர் - தேன்மிக்க. பூ- பூத்திருந்துள்ள. சோலை - சோலையை யுடைய. திருவேங்கட மலைமேல் - திருமலையிலே, கானாறாய் - காட்டாறாய். பாயும் - நிலத்தில் சேரவேணு மென்கிற. கருத்துடையவனாவேன் - கருத்தை யுடையவனா யிராநின்றேன்.

கருத்து :—ஆகாசப் பரப்புக் கெல்லாம் சந்திரன் ஒருவனுமே யானாற்போலே லோகமெல்லாம் வ்யாபித்திருக்கிற தன் வெண் கொற்றக் குடை நிழலிலே வீற்றிருக்கும் ராஜாதி ராஜனாய் இருக்கும் பெருஞ் செல்வத்தை யான் ஒரு நாளும் ஒரு பொருளாக நினைக்க மாட்டேன். மகரந்த நிர்பரமான புஷ்பங்களோடு கூடி மிகவும் மனோஜ்ஞமா யிருந்துள்ள சோலைகளோடு, பொருந்தியிரா நின்ற திருவேங்கட மலையிலே ஒரு காட்டாறாய்ப் பாயும் பாக்யத்தை உடையேன் ஆவேனே.

(8) அவதாரிகை :—ஏதோ ஒரு மூலையில் காட்டாறாய் ப்ரவஹித்தால் ப்ரயோஜன மில்லை. எப்பொழுதும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாதரேணு படும்படியான ஒரு வழியாய்க் கிடக்கும் நிலை யுடையேன் ஆகுவேன் என்று ஆசைப்படுகிறார் :—

பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான் மறையானான்
வெறியார்தண் சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே. 8

பதவுரை :—பிறையேறு - மூன்றாம் பிறையைத் தரித்த. சடையானும் - ஜடையை யுடைய ருத்ரனும். பிரமனும் - அவருக்குத் தமப்பனான ப்ரஹ்மாவும். இந்திரனும் - இந்த்ரனும். முறையாய - தந்தாமுடைய அதிகாரானுகுணமாகப் பண்ணும். பெரு - ச்லாக்யமான. வேள்வி - யாகங்களினுடைய. குறை முடிப்பான் - குறையைத் தீர்க்குமவனாய். மறையானான் - வேத ப்ரதி பாத்யனான சர்வேச்வரன் எழுந்தருளி யிருக்கிற. வெறி ஆர் - பரிமளம் மிக்கு. தண் - குளிர்ந்துள்ள. சோலை - சோலை சூழ்ந்த. திருவேங்கட மலைமேல் - திருமலை மேலே (எப்போதும் வைஷ்ணவர்கள் பாதரேணும் படும்படி) நெறியாய்க் கிடக்கும் - வழியாய்க் கிடக்கும். நிலையுடையனாவேனே - தன்மை யுடையவனாவேனே.

கருத்து :—பிறைதரித்த ஜடையையுடைய ருத்ரனும், தஜ்ஜனகனான ப்ரம்மாவும், தேவ லோகாதிபதியான இந்திரனும், தந்தாமுடைய அதிகாரானு குணமாகப் பண்ணும் யஜ்ஞங்களுக்குப் பலமாக அதிகாரங்களைக் கொடுக்கு மவனாய், ப்ரம்மாதிகளுக்கு ஆச்ரயணீயனென்று வேதங்களால் அறிக்கப்படுபவனான ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கிற, பரிமள பரிதங்களாய்க் குளிர்ந்திருக்கின்ற

ஆராமங்களால் சூழப்பட்ட, திருமலையிலே எப்போதும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாதரேணு படும்படி, வழியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனோ.

(9) அவதாரிகை:—ஒரு வழியாய்க் கிடந்தால் பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை ஸேவிக்கும் பாக்யம் இல்லாது போய் விடும். ஆகையால், பாகவதர்களும், தேவர்களும் ஸஞ்சரிக்கும்படியான ஸந்நிதியில் உள்ள ஒரு படியாய்க் கிடக்கும் பாக்யம் உண்டாக வேணுமென்று ஆசைப்படுகிறார் :—

* செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன்பவளவாய்க் காண்பேனே. 9

பதவுரை :—செடியாய் - பாபபலமான. வல்வினைகள் - க்ரூரமான ஸம்ஸார ஸம்பந்தத்தை. தீர்க்கும் - அறுத்துத் தருபவனுனை. திருமாலே - லக்ஷ்மீ நாதனே. நெடியானே - ஆச்ரிதர்கள் விஷயத்தில் அபிமானத்தால் மிகுந்தவனே. வேங்கடவா - திருவேங்கட மலையில் நித்யவாஸம் செய்கிறவனே. நின் - தேவரீருடைய. கோயிலின்வாசல் - ஆலயத்தின் முன் புறத்தில். அடியாரும்- உன் பக்தர்களும். வானவரும் - தேவர்களும். அரம்பையரும் - ரம்பை முதலிய தேவ கன்னிகளும். கிடந்து - நெருங்கி. இயங்கும் - நடமாடும். படியாய் - படியாக. கிடந்து - (நான்.) இருந்து. உன் - தேவரீருடைய. பவளவாய் - பவழம் போன்ற திருவதரத்தை. காண்பேன் - காணவேணுமென்றாசை யுடையவனாய் இரா நின்றேன்:

கருத்து :—அனாதி காலார்ஜிதங்களான பாபங்களையும், அதுகளின் ஸம்பந்தங்களையும் அறுத்துத் தீர்க்குமவனாய், திருமலையில் எழுந்தருளி யிருக்கிற திருமாலே! தேவரீருடைய பக்தர்களும், தேவர்களும், தேவகன்னிகைகளும், கலந்து ஸஞ்சரிக்கும்படியான தேவரீரது திவ்யஸந்நிதியின் திருவாசலில் எல்லாரும் மிதிக்கும் படியாக இருந்து தேவருடைய பரம போக்யமான அதரோஷ்டத்தை எப்பொழுதும் ஸேவிக்கும் பாக்யம் உடையவனாக ஆவேனோ?

குறிப்பு :—இந்தப் பாசுரம் மிகவும் போக்யமானது. இந்தப் பாசுரத்தின் மூலமாகவே திருவேங்கட முடையானின் கர்ப்ப க்ருஹத்தின் முன் வாசற் படிக்குக் குலசேகரப்படி யென்றே திருநாமம் வழங்கி வருகிறது.

(10) அவதாரிகை :—மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் மிகவும் எளியவனாய், பரமபோக்யனாய், அத்யாச்சர்யமூர்த்தியாய்ப் பகவான் எழுந்தருளியிருக்கும் திருமலையில் எல்லாப் பதார்த்தங்களும் மிகவும் உயர்ந்தவை. அவைகளில் தாரதம்யம் பாராட்டுவது அபசாரமாகும். ஆகையினால், எம்பெருமான் பொன்மலையில் ஏதேனுமாவேன் என்று ஆழ்வார் ஆசைப்படுகிறார்.

உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்,
செம்பவள வாயான் திருவேங்கட மென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே. 10

பதவுரை :—உம்பர் உலகு - மேலுள்ள ஸமஸ்த லோகங்களையும். ஒரு குடைக் கீழ் - ஒரு முத்துக் குடையின் நிழலிலே. ஆண்டு - அரசு செலுத்தி. உருப்பசிதன் - ஊர்வசியினுடைய. அம் - அழகிய. பொன்கலை - ஸ்வர்ண மயமான ஆபரணங்களையணிந்த. அல்குல் - ஜகன ப்ரதேசத்தை. பெற்றாலும் - அடைந்தாலும். ஆதரியேன் - விரும்பமாட்டேன். செம்பவளம் வாயான் - சிவந்த பவழம் போன்ற திருவதரத்தையுடைய, எம்பெருமான் - என் ஸ்வாமியானவன் எழுந்தருளியிருக்கிற. திருவேங்கடம் என்னும் - "திருவேங்கடம்" என்று ப்ரஸித்தமான. பொன்மலை மேல் - பரம போக்ய மான திருமலையிலே. ஏதேனும் ஆவேனே - ஏதேனும் ஒரு வஸ்துவாக இருக்கும் பாக்ய முடையவனாவேனோ?

கருத்து :—பதினான்கு உலகங்களையும் ஒரு குடையின் கீழ் அரசு செலுத்தி, ஊர்வசி முதலான அழகிகளுடைய திவ்ய போகங்கள் கிடைத்தாலும் நான் அவைகளை ஒரு பொருட்டாக மதிக்கமாட்டேன். பவழம் போல் மனோஹரமான சிவந்த அதரத்தையுடைய எனது ஸ்வாமிநாதன், திருவேங்கடத்தான் எழுந்தருளியிருக்கும் பரம போக்யமான திருவேங்கடமலையில் ஏதாவது ஒரு வஸ்துவாக இருக்கும் பாக்யம் எனக்குக் கிடைக்குமோ?

குறிப்பு :— எம்பெருமானின் பொன்மலையில் இருக்கக்கூடிய எல்லா வஸ்துக்களும் மிகவும் பாக்யத்தைப் பெற்றவை. அவைகளில் உயர்வு, தாழ்வு, கிடையாது. பெரியோர்களும், பகவத் ஸம்பந்தம் பொருந்திய க்ரிமி, கீடாதி ஜன்மங்களையும் உயர் பொருளாகவே மதித்தார்கள். "ரத்யாசுநாம், கீட ஜன்மமே" என்று ஆளவந்தார் அருளிச் செய்தார். "வீதிசொதககிங்க ரான்" என்று தேசிகன் அருளிச் செய்தார். ஆகையினால், திருவேங்கட

மலையில் இருக்கும் ஒரு தும்பும் சிரஸா வஹிக்கத்தக்கது - என்பது ஸாரஸித்தாமாயிற்று.

(11) அவதாரிகை :—நிகமநத்தில் இந்த ப்ரபந்தத்தைக் கற்றார்க்குப் பலத்தைக் கூறுகிறார்.

* மன்னியதண் சாரல் வடவேங் கடத்தான்தன்
பொன்னியலும் சேவடிகள் காண்பான் புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலும் கூர்வேல் குலசே கரன்சொன்ன
பன்னியநூல் தமிழ்வல்லார் பாங்காய பக்தர்களே. 11

பதவுரை :—கொல் நவிலும் - வைரிகளைக் கொல்லுவதே வ்யாபாரமாகவுடைய. கூர் வேல் - கூர்மையான வேலாயுதத்தையுடைய. குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள். மன்னிய - அழகு மாறுமலும். தண் - குளிர்ந்தும். இருக்கிற. சாரல் - தாழ்வரைகளையுடைய. வடவேங்கடத்தான் றன் - வடக்குத் திருமலையிலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய. பொன்னியலும் - ச்லாக்யமான. சேவடிகள் - திருவடித் தாமரைகளை. காண்பான் - சேவிப்பதற்கு. புரிந்து - ஆசைப்பட்டு. இறைஞ்சி - தலையாலே வணங்கி. சொன்ன - அருளிச் செய்த. பன்னிய - இனிமையான, நூல். இலக்கணம் பொருந்திய. தமிழ்மாலை - தமிழ்ப் பாசுரங்களை. வல்லார் - அநுஸந்தானம் பண்ணுமவர்கள். பாங்காய - ஈச்வரன் திருவுள்ளத்திற்குப் பொருந்தின. பக்தர்கள் - பக்த சிகாமணிகள் ஆவார்கள்.

கருத்து :—வெளிப்புறச் சத்ருக்களையும், உட்புறச் சத்ருக்களையும் நிர்மூலமாக்கும் கூர்மையான வேலாயுதத்தையே பூஷணமாகவுடைய ப்ரபன்ன சிகாமணியான ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருவேங்கட முடையான் திருவடித் தாமரைகளை ஸேவிப்பதற்கு ஆசைப்பட்டு நெஞ்சுருகி, தலை வணங்கி, அருளிச் செய்த மதுர மதுரங்களாகிய இந்தத் தமிழ்ப் பாசுரங்களைக் கற்றவர்கள் திருவேங்கடமுடையானுக்கு அந்தரங்க பக்தர்களாய், கைங்கர்ய சாம்ராஜ்யத்தை அநுபவித்து உஜ்ஜீவிப்பார்கள்.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:
ஸ்ரீ கோதாதேவ்யை நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார் அருளிச்செய்த நாச்சியார் திருமொழி.

## 8 ம் திருமொழி—'விண்ணீல மேலாப்பு'

## (மேகவிடு தூது)

---

அவதாரிகை :—ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார் கீழ் திருமொழியில் திருச்சங்காழ்வானோடு வார்த்தையாடி ஒருவாறு போது போக்கினாள். இவள் எவ்வளவு முறையிட்டாலும் அச்சங்கு மறுமாற்றம் ஒன்றும் சொல்லவில்லை. ஆகையால் பகவத் விச்லேஷத்தினால் உண்டான ஆற்றாமை மீதூர்ந்து செல்லத் தொடங்கிற்று. காலமும் வர்ஷா காலமாய் இருந்தது. வானத்தில் எங்கும் மேகங்கள் மின்னி முழங்கிக் கொண்டு வந்து தோன்றின. அந்த மேகங்களோடு அவைகளின் நிறத்தையுடைய எம்பெருமானும் வந்திருப்பான் என்று பாவித்து, "எம்பெருமானும் உங்களுடன் வந்தானோ?" என்று அவைகளை கேட்டாள். அவைகளும் மறுமாற்றம் ஒன்றும் சொல்லவில்லை. ஆகவே மேகங்களை நோக்கி நீங்கள் என் தலைவனை திருவேங்கட முடையான் சந்நிதியில் சென்று என் தசையை அறிவிக்க வேணுமென்று இரக்கிறாள். இங்ஙனம் மேகத்தைத் தூது விடுவதாகச் சொல்லுகிறது இத் திருமொழி :—

(1) அதில் முதல் பாசுரத்தில் வானமெங்கும் வ்யாபித்து நிலை நின்ற மேகங்களே! என் நாதனை திருவேங்கட முடையானும் உங்களோடு கூட இங்கு எழுந்தருளி இருக்கிறானோ? என்று ஆண்டாள் மேகங்களை நோக்கிக் கேட்க, அதற்கவை மறுமொழி யொன்றும் சொல்லாதிருக்க, கண்ணீர் வெள்ளமிடத் தொடங்க, மேகங்களே! நான் இப்படிக் கண்ணீர் விட்டு அழும்படி என்னைச் செய்வது அவனுக்கு ஒரு பெருமையோ? நீங்களே சொல்லுங்கள்—என்கிறாள் :—

தரவு கொச்சகக் கலிப்பா.

* விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள் !
தெண்ணீர்ப்பாய் வேங்கடத்து என்திருமாலும் போந்தானே ?
கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்வேனைப்
பெண்ணீர்மை யீடழிக்கும் இதுதமக்குஓர் பெருமையே 1

பதவுரை :—விண் - ஆகாசம் முழுவதிலும். நீலம் மேலாப்பு விரித் தாற்போல் - நீல நிறமுடைய மேல் கட்டியை விரித்துக் கட்டினுப் போல் இருக்கிற. மேகங்காள் - மேகங்களே. தெள் நீர் பாய் - தெளிந்த தீர்த்தங் கள் பாயுமிடமான. வேங்கடத்து - திருவேங்கட மலையில் எழுந்தருளி இருக்கிற. என் திருமாலும் - என் நாதனுன ஸ்ரீய: பதியும். போந்தானே - உங்களோடே கூட வந்து இருக்கிறுனே. முலை கோட்டில் - முலை நுனி யிலே. (தனங்களுடைய மேல் பாகத்திலே) கண்ணீர்கள் - கண்ணீர்கள். துளி சோர - பெருக்கெடுக்க. சோர்வேனை - வருந்துகிற என்னுடைய. பெண்ணீர்மை - பெண்மையை. ஈடு அழிக்கு மிது - உருவழிக்கிற இது. தமக்கு - அவருக்கு. ஓர் பெருமையே - ஒரு பெருமையாய் இரா நின்றதோ ?

கருத்து :—ஆகாசப்பரப்பு முழுவதும் இடமடையும்படி நீல நிறமான மேல் கட்டியை விரித்துக்கட்டினுற் போல் இராநின்ற மேகங்களே ! மிகவும் புரிசுத்தமான புண்ய தீர்த்தங்களும் எப் பொழுதும் ப்ரவஹிப்பதாலே மிகவும் குளிர்ச்சியாயும், அழகாயும் இருக்கிற திருவேங்கடமலையில் நித்ய வாசம் பண்ணுகிற என் நாத னும், சமானமான வர்ணத்தையுடைய உங்களுடன் எழுந்தருளி இருக்கிறுனே ! பரம கருணுகரனை அவனுக்கு இப்படி என்னைக் கண்ணீர் விட்டு அழும்படி செய்வது ஒரு பெருமையோ ? நீங்களே சொல்லுங்கள் —என்று ஆண்டாள் மேகங்களுடன் முறையிடுகிறுள்.

(2) அவதாரிகை :—ஓ மேகங்களே ! நீங்கள் எனக்காக ஔதார்யத்தில் புதிதாகப் பரிசயம் பண்ணவேண்டுமோ ? வள்ளல் தனமே இயல்பாக இருப்பவர்கள் அன்றோ நீங்கள். ஆகையால் மிகவும் கெஞ்சி வேண்டுகிற எனக்காக ஒரு வாய்ச்சொல் நல்கு லாகாதோ ? திருவேங்கட முடையான் வ்ருத்தாந்தம் உங்களுக்குத் தெரியாமல் இராதே, பிறர்க்குப் பொன்னையும் முத்தையும் பொழி கின்ற நீங்கள் எனக்கு ஒரு வாய்ச்சொல் பொழிய அருமையோ ! என்று முறையிடுகிறுள் .—

மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள் ! வேங்கடத்துச்
சாமத்தின் னிறங்கொண்ட தாடாளன் வார்த்தையென்னே ?

பதவுரை :—அளியத்த மேகங்காள் - அருள்பொழியும் மேகங்களே. ஒளி - தேகத்தின் காந்தியும். வண்ணம்-நிறமும். வளை - வளைகளும். சிந்தை - நெஞ்சும். உறக்கத்தோடு இவையெல்லாம் - தூக்கத்தோடு இவையெல்லாம். எளிமையால் - என்னுடைய அசக்தியினால். என்னை இட்டு - என்னை உபேக்ஷித்து. ஈடு அழிய - என் சீர்குலையும்படி. போயின - நீங்கி போய்விட்டன. ஆல் - ஐயோ ! குளிர் அருவி - குளிர்ந்த அருவிகளை உடைய. வேங்கடத்து - திருமலையில் எழுந்தருளியிருக்கிற. என் கோவிந்தன் - எனது கண்ணபிரானுடைய. குணம் - திருக்கல்யாண குணங்களை. பாடி - வாயார வாழ்த்திக் கொண்டு. (அதுவே தாரகமாக) ஆவி - ப்ராணனை. காத்திருப்பேனே - ரக்ஷித்திருக்க என்றால் முடியுமோ ?

கருத்து :—எம்பெருமானைப் பிரிந்து அனுபவித்த துக்கத்தினால் சரீர சோபைமாறி, நிறமழிந்து, வளைகளகன்று, நெஞ்சு தளர்ந்து, உறக்க மொழிந்து, இப்படியெல்லாம் நான் சீர்குலைந்து தடுமாறி இருக்கும் இருப்பை என் சொல்ல வல்லேன் ! விஸ்லேஷ சமயங்களில் நாயகனுடைய திருக்கல்யாண குணங்களைக் கீர்த்தனம் பண்ணிக் கொண்டு ப்ராணனைத் தரித்து இருப்போமென்று பார்த்தாலும், ஒளி, வண்ணம், வளை, சிந்தை ஒழியும்படி நேர்ந்த இந்தத் தசையில் குண கீர்த்தனம் பண்ணித் தரிக்க என்றால் முடியுமோ ? நீங்களே சொல்லுங்கள் —என்கிறாள்.

(4) அவதாரிகை :—திருவேங்கடமலையில் பெரிய பிராட்டியாருடன் லீலா ரஸத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிற எம்பெருமானோடு அழகிய தம்மார்போடே என் இளமுலைகளை அணைத்துக் கொண்டு என் ஆசையைத் தீர்க்கும்படி ஒரு வார்த்தை சொல்லுங்கள் என்று மேகங்களைப் பார்த்து வேண்டிக் கொள்கிறாள்.

மின்னாகத் தெழுகின்ற மேகங்காள் ! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்கு என்புரிவுடைமை செப்புமினே. 4

பதவுரை :—ஆகத்து மின் எழுகின்ற - சரீரத்திலே மின்னல் தோன்றப் பெற்ற. மேகங்காள் - மிகவும் ரஸஜ்ஞரான மேகங்களே. என் ஆகத்து - என் மார்பிலுண்டான. இளம் கொங்கை - இள முலைகளை. தாம் விரும்பி - அவ்வெம்பெருமான் விரும்பி. பொன்னாகம் புல்குதற்கு - ச்லாக்யமான அழகிய தன் மார்போடே அணைய வேண்டும் என்று. நாள்தோறும் - எப்

பொழுதும். என் புரி உடைமை - எனக்கு ஆசை இருக்கிறபடியை. வேங்கடத்து - திருமலையிலே. தன்னாகம் - தனது திருமேனியில். திருமங்கை தங்கிய - பெரிய பிராட்டி எழுந்தருளி இருக்கப்பெற்ற. சீர் மார்பர்க்கு - ச்லாக்யமாயும், விசாலமாயுமுள்ள திருமார்பைப் படைத்த பெருமானுக்கு. செப்புமின் - தெரிவியுங்கள்.

கருத்து :—எம்பெருமானுடைய கரிய திருமேனியில் மின்னற் கொடி போன்ற பிராட்டி விளங்கும்படியை நினைப்பூட்டிக் கொண்டு மின்னி எழுகின்ற அழகிய மேகங்களே! நீங்கள் ஸ்ரீய:பதியாய், பரம க்ருபாவானை திருவேங்கடமுடையான் பக்கலிலே சென்று ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். அதாவது—என் மார்பிலுள்ள இள முலைகளை அவ்வெம்பிரான் விரும்பி அணைத்துக் கொண்டே இடை விடாது கிடக்க வேணுமென்று, நான் ஆசைப்பட்டிராநின்றேன்—என்பதை நீங்கள் போய்ச் சொல்ல வேண்டும். எப்பொழுதும் மின்னற் கொடிகளோடு கூடியிருக்கும் உங்களுக்கும் பெரிய பிராட்டியோடு கூடியிருக்கும் திருமார்பனை அவ்வெம்பெருமானுக்கும் என்னுடைய மனக் க்லேசம் தெரிய வேண்டாவோ ? என்று சொல்லுகிறாள்.

(5) அவதாரிகை :—ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காகத் தனது கூர்மையுடைய நகங்களாலே இரணியாசுரனுடைய மார்வைப் பிளந்தெறிந்த பெருமான் தனது ஸ்வபாவத்தை மறந்து அவனையே நம்பியிருக்கும் என்னை நலியப் படுத்துகிறான். என்னிடத்துக் கொள்ளை கொண்டு போன கைவளைகளைத் திருப்பிக் கொடுப்பதாக அவன் இருந்தால், எனது தூரவஸ்தையை அவனுக்குத் தெரிவியுங்கோள் என்று, திருமலையிலே திரள் திரளாகத் தங்கி இருக்கும் மேகங்களைப் பிரார்த்திக்கிறாள்.

வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள் வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப் பொழிவீர்காள் !
ஊன்கொண்ட வள்ளுகிரால் இரணியனை உடலிடந்தான்
தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே. 5

பதவுரை :—வேங்கடத்து - திருமலையிலே. தேன் கொண்ட மலர் சிதற - தேன் நிறைந்துள்ள புஷ்பங்கள் சிதறும்படி. திரண்டு ஏறி பொழிவீர்காள் - கூட்டங் கூட்டமாக ஆகாசத்திலே ஏறி மழையைப் பொழிகின்

றவையாயும். வான்கொண்டு கிளர்ந்து எழுந்த - ஆகாசத்தைக் கபளீகரித்துக் கொண்டு ஓங்கிக் கிளம்புகின்றவையாயுமுள்ள. மாமுகில்காள் - மஹோந்நதங்களான மேகங்களே. ஊன் கொண்ட வள் உகிரால் - வலிமையுள்ளவைகளாய்க் கூர்மையுடைய நகங்களாலே. இரணியனை உடல் இடந்தான் தான் - ஹிரண்யாசுரனுடைய உடலைப் பிளந்தெறிந்த அப்பெருமான். கொண்ட - என்னிடத்துக் கொள்ளை கொண்டு போன. சரிவளைகள் - கைவளைகளை. தருமாகில் - திருப்பிக் கொடுப்பதாக இருந்தால். சாற்றுமின் - எனது தூவஸ்தையை அவருக்குத் தெரிவியுங்கள்.

கருத்து :—ஆகாசத்திலே எங்குப் பார்த்தாலும் நீங்களேயாய்ப் பரந்து ஆகாசத்தைக் கபளீகரித்துக் கொண்டு ஓங்கிக் கிளம்புகின்ற மஹா மேகங்களே ! தேன் நிறைந்த நல்ல புஷ்பங்கள் சிதறி விழும்படி அவற்றிற்குக் கெடுதியை விளைவித்துக் கொண்டு மழை பொழிவதனால் என்ன பயன். பிறர்க்குத் தீங்கை விளைவிப்பதோ உங்களுக்குப் புருஷார்த்தம். இடர்ப்பட்டாரை இன்பக் கடலில் ஆழ்த்த வேண்டாவோ நீங்கள். அநிஷ்டத்தைத் தவிர்ப்பதோடு இஷ்டத்தைக் கொடுப்பதும் செய்ய வேண்டாவோ ! இப்போது எனக்கு அநிஷ்டங்களான மலர்களைச் சிதற வடிப்பது மாத்திரம் போதாது. பகவத் ஸம்ஸ்லேஷமாகிற இஷ்டப் ப்ராப்தியையும் பண்ணித் தரவேண்டும். உலகங்களின் துயரத்தை நீக்கக் கொடுவல்லசுரர் கூட்டங்களையும் நாசமாக்கி இரண்யாசுரனுடைய உடலைத் தனது கூர்மையான நகங்களாலே பிளந்தெறிந்த பெருமான் என்னிடம் அபஹரித்துக் கொண்டு போன கைவளைகளைத் திருப்பிக் கொடுக்கும்படி என்னுடைய தூவஸ்த்தையை அவரிடம் தெரிவியுங்கள்.

குறிப்பு:—1. ஸ்ரீ ஆண்டாளிடமிருந்து, எம்பெருமான் சரிவளைகள் கொள்ளை கொண்டான் என்பது எப்படிச் சேரும் என்னில் ; அவன் இவளை விட்டுப் பிரிந்ததினால், இவள் மேனி மெலிந்து, வளைகள் கழன்று போகப் பெற்றாள் ஆதலால், இவ்வளை நீங்குதலுக்கு அவனே காரணமாகிறான் எனத் தட்டில்லையே.

2. வளையைத் தருகையாவது என்னவெனில், மறுபடியும் அவன் இவளுடன் ஸம்ஸ்லேஷித்தால், இவளுக்குச் சந்தோஷம் மிகுந்து உடல் கார்ச்யம் நீங்கிப் புஷ்டியுண்டாகும். அப்பொழுது வளைகள் இவள் கையிலே தங்கி இருக்க முடியும். இப்படித் தங்கி இருக்கும்படி செய்வதுதான் சரிவளைகளைத் திருப்பிக் கொடுப்பது எனக் காண்க.

(6) அவதாரிகை :—மஹாபலியிடமிருந்து தன்னை ஆச்ரயித்தவர்களான தேவர்களை ரக்ஷிப்பதற்காகப் பூமியை ஸ்வீகரித்தவனான

எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமலையில் அன்றோ நீங்கள் பரவி இருக்கிறீர்கள். பெருங் கொசுக்கள் புசித்த விளாம் பழம் போல், நான் என் உள்ளம் மெலியும்படி என்னுள்ளே ப்ர வேசித்து, எனது நிறைவுகளை அபஹரித்த நாராயணனுக்கு எனது கஷ்டத்தைத் தெரிவியுங்கள்—என்று மேகங்களை வேண்டிக் கொள் கிறாள் :—

சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்!
உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து என்னை
நலங்கொண்ட நாரணற்கு'என்நடலைநோய் செப்புமினே. 6

பதவுரை :—சலம் கொண்டு - சமுத்திர ஜலத்தை முகர்ந்து கொண்டு. கிளர்ந்து எழுந்த - மேல் கிளம்பி விளங்குகின்ற. தண்முகில்காள் - குளிர்ந்த மேகங்களே. மாவலியை - மஹாபலியிடமிருந்து. நிலங்கொண்டான் - பூமியை தானமாக வாங்கிக் கொண்டவனை எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிற. வேங்கடத்து - திருவேங்கட மலையிலே. நிறந்து - பரவி. ஏறி - உயரவிருந்து. பொழிவீர்காள் - வர்ஷிக்கின்ற மேகங்களே! உலங்கு உண்ட - பெருங் கொசுக்கள் புசித்த. விளங்கனிபோல் - விளாம்பழம் போல். உள்மெலிய - நான் உள்ளே மெலியும்படி. புகுந்து - என் உள்ளத்திலே ப்ரவேசித்து. என்னை - என்னுடைய. நலங்கொண்ட - நிறைவுகளை அப ஹரித்த. நாரணர்க்கு - ஸ்ரீமந் நாராயணனுக்கு. என் நடலை நோய் - எனது கஷ்டமான வியாதியை. செப்புமின் - தெரிவியுங்கள்.

கருத்து :— மேகங்களே! உங்களுடைய வடிவழகும் குளிர்ச் சியுமெல்லாம் போக்ய மாகத்தான் இருக்கிறது. அதில் ஒரு குற்றமு மில்லை. ஆனால், ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காகத் தன்னை யாசகனாக்கிக் கொண்டு, அவர்கள் கார்யத்தைத் தலைக்கட்டிக் கொடுத்த எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிற தேசத்திலே நித்ய வாசம் பண்ணும் நீங்கள், அநந்ய ப்ரயோஜனையான எனக்காக கார் யம் செய்ய வேண்டாவோ? எம்பெருமான் போல் ஒரு அசுரன் பக் கலிலே போய் கார்யம் செய்ய வேணுமென்று உங்களுக்கு நான் சொல்லுகிறேனோ. உடையவன் பக்கலிலே அன்றோ நான் உங் களைப் போகச் சொல்லுகிறேன். என் கார்யத்தைச் செய்யாம லிருந்தால் அது உங்களுக்குக் குற்றமன்றோ? பெருங் கொசுக்கள் விளாம்பழத்திலே மொய்த்தவாறே அதன் ரஸமெல்லாம் சோரிப்

மென்று பார்த்து அடியார்களுக்குக் கார்யம் செய்வதையே தொழிலாகக் கொண்டு விரோதி நிரசனத்தில் உத்ஸாகம் கொண்டு இளையவனுன சக்ரவர்த்தி திருமகனுடைய திருநாமங்களைச் சங்கீர்த்தனம் பண்ண ஆரம்பித்தேன். அதுவே காரணமாக உடனே சைதில்யமடைந்தேன். மழைக் காலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்றற்று விழுவது போல் ஒசிந்து தளிர்ந்து விழும்படியான நிலைமையில் நின்றேன். இவ்வளவிலும் அப்பெருமான் எனக்கு அருள் செய்ய நினைத்திலன். என் வாழ்நாளெல்லாம் இப்படித் துக்க மயமாகவேயோ கழியப் போகிறது. ஒரு நாளாகிலும் ஒரு வாய்ச்சொல் சொல்லியனுப்பவும் மாட்டாரோ? என்கிருள்.

(9) அவதாரிகை:—எல்லா உலகங்களையும் ரக்ஷிப்பதற்காக யோக நித்திரை செய்து கொண்டு திருவனந்தாழ்வான் மேல் பள்ளி கொண்டருளும் அப்பெருமானும் இப்படிப் பொய் சொல்லுவரோ? அவன் தனது ஆச்ரிதரக்ஷண ஸ்வபாவத்தை மறந்து ஒரு பெண் பிள்ளையை இப்படிக் கொலை பண்ணுகிருன். ஆனால் இதைப் பூமியிலுள்ளார் மதிக்க மாட்டார்கள் என்று, மத்த கஜங்கள் போல் திருமலையில் சஞ்சரிக்கும் மேகங்களைப் பார்த்து, முறையிடுகிருள்.

* மதயானை போலெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள்! பாம்பணையான் வார்த்தைஎன்னே!
கதியென்றும் தானுவான் கருதாதுஓர் பெண்கொடியை
வதைசெய்தா னென்னும்சொல் வையகத்தார் மதியாரே. 9

பதவுரை:—வேங்கடத்தை - திருமலையை. பதியாக - இருப்பிடமாகக் கொண்டு. வாழ்வீர்காள் - வாழுகின்றவையாயும். மதம் யானை போலெழுந்த - மத்தகஜம் போல் செருக்குக் கிளர்ந்தவையாயுமுள்ள. மாமுகில்காள் - பெரிய மேகங்களே. பாம்பு அணையான் - திருவனந்தாழ்வான்மேல் கண்வளர்ந்தருளுகிற எம்பெருமானுடைய. வார்த்தை - வார்த்தையானது. என்னே - இப்படிப் பொய்யாய் விட்டதே. தான் - அவ்வெம்பெருமான். என்றும் - எப்போதுக்கும், கதியாவான் - ஆச்ரிதர்களுக்கு ரக்ஷகனுய் இருந்து வைத்து. கருதாது - அதை நினையாமல். ஒரு பெண் கொடியை - கொடிபோல் பரமஸுகுமாரமான ஒரு பெண்ணை. வதை செய்தான் - கொலை பண்ணினுன். என்னும் சொல் - என்கிற சொல்லை. வையகத்தார் - இப்பூமியிலுள்ளார். மதியாரே - மதிக்கமாட்டார்களே.

கருத்து:—திருவேங்கட முடையானை இடைவிடாது சேவித்துக் கொண்டு அத்தாலே மத்தகஜம் போல் செருக்கிருக்கிற மேகங்

களே! திருவனந்தாழ்வானிடத்துச் சகல கைங்கர்யங்களையும் கொள்வது போல் என்னிடத்திலும் கொள்வான் என்றிருந்தேன். "மாசுச:" என்னும் வார்த்தை மெய் என நினைத்தேன். பாம்போடே அணைந்து, பாம்பின் தன்மையே தனக்கு முண்டாகப் பெற்றான். அதற்கு நாக்கு இரண்டா யிருக்குமாப் போலே இவனும் இரண்டு நாக்குப் பெற்றான்: சகல ஜனங்களுக்கும் சர்வவித ரக்ஷகனாகப் புகழ் பெற்றிருக்குமவன் ஒரு பெண்பிள்ளையைக் கொலை செய்தான் என்றால் நம்புவார்களோ? என்று கதறுகிறாள்.

(10) அவதாரிகை:—இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறாள்:—

* நாகத்தி னணையானை நன்னுதலாள் நயந்துஉரைசெய்
மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்
போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழ்
ஆகத்து வைத்துரைப்பா ரவர்அடியா ராகுவரே. 10

பதவுரை:—நன்நுதலாள் - ரமணீயமான முகத்தையுடையவளாய், போகத்தில் - பகவதனுபவத்தில். வழுவாத - குறையாதவரான. புதுவையர்கோன் - ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ளார்க்கு ஸ்வாமியான பெரியாழ்வாருடைய திருமகளான. கோதை - ஆண்டாள். நாகத்தின் அணையான் - திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய. வேங்கடக் கோனை - திருவேங்கடமுடையானை. நயந்து - ஆசைப்பட்டு. உரைசெய் - அருளிச் செய்ததாய். மேகத்தை விடு தூதில் - மேகத்தைத் தூதுவிடுவதாக அமைந்துள்ள. விண்ணப்பம் - விஜ்ஞாபனமாகிய. தமிழ் - இத்தமிழ்ப் பாசுரங்களை. ஆகத்து வைத்து - இருதயத்திலே வைத்துக் கொண்டு. உரைப்பாரவர் - ஓதவல்லார்கள். அடியார்—எம்பெருமானுக்கு அந்தரங்கமான நித்ய கைங்கர்யங்களைப் பண்ணுபவராக. ஆகுவர் - ஆவார்கள்.

கருத்து:—வேண்டியபடி யெல்லாம் பகவதனுபத்தைப்பெற்று மகிழ்ந்தவரான பெரியாழ்வாருக்குத் திருமகளாரான ஸ்ரீ ஆண்டாள் திருவணையில் பள்ளி கொண்டு யோக நித்திரை செய்கிற பரவாஸுதேவனை திருவேங்கட முடையானை ஆசைப்பட்டு அருளிச் செய்த 'மேக தூத'மாகிற இத்திருமொழியை அப்யஸிக்கவல்லார் அப்பெருமானது நித்ய கைங்கர்ய சாம்ராஜ்யத்தை அடைந்து எப்பொழுதும் ஸுகிப்பார்கள்.

ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே பரகாலாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி
## 1 ம் பத்து 8 ம் திருமொழி—'கொங்கலர்ந்த

---

அவதாரிகை :—கீழ்த் திருமொழியில் ஆழ்வார் சிங்கவேழ் குன்றத்தின் நில வெம்மையை அநுஸந்தித்து உருகிப்போனார். அதைக் கண்டு எம்பெருமான் "ஆழ்வீர்! "தெழிகுரலருவித் திருவேங்கடம்" என்று நெஞ்சு குளிரப்பேசும்படியான திருவேங்கடமா மலையிலே அனைவர்க்கும் எளிதாக நாம் சேவை சாதிக்கின்றோம். அங்கே வந்து நம்மைத் தொழுது ஆனந்தமடைவீர்" என்று அருளிச் செய்தார். அதற்கிசைந்து ஆழ்வார் திருமலைக்கு எழுந்தருளி அதனுடைய வைபவத்தை அநுபவிக்கிறார். இந்தத் திருமொழியும் இதற்கு மேலுள்ள மூன்று திருமொழிகளும் திருவேங்கட முடையான் விஷயமானவை.

(1) அவதாரிகை :—ஸ்ரீ கண்ணபிரானாய் அவதரித்து க்ஷீராப்தியில் கண் வளர்ந்தருளுகிற ஸ்ரீமந் நாராயணனே திருமலையில் எழுந்தருளி இருக்கிறான். ஆகையால், அந்தத் திருவேங்கடத்தை எப்பொழுதும் அநுஸந்திப்பாயாக—என்று தன் நெஞ்சைக் குறித்து அருளிச் செய்கிறார் :—

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

* கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஒசித்தகோவலன் எம்பிரான்
சங்குதங்கு தடங்கடல்துயில் கொண்டதாமரைக் கண்ணினன்
பொங்குபுள்ளினை வாய்பிளந்த புராணர்தம்மிடம் பொங்குநீர்ச்
செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 1

பதவுரை :—கொங்கு - பரிமளம். அலர்ந்த - நிறைந்த. மலர் - பூக்கள்ல். குருந்தம் - விளங்கா நின்ற குருந்த மரத்தை. ஒசித்த - முறித்

தழித்த. கோவலன் - கோபாலனாய். எம்பிரான் - நம் ஸ்வாமியுமாய். சங்கு - சங்குகள். தங்கு - நிறைந்து இருக்கிற. தட - பெரிய. கடல் - பாற்கடலிலே. துயில் கொண்ட - (திருவனந்தாழ்வான்மேலே) கண் வளர்ந்தருளுகிற. தாமரை - தாமரைப் புஷ்பம் போன்ற. கண்ணினன் - திருக்கண்ணிணை உடையவனாய். பொங்கு - கர்வத்தினால் கிளர்ந்து வந்த. புள்ளினை - பகாசுரன். வாய் - வாயை. பிளந்த - கிழித்து எறிந்த. புராணர் - புராண புருஷனாகிய. தம்மிடம் - ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளி இருக்கும் இடமாயும். பொங்கு - பெருகா நின்ற. நீர் - நீர்களை உடைய தாய். செம் - சிவந்த. கயல் - மத்ஸ்யங்கள். திளைக்கும் - துளிக்கும். சுனை - சுனைகளை யுடையதாயுமிருக்கிற. திருவேங்கடம் - திருமலையை. நெஞ்சமே - என் மனதே. அடை - நீ அடைவாயாக.

கருத்து :—பரிமளம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த குருந்த மரத்தை முறித்தழித்த கோபால க்ருஷ்ணனாயும், நமக்கு ஸ்வாமி யாயும், சங்குகள் தங்கி இருக்கிற க்ஷீராப்தியிலே திருக்கண் வளருகிற புண்டரீகாக்ஷனாயும். மதித்துக் கிளர்ந்து வந்த பகாசுரன் வாயைக் கிழித் தெறிந்த புராண புருஷனாயும், இருக்கிற ஸ்ரீமந் நாராயணன் பரம க்ருபையோடு எழுந்தருளியிருக்கும் நீர்வள முடையதாய்ச் சிவந்த மீன்களோடு கூடி இருக்கிற சுனைகளை உடையதாயுமுள்ள திருவேங்கடமலையை, என் நெஞ்சே ! நீ அடைய வேண்டும்.

குறிப்பு :—திருவாய்ப்பாடியில் கண்ணனாகத் திருவவதரித்தவனும், பாற்கடலில் பள்ளிகொண்டு லோக ஸம்ரக்ஷணம் பண்ணுகிறவனும், திருவேங்கடமலையில் எழுந்தருளி இருக்கிறவனும், புராண புருஷனான ஸ்ரீமந் நாராயணனே—என்று இப்பாட்டில் தெரியப்படுத்துகிறார்.

(2) அவதாரிகை :—பேய் முலை நஞ்சுண்ட கண்ணபிரான் பாற் கடலில் பள்ளி கொண்டு இருக்கிறான் ; திருவேங்கடமலையில் நின் றிருக்கிறான் ; அவனை அடையப்பார்—என்று தம்மனதைக் குறித்து உபதேசிக்கிறார் :—

* பள்ளியாவது பாற்கடல்அரங்கம் இரங்கவன் பேய்முலை
பிள்ளையாய் உயிருண்டஎந்தை பிரானவன் பெருகுமிடம் [தோறும்
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ண னென்றெண்ணி நாள்-
தெள்ளியார் வணங்கும்மலைத் திருவேங்கடம்அடை நெஞ்சமே ! 2

பதவுரை :—பிள்ளை ஆய் - சிறு குழந்தையாய் இருக்கச் செய்தே. வன் பேய் - கல் நெஞ்சையுடைய பூதனை எனும் அரக்கி. இரங்க - கதறும்

படியாக. உயிர் - பிராணனுடன். முலையுண்ட - ஸ்தன்யபானம் செய்த. எந்தைபிரான் - நம் ஸ்வாமியான கண்ணபிரான். பள்ளியாவது - சயனிக்குமிடமாவது. பாற்கடல் - திருப்பாற்கடலும். அரங்கம் - திருவரங்கமுமாம். அவன் - அவ்வெம்பெருமான். பெருகுமிடம் - வளர்கிற இடம். வெள்ளியான் - கிருத யுகத்தில் வெளுத்த நிறமுடையவன். கரியான் - கலியுகத்தில் கருத்த நிறமுடையவன். மணி நிறம் வண்ணன் - துவாபரயுகத்தில் சாம நிறத்தையுடையவன். என்று எண்ணி - என்று தியானித்துக் கொண்டு. தெள்ளியார் - தெளிந்த அறிவுடைய பரமைகாந்திகள். நாள்தோறும் - எப்பொழுதும். வணங்கும் - கைதொழும். திருவேங்கடம் மலை - திருவேங்கட மலையே. (அதை) நெஞ்சமே - என் மனமே. அடை - நீ ஆச்ரயி.

கருத்து :—பகவான் சிறு குழந்தையாய், பேய் முலை நஞ்சுண்டு தன் பால்யலீலையை அனுபவிப்பித்தது திருவாய்ப்பாடியில். கண் வளர்ந்தருளி உலக ஸம்ரக்ஷண லீலையை அனுபவிப்பித்தது திருப்பாற்கடலிலும், தென்னரங்கத்திலும். அனைவர்க்கும் சேவை சாதித்துக்கொண்டு வளர்கின்ற இடம்—பரம போக்யமான திருவேங்கடம். தெளிந்த ஞானமுள்ள பக்தாக்ரேஸரர், இதை தெரிந்து கொண்டு கிருத யுகத்தில் வெள்ளியானும், கலியுகத்தில் கரியானும், துவாபர யுகத்தில் மணிநிற வண்ணனும் எம்பெருமான் எழுந்தருளி யிருப்பான்; அவனே திருவேங்கடத்தில் நித்யவாஸம் பண்ணுகிறான்—என்று கருதி நாள்தோறும் வணங்குவார்கள். அப்படிப்பட்ட திருவேங்கடத்தை, நெஞ்சமே! நீ அடைவாயாக.

(3) அவதாரிகை :—கண்ணனாய் பிறந்து, மருத மரங்களை முறித்து, கோவர்த்தனத்தை எடுத்து, ஆனிரை காத்தவனை சர்வேச்வரன் தங்கி இருக்கும் திருவேங்கடமே உனக்கு தஞ்சம் என்று தன் மனதை குறித்து உபதேசிக்கிறார்—

நின்றமாமருது இற்றுவிழ நடந்தநின்மலன் நேமியான்
என்றும்வானவர் கைதொழும் இணைத்தாமரையடி யெம்பிரான்
கன்றிமாரி பொழிந்திடக் கடிதாநிரைக்கு இடர்நீக்குவான்
சென்றுகுன்ற மெடுத்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 3

பதவுரை :—நின்ற - பெயராமல் நின்று கொண்டிருந்த. மா மருது - பெரிய மருத மரங்களை. இற்று வீழ - முறிந்து விழும்படி. நடந்த - நடுவிலே சென்ற. நின்மலன் - தோஷமில்லாதவனும். நேமியான் - திருவாழியை தனது வலக்கையில் தரித்து இருக்கிறவனும். என்றும் - எப்

போதும். வானவர் - நித்ய சூரிகள். கைதொழும் - சேவிக்கும்படியான. தாமரை அடி இணை - தாமரை புஷ்பங்கள் போல் இருக்கிற இரண்டு திருவடிகளையுடைய. எம்பிரான் - என் ஸ்வாமியும். கன்று - (இந்திரன்) கோபமுற்று. மாரி - மழையை. பொழிந்திட - பெய்துவிட. கடிது - உடனே. ஆனிரைக்கு - பசுக்களுக்கு. இடர் - துன்பத்தை. நீக்குவான் - போக்குவதற்காக. சென்று - போய். குன்றம் - கோவர்த்தன மலையை. எடுத்தவன் - குடையாக எடுத்தவனை. (எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற). திருவேங்கடம் - திருவேங்கட மலையை. நெஞ்சமே - மனமே. அடை - நீ ஆச்ரயி.

கருத்து :—சயனித்தருளும் படியையும், நின்றருளும்படியையும் கீழ் பாட்டில் அநுஸந்தித்தார். இதில் நடக்கும்படியை அநுஸந்திக்கிறார். ஈதிடமான மருத மரங்களை முறித்து நடுவிலே சென்ற நிர்மலனும், திருவாழியை தரித்தவனும், நித்ய சூரிகள் எப்பொழுதும் சேவிக்கப் பெற்ற இரண்டு திருவடித் தாமரைகளையுடைய ஸ்வாமியும், கோபம் கொண்டு இந்திரன் கல் மழையை பெய்வித்தவளவிலே பசுக்களைக் காப்பதற்காக கோவர்த்தனமலையை குடையாக எடுத்தருளினவனை எம்பெருமான் எழுந்தருளி இருக்கிற திருமலையே நமக்குத் தஞ்சமென்று என்மனமே சிந்தித்திரு.

(4) அவதாரிகை :—ஆச்ரித ஸுலபனான கண்ணபிரான் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமே நமக்கு உறுதுணை என்கிறார் :—

பார்த்தற்காய் அன்றுபாரதம் கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர்
கோத்துஅங்கு ஆயர்தம்பாடியில் குரவைபிணைந்த எம்கோவலன்
ஏத்துவார் தம்மனத்துள்ளான் இடவெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்தநீர்த் தடஞ்சோலைசூழ் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 4

பதவுரை :—அன்று - முன் காலத்தில். பார்த்தர்க்காய் - பாண்டவர்களுக்காக. பாரதம் - பாரத யுத்தத்திலே. கை செய்திட்டு - கையும் அணியும் வகுத்து. வென்ற - வெற்றி பெற்ற. பரஞ்சுடர் - பரஞ்ஜோதி ஸ்வரூபனானவனும். அங்கு ஆயர்தம்பாடியில் - அங்கே திருவாய்ப்பாடியிலே. குரவை கோத்துப் பிணைந்த - இராஸ க்ரீடை செய்தருளின. எம்கோவலன் - நமது கோபாலனானவனும். ஏற்றுவார்தம் - தன்னைத் துதிப்பவர்களுடைய. மனத்து - நெஞ்சிலே. உள்ளான் - வசிப்பவனும். இடவெந்தை - 'திருவிடவெந்தை' திவ்ய தேசத்திலே. மேவிய - அமர்ந்திருக்கிற. எம்பிரான் - நம் ஸ்வாமியானவன். (எழுந்தருளியிருக்கிற) தீர்த்தம் நீர் - புண்ணிய தீர்த்தங்

களாலும். தேடசாலை - பெரிய நந்தவனங்களாலும். சூழ் - சூழப்பட்ட. திருவேங்கடம் - திருவேங்கட மலையை. நெஞ்சமே - மனமே. அடை - ஆச்ரயி.

கருத்து :—பாண்டவர்களுக்காக பாரத யுத்தம் நடத்தி வெற்றி பெற்றவனும், ஆச்ரிதர்களுக்காக காரியம் செய்யப்பெற்றதினால் மிக விளங்கும் திருமேனியை உடையவனும், இடைப் பெண்களோடு ராஸ க்ரீடை—என்கிற குரவைக்கூத்து ஆடினவனும் தன்னைத் துதிப்பவர்களின் நெஞ்சை விட்டுப் பிரியாமல் இருப்பவனும், 'இடவெந்தை' என்கிற திவ்ய தேசத்திலே இனிதாக எழுந்தருளி இருப்பவனுமான எம்பெருமானுடையதாய், பல பல புண்ய தீர்த்தங்களாலும், பெரிய பூஞ்சோலைகளாலும் சூழப்பட்டதான திருவேங்கடமலையை சென்று சேர் மனமே! என்கிறார்.

(5) அவதாரிகை :—ஆச்ரிதர்களுடைய துயர்தீர்க்கும் எம்பெருமான் எளியனாய் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமலையை அடை யென்று நெஞ்சைத் தூண்டுகிறார்.

வண்கையான் அவுணர்க்குநாயகன் வேள்வியில்சென்று மாணியாய்
மண்கையால் இரந்தான் மராமரமேழும் எய்தவலத்தினான்
எண்கையான் இமயத்து உள்ளான் இருஞ்சோலைமேவிய எம்பிரான்
திண்கைம் மாதுயர்தீர்த்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 5

பதவுரை :—வண்கையான் - விசேஷமாக தானம் செய்கிற கையை யுடையவனாய். அவுணர்க்கு - அசுரர்களுக்கு. நாயகன் - தலைவனான மஹாபலியினுடைய. வேள்வியில் - யாக பூமியிலே. மாணியாய் - பிரம்மசாரியாய். சென்று - எழுந்தருளி. கையால் - தனது திருக்கையாலே. மண் இரந்தான் - பூமியை யாசித்தவனும். மரா மரம் ஏழும் - ஏழு மருத மரங்களையும். எய்த - ஒரு பாணத்தினால் துளைத்த. வலத்தினான் - வலிமை யுடையவனும். எண் கையான் - எட்டு புஜங்களையுடையவனும். இமயத்து உள்ளான் - இமய மலையில் இருக்கிற பதரிகாச்ரமத்தில் எழுந்தருளியிருக்கிறவனும். இருசோலை - திருமாலிருஞ் சோலையிலே. மேவிய - அமர்ந்திருக்கிற, எம்பிரான் - என் ஸ்வாமியும். திண் கை மா - த்ருடமான துதிக்கை யுடைய கஜேந்த்ராழ்வானுடைய. துயர் - துன்பத்தை. தீர்த்தவன் - போக்கினவனுமான. (எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற) திருவேங்கடம் - திருமலையை. நெஞ்சமே - மனமே. அடை - அடைவாயாக.

கருத்து :—வேண்டினார்க்கு வேண்டியபடியே தானம் செய்கிற அசுர சக்ரவர்த்தியான மஹாபலியினுடைய யாகபூமியிலே ப்ரம்ம

சாரியாய் சென்று கைநீட்டி 'மூவடிமண் தா' என்று யாசித்தவனும், தன்னிடத்தில் சுக்ரீவனுக்கு நம்பிக்கை யுண்டாவதற்காக ஏழு மருத மரங்களை ஒரே அம்பினால் துளைத்த மஹா பலமுடையவனும், ஆச்ரித ரக்ஷணார்த்தமாக சங்க சக்ராதி திவ்யாயுதங்களோடு கூடின எட்டுத் திருக்கைகள் உடையவனும் (அஷ்டபுஜம் என்கிற திவ்ய தேசத்தில் அஷ்டபுஜனாக சேவை சாதிப்பவனும்), இமயமலையில் 'பதரிகாச்ரமம்' என்கிற திருப்பதியிலே எழுந்தருளி யிருப்பவனும், திருமாலிருஞ் சோலையிலே வந்து நிற்பவனும், முதலைவாயிலே அகப்பட்டுத் துடித்த ஸ்ரீகஜேந்த்ராழ்வானை அவருடைய துன்பத்தை நீக்கி ரக்ஷித்தவனு மான பெருமானுடைய திருவேங்கடமலையை மனமே! விரைவாக போய் சேர்.

(6) அவதாரிகை :—எல்லா உலகங்களையும் ப்ரளய சமயத்தில் தன் வயற்றில் வைத்துக் கொண்டு வடபத்ர சாயியாய் இருந்த வனும், மகா பலசாலியான இரணியனை ஸம்ஹரித்த நரஸிம்மனுமாய் உலகங்களை ஸம்ரக்ஷிக்கும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் பரம போக்யமான திருவேங்கடத்தை நெஞ்சமே! அடையப் பார்—என்று அருளிச் செய்கிறார் :—

எண்திசைகளும் ஏழுலகமும் வாங்கிப் பொன்வயிற்றில்பெய்து
பண்டுஓராலிலைப் பள்ளிகொண்டவன் பால்மதிக்கு இடர்தீர்த்தவன்
ஒண்திற லவுணனுரத் துகிர்வைத்தவன் ஒள்ளெயிற்றொடு
திண்திற லரியாயவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 6

**பதவுரை** :—பண்டு - முன்னொரு காலத்தில். எண் திசைகளும் - எட்டு திக்குகளையும். ஏழு உலகமும் - ஸப்த லோகங்களையும், வாங்கி - (ப்ரளயம் கொள்ளாதபடி) எடுத்து. பொன் வயிற்றில் - (தனது) அழகிய திருவயிற் றிலே. பெய்து - இட்டு வைத்து. ஓர் ஆல் இலை - ஒரு ஆலம் தளிரிலே. பள்ளி கொண்டவன் - சயனித்தருளினவனும். பால் மதிக்கு - வெளுத்த சந்திரனுக்கு. இடர் - க்ஷயரோகமாகிற துக்கத்தை. தீர்த்தவன் - போக் கினவனும். ஒள் எயிற்றொடு - ஒளி பொருந்திய கோரமான பற்களோடு கூடி. திண் திறல் அரி ஆயவன் - மிக்க வலிவுடைய நரஸிம்ஹ மூர்த்தியாகத் தோன்றினவனும். ஒண் திறல் அவுணன் - மஹா பலசாலியான இரணியா சுரனுடைய. உரத்து - மார்பிலே. உகிர் - (திருக்கை) நகங்களை. வைத் தவன் - வைத்து அழுத்தினவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற. திருவேங்கடம் - திருமலையே. நெஞ்சமே - என்னுடைய மனமே! அடைவா யாக.

கருத்து :—உலகங்களெல்லாம் ப்ரளயத்திலே அழிந்துபோகாத படி அவற்றை தனது திருவயிற்றிலே வைத்து, நோக்கி, ஓர் ஆலம் தளிரிலே பள்ளிக் கொண்டவனும், சந்த்ரனுக்கு நேர்ந்த க்ஷய ரோகத்தைப் போக்கி யருளினவனும், அழகிய கோர பற்களுடனே மகா பலசாலியான நரஸிம்கமாய் திருவவதரித்து, தன் வலிமையோடு ஒத்த வலி உடையவனான இரணியனுடைய மார்பிலே நகங்களை ஊன்றி அவ்வுடலை பிளந்தவனுமான பெருமானுடைய திருவேங் கடத்தை மனமே ! நீ சென்று சேர்.

குறிப்பு :—கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு—என்ற நான்கு திசை களும், வட கிழக்கு, தென் கிழக்கு, வட மேற்கு—தென் மேற்கு என்கிற திசை மூலைகளும் சேர்ந்து எண் திசைகள் என வழங்கப்படும். நம் வஸித்தாந் தத்தில் 'திக்கு' என்கிற பதார்த்தத்தை ஒப்புக் கொள்வதில்லை. ஆகையால் இங்கே அவ்வவ்விடங்களிலுள்ள பொருட்களை சொன்னதாக பாவிக்க வேண்டும்.

(7) அவதாரிகை :—பஞ்சபூத ஸ்வரூபி யானவனும், ஸஹஸ்ர நாமங்களால் ப்ரதிபாதிக்கப்படா நின்றவனும், நித்யனுமான எம் பெருமான் எழுந்தருளி யிருக்கும் மஹோன்னதமான திருவேங் கடத்தை அடைவாயாக—என்று ஆழ்வார் தம் நெஞ்சைக் குறித்து சொல்லுகிறார் :—

பாரும்நீர் எரிகாற்றினோடு ஆகாசமும் இவையாயினான்
பேரும்ஆயிரம் பேசிநின்ற பிறப்பிலி பெருகுமிடம்
காரும்வார்பனி நீள்விசும்பிடைச் சோருமாமுகில் தோய்தரச்
சேரும்வார் பொழில்சூழ் எழில்திருவேங்கடம் அடைநெஞ்சமே ! 7

பதவுரை :—பாரும் நீர் எரி காற்றினோடு - பூமி, ஜலம், தேஜஸ், வாயு இவைகளோடு கூடின. ஆகாசமும் இவை ஆயினான் - ஆகாசம் என்கிற பஞ்சபூத ஸ்வரூபியானவனும். ஆயிரம் பேரும் பேசி நின்ற - ஸஹஸ்ர நாமங்களாலும் ப்ரதி பாதிக்கப்படுகிறவனும். பிறப்பு இல் - பிறத்தல் இல் லாதவனுமான எம்பெருமான். பெருகும் இடம் - வளருகிற இடமானதும். நீள் விசும்பிடை - பெரிய ஆகாயத்தினின்றும். காரும் வார்பனி - மழை நீரும் மிக்க பனித்துளியும். சோரும் - பெய்யப் பெற்றதும். மாமுகில் தோய்த - (மேலுள்ள) கான மேகங்கள் வந்து படியும்படியாக. சேரும் - பொருத்தமான. வார் - உயர ஓங்கியிருக்கிற. பொழில் - சோலைகளாலே. சூழ் - சூழப்பட்டதும். எழில் - அழகியதான. திருவேங்கடம் நெஞ்சமே ! அடை.

கருத்து :—ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாயம்—என்கிற பஞ்ச பூதஸ்வரூபி யானவனும், ஸஹஸ்ர நாமங்களாலும் ப்ரதிபாதிக்கப் படுகிறவனும், பிறத்தல் இல்லாதவனுமான எம்பெருமான் வளர்கிற இடமானதும், பெரிய ஆகாசத்தில் நின்றும் மழை நீரும், மிக்க பனித்துளியும் பெய்யப் பெற்றதும், மேகங்கள் வந்து தங்கும்படியாக பொருத்தமான உயர ஓங்கியிருக்கிற சோலைகளாலே சூழப்பட்டதும், அதிமனோஹரமுமான திருவேங்கடத்தை என்னுடைய நெஞ்சமே அடைவாயாக.

(8) அவதாரிகை ;—பஞ்சபூத ஸ்வரூபியும், நித்ய சூரிகளுக்கு நிர்வாகனும், பெரிய பிராட்டியாருக்கு நாயகனுமான எம்பெருமான் எழுந்தருளி யிருக்கப் பெற்றதும், மடமை தங்கிய குறப் பெண்கள் செவ்விய வயல்களை காவல் செய்துக் கொண்டிருக்கப் பெற்றதுமான திருவேங்கட மலையை யே நெஞ்சமே! அடையப் பார்—என்று அருளிச் செய்கிறார்:

அம்பரம் அனல்கால்நிலம் சலமாகிநின்ற அமரர்கோன்
வம்புலா மலர்மேல் மலிமடமங்கைதன் கொழுநனவன்
கொம்பினன்ன இடைமடக் குறமாதர் நீளிதனந்தோறும்
செம்புனம் மவைகாவல்கொள் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 8

பதவுரை :—அம்பரம் - ஆகாயம். அனல் - நெருப்பு. கால் - காற்று. நிலம் - பூமி. ஜலம் - ஜலம். ஆகி நின்ற - ஆகிய பஞ்சபூத ஸ்வரூபியும். அமரர்கோன் - நித்ய ஸூரிகளுக்குத் தலைவனும், வம்பு உலாம் - பரிமளம் உலாவுகின்ற. மலர்மேல் - தாமரை மலரின் மேலே. மலி மடமங்கை தன் - பொருந்தி எழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியாருக்கு. கொழுநன் அவன் - நாயகனுமான எம்பிரான் எழுந்தருளியிருக்கப் பெற்றதும். நீள் இதணம் தோறும் - உயர்ந்த பரண்கள் தோறும். கொம்பின் அன்ன இடை - வஞ்சிக் கொம்போடு ஒத்த (நுண்ணிய) இடுப்பையுடைய. மடகுற மாதர் - மடமை தங்கிய குறப் பெண்கள். செம்புனம் அவை - செவ்விய வயல்களை. காவல் கொள் - காவல் செய்துக் கொண்டிருக்கப் பெற்றதுமான. திருவேங்கடம் - திருமலையை நெஞ்சமே அடை.

கருத்து :—ஆகாயம், நெருப்பு, காற்று, பூமி, ஜலம்—ஆகிய பூதங்களுடைய ஸ்வரூபியாய் இருக்கிறவனும், நித்ய சூரிகளுக்கு நிர்வாஹகனும், பரிமளம் நிறைந்த தாமரை மலரின் மேல் பொருந்தி இராநின்ற பெரிய பிராட்டியாருக்கு நாயகனுமான எம்பிரான்

எழுந்தருளி யிருக்கப் பெற்றதும், உயர்ந்த பாணகள் தோறும் வஞ்சிக் கொம்போடு ஸத்ருசமாய் சூக்ஷ்மமாயிருக்கிற மத்ய பாகத்தை உடைய மடமை தங்கிய குறப் பெண்கள் செவ்விய வயல்களை காவல் காத்துக் கொண்டு இருக்கப் பெற்றதுமான திருவேங்கடமலையையே மனமே அடையப் பார்.

(9) அவதாரிகை :—ஸர்வ ஸுலபமான திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தை அனுஸந்திக்குமவர்களை உஜ்ஜீவிக்கச் செய்யும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமானதும், பரிமள பரிதமான உத்யான வனங்களால் சூழப்பட்டதும், எல்லா உலகங்களுக்கும் திலகமாய் இருக்குமதான திருமலையையே அடையப்பார்—என்று தமது மனதை நோக்கி அருளிச் செய்கிறார்.

பேசுமின் திருநாமம்எட்டெழுத்தும் சொல்லிநின்று பின்னரும்
பேசுவார் தம்மைஉய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தரும் உலகுக்கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே ! (9)

பதவுரை :—பேசும் - எல்லாராலும் அனுஸந்திக்கத் தக்கதும். இன் - போக்யமுமான. திருநாமம் எட்டு எழுத்தும் - திரு அஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தை. சொல்லி நின்று - அனுஸந்தித்து. பின்னரும் - மேன் மேலும். பேசுவார் தம்மை - (அதனையே) அனுஸந்திப்பவர்களை. உய்ய வாங்கி - உஜ்ஜீவிக்கச் செய்து. பிறப்பு அறுக்கும் - (அவர்களது) ஸம்ஸாரத்தை தொலைக்கும். பிரான் இடம் - எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமானதும். வாசம் மாமலர் நாறும் - மணம் மிகுந்த சிறந்த புஷ்பங்கள் பரிமளிக்கப் பெற்ற. வார் பொழில் - விசாலமான சோலைகளாலே. சூழ்தரும் - சூழப்பட்டதும். உலகுக்கு எல்லாம் - எல்லா உலகங்களுக்கும். தேசம் ஆய் திகழும் - திலகமென்று விளங்குவதுமான. திருவேங்கடம் மலை - திருமலையை. நெஞ்சமே - மனமே. அடை - அடைந்திடு.

கருத்து :—எல்லாராலும் அனுஸந்திக்கத் தக்க இனிமையான திரு வஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தை அனுசந்தித்துக் கொண்டு, மென்மேலும், அதனையே அனுஸந்திப்பவர்களை உஜ்ஜீவிக்கச் செய்து அவர்களது ஸம்ஸாரத்தை தொலைக்கும் எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் இடமானதும், மணம் மிக்க சிறந்த புஷ்பங்கள் பரிமளிக்கப் பெற்ற விசாலமான சோலைகளாலே சூழப்பட்டதும், எல்லா உலகங்களுக்கும் திலக ஸ்தானீயமாய் விளங்குவதுமான திருமலையை மனமே அடைந்திரு.

(10) அவதாரிகை : நிகமனத்தில் இந்தத் திருமொழியை கற்றூர்க்கு பலன் சொல்லி தலைக்கட்டுகிறார் :—

* செங்கயல் திளைக்கும்சுனைத் திருவேங்கடத்து உறைசெல்வனை
மங்கையர் தலைவன்கலிகன்றி வண்தமிழ்ச்செஞ் சொல்மாலைகள்
சங்கை யின்றித்தரித்து உரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே
வங்கமா கடல்வையம் காவலராகி வானுலகாள்வரே. 10

பதவுரை :—செங்கயல் - (இளமையாலே) சிவந்த மீன்கள். திளைக்கும் - களித்து விளையாடப் பெற்ற. சுனை - நீர் நிலைகளையுடைய. திருவேங்கடத்து - திருமலையிலே. உறை - நித்ய வாஸம் பண்ணுகின்ற. செல்வனை - ஸ்ரீனிவாஸனைக் குறித்து. மங்கையர் தலைவன் - திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரான. கலிகன்றி - கலியன் அருளிச் செய்த. வண்தமிழ் - அழகிய தமிழினாலாகிய. செம் சொல் மாலைகள் - சிறந்த சொல் மாலைகளை. சங்கையின்றி - "இது பலன் தருமோ, தாராதோ ?" என்கிற ஸந்தேஹமில்லாமல். உரைக்க வல்லார்கள் - (விச்வாஸத்துடனே) அப்யஸித்து அனுஸந்திக்க வல்லவர்கள். வங்கம் மாகடல் வையம் - கப்பல்கள் நிறைந்த பெரிய கடலால் சூழப்பட்ட பூமண்டலத்திலுள்ளார்க்கு. தஞ்சம் அது ஆகவே—புகலிடமாய்க் கொண்டு. காவலராகி - அவர்களுக்கு ரக்ஷகராகி. (இப்படி லீலா விபூதியை நிர்வஹித்த பின்பு) வான் உலகு - பரம பதத்தையும். ஆள்வர் - ஆளப் பெறுவர்கள்.

கருத்து : —யௌவன பர்வத்திற்குத் தகுதியாக சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை, ஒன்றோடொன்று களித்து, விளையாடப்பெற்ற சுனைகளையுடைய திருவேங்கட மலையிலே நித்ய வாஸம் செய்தருள்கின்ற பெருமானைக் குறித்து திருமங்க மன்னன், அழகிய தமிழிலே செவ்விய சொல்லாலே அருளிச்செய்த, இச்சொல்மாலையை தரித்துச் சொல்ல வல்லவர்கள், இவ் விபூதியிலுள்ளளவும் ராஜாதி ராஜர்களாய் விளங்கி, பின்னை நித்ய விபூதிக்கும் நிர்வாஹகராகப் பெறுவர்கள்.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீ கலிகன்றிதேவ பரகாலாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 1 ம் பத்து 9 ம் திருமொழி—'தாயே தந்தை'

அவதாரிகை :—கீழ்த் திருமொழியில் பாசுரந் தோறும் "திருவேங்கடம் அடை நெஞ்சமே! திருவேங்கடம் அடை நெஞ்சமே!" என்று சொல்லித் திருமலையை ஆச்ரயிக்குமாறு தம் திருவுள்ளத்தைத் தூண்டினார். அதுவும் அப்படியே இசைய இருவரும் கூடி திருவேங்கட முடையானை அநுபவிக்கக் கோறித் திருமலையிலே வந்து புகுந்தனர்.

ஸர்வ ஸ்வாமியாய், ஸர்வவித பந்துவான ஸர்வேச்வரன் இங்கே நித்ய வாஸம் செய்தருளுகிற படியாலே நம்முடைய அபேக்ஷிதங்கள் எல்லாவற்றையும் இங்கே பெறலா மென்று மிகுந்த ஆசையோடு ஆழ்வார் வந்தார்.

ஆனால் திருமலையப்பன் இவரை எதிர் கொண்டழைத்தல், அணைத்தல், வார்த்தை சொல்லுதல், கைங்கர்யத்தில் ஏவுதல், ஒன்றும் செய்யவில்லை. அதனால் ஆழ்வார் மிகவும் நொந்து, "பரம காருணிகனாய், மஹோதாரனான திருமால் நம்மை இப்படி உபேக்ஷிப்பதற்கு காரணம் நம்முடைய அனந்த பாபங்களே யாக வேண்டும்" என்று நிச்சயித்து, அப்பெருமானுக்கு இரக்கம் பிறக்கும்படி, முறையிடுகிறார்.

"அப்ராப்த விஷயங்களில் ஈடுபட்டு பலவகைப்பட்ட பாபங்களைச் செய்து காலங்கழித்தேன். இப்போது அநுதாபத்துடன் உன் திருவடி ஸந்நிதியில் வந்து புகுந்தேன். என்னுடைய முன் தீவினைகளைப் பார்த்து கைவிடக் கூடாது. என் அபராதங்களைப் பொறுத்து அடியேனைக் கைக்கொண்டருள வேண்டும்" என்று பெரிய பிராட்டியாரை முன்னிட்டுக் கொண்டு சரணம் புகுகிறார்.

(1) முதல் பாட்டில் தாய் தந்தை முதலான ஆபாஸ பந்துக் களை நம்பி அனர்த்தகங்களை அநுபவித்துக் கஷ்டப்பட்ட அடியேன் பச்சாத் தாபத்தோடு உன்திருவடிகளை யடைந்தேன். க்ருபை செய்து அடியேனை ஆட்கொண்டருள வேணும் என்று ப்ரார்த்திக்கிறார்.

கலிவிருத்தம்.

* தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன் நுன்னைக்காண்பதோ ராசையினால்
வேயேய் பூம்பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா !
நாயேன் வந்துஅடைந்தேன் நல்கிஆளென்னைக் கொண்டருளே.

பதவுரை :—வேய் ஏய் - மூங்கில்களால் சூழப்பட்டதும். பூம் பொழில் சூழ் - பூச் சோலைகளால் நிறைந்திருக்கப் பெற்றதும். விரை ஆர் - (அதனாலே) பரிமளம் விஞ்சி யிருக்கிற. திருவேங்கடவா - திருமலையில் எழுந்தருளி யிருக்கிறவனே. தாயே தந்தை என்றும் - தாயார் தகப்பனார் என்றும். தாரமே கிளை மக்க ளென்றும் - மனைவியே பந்துக்களே அன்பானகுழந்தை களே என்றும் (எப்பொழுதும் வாய்வெருவிக் கொண்டு) நோயேபட்டு ஒழிந் தேன் - துன்பங்களையே அனுபவித்தேன். நாயேன் - நாய் போலே நீசனான அடியேன். உன்னை - (அத்துன்பங்களைப் போக்கி ரக்ஷிப்பவனாய் ப்ராப்த பந்துவான) தேவரீரை. காண்பது ஓர் ஆசையினால் - ஸேவிக்க வேணு மென்ற குதூஹலத்தினால். வந்து அடைந்தேன் - உன் திருவடிகளில் வந்து சரணம் புகுந்தேன். என்னை - (அகிஞ்சனனாய், அநந்யகதிகனான) அடி யேனை. நல்கி - கிருபை செய்து. ஆட்கொண்டு அருள் - அடிமைக் கொண்டு அருளவேணும்.

கருத்து :—மூங்கில்கள் நெருங்கிப் பூஞ்சோலைகள் நிறைந்து எப்பொழுதும் பரிமளம் நிறைந்த மந்த மாருதங்கள் வீசிக் கொண்டு பரம போக்யமாய் இருக்கும் திருவேங்கட மலையில் திவ்ய போக ரஸத்தை யனுபவித்துக் கொண்டு வீற்றிருக்கும் எம்பெருமானே! தாய், தந்தை, மனையாள், பந்துக்கள், பிள்ளைகள் என்கிற ஆபாஸ மான சரீர ஸம்பந்திகளை எப்பொழுதும் வாய் வெருவிக் கொண்டு, அனர்த்த பரம்பரைகளை யனுபவித்து, நாய் போலே திரிந்தேன். இப் பொழுது உன் கடாக்ஷத்தினால் புத்தி வந்தது. ஆபாஸ பந்துக்க ளான அவர்களின் ஸம்பந்தத்தை ஸவாஸநமாக விட்டு, ஸர்வவித பந்துவான தேவரீரை வந்தடைந்தேன். சரணாகதனான அடியேனை க்ருபை செய்து ஆட்கொண்டருள வேண்டும்.

(2) அவதாரிகை :—எம்பெருமானே! சேஷாத்ரி நாதனே! பூ மண்டலத்தில் அழகிகளான யுவதிகளின் வலையில் சிக்கிக் கொண்டு அளவில்லாத பாபங்களைச் செய்து விட்டேன். புத்தி வந்தது. உன் பக்கம் வந்து சரணம் புகுந்தேன். அடியேனை க்ருபை செய்தருள வேண்டும்—என்று ப்ரார்த்திக்கிறார்.

மானேய் கண்மடவார் மயக்கில்பட்டு மாநிலத்து
நானே நானாவித நரகம்புகும் பாவம்செய்தேன்
தேனேய் பூம்பொழில்சூழ் திருவேங்கட மாமலைஎன்
ஆனாய்! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 2

பதவுரை :—தேன் ஏய் - மகரந்தம் நிறைந்த. பூம்பொழில் சூழ் - புஷ்பங்களோடு கூடின சோலைகளால் சூழப்பட்ட. திருவேங்கடமாமலை - திருவேங்கடம் என்னும் சிறந்த மலையிலே எழுந்தருளி யிருக்கிற, என் ஆனாய் - என்ஆனை போன்ற ஸ்வாமியே. மாநிலத்து - இப் பெரிய பூ மண்டலத்தில். மான் ஏய் கண் - மான் விழிபோன்ற கண்ணை யுடைய. மடவார் - யுவதிகளுடைய. மயக்கில் பட்டு - மோஹ வலையில் அகப்பட்டு. நாநாவித நரகம் - பல வகைப்பட்ட நரகங்களிலே. புகும் - வீழ்வதற்குக் காரணமான. பாவம் - பாபங்களை. நானே - நான் ஒருவனே. செய்தேன் - செய்து விட்டேன். (இப்பொழுது புத்தி வந்ததனால் அனுதாபத்தோடு) வந்து அடைந்தேன் - உன் திருவடிகளில் சரணம் புகுந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—தேன் நிறைந்த பூஞ்சோலைகளாலே சூழப்பட்டு மிகவும் அழகாய் இருக்கும் திருவேங்கட மாமலையில் மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் ஆச்ரயணீயனாய் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானே! இருள்தருமா ஞாலமாகிய இந்தப் பூமண்டலத்தில் மான் விழியை வென்ற கண்ணழகை யுடைய மாதர்களின் மயக்குதலில் அகப்பட்டு, அனேகவிதமான கோர பாபங்களை அஞ்சாமல் துணிந்து செய்து விட்டேன். ஆகிலும், இன்று தான் புத்தி வந்ததால், உன் திருவடிகளில் ஆவலோடு சரணம் புகுந்தேன். அடியேனை க்ருபை செய்தருள வேணும்.

(3) அவதாரிகை :—திருவேங்கடத் தெம்பெருமானே! சிறிதும் விவேக மில்லாமல் பல ப்ராணிகளைக் கொலை செய்தேன். யாசகர்களுக்கு மதுரமாக ஒரு வாய்ச் சொல்லாவது சொல்லி யறியேன். இப்படி க்ரூரமான பாபங்களைச் செய்தும், அடியேன் உன்னை வந்து பற்றினேன். அடியேனை க்ருபை செய்தருள வேண்டும்—என்று தன்

குற்றங்களைச் சொல்லிக் கொண்டு க்ஷமாபணம் செய்து கொள்ளுகிறார்.

கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன் றிலாமையினல்
என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்
குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா!
அன்றே வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 3

பதவுரை :—குன்று ஏய் -மலை போன்ற. மேகம் - மேகங்கள். அதிர் - முழக்குமிடமாய். குளிர் - குளிர்ந்ததாய் இருக்கும். மாமலை வேங்கடவா - சிறந்த வேங்கடமலையில் எழுந்தருளி யிருப்பவனே. குறிக்கோள் - விவேகமென்பது. ஒன்று இல்லாமையினல் - சிறிதும் இல்லாமையினலே. பல் உயிரை - பல ப்ராணிகளை. கொன்றேன் - கொலை செய்தேன். இரந்தார்க்கு - யாசித்தவர்களுக்கு. இனிது ஆக - இனிமையாக, என்றேனும் - ஒரு நாளும். உரைத்து அறியேன் - பதில் சொல்லி அறிய மாட்டேன். அன்றே - அந்த க்ஷணத்திலேயே. வந்து - உன் திருவடிகளில் வந்து. அடைந்தேன் - சரணம் புகுந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—மலைகள் போன்ற மேகங்கள், எப்பொழுதும் இடி முழக்கம் செய்து கொண்டு இடை விடாமல் வர்ஷிப்பதாலே மிகவும் குளிர்ந்ததாய், பரம போக்யமாய் இருக்கும் திருவேங்கட மாமலையில் எல்லோருக்கும் எளியனுய் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானே! யுக்தாயுக்த விவேக மென்பது கொஞ்சமும் இல்லாமல் பல ப்ராணிகளைக் கொலை செய்தேன். ஒரு நாளும் இரந்தார்க்கு இனிதாக ஒரு பதிலாவது சொல்லி யறியேன். இவ்வளவு கோரமான பாதகங்களைச் செய்தும், கொஞ்சமும் ஸங்கோச மிலலாமல் தேவரீரது திருவடி வாரத்திலே வந்து சரணம்புகுந்தேன் அடியேனுடைய அபராதங்களை க்ஷமித்து, அநந்யகதிகனான அடியேனை ரக்ஷித்தருள வேண்டும்.

குறிப்பு :—1. குறிக்கோளாவது—நம்பிக்கை ; அதாவது—தேஹத்திற் காட்டிலும் வேறான ஆத்மா உண்டென்றும், பாப பலன்களை அநுபவிக்க நரகமுண்டென்றும், தெய்வமுண்டென்றும், சாஸ்த்ரமுண்டென்றும், புண்ய பாபங்களுண்டென்றும்—நம்பிக்கை.

2. "அன்றே" அநுதாபம் பிறந்தால், ப்ராயச்சித்தம் பண்ணியாதல் வருகையன்றிக்கே, கொன்றகை கழுவாதே ரத்த மயமான கையோடே வந்து சரணம் புகுந்தேன்—என்று ஸ்வாரஸ்யம்,

(4) அவதாரிகை :—"புநராபி ஜநநம் புநராபி மாணம்" என்றுப் போலே பிறப்பதும், இறப்பதுமாக இளைத்துப் போனேன். ஒரு விதமான நன்மையும் செய்தறியேன். பல கஷ்டங்களை அநுபவித்தேன். உன்னை வந்து பற்றினேன். அடியேனை ஆட்கொண்டருள்—என்று திருவேங்கட முடையானை ப்ரார்த்திக்கிறார்.

குலந்தா னெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த் தொழிந்தேன்
நலந்தா னொன்றுமிலேன் நல்லதோரறம் செய்துமிலேன்
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார் திருவேங்கடவா!
அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 4

பதவுரை :—நிலம் தோய் நீள் முகில் - பூமியிலே படிந்த பெரிய மேகங்கள். சேர் நெறி ஆர் - நடமாடின வழிகள் பொருந்தியிருக்கிற. திருவேங்கடவா - திருமலையிலே எழுந்தருளி இருப்பவனே. எத்தனை குலமும் - எல்லாக் குலங்களிலும். பிறந்து - பிறப்பதும். இறந்து - இறப்பதுமாக. எய்த்து - இளைத்து. ஒழிந்தேன் - போனேன். நலம் ஒன்றும் இலேன் - ஒரு வகையான நன்மையும் இல்லாதவன். நல்லது ஓர் அறமும் —நல்ல புண்ய கார்யத்தை ஒன்றையும். செய்திலேன் - செய்தறியேன். அலந்தேன் - பல கஷ்டங்களை அநுபவித்தேன். வந்து - (அப்படி பாபிஷ்டனான அடியேன் உன் திருவடிகளில்) வந்து. அடைந்தேன் - சரணம் புகுந்தேன் அடியேனை ஆட்கொண்டருள வேண்டும்.

கருத்து :—மேகங்கள் கழுத்தளவும் நீரைப்பருகி, நீர் கனத்தாலே கால் வாங்கிப் போக மாட்டாமல் நகர்ந்து நகர்ந்து துளித்துக் கொண்டு ஸஞ்சரித்த அடையாளம் வழிகளிலே விளங்கா நின்ற திருவேங்கட மலையில் எழுந்தருளி யுள்ளவனே! அநுலோம, ப்ரதிலோமப் பிறவிகள் என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ஸங்கர ஜன்மங்கள் தோறும் பிறப்பதும், இறப்பதும் செய்தாயிற்று மிகவும் மெலிந்துப் போனேன். இப்படிப் பல பல யோனிகளில் பிறந்து வருகிற நாளையிலே நடுவே ஒரு ஸுக்ருதமாகிலும் செய்ததுமில்லை. பல பல கஷ்டங்களை அநுபவித்தேன். இனிமேல் ஒன்றும் முடியாமல் இளைத்து, உன் திருவடிகளிலே வந்து விழுந்து விட்டேன். பழைய குற்றங்களைப் பாராமல் அடியேனை அடிமை கொண்டருள வேணும்.

(5) அவதாரிகை :—திருமலையப்பனே! பலவகைப்பட்ட பாபங்களையே பண்ணி, துக்கப்பட்டு, அகிஞ்சநனாய், அநந்யகதி.

ஞய் உன் திருவடிகளை வந்து அடைந்தேன்; அடியேனை க்ருபை செய்தருள வேணும்.—என்று ப்ரார்த்திக்கிருர்.

எப்பாவம் பலவும் இவையேசெய்து இளைத்தொழிந்தேன்
துப்பா! நின்னடியே தொடர்ந்தேத்தவும் கிற்கின்றிலேன்
செப்பார் திண்வரைசூழ் திருவேங்கடமாமலை என்
அப்பா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 5

பதவுரை :—செப்பு ஆர் - அரணாகப் போரும்படியான. திண்வரை - திடமான மலைகளாலே. சூழ் - சூழப்பட்ட. திருவேங்கட மாமலை - திருவேங்கட மலையிலே எழுந்தருளியிரா நின்ற. என் அப்பா - என் தந்தையே. துப்பா - எல்லாம் அறிய வல்லனே, எப்பாவம் பலவும் இவையே - பலவித மான பாபங்களையே. செய்து - பண்ணி. இளைத்து ஒழிந்தேன் - நலிந்து போனேன். நின் - தேவரீரது. அடியே - திருவடிகளை. தொடர்ந்து - அனுஸரித்து. ஏத்தவும் - துதிக்கவும். கிற்கின்றிலேன் - சக்தியற்றவனாய் இருக்கிறேன். வந்து - அகிஞ்சனனாய் வந்து. அடைந்தேன் - சேர்ந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—அதிபாதகம், உபபாதகம், மஹாபாதகம்,—என்னும்படி பலவகைப்பட்ட பாபங்கள் எல்லாவற்றையும் சிறிதும் ஸங்கோசமில்லாமல் செய்து விட்டேன். பிறகு நோக் கூடிய பலன்களைக் கேள்விப்பட்டு வருத்தத்தால் குன்றிப் போனேன். உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேன். க்ருபை செய்து அடிமை கொண்டருள வேணும்.

குறிப்பு :—1. ஸூக்ஷ்மாதி ஸூக்ஷ்மமான (மிகவும் நுண்ணிய) விஷயங்களையும் தெரிந்து கொள்ள அறிவுடையவன் - துப்பன். அல்லது ரக்ஷிப்பதற்குப் பாங்கான சக்தியுடையவன்.

2. நகைகளை வைத்துக் கொள்ளும் ஸம்புடத் (பெட்டி) திற்கு "செப்பு" என்று பெயர். இங்கு லக்ஷணையாலே " அரண் " சொல்லப்படுகிறது. ஆகையால், செப்பு ஆர்—என்பதற்கு அரணாகப் பொருந்தும்படியான—என்று அர்த்தம்.

(6) அவதாரிகை :—திருவேங்கட நாதனே! என் அப்பனே! பஞ்சபூத மயமான இந்தச் சரீரத்தில் அகப்பட்டு மெலிந்து மிகவும் வேறு புகலிட மில்லாதவனாய், உன் திருவடிகளில் வந்து சேர்ந்தேன். பரம க்ருபையோடு அடியேனை ரக்ஷித்தருள வேணு மென்று ப்ரார்த்திக்கிருர்.

மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம்
புண்ணா ராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்து எய்த்தொழிந்தேன்
விண்ணார் நீள்சிகர விரையார் திருவேங்கடவா!
அண்ணா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 6

பதவுரை :—விண் ஆர் - ஆகாயத்தை அளாவி. நீள் சிகரம் - மஹோந்நதமான கொடு முடிகளையுடையதும். விரை ஆர் - பரிமளம் நிறைந்ததுமான. திருவேங்கடவா - திருமலையிலே எழுந்தருளியிருக்கிற. அண்ணா - அப்பனே! மண்ணாய், நீர், எரி, கால் - பூமி, ஜலம், நெருப்பு, காற்று. மஞ்சு உலாவும் ஆகாசமும் - மேகங்கள் உலாவுகின்ற ஆகாசமும். ஆம் - ஆகிய; பஞ்சபூதங்களினால் ஆகியதும். புண் ஆர் - புண்களால் நிறைந்ததுமான. ஆக்கை தன்னுள் - சரீரத்திலே. புலம்பி - (அகப்பட்டு) கதறி. தளர்ந்து - மெலிந்து. எய்த்து - மிகவும் ச்ரமப்பட்டு. ஒழிந்தேன் - நாசமடைந்தேன். வந்தடைந்தேன் - வேறு கதியில்லாமல் வந்து சேர்ந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—ப்ருதிவி, அப்பு. தேஜஸ், வாயு, ஆகாசம், என்கிற பஞ்சபூத மயமான மாம்ஸபிண்டமாய், மிகவும் ஹேயமான சரீரத்தில் அகப்பட்டுத் துவண்டுபோனேன். இனி மேல் அந்த ச்ரமங்களை என்னால் ஸஹிக்க முடியாது. ஜன்மாந்தரத்தை நீக்கக் கூடிய உன் திருவடி வாரத்திலே வந்து விழுந்தேன். ஆர்த்த ஸம்ரக்ஷணார்த்தமாகக் கட்டப்பட்ட கொடியைப் போல் ஆகாசத்தளவும் வ்யாபித்து விளங்கா நின்றுள்ள சிகரங்களையுடைய பரம போக்யமான திருவேங்கட மலையிலே எழுந்தருளி யிருக்கும் என் அண்ணலே! அநந்ய கதிகனான அடியேனைக் கடாக்ஷித்தருள வேணும்.

(7) அவதாரிகை :—திருவேங்கடத் தெம்பெருமானே! பால்யத்தில் அறிவின்றிப் பல பாபங்களைச் செய்து தீர்த்தேன். யௌவநத்தில் விஷயாந்தர பரனாய் அலைந்து துன்ப மடைந்தேன். இப்பொழுது புத்தி வந்தது. உன்திருவடி வாரத்தில் வந்து சரணமடைந்தேன். அடியேனைக் கடாக்ஷித்தருள வேணும்—என்றுப்ரார்த்திக்கிறார்.

தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்
பெரியே னாயினபின் பிறர்க்கே யுழைத்துஏழையானேன்
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 7

பதவுரை :—கரிசேர் - யானைகள் சேர்ந்திருக்கப் பெற்றதும். பூ பொழில் சூழ் - புஷ்பங்கள் நிறைந்த அழகிய சோலைகளாலே சூழப்பட்டதும். கனம் - திடமான. வேங்கடவா - திருமலையிலே வீற்றிருக்கும் பெருமானே. அரியே - ஸ்ரீமந் நாராயணனே! பாலகனாய் - சிறியவனாயிருந்த போது. தெரியேன் - அறிவில்லாதவனாய். பல தீமைகள் - பல பாபங்களை. செய்தும் இட்டேன் - செய்து தீர்த்தேன். பெரியேன் ஆயினபின் - பருவமடைந்த பிறகு. பிறர்க்கே உழைத்து - விஷயாந்தரபரனாய் உழன்று. ஏழை ஆனேன் - அவிவேகியாய் நசித்துப் போனேன். வந்து அடைந்தேன் - உன் திருவடிகளைப் பெற்றேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—நான் இளம் ப்ராயத்திலே அவிவேகியாய், பல தகாத கார்யங்களைச் செய்து விட்டேன். பிறகு பருவம் வந்தவாறே மாதர்கள் வலையில் சிக்கிக் கொண்டு திரிந்து அலைந்து சதிர்க் கேடனானேன். போன கால மெல்லாம் பழுதானாலும், இனியாகிலும் உஜ்ஜீவிக்கலா மென்று உன் திருவடிகளில் சரணம் புகுந்தேன். அடியேனை ரக்ஷித்தருள வேணும்.

(8) அவதாரிகை—அழகான திருவேங்கட மலையில் விஜயம் செய்திருக்கிற என் ஸ்வாமியே! பல பிறவிகள் உண்டாகும்படி அனேகமான கர்மங்களைச் செய்து விட்டேன். அதனின்று மிகவும் துக்கப்பட்டேன். உன்னைக் காணவேணு மென்று ஆசையினால் வந்து அடைந்தேன். அடியேனை ரக்ஷித்தருள வேணு மென்று ப்ரார்த்திக்கிறார்.

நோற்றேன் பல்பிறவி நுன்னைக்காண்பதோ ராசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றனன் எம்பெருமான்
கோற்றேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 8

பதவுரை :—கோல் - மூங்கில்களினின்றும். தேன் - தேனானது. பாய்ந்து ஒழுகும் - ஒழுகி ப்ரவஹிக்கிற. குளிர் சோலை - குளிர்ந்த சோலைகளாலே. சூழ் - சூழப்பட்ட. வேங்கடவா - திருவேங்கடத்திலிருப்பவனே! எம்பெருமானே - என் ஸ்வாமியே! பல் பிறவி - பல ஜன்மங்கள் உண்டாகும்படி. நோற்றேன் - கர்மங்கள் செய்து வைத்தேன். உன்னை - தேவரீரை. காண்பது - ஸேவிக்க வேணும் என்று. ஓர் ஆசையினால் - ஒரு காதல் கிளர்ந்தபடியாலே. இப்பிறப்பே - இந்த ஜன்மத்திலேயே. ஏற்றேன் - உன் தயைக்குப் பாத்ரமாக ஏற்பட்டேன். இடர் உற்றனன் - (மேல்வரும் யாதனைகளை நினைத்து) துக்கப்பட்டேன், வந்து அடைந்தேன் - (இனி

ஜன்மம் நேராமல் இருப்பதற்காக) உன் திருவடிகளில் சரணம் புகுந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து :—மூங்கில்களினின்றும் மதுரமான தேன் இழிந்து வெள்ளமிடா நின்றுள்ள குளிர்ந்த பூஞ்சோலைகளாலே சூழப்பட்ட திருவேங்கட மலையில் வீற்றிருக்கும் என் ஸ்வாமியே! பல பிறவிகள் உண்டாகும்படி கணக்கில்லாத கர்மங்களைச் செய்து விட்டேன். இப்படிப் பல பிறவிகள் பிறந்து கொண்டேவர, யாத்ருச்சிகமான ஸுக்ருத விசேஷத்தாலே உன்னைக் காண வேணுமென்று ஆசை பிறந்தது. அதனால் இதற்குக் கீழ் நாம் நின்ற நிலை மிகவும் பொல்லாதது என்று விவேகம் பிறந்தது. அதனால் உன் திருவடிகளை அடைந்து பணியும் பாக்யம் பெற்றேன். அடியேனைக் கடாக்ஷித்தருள்.

(9) அவதாரிகை :—ஸ்ரீநம்மாழ்வார் "அகலகில்லேன்" என்கிற பாசுரத்தில் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்டு சரணாகதியைப் பண்ணினாப் போலே, இவரும் இந்தப் பாசுரத்தில், ஆச்ரயண ஸௌகர்யா பாதகங்களான திருக்கல்யாண குணங்களையும், பெரிய பிராட்டியாருடைய ஸம்பந்தத்தையும் கீர்த்தனம் பண்ணி, தன் ஆர்த்ராபாராதங்களைத் தெரிவித்துக்கொண்டு 'க்ஷமித்து, திருவுள்ளம் பற்ற வேணு' மென்று சரணம் புகுகிறார்.

பற்றேல் ஒன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 9

பதவுரை :—மாயனே - ஆச்சர்யகரமான அநேகவித திவ்ய கல்யாண குணகணங்களை யுடையவனே! எங்கள் மாதவனே - எங்களுக்கு புருஷகார பூதையான பெரிய பிராட்டிக்கு வல்லபனே! கல் தேன் - மலை மூழஞ்சுகளினின்றும் தேன். பாய்ந்து ஒழுகும் - பெருகி வெள்ளமிடா நிற்பதும். கமலம் சுனை - தாமரைச் சுனைகளையுடையதுமான. வேங்கடவா - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! பற்று ஒன்றும் இலேன் - ஒரு விதமான அவலம்பமும் இல்லாதவனாய் இருக்கிறேன். பாவமே செய்து - பாபங்களையே செய்து. பாவி ஆனேன் - மிகவும் பாபிஷ்டனானேன். மற்று ஒன்று அறியேன் - வேறு ஒரு உபாயத்தையு மறியமாட்டேன். அற்றேன் - அற்றுத் தீர்ந்தவனாய்க் கொண்டு. வந்து - உன் திருவடிவாரத்தில் வந்து. அடைந்தேன் - சரணமடைந்தேன். அடியேனை ஆட்கொண்டருள்.

கருத்து:—தேவரீருடைய ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டு, வெகு தூரம் போன அடியேனுக்கு ஓரிடத்திலும் எந்த ஆதரவும் கிடைக்கவில்லை. ஆத்மாவுக்கு—ஞானமும், ஆநந்தமும் நிரூபகமாயினும், என்வரை பாபமே நிரூபக மாம்படி பாபங்களையே செய்து மிகவும் பாபிஷ்டனானேன். தேவரீரை அடைவதற்கு உறுப்பான உபாயமொன்றையும் அறியேன். ஆனாலும், தேவரீர் குறைவாளரையும் காப்பாற்றுவதே விதியாக நினைத்திருக்கிறீர். உம்முடைய கல்யாண குணங்களும், பெரிய பிராட்டியாரும் இருக்க எங்களுக்கு என்ன குறை? உனது குளிர்ந்த திருவுள்ளத்திலே எங்களுடைய அபராதங்களைப் பார்த்து ஒருகால் சீற்றம் பிறந்தாலும், பொறுப்பித்து ரக்ஷிப்பிக்கும் காருண்யமே வடிவாகக் கொண்ட அலர்மேல் மங்கையும் 'அகலகில்லேன் இறையும்' என்று உன் திருமார்பிலே உறையா நின்றாள். ஆகையால், நான் வந்து சரணம் புகுந்தேன். இனி நான் இழப்பது முண்டோ! ஸர்வலோக சரண்யரான தேவரீர் அடியேனை ஆட்கொண்டருள வேணும்.

குறிப்பு:—பாவமே செய்து பாவியானேன்—என்பதற்குக் கருத்து என்னவெனில்? ஸத்ய வசனம் முதலான புண்யங்களையே செய்த தசரத சக்ரவர்த்தி, புண்யங்களுக்கும் புண்யமான இராமபிரானை யிழந்து, துக்க மரணமடைந்தார்; பாபிகளில் முதல்வனை, சிசுபாலன் உள்ளத்தையும் பாவமே செய்தும், முடிவில் நல்ல பேறு பெற்றான். ஆக, இப்படிப் பாபம் செய்து புண்யசாலியாவதும், புண்யம் செய்து பாபிஷ்டனாவதும் உண்டாயினும், நான் பாபமே செய்து பாபியானேன். அதென்ன வென்றால்; தசரதனைப் போலே புண்யத்தைச் செய்து பாபியானவன் அல்லேன்; சிசுபாலனைப் போலே பாவத்தைச் செய்து, புண்யசாலி ஆனவனு மல்லேன்; இனி பாபமே செய்து பாபிஷ்டனாகவே ஆனேன்—என்பது.

(10) அவதாரிகை:—நிகமநத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

* கண்ணாய் ஏழுலகுக்கு உயிராய எங்கார்வண்ணனை
விண்ணோர் தாம்பரவும் பொழில்வேங்கட வேதியனை
திண்ணார் மாடங்கள்சூழ் திருமங்கையர் கோன்கலியன்
பண்ணார் பாடல்பத்தும் பயில்வார்க்கு இல்லைபாவங்களே. 10

பதவுரை:—ஏழ் உலகுக்கு - ஸப்த லோகங்களுக்கும். கண் ஆய் - கண்போல் எல்லா விஷயங்களையும் அறிவித்துக் காப்பாற்றுமவனும். உயிர்

ஆய் - ப்ராணனைப் போல் தாரகனுமாய் ரக்ஷித்தருளுமவனும். எம் கார் வண்ணனை - எங்கள் மீது காருண்யாம்ருதத்தை வர்ஷிக்கிற ச்யாம சுந்தர மான மேகம் போன்ற திருநிறத்தையுடையவனும். விண்ணோர் தாம்பரவும் - நித்ய ஸூரிகளும் வந்து துதிக்கப் பெற்ற. பொழில் வேங்கடம் - சோலை கள் சூழ்ந்த திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருப்பவனும். வேதியனை - நிகில வேத வேதாந்த ப்ரதிபாத்யனுமான ச்ரிய : பதியைக் குறித்து. திண் ஆர் மாடங்கள் சூழ் - திடமாய் மஹோந்நதமான மாடமாளிகைகள் சூழ்ந்த. திருமங்கையர்கோன் - " திருமங்கை " என்னும் மாநகரில் உள்ளவர்களுக்கு தலைவரான. கலியன் - ஆழ்வார் (அருளிச் செய்த). பண் ஆர் - பண்ணி சைக் கூடிய. பாடல் பத்தும் - இந்தப் பத்துப் பாசுரங்களையும். பயில் வார்க்கு - ஓதுமவர்களுக்கு. பாவங்கள் இல்லை - ஸகல பாபங்களும் தொலைந்து போம்

**கருத்து** :—ஏழுலகங்களி லுள்ளார்க்கும், கண் போல் காப் பாற்றுமவனும், உயிர் போல் ஸத்தா தாரகனுமான திருவேங்கட முடையானைக் குறித்துத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்த ம்ருது மதுரமான இந்தப் பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்களுக்குப் பாவங்களெல்லாம் தீயினில் தூசாகும்.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ஸ்ரீ—

ஸ்ரீ:

ஸ்ரீமதே பரகாலாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 1 ம் பத்து 10 ம் திருமொழி—'கண்ணார் கடல்சூழ்'

---

அவதாரிகை :—கீழ்த் திருமொழியில், தம்முடைய வெறுமையைச் சொல்லிச் சரணம் புகுந்து கைங்கர்யத்தை அபேக்ஷித்தார். அஹங்கார மமகாரங்களாகிற விரோதிகள் கழிந்தாலன்றோ கைங்கர்யம் பெறவாவது; அதற்காக இத்திருமொழியில் 'ப்ரதி பந்தகங்களைப் போக்கிப் பரபக்தியைத் தந்தருள வேணு' மென்று ப்ரார்த்திக்கிறார்.

(1) அதில் முதல் பாசுரத்தில்—முன்பு லோக கண்டகனை இராவணனை ஸம்ஹரிப்பதற்காக ஸ்ரீராம பிரானாய் அவதரித்தருளி, இப்பொழுது பக்தர்களெல்லோரும் வந்து ஸேவிப்பதற்காகத் திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருக்கும் ஸ்வாமியே! என் துன்பங்களை நீக்கி யருளவேணும்—என்று ப்ரார்த்திக்கிறார்.

* கண்ணார் கடல்சூழ் இலங்கைக்கு இறைவன்தன்
திண்ணா கம்பிளக்கச் சரம்செல உய்த்தாய்!
விண்ணோர் தொழும் வேங்கடமா மலைமேய
அண்ணா! அடியே னிடரைக் களையாயே. 1

பதவுரை :—கண் ஆர் - ஸுவிசாலமான. கடல் - ஸமுத்திரத்தாலே. சூழ் - சூழப்பட்ட. இலங்கைக்கு - இலங்காபுரிக்கு. இறைவன் தன் - தலைவனான இராவணனுடைய. திண் - திடமான. ஆகம் - சரீரத்தை. பிளக்க - பிளந்து போம்படியாக. சரம் - அம்புகளை. செல உய்த்தாய் - செலுத்தினவனே! விண்ணோர் தொழும் - தேவர்களும், நித்ய ஸூரிகளும் வந்து ஸேவிக்கப் பெற்ற. வேங்கடம் மாமலை - திருவேங்கடமென்னும் சிறந்த மலையிலே. மேய அண்ணா - எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே! அடியேன் - தாஸனான என்னுடைய. இடரை - துன்பங்களை. களையாய் - நீக்கியருள வேணும்.

கருத்து:—முன்பு பெரிய கடலையே அகழாக வுடைத்தான இலங்கை மாநகருக்கு நிர்வாகனான இராவணனுடைய திடமான சரீரம் பிளவுறும்படியாக, அவன் மீது அம்புகளைப் ப்ரயோகித்த ஒரு வில்வலவனாய் அவதரித்தவனே! இன்று எல்லோரும் வந்து ஸேவிக்கும்படியாக ஸர்வ சுலபனாய் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானே! இவ்விருள்தருமா ஞாலத்தில் இருப்பு பெருந்துக்கம் என்றுணர்ந்த என்னுடைய இவ்விடரைப் போக்கி யருளவேணும்.

குறிப்பு:—1. கண் ஆர் கடல்—வைத்த கண் வாங்காமல் பார்க்கத் தக்க அழகிய கடல்—என்று சிலர் உரைத்தார்.

2. முன்பு சக்ரவர்த்தித் திருமகனாயிருந்தவனே, இப்பொழுது திருமலையில் ஸ்ரீநிவாஸனாக எழுந்தருளி யிருக்கிறான்—என்று இரண்டு பேருக்கும் அபேதம் சொல்லப்பட்டது.

(2) அவதாரிகை:—முன் ஒரு காலத்தில் இலங்கையில் பலிஷ்டனா யிருந்த 'மாலி' என்றும் ராக்ஷஸனை முடிப்பதற்காகக் கருடனை லங்காபுரிக்கு அனுப்பினவனே! திருவேங்கடத்து எம்பெருமானே! அநந்யகதிகனான அடியேன் மீது க்ருபை செய்தருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

இலங்கைப் பதிக்குஅன்று இறையாய அரக்கர்
குலம்கெட்டு அவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்
விலங்கல் குடுமித் திருவேங்க டம்மேய
அலங்கல் துளப முடியாய்! அருளாயே- 2

பதவுரை:—அன்று - முன் காலத்தில். இலங்கை பதிக்கு - லங்கா புரிக்கு. இறை ஆய - அரசர்களாயிருந்த. அரக்கர் - (மாலி முதலிய) ராக்ஷஸர்கள். குலம் கெட்டு மாள - பூண்டோடே முடியும்படியாக. கொடி - (தனக்கு) த்வஜமான. புள் - பெரிய திருவடியை (கருடனை). திரித்தாய் - ஸஞ்சரிபித்தவனே! விலங்கல் குடுமி - (சந்த்ர ஸூர்யர்கள்) விலங்கிப் போக வேண்டும்படியான (உயர்ந்திருக்கிற) சிகரங்களையுடைய. திருவேங்கடம் - திருமலையிலே. மேய - வீற்றிருப்பவனாய். துளபம் - திருத்துழாயாலே கட்டப்பட்ட. அலங்கல் - மாலைகளை. முடியாய் - திருமுடியிலே அணிந்துள்ளவனே! அருளாய் - அடியேன்மீது க்ருபையை வர்ஷித்தருள வேணும்.

கருத்து:—பெரிய திருவடியை "மாலி" என்றும் ராக்ஷஸனை நிரஸிப்பதற்காக இலங்கைக்கு அனுப்பினவனே! மஹோந்நதமான சிகரங்களையுடைய திருவேங்கடமலையில் திவ்ய கந்தபரிதமான திருத்துழாய் மாலைகளைத் தரித்து வீற்றிருக்கும் எம்பெருமானே! அடியேனை க்ருபை செய்தருளவேணும்.

குறிப்பு :—1. இராவணனுக்கு முன்பு இலங்கையில் 'மாலி' என்னும் ராக்ஷஸன் குடியிருந்தான். அவன் முதலில் பெரிய திருவடியைக் கதையாலே அடித்துத் தூரத்திவிட்டான். அதைக் கண்டு பெருமாளுக்கு அளவற்ற சீற்ற முண்டாயிற்று. பிறகு பெருமாள் அப்பெரிய திருவடியின்மேல் ஏறிக் கொண்டு போர்களத்திலே யெழுந்தருளித் திருவாழியை ப்ரயோகித்து மாலியை ஸம்ஹரித்தார்—என்று உத்தர ஸ்ரீராமாயணத்தில் கதாபாக மிருக்கிறது.

2. "குலம்மாள" பல அசுரர்கள் மூலைக்கொருவராகச் சிதறி ஓடினார்கள்; பலர் மாண்டொழிந்தனர்—என்பது விளங்கும்.

(3) அவதாரிகை :—ப்ரளயாபத்தில் நின்றும் உலகங்களை ரக்ஷிப்பதற்காக, தன் வயிற்றிலவற்றை வைத்துக் கொண்டு வடபத்ரசாயியாய் எழுந்தருளி யிருந்த பெருமானே! இப்பொழுது எல்லாரையும் காப்பாற்றும் பொருட்டுத் திருமலையில் வீற்றிருக்கும் பெருமானே! அடியேன் மீது க்ருபை செய்தருள வேணும் என்று ப்ரார்த்திக்கிறார்.

நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏரால மிளந்தளிர் மேல்துயில் எந்தாய்!
சீரார் திருவேங்கட மாமலை மேய
ஆரா வமுதே! அடியேற்கு அருளாயே. 3

பதவுரை :—நீர் ஆர் கடலும் - ஜலம் நிரம்பியிருக்கிற ஸமுத்ரத்தையும். நிலனும் - பூமியையும். முழுது - மற்றுமுள்ள எல்லாப் பதார்த்தங்களையும் (ப்ரளயாபத்தினின்றும் ரக்ஷிப்பதற்கு). உண்டு - அமுது செய்து (வயிற்றில் பத்ரமாக வைத்துக் கொண்டு). ஏர் - அழகியதும். இள - இளையதுமான. ஆலந்தளிர்மேல் - ஆல் இலைமேல். துயில் - திருக்கண் வளர்ந்தருளின. எந்தாய் - என் ஸ்வாமியே. சீர் ஆர் - சிறந்த. திருவேங்கடம் மாமலைமேய - திருவேங்கடம் என்னும் பெரிய மலையிலே எழுந்தருளியிருக்கிற. ஆராவமுதே - அபர்யாப்தமான அம்ருத ஸ்வரூபனே? அடியேற்கு அருளாய் - அடியேனுக்கு அருள்செய்ய வேணும்.

கருத்து :—ப்ரளய காலத்திலே கடல் சூழ்ந்த உலகங்களை யெல்லாம் திருவயிற்றிலே வைத்துக் கொண்டு, ஒரு அழகான ஆலஇளந்தளிர் மேலே யோக நித்திரை செய்த, அகடிதகடனா ஸாமர்த்ய முடைய திருவேங்கடத் தெம்பெருமானே! ஆராவமுதே! தேவரீர் அடியேன்மீது க்ருபை செய்தருளப் பிரார்த்தனை.

(4) அவதாரிகை :—கண்ணனாய் அவதரித்து, உறிகளின்மேல் வைத்த வெண்ணெயை அமுது செய்தவனே! வாமனனாய்ப் பூமியை அளந்தவனே! திருவேங்கடத்தானே! தேவாதி தேவனே! ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதன்றோ உன் இயல்பு. உன்னையே ஆச்ரயித்திருக்கும் அடியேனைக் கடாக்ஷித்தருள வேணும் என்று ப்ரார்த்திக்கிறார்.

உண்டாய் உறிமேல் நறுநெய் அமுதாகக்
கொண்டாய் குறளாய் நிலம் ஈரடியாலே
விண்தோய் சிகரத் திருவேங்க டம்மேய
அண்டா! அடியேனுக்கு அருள்புரி யாயே. 4

பதவுரை :—உறிமேல் - உறிகளின் மேலே வைக்கப்பட்ட. நறு நெய் - நல்ல நெய்யை. அமுது ஆக உண்டாய் - அம்ருதமாகக் கொண்டு புசித்தாய். குறள் ஆய் - வாமனனாய். நிலம் - பூமியை. ஈரடியாலே - இரண்டு அடிகளாலே. கொண்டாய் - அளந்து கொண்டாய். விண்தோய் சிகரம் - பரமபதம் வரையில் ஓங்கிச் சென்றிருக்கிற கொடுமுடிகளையுடைய. திருவேங்கடம் மேய - திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற. அண்டா - தேவாதி தேவனே. அடியேனுக்கு - சேஷபூதனான எனக்கு. அருள்புரியாய் - க்ருபை செய்தருள்வாய்.

கருத்து :—திருவாய்ப்பாடியில் இடைச்சிமார்கள் உறிகளின் மேலே சேமித்து வைத்த வெண்ணெய், நெய் —முதலான வஸ்துக்களை அமுதுசெய்து அவர்களுக்கு மிகவும் எளியனாய், யதேஷ்ட விநியோகார்ஹனாய் இருந்தாய். குறளாகி மாவலியிடத்துச் சென்று யாசித்துப் பூமியைப் பெற்று ஈரடியாலே எல்லா உலகங்களையும் ஆக்ரமித்துப் பராத்பரனாய், தோன்றினாய். அந்தப் பரத்வ—ஸௌலப்யங்களிரண்டும் விளங்க, திருவேங்கடத்தில் எழுந்தருளி யிருக்கிறாய். விண்ணோர்க்கும், மண்ணோர்க்கும் ரக்ஷகனாய் இருக்கும் தேவரீர் அடியேனையும் அனுக்ரஹித்தருள வேணும்.

குறிப்பு :—முதலடியில் ஸௌலப்யம் தோன்றுகிறது. இரண்டாமடியில் பரத்வம் சொல்லப்படுகிறது. மூன்றாமடியில் பரத்வ ஸௌலப்யங்கள் இரண்டும் பொருந்தியிருக்கும் வகை வர்ணிக்கப்பட்டது. நாலாமடியில் பூர்ணத்வத்தைச் சொல்லி ரக்ஷிக்க ப்ரார்த்திக்கப்பட்டது.

(5) அவதாரிகை :—தனது பக்த சிகாமணியாகிய ப்ரஹ்லாதாழ்வானை ரக்ஷிப்பதற்காக நரஸிம்ம மூர்த்தியாய் அவதரித்தவனல்லவா நீ? இப்பொழுது அடியேனை ரக்ஷிப்பதற்காகவன்றோ! திரு

மலையில் எழுந்தருளி யிருக்கிறாய். ஆகையினால் நீயே என்னைத் திரு வுள்ளம் பற்ற வேணு மென்று ப்ரார்த்திக்கிறார்.

தூணாய் அதனூடு அரியாய்வந்து தோன்றிப்
பேணா அவுண னுடலம் பிளந்திட்டாய் !
சேணார் திருவேங்கட மாமலை மேய
கோணா கணையாய் ! குறிக்கொள் எனைநீயே 5

பதவுரை ;—தூணாயதனூடு - மரத் தூணினின்றும். அரியாய் - நரஸிம்ம மூர்த்தியாய். வந்து தோன்றி - திருவவதரித்து. பேணா - மதியாத. அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய. உடலம் - சரீரத்தை. பிளந்திட்டாய் - கிழித்தெறிந்தாய். சேண் ஆர் - மிகவும் உயர்ந்திருக்கிற. திருவேங்கடம் மாமலை மேய - சிறந்த திருமலையிலே எழுந்தருளி யிருக்கிறவனே? கோள் நாக அணையாய் - பாம்புகளுக்குத் தலைவனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடை யவனே. எனை - அடியேனை. நீயே - தேவரீரே. குறிக் கொள் - திருவுள்ளம் பற்றியருள வேணும்.

கருத்து :—தூணினுள்ளே நரஸிம்ம மூர்த்தியாய்த் தோன்றி, துஷ்டனான ஹிரண்யாஸுரன் உடலைப் பிளந்தெறிந்து, பக்தனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள் புரிந்தாப் போல், பக்தர்களின் சத்ருக்களிடத்தில் சீற்றமும், பக்தர்களிடத்தில் வாத்ஸல்யமும் விளங்கத் திருமலையிலே ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கிற எம்பெருமானே! மிகவும் கொடியவர்களையும் அடக்கி யாளுகின்ற முறையில், ஸர்ப்ப ராஜனான திருவனந்தாழ்வானை உனக்கு அந்தரங்க கிங்கரனாக ஆக்கிக் கொண்டாய். அப்படியே அடியேனையும் நீயே திருத்தி ஸம்ரக்ஷித் தருள வேணும்.

(6) அவதாரிகை :—கீழ் ஐந்து பாட்டுகளிலும் ப்ரார்த் தித்ததை எம்பெருமான் தலைக் கட்டிவைப்பதற்காக ஆழ்வார் நெஞ் சில் வந்து புகுந்தான். அதை இவர் இனிமேல் ஆச்ரயத்தோடு மூதலித் துப் பேசுகிறார்.

அதில் இந்தப் பாசுரத்தில் அடியேனைத் தனக்கு ஆளாக்கிக் கொண்டு திருவேங்கட முடையான் என் நெஞ்சில் புகுந்து, இருக் கிறான்—என்று தமது ஆநந்தாதிசயத்தை அறிவிக்கிறார்

மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கித்
தன்னாக்கித் தன்இன்னருள் செய்யும் தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங்கடம் மேய
என்னானை என்னப்பன் என்நெஞ்சி லுளானே. 6

பதவுரை—மன்னு - நிலைத்திராத. இம்மனிசப் பிறவியை - இந்த மநுஷ்ய ஜன்மத்தை. நீக்கி - போக்கி. தன் ஆக்கி - தனக்கு ஆளாக்கிக் கொண்டு. தன் இன் அருள் செய்யும் - தனது பரம க்ருபையைச் செய்கின்ற. தலைவன் - என் ஸ்வாமியும். மின் ஆர் முகில் சேர் - மின்னலோடு கூடிய மேகங்கள் வந்து சேரும்படியான. திருவேங்கடம் - திருமலையிலே. மேய - எழுந்தருளி யிருக்கிற. என் ஆனை - ஆனை போன்ற என் ஸ்வாமியான. என் அப்பன் - என் அண்ணன். என் நெஞ்சில் உளானே - எனது மனதில் வீற்றிருக்கிறான்.

கருத்து :—மின்னலைக் காட்டிலும் அதி சஞ்சலமான இந்த மானிட ஜன்மத்தை நீக்கித் திருவேங்கட முடையான், அடியேனைத் தனக்கேயாக ஆளாக்கிக் கொண்டு, எனது நெஞ்சில்எழுந்தருளி இருக்கிறான். ஆஹா ! எனது பாக்யமே பாக்யம்.

குறிப்பு :—1. "தன்னாக்கி" என்பதற்கு—தன்னைப் போலே என்னையும் ஞானாநந்த ஸ்வரூபனாக்கினான் ; அல்லது, தனது ஆளாக ஆக்கிக் கொண்டான்—என்று அர்த்தம் கூறலாம்.

2. மின்னார் முகில் சேர்—என்று சொன்னது—பெருமாளும், பிராட்டியும் சேர்ந்த சேர்த்திக்கு ஞாபகமாயிருக்கிறது.

(7) அவதாரிகை :—முன்பு நப்பின்னைப் பிராட்டியின் கலவிக்கு இடைஞ்சல்களாயிருந்த எழு ரிஷபங்களைக் கொன்றது போலே, தம்முடைய இடர்களையும் களைந்து அருளினது இருக்கிற தென்று அதனைப் பேசிக் கொண்டு இனியராகிறார்.

மானேய் மடநோக்கி திறத்து எதிர்வந்த
ஆனேழ் விடைசெற்ற அணிவரைத் தோளா !
தேனே ! திருவேங்கட மாமலை மேய
கோனே ! என்மனங் குடிகொண் டிருந்தாயே. 7

பதவுரை :—மான் எய் மட நோக்கி திறத்து - மான் நோக்குப் போன்ற அழகிய நோக்குடைய நப்பின்னைப் பிராட்டிக்காக. எதிர் வந்த - செருக்குடன் எதிரே வந்த. ஆன் விடை எழ் செற்ற - எழு ரிஷபங்களையும் கொன்ற. அணிவரைத் தோளா - அழகிய மலைபோன்ற திருத்தோள்களையுடைய. தேனே - தேன்போல் பரம போக்யனானவனே ! திருவேங்கடம் மாமலை மேய கோனே - திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே. என் மனம் - என்னுடைய நெஞ்சை. குடி கொண்டு - இருப்பிடமாகக் கொண்டு. இருந்தாய் - நிலையா யெழுந்தருளி யிருக்கிறாய்.

கருத்து.—மானினுடைய நோக்குப் போன்ற நோக்கையுடைய நப்பின்னைப் பிராட்டியை மணந்து கொள்வதற்காக, அவளுடைய பிதாவின் ஸங்கேதத்தை அநுஸரித்து ஏழு ரிஷபங்களையும் கோபித் தடக்கிய பெருமிடுக்கனே! அவளுக்குப் போக்யமா யிருந்தவோ பாதி எனக்கும் பரம போக்யனா யிருக்கிறாய். திருவேங்கடத்தானே! ஆஹா! என்ன உனது தயையும், ஔதார்யமும்? ஐயோ! என்ன எனது பாக்யம். அந்த நப்பின்னைப் பிராட்டியையும் கூட்டிக் கொண்டு, என் நெஞ்சில் வந்து குடிகொண்டிருக்கிறாய். இப்படியும் ஒரு பரி மாற்ற முண்டோ?

(8) அவதாரிகை:—பரம போக்யனை திருவேங்கட முடையான், நப்பின்னைப் பிராட்டியோடு கூட இப்படிப் பரம க்ருபையோடு என் நெஞ்சிலே புகுந்து இருந்த பின்பு, அவன் திருவடிகளை யொழிய வேறொன்றையும் நானறியேன்—என்று அருளிச் செய்கிறார்.

சேயன் அணியன் என்சிந்தை யுள்நின்ற
மாயன் மணிவாளொளி வெண் தரளங்கள்
வேய்விண்டு உதிர் வேங்கடமாமலை மேய
ஆயனடி யல்லது மற்றறி யேனே. 8

பதவுரை:—சேயன் - (அவனிடத்தில் பக்தி யில்லாதவர்களுக்கு) தூரஸ்தனும், அணியன் - (ஆச்ரிதர்களுக்கு) ஸுலபனும். என் சிந்தையுள் - என் மனதிலே. நின்ற மாயன் - ஸ்திரமாக நின்ற ஆச்சர்ய குண சேஷ்டிதனும். வேய் விண்டு - மூங்கில்கள் பிளந்து. ஒளி வெண்தரளங்கள் - விளங்கா நின்றுள்ள வெளுத்த முத்துக்களையும். வாள் மணி - ஒளியுள்ள ரத்னங் களையும். உதிர் - உதிர்க்குமிடமான. வேங்கடம் மாமலை - சிறந்த திருமலை யிலே. மேய - வீற்றிருக்குமவனுமான. ஆயன் - கோபாலனாகிய ஸ்ரீநிவா ஸனுடைய. அடி அல்லது - திருவடிகளை யொழிய. மற்று - வேறொன் றையும். அறியேன் - நான் அறிய மாட்டேன்.

கருத்து:—உன்னை உகவாதார்க்கு எட்டாதவனாய், உகந்தார்க் குக் கையாளா யிருப்பவனே! பரம நிக்ருஷ்டனான அடியேனுடைய நெஞ்சினுள்ளே வந்து நித்ய வாஸம் பண்ணுகிற ஆச்சர்ய சீலனான நீ அணிய னென்பது சொல்ல வேணுமோ? மூங்கில்கள் விண்டு விரிந்து, ஒளி பொருந்திய மணிகளையும், ஒளியும் வெண்ணிறமும் பொருந்திய முத்துக்களையும் உதிர்க்குமிடமான திருமலையிலே எழுந்

தருளி யிருக்கிற பரம ஸௌலப்யனுடைய திருவடிகளைத் தவிர வேறொன் றும் அறியேன்.

குறிப்பு:—வேய்கள் - மூங்கில்கள்; வாள் - ஒளி; தாளங்கள் - முத்துக்கள்.

(9) அவதாரிகை:—தாம் பெற்ற பேற்றை "வந்தாய்; என் மனம் புகுந்தாய்; மன்னி நின்றாய்" என்று தனித் தனி வாக்யமாக நீட்டி நீட்டி, தம்முடைய ஆநந்தம் நன்கு விளங்குமாறு, உரைக்கின்றார்.

வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்!
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ!
சிந்தா மணியே! திருவேங்க டம்மேய
எந்தாய்! இனியான் உன்னை என்றும்விடேனே. 9

பதவுரை:—நந்தாத - ஒருகாலும் அணையாத. கொழுஞ் சுடரே - சிறந்த தேஜோமூர்த்தியாயிருப்பவனே! எங்கள் நம்பி - எங்களுடைய குறைகளைத் தீர்க்கவல்ல பூர்ணனே! சிந்தாமணியே - அபேக்ஷிதங்கள் எல்லாவற்றையும் கொடுக்கும் சிந்தாமணியைப் போன்றவனே! திருவேங்கடம் மேய எந்தாய் - திருமலையிலே எழுந்தருளியிருக்கும் பெருமானே! வந்தாய் - என்னிடம் வந்தாய். என் மனம் புகுந்தாய் - எனது நெஞ்சினுள்ளே ப்ரவேசித்தாய். மன்னி நின்றாய் - ஸ்திரமாக நிலை நின்றாய். இனி - இனிமேல். யான் - அடியேன். உன்னை - தேவரீரை. என்றும் விடேன் - ஒரு நாளும் விடமாட்டேன்.

கருத்து:—அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டனான நீ நீசாதி நீசனான என்னெஞ்சிலே வந்து புகுந்தாய். அதனாலே உன்னுடைய தேஜஸ்ஸு விஞ்சி விளங்கா நின்றது. 'சிந்தாமணி' ரத்தினம் போல் நினைத்த மாத்திரத்திலே அபீஷ்டங்களை யெல்லாம் அளிப்பவனே! பரம போக்யமான திருமலையிலே வீற்றிருக்குமவனே! பரமபதம், திருப்பாற்கடல்—முதலாகிய பரம ரமணீயங்களான ஸ்தலங்களை விட்டு விட்டு, இவ்விடம் வந்தாய். வந்த விடத்திலும் நாயினேனுடைய மனத்தைத் தேடிப் பிடித்து வந்து புகுந்தாய். புகுந்த விடத்திலும் அழுக்குப் பொருந்திய என் நெஞ்சை வெறுத்து விட்டு நீங்கப்பாராமல், "இதனில் சிறந்த ஸ்தானம் நமக்கு வேறொன்றில்லை" என்று என் நெஞ்சிலேயே ஸ்திரமாக இருந்து விட்டாய்! ஆஹா! இப்படியும் ஒரு க்ரமமுண்டோ! என்ன உன் சௌசீல்யம் ஸ்வாமீ!

(10) அவதாரிகை:—நிகமனத்தில் இத் திருமொழியைக் கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக் கட்டுகிறார்.

* வில்லார்மலி வேங்கட மாமலை மேய
மல்லார் திரள்தோள் மணிவண்ண னம்மானைக்
கல்லார் திரள்தோள் கலியன் சொன்னமாலை
வல்லா ரவர்வானவ ராகுவர் தாமே. 10

பதவுரை:—வில்லார் மலி - வேடர்கள் நிறைந்திருக்கப் பெற்ற. வேங்கடம் மாமலை - திருவேங்கடமென்னும் சிறந்த மலையிலே. மேய - எழுந்தருளி யிருப்பவனும். மல் ஆர் திரள்தோள் - மிடுக்கு மிக்குத் திரண்ட தோள்களை யுடையவனும். மணி வண்ணன் - நீல மணிபோன்ற திரு நிறத்தையுடையவனுமான. அம்மானை - எம்பெருமானைக் குறித்து. கல் ஆர் திரள் தோள் - மலை போன்று திரண்ட திருத்தோள்களையுடைய. கலியன் - திருமங்கை மன்னன். சொன்ன - அருளிச் செய்த. மாலை - சொல் மாலையை. வல்லாரவர்தாம் - ஓதவல்லவர்கள். வானவர் ஆகுவர் - நித்ய ஸூரிகளாகப் பெறுவர்கள்.

கருத்து:—ஸ்ரீ குஹப் பெருமாள் போன்ற வேடர்கள் “க்ரூர ஜந்து பூயிஷ்டமான இந் நிலத்திலே எந்த வேளையில் யாவரால் என்ன தீங்கு எம்பெருமானுக்கு நேர்ந்து விடுமோ?” என்று அதி சங்கை பண்ணி, எப்போதும் ஏறிட்ட வில்லுங் கையுமாய் இருக்கும் திருவேங்கட மலையில் எழுந்தருளி இருக்கும், மல் அர் திண் தோள், மணிவண்ணனாகிய எம்பெருமானைக் குறித்து, மலை போன்று திரண்ட திருத் தோள்களை யுடைய திருமங்கை யாழ்வார் அருளிச் செய்த இந்தத் திருமொழியை அப்யஸிக்க வல்லவர்கள், நித்ய ஸூரிகள் கோஷ்டியிலே சேர்ந்து, “ஸதா பச்யந்தி” என்கிறபடியே நித்யமாக பகவத்ஸாக்ஷாத்காரத்தை யுடையவராய் நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை ஆளுவர்கள்,

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே பரகாலாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 2 பத்து 1 ம் திருமொழி—'வானவர் தங்கள்'

அவதாரிகை :—கீழ்த் திருமொழியில்—ஆழ்வார் தமது அஹங்கார மமகாரங்களைப் போக்கி, பரபக்தியைத் தந்தருள வேணுமென்று ப்ரார்த்தித்தார். இந்தத் திருமொழியில்—பேற்றுக்கும் இழவுக்கும் நெஞ்சுதான் காரண மாதலால், தீய விஷயங்களிற் செல்லாமல், ஸ்வரூப ப்ரதானமான பகவத் விஷயத்தில் சென்று சேர்ந்ததே! என்று உவந்து, தமது நெஞ்சைக் கொண்டாடுகிறார், "திருவேங்கட முடையானுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே" என்று பாசுரந்தோறும். இப்படி இந்தத் திருமொழியால் தமது நெஞ்சைப் புகழ்ந்து பேசும் முகத்தால் திருவேங்கட முடையானை அநுபவித்து இனியராகிறார்.

(1) அதில் முதற் பாட்டில்—என் மனமே! யோகிகள் ஹ்ருதய புண்டரீகத்திலும், திருவேங்கட மலையிலும் வாழ்பவனும், வாமநனா யவதரித்தவனுமான எம்பெருமானுக்கு நித்ய கைங்கர்ய வ்ருத்தியை ஏற்றுக் கொண்டாயே! என்ன உனது பாக்யம்—என்று கொண்டாடுகிறார்.

ஆசிரியத்துறை

* வானவர்தங்கள் சிந்தைபோல என்நெஞ்சமே! இனிதுவந்துமாதவ
மானவர்தங்கள் சிந்தை அமர்ந்துறைகின்ற எந்தை
கானவரிடு காரகில்புகை ஓங்குவேங்கடம்மேவி மாண்குறள்
ளான அந்தணற்கு இன்றுஅடிமைத்தொழில் பூண்டாயே! 1

பதவுரை :—என் நெஞ்சமே - என்னுடைய மனமே! மா தவம் - பெருந்தவஞ் செய்தவர்களான. மானவர் தங்கள் - மனிதர்களுடைய - சிந்தை - நெஞ்சிலே. அமர்ந்து உறைகின்ற - பொருந்தி வாழ்கின்ற. எந்தை - ஸ்வாமியும். கானவர் - வேடர்கள். இடு - ஸமர்ப்பிக்கும். கார் அகில் புகை - கார் அகில் மரங்களின் புகையானது. ஓங்கு - எங்கும் பரவியிருக்கிற திருமலையிலே. மேவி - வாழ்பவனும். மாண்குறள் ஆன - வாமன பிரம்மசாரியாய் அவதரித்த. அந்தணர்க்கு - எம்பெருமானுக்கு. வானவர் தங்கள் - நித்ய

ஸூரிகளுடைய. சிந்தை போல் - ஹ்ருதயம் போல். இனிது உவந்து - நன்றாகக் களித்து. இன்று - இப்பொழுது. அடிமைத் தொழில் - கைங்கர்ய வ்ருத்தியை, பூண்டாயே - ஏற்றுக் கொண்டாயே. (ஆகா! என்ன உனது பாக்யம்.)

கருத்து :—என் நெஞ்சமே! ப்ரபன்ன சிகாமணிகளாகிய ஆழ்வார்கள் திருவுள்ளத்திலே நித்ய வாஸம் பண்ணுமவனும், வேடர்கள் தாங்கள் சமையல் செய்து கொள்வதற்காக அகில் மரங்களை வெட்டித் தீயை உண்டாக்கும் போது அதன் புகையானது எங்கும் கம கம வென்று பரிமளித்துக் கொண்டிருக்கிற பரம போக்யமான திருவேங்கட மலையில் நித்ய வாஸம் செய்யுமவனும், மாயா வாமநனாய் அவதரித்தருளினவனுமான எம்பெருமானுக்கு, நித்ய ஸூரிகளுடைய ஹ்ருதயம் போல், நீயும் நன்றாக உவந்து கைங்கர்ய வ்ருத்தியை ஏற்றுக் கொண்டாயே! என்ன உனது பாக்யம்?

(2) அவதாரிகை :—எனது நெஞ்சமே! ப்ராப்த சேஷியான திருவேங்கட முடையானுடைய திருக்கல்யாண குணங்களில் ஈடுபட்டு, அவன் திருவடிகளிலே அடிமைத் தொழில் பூண்டாயே! என்று மகிழ்ந்து பேசுகிறார்.

உறவு சுற்றமென்றொன்றிலா ஒருவன்உகந்தவர்தம்மை மண்மிசைப்
பிறவியே கெடுப்பான் அதுகண்டு என்நெஞ்சமென்பாய்!
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சி மருளிசை பாடும்வேங்கடத்து
அறவனுயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே. 2

பதவுரை :—என் நெஞ்சம் என்பாய் - என் நெஞ்சமே. உறவு சுற்றம் என்று - எவ்வகையான ஆபாஸ பந்துத்வமும். ஒன்றும் இலா - ஒன்றையும் இல்லாத. ஒருவன் - அத்விதீயனான எம்பெருமான். உகந்தவர் தம்மை - அந்தரங்க பக்தர்களுக்கு. மண் மிசை பிறவியே - இப்பூமியில் பிறவியையே கெடுப்பான் - போக்குவான் என்கிற. அது கண்டு - அந்தக் குணத்தைக் கணித்து. குறவர் மாதர்களோடு - குறத்திகளோடு கூட. வண்டு - வண்டுகள். குறிஞ்சி மருள் இசை - குறிஞ்சி மருள் முதலான இசைகளை. பாடும் - பாடுமிடமான. வேங்கடத்து - திருமலையிலுள்ள. அறவன் - தர்ம ஸ்வரூபனான. நாயகர்க்கு - எம்பெருமானுக்கு. இன்று அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—நெஞ்சமே! நாம் தாயாதிக ளென்றும், தாய் தந்தையென்றும் சில ஆபாஸ பந்துக்களைக் கற்பித்துக் கொண்டு, அவர்களுக்கு நன்மை செய்கிறோம். சிலரைச் சத்ருக்க ளென்று கற்பித்

துக் கொண்டு, அவர்களுக்கு தீமை செய்து வருகிறோம். எம்பெருமான் அப்படியில்லாமல் எல்லார் திறத்திலும் அன்புடையவனாகவே இருக்கிறான். தான் உகந்தவர்களை ஸம்ஸாரத்தில் நின்றும் களைந் தெடுத்து நித்ய ஸூரிகள் திரளிலே நிறுத்தினான். இப்படிப் பட்ட எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைக் கண்டறிந்து, அவனுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே! குறத்திகளும், வண்டுகளும் குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுகின்ற பரம போக்யமான திருமலையிலே ஸுலபனாய் வந்து நித்ய ஸன்னிதானம் செய்தருளுகிறான். என்ன அவனுடைய ஸௌலப்யம்? என்ன ஸௌசீல்யம்?

குறிப்பு :—" அறவன்—தண்ணீர்ப் பந்தலை வைத்து நம்மடிமை பெறுகைக்குத் தம்மை நமக்குத் தந்து கொடு நிற்கிற பரம தார்மிகன்" என்று பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்தார்.

(3) அவதாரிகை :—என் நெஞ்சமே! பல விதமான புஷ்பங்களை ஸமர்ப்பித்துத் துதிக்க வருகின்ற தொண்டர்களையும், அவர்களுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளையும் திருமலையப்பன் அனுக்ரஹித்து, பரம பதத்திலே கொண்டு சேர்க்கிறான்—என்கிற அவனுடைய ஔதார்யாதி குணங்களைக் கண்டு, அவன் திருவடிகளில் தொண்டு பூண்டாயே! என்று உகக்கிறார்.

இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்து வாருறவோடும் வானிடைக்
கொண்டுபோயிடவும் அதுகண்டு என்நெஞ்சமென்பாய்!
வண்டுவாழ் வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் மீமிசை
அண்டமாண் டிருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே. 3

பதவுரை :—என் நெஞ்சம் என்பாய் - என் அன்பு பொருந்திய மனமே. இண்டை ஆயின கொண்டு - சிறந்த பூமாலைகளை ஏந்திக் கொண்டு வந்து. ஏத்துவார் - தோத்திரம் பண்ணுமவர்களான. தொண்டர்கள் - பக்தர்களை. உறவோடும் - அவர்களுடைய சம்பந்த சம்பந்திகளோடும் கூட. கொண்டு போய் - இந்நிலத்தில் நின்றும் கொண்டு போய். வானிடை - பரமபதத்திலே. இடவும் அது கண்டு - சேர்க்கிற படியைக் கண்டுகந்து. வண்டு வாழ் - வண்டுகள் களித்து வாழப் பெற்ற. வடவேங்கடம் மலை - வடதிசைக்கு எல்லையாய் இருந்துள்ள திருவேங்கட மலையை. கோயில் கொண்டு - திருக்கோயிலாகக் கொண்டு. அதனோடும் - அந்தத் திருமலையையும். மீமிசை அண்டம் - நித்ய விபூதியான திருநாட்டையும். ஆண்டு - பரிபாலித்துக் கொண்டு இருப்பார்க்கு - இருக்கிற அவ்வெம்பெருமானுக்கு. அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—என்னெஞ்சமே ! வண்டுகள் வாழும்படியாகச் சோலை வாய்ப்பு அமைந்துள்ள திருவேங்கடமலையை ஆள்வது போலவே பரம பதத்தையும் ஆண்டுகொண்டு உபயவிபூதி நிர்வாஹகனாய்ப் புகழ் பெற்றிருக்கும் எம்பெருமானுக்கு, அவனது ஔதார்யம்—முதலிய திவ்ய கல்யாண குணங்களை நன்றாக உணர்ந்து, 'அவனுக்கு அடிமை செய்வது நன்று' என்றறிந்து, அடிமைத் தொழில் பூண்டாயே ! என்ன பாக்யம் ! அவ்வெம்பெருமான், திருமாலை சமர்ப்பிக்கை—முதலான கைங்கர்யங்களை ஏந்திக் கொண்டு தன்னை பஜிக்கும் பக்தர்களை மாத்திரம் ரக்ஷிப்பது மில்லாமல், அவர்களோடு சம்பந்த சம்பந்த சம்பந்த முடையாரையும், அநுக்ரஹிக்குமவன். இந்த மஹா குணத்தை நீ உணர்ந்தாயே ! என்ன உன் விவேகம் ?

(4) அவதாரிகை :—எனது ப்ரியமான நெஞ்சமே ! அலைபாயாமல் திண்ணியதான அத்யவஸாயம் கொண்டாய். இந்த மண்ணுலகில் பரம க்ருபையோடு வந்து அவதரித்து, பக்தர்களிடத்தில் பல பல கைங்கர்யங்களைத் திருவுள்ளம்பற்றி, அவ்வளவிலும் திருப்தி பெறாமல் நித்யமான கைங்கர்யங்களைக் கொள்ள வேணு மென்று அவர்களைத் திருநாட்டிற்குக் கொண்டு சேர்க்கும் பரம உதாரனை திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருக்கும் கோபால க்ருஷ்ணனுக்குத் தொண்டு பூண்டயே. ஆஹா ! என்ன பாக்யம் ? என்று உகக்கிறார்.

பாவியாதுசெய்தாய் என்நெஞ்சமே ! பண்டுதொண்டுசெய்தாரை மண்
மேவிஆட் கொண்டுபோய் விசும்பேறவைக்கும் எந்தை [மிசை
கோவிநாயகன் கொண்டலுந்துயர் வேகங்கடமலையாண்டு வானவர்
ஆவியாயிருப்பாற்கு அடிமைத் தொழில் பூண்டாயே. 4

பதவுரை :—என் நெஞ்சமே - என் மனமே. பாவியாது - அலைபாயாமல். செய்தாய் - திடமான அத்யவஸாயம் கொண்டாய். பண்டு - முன்பு. மண்ணிசை - இந்த மண்ணுலகத்திலே. மேவி - வந்தவதரித்து. தொண்டு செய்தாரை - அடிமை செய்தவர்களை. ஆள் கொண்டு போய் - ஆட்படுத்திக் கொண்டு போய். விசும்பு - பரமபதத்திலே. வைக்கும் - ஸ்தாபித்தருளும். எந்தை - என் ஸ்வாமியும். கோவி நாயகன் - கோபீ ஜனங்களுக்கு நாயகனும். கொண்டல் - மேகங்களை. உந்து - தள்ளும்படியாக. உயர் - உயர்ந்திருக்கிற. வேங்கடம் மலை - திருமலையை. ஆண்டு - அரசாட்சி செய்து கொண்டு. வானவர் - நித்ய ஸூரிகளுக்கு. ஆவியாய் - உயிர் நிலையாய். இருப்பார்க்கு - எழுந்தருளியிருக்கும் திருமலையப்பனுக்கு. அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—என் நெஞ்சமே! நீ அலைபாய்ந்து தடுமாறாமல் சடக்கெனக் கைங்கர்யத்தில் அந்வயிக்கப் பெற்றாயே. பக்தர்களிடத்தில் பல பல விதமான கைங்கர்யங்களைக் கொண்டருளுவதற்காக இந்த மண்ணுலகத்திலே வந்து அவதரித்து, அவ்வளவிலும் திருப்தி பெறாமல், இன்னமும் இவர்களிடத்தில் நித்ய கைங்கர்யங்களைக் கொள்ள வேணுமென்று திருவுள்ளம்பற்றி அவர்களைத் திருநாட்டிலே கொண்டு வைக்கும் கோபாலகிருஷ்ணனாய் அவதரித்த திருவேங்கடமுடையானுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும், நித்ய கைங்கர்யம் செய்யும் படியான பாக்யத்தைப் பெற்றாயே! என்ன உனது அதிர்ஷ்ட பரிபாகம்.

(5) அவதாரிகை :—இருள் தருமா ஞாலமாகிய இந்த மண்ணுலகத்தில் நாம் வேத பாஹ்யமான நாஸ்திக மதங்களில் பிறந்தோ, புகுந்தோ பாழாய்ப் போகாமல், அத்ருஷ்ட விசேஷத்தாலே, ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திலே பிறந்து, எம்பெருமானுக்கு அடிமைப்பட்டு வாழப் பெற்றோமே! என்கிற தமது மகிழ்ச்சியை ஆழ்வார் இது முதல் மூன்று பாசுரங்களில் வெளியிடுகிறார். இந்தப் பாசுரத்தில் அஸாரங்களான ஜைன பௌத்த மதங்களை அநாதரித்துப் பேசுகிறார்.

பொங்கு போதியும் பிண்டியும்முடைப் புத்தர்நோன்பியர் பள்ளியுள்-
தங்கள்தேவரும் தாங்களுமேயாக என்நெஞ்ச மேன்பாய்! [ளுறை
எங்கும்வானவர் தானவர் நிறைந்தேத்தும்வேங்கடம் மேவிநின்றருள்
அங்கணாயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே! 5

பதவுரை :—என் நெஞ்சம் என்பாய் - என் மனமே. பொங்கு - கொம்பும் கிளையுமாகப் பணைத்து வளர்ந்திருக்கிற. போதியும் - அரச மரத்தையும். பிண்டியும் - அசோக மரத்தையும். உடை - தங்களுக்குத் தஞ்சமாக உடையவர்களான. புத்தர் - பௌத்தரும். நோன்பியர் - அமணரும். பள்ளியுள் - தமது தேவாலயங்களிலே. உறை - இருக்கிற. தங்கள் தேவரும் - தங்களுடைய தேவதைகளும். தாங்களுமேயாய்-உலகமெங்கும் பாவிக்கிடக்கச் செய்தேயும். எங்கும் - எல்லா விடங்களிலும். வானவர் - தேவர்களும். தானவர் - அஸுரர்களும். நிறைந்து - நெருங்கியிருந்து. ஏத்தும் - போற்றுமிடமான. வேங்கடம் - திருமலையிலே. மேவி நின்று - எழுந்தருளியிருந்து. அருள் - அருள் பொழிகின்ற. அம் கண் - அழகிய திருக்கண்களையுடைய. நாயகர்க்கு - பெருமானுக்கு. இன்று அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—எனது ப்ரியமான நெஞ்சமே! அரச மரத்தடியை இருப்பிடமாக உடைய தேவதையைப் பஜிக்கும் பௌத்த மதத்திலும், அசோக மரத்தடியை இருப்பிடமாக உடைய தேவதையை உபாஸிக்கும் ஜைன மதத்திலும் பிறந்தோ, புகுந்தோ பாழாய்ப் போகாமல், அந்த அஸாரங்களான பாஹ்ய மதங்களாகிற மகா விருக்ஷங்கள், கிளைகளும், கப்புமாக மிக வளர்ந்து, அஜ்ஞானமென்கிற அந்தகாரத்தினால் மூடப்பட்ட இந்தப் பூமண்டலத்தில் நீ அதிருஷ்ட விசேஷத்தாலே மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் பரம போக்யனாய் எழுந்தருளி யிருக்கும் திருவேங்கட முடையானுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே! நீ யன்றோ பாக்யசாலி?

குறிப்பு :— 1. போதி - என்று அரச மரத்திற்குப் பெயர். கிளையும், கப்புமாக மிக வளர்ந்து இருக்கும் போதியை உபாஸிக்குமவர்கள் - பௌத்தர்கள். பிண்டி - என்று அசோக மரத்திற்குப் பெயர். அதைக் கொண்டாடுமவர்கள் - நோன்பியர் - ஜைனர்கள்.

2. அல்ப பலங்களைக் கொடுக்கக் கூடிய பலவகைப்பட்ட நோன்புகளைச் செய்வதே கார்யமாக வுடையவர்க ளாகையாலே, "நோன்பியர்" என்று ஜைனர்களுக்குப் பெயர்.

(6) அவதாரிகை :—ஓ மனமே! அரையிலே காஷாயத்தை உடுத்துக் கொண்டு, தலையை மொட்டை யடித்துக் கொண்டு கண்டபடி மேல் விழுந்து சோறுகளைத் தின்று, உடல் தடித்து, கூட்டம் கூட்டமாக இருந்து, காலத்தைக் கழிக்கிற சமண மதத்தார் போலே நீயும் காலம் கழிக்க நினைக்காமல், திருவேங்கட முடையானுக்குத் தொண்டு பூண்டு, சுகமாக வாழப் பெற்றாயே! என்று உகக்கிறார்.

துவரியாடையர் மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்டு பின்-
தமரும் தாங்களுமேதடிக்க என்நெஞ்ச மென்பாய்! [னரும்
கவரிமாக்கணம்சேரும் வேங்கடம்கோயில் கொண்டகண்ணார் விசும்-
அமரநாயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே! [பிடை 6

பதவுரை :—என் நெஞ்சம் என்பாய் - என் மனமே! துவரி ஆடையர் - காஷாய வஸ்த்ரமுடுத்தவர்களாய். மட்டையர் - மொட்டைத் தலையரா யிருக்கிற. சமண் தொண்டர்கள் - ஜைன மதத்தார்கள். மண்டி - ஒருவர்க் கொருவர் மேல் விழுந்து, உண்டு - மனம் போனபடி உணவுகளை உட்

கொண்டு. பின்னரும் - மேலும். தாங்களும் தமரும் - அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும். தடிக்க - உடல் தடித்துக் கிடக்க. கவரிமா கணம் சேரும் - சவரிமான்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்திருக்கப் பெற்ற. வேங்கடம் - திருமலையை. கோயில் கொண்ட - நித்ய ஸந்நிதியாகக் கொண்டவனும். கண் ஆர் விசும்பிடை - ஸுவிசாலமான பரமபதத்திலேயுள்ள. அமரர் - நித்ய ஸூரிகளுக்கு. நாயகற்கு - தலைவனுமான பெருமானுக்கு. இன்று அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—எனது ப்ரியமான மனமே! அரையிலே காஷாய வஸ்த்ரத்தை யுடுத்தி, தலை மயிர்களைப் பிடுங்கி யெறிந்து மொட்டைத் தலையரா யிருக்கும் சமணர்கள், மனம் போனபடி உணவுகளை உட்கொண்டு, மேலும் அவர்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் உடல் தடித்துக் கிடக்க, நீயும் அவர்களைப் போலே உண்டு தடிக்க நினையாமல், சவரிமான்கள் கூட்டம் கூட்டமாகச் சேர்ந்திருக்கப் பெற்ற திருமலையைக் கோயிலாகக் கொண்டவனும், ஸுவிசாலமான பரமபதத்திலே யுள்ள நித்ய ஸூரிகளுக்குத் தலைவனுமான எம்பெருமானுக்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே.

(7) அவதாரிகை :—நல் நெஞ்சமே! சுஷ்கதர்க்கங்களாலே தங்களுடைய மதத்தைப் பற்றி வாது செய்து கொண்டு, தயிரும் சோறுமாகத் திரட்டி, கண் பிதுங்கும்படி மிடற்றிலே யிட்டு, நெருக்கி அடைப்பவர்களான அந்தச் சமணருடைய திண்டாட்டத்தைப் பார்த்து, அவருடைய திரளிலே சேராமல், திருவேங்கடத்திலும், ஸூர்ய மண்டலத்திலும் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே!— என்று உகக்கிறார்.

தருக்கினால் சமண்செய்துசோறுதண் தயிரினால் திரளைமிடற்றிடை-
நெருக்குவா ரலக்கணது கண்டுஎன்நெஞ்ச மேன்பாய்! [வானிடை
மருட்கள் வண்டுகள்பாடும் வேங்கடம்கோயில்கொண்டத னோடும்
அருக்கன்மேவி நிற்பார்க்கு அடிமைத்தொழில் பூண்டாயே! 7

பதவுரை :—தருக்கினால் - சுஷ்கதர்க்கத்தினால். சமண் செய்து - தம் சமண மதத்தைப்பற்றி வாதித்துக் கொண்டு. தண் தயிரினால் - கட்டித் தயிரோடு கூடிய. சோறு திரளை - சோற்றுக் கவளங்களை. மிடறு இடை - கழுத்து வரையிலும் ஒதுங்கும்படியாக. நெருக்குவார் - அடைப்பவர்களான அந்தச் சமணருடைய. அலக்கண் அது - அஸஹ்யமான அந்தத் திண்

டாட்டத்தை. கண்டு - பார்த்து. என் நெஞ்சம் என்பாய் - சமத்தான என் அன்புள்ள மனமே. (நீ அவர்களுடைய திரளிலே சேராமல்) வண்டுகள் - களித்த வண்டுகளானவை. மருட்கள் - மருள்—முதலிய இசைகளை. பாடும் - பாடுமிடமான. வேங்கடம் - திருமலையையே. கோயில் கொண்டு - திவ்ய ஸந்நிதியாகக் கொண்டு. அதனோடும் - அவ்வளவு மாத்திர மன்றிக்கே. வானிடை - ஆகாசத்திலே திரிகிற. அருக்கன் - ஸூர்யனுடைய மண்டலத்திலும். மேவி நிற்பார்க்கு - அமைந்திருக்கும் எம்பெருமானுக்கு. அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து :—சுஷ்கதர்க்கங்களினாலே தங்களுடைய சமண மதத்தைப் பற்றி அஸாரமான "ஸப்தபங்கி" முதலான வாதங்களைச் செய்து கொண்டு, பாமர ஜனங்களை மயக்கிக் கொண்டு, கேவல முதர போஷணபரராய், கட்டித் தயிரோடு கூடிய அந்நங்களைக் கழுத்து வரையிலும் அடக்கிக் கொண்டு, தேச கால தசா நியம மொன்றுமில்லாமல் எப்பொழுதும் புஜித்துக் கொண்டுத் திரியும் சமணர்களுடைய தூரவஸ்தையைக் கண்டு, அது மிகவும் ஹேய மென்று நிச்சயித்து அவர்களுடைய திரளில் சேராமல், மிகவும் இனிமையான புஷ்பங்களிலுள்ள மகரந்தத்தைப் பானம் செய்து களித்து மருள்கள்—முதலான இசைகளைப் பாடுமிடமான பரம போக்யமான திருவேங்கட மலையிலே மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் ஸம்ஸேவ்யனாய் வீற்றிருக்கும் ஸூர்ய மண்டல மத்யவர்த்தியான பரம புருஷனைப் பஜித்து, அவனது திருவடிகளில் அடிமைத் தொழில் பூண்டாயே! என்ன உனது விவேகம்? என்ன பாக்யம்?

குறிப்பு :—பெருஞ் சோறுண்ணுதல் - சமண மதத்தில் கட்டித் தயிரைக் கொட்டித் திரட்டி, சோற்றுக் கவளங்களை, கண் பிதுங்கும்படி மிடற்றிலே யிட்டு நோன்புக்கு உறுப்பாக நெருக்குவார்கள். அப்போது படும் கஷ்டம் பொறுக்க முடியாது. இன்னமும் - தலையிலே மயிர் வளர்ந்தால் பூச்சிக்களும், புழுக்களும் சேர நேர்ந்து ஜீவஹிம்ஸை ஏற்படுமென்று அவர்கள் க்ஷௌரமும் செய்து கொள்ளாமல் தலை மயிரைப் பிடுங்கி யெறியச் செய்வார்கள். அது மிகவும் ச்ரமமாயிருக்கும். இந்த மாதிரியான அஸஹ்ஜமான கார்யங்கள் அவர்கள் மதத்தில் அனேகமுண்டு.

(8) அவதாரிகை :—பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்சாவதாரங்களில் சில தௌர்ப்பாக்யசாலிகள் துர்பரக்ஷணங்களைச் செய்து அழியா நிற்க, ஓ மனமே! நீ அவர்களை வெறுத்து என்னிடமும் சொல்லாமல் பரம போக்யனான திருவேங்கட முடையா

ஞகிய ஸ்ரீ கோபால கிருஷ்ணனைச் சரண மடைந்து, அவனுக்கு அடிமைத் தொழில் பூண்டாயே! என்ன உன் விவேகம்? என்று உகக்கிருர்.

சேயன்அணியன் சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக் கேட்டிருந்தே
என்நெஞ்ச மென்பாய்! எனக்கு ஒன்றுசொல்லாதே
வேய்கள்நின்று வெண்முத்தமேசொரி வேங்கடமலை கோயில்மேவிய
ஆயர்நாயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே! 8

பதவுரை :—சேயன் என்பது - (பரமபத நாதனைத் தொழுங்கள் என்ருல்) (அவன்) வெகு தூரத்திலுள்ளவன் (அவனை எப்படித் தொழ முடியும்) என்று சொல்லுவதும். அணியன் என்பது - (அர்ச்சாரூபியைத் தொழுங்கள் என்ருல்) இவன் இதோ இருக்கிருனே! இவனையா தொழுவது - என்று சொல்லுவதும். சிறியன் என்பது - (ஸ்ரீ கிருஷ்ணனை ஸேவியுங்கள் என்ருல்) இவன் இழிகுலத்திலே பிறந்தவனன்ருே? இவனையா தொழுவது? என்று சொல்லுவதும். பெரியன் என்பதும் - (வ்யூஹஸ்வரூபியையும், அந்தர்யாமியையும் ஸேவியுங்கள் - என்ருல்) கைக்கு எட்டாதவனை எப்படி ஸேவிப்பது என்று சொல்லுவதுமாய். சிலர் - சில தௌர்ப்பாக்யசாலிகள். பேச - துர்பாஷணங்களைச் சொல்லா நிற்க. என் நெஞ்சம் என்பாய் - என் மனமே! கேட்டிருந்தே - அந்த குத்ஸித வாதங்களை நீ கேட்டு வைத்தும். (அவர்களுடைய திரளில் சேராமல்) எனக்கு - என்னிடத்திலும். ஒன்று - ஒரு வார்த்தை. சொல்லாதே - சொல்லாமல். வேய்கள் - மூங்கில்கள். நின்று - ஒரு படிப்பட நின்று கொண்டு. வெண் முத்தமே - வெளுத்த முத்துக்களை. சொரி - சொரியுமிடமான. வேங்கடம் மலை - திருவேங்கட மலையை. கோயில் மேவிய - கோயிலாக விரும்பி நித்யவாஸம் பண்ணுகிற. ஆயர் நாயகற்கு - ஸ்ரீ கோபால க்ருஷ்ணனுக்கு. இன்று அடிமைத் தொழில் பூண்டாயே!

கருத்து:—பரவாஸுதேவன் எட்டாத நிலத்திலே உள்ளவனுகையாலே அவனை ஆச்ரயிக்கப் போகாது என்பர் சிலர். அர்ச்சாவதாரங்கள் மிகவும் எளிவைகளாய் இருக்கையாலே அலக்ஷ்யம் தோற்றப் பேசுவார் சிலர். விபவாவதாரங்களில் சிறுமைகளைச் சொல்லி ஏசுவார் சிலர். வ்யூஹாவதாரத்தையும், அந்தர்யாமியையும் நெஞ்சுக்கு எட்டாதவைகளவை —என்று சொல்லி பொழிவர் சிலர். ஆக, இப்படி மனம் போனபடி பேசிக் கொண்டு பகவத் விஷயத்தில் அவகாஹிக்க மாட்டாதே ஸம்ஸாரிகளாய் உண்டுடுத்துத் திரியா நின்றனர்.

எம்பெருமானுடைய சேய்மையைக் குற்றமாகக் கூறுவார் சிலர். அவனுடைய அண்மையைச் சிலர் குற்றமாகக் கூறுவார். அவனுடைய பெருமையைச் சிலர் குற்றமாகக் கூறுவார்.

இப்படி, எம்பெருமானுடைய குணங்களையெல்லாம் இகழ்ச்சிக்கு உறுப்பாக்கி இகழ்வாருடைய திரளில் புகாதே, என் மனமே! நீ என்னோடும் ஒரு வார்த்தை சொல்லாதே, திடீரென்று திருவேங்கடமுடையான் திருவடிகளில் அடிமைத் தொழில் பூண்டு நின்றாயே! ஆஹா! உனது பாக்யமே பாக்யம்.

குறிப்பு :—1. யானைகளின் கும்பஸ்தலத்திலும் மூங்கில்களிலும் முத்துக்கள் சொரியுமென்று கவி ஸம்ப்ரதாயம்

2. எம்பெருமான்—பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாரூபியாக பஞ்ச ப்ரகார விசிஷ்டனாய் இருந்து, உலகங்களை ரக்ஷித்துக் கொண்டு இருக்கச் செய்தேயும், அறிவிலா மனிதர்கள் அவனுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களைத் தெரிந்து கொள்ள மாட்டாதவர்களாய், அறிவு கேடர்களாய், அனர்த்தப்படா நின்றார்கள். ஆஹா! என்ன அவர்களின் தௌர்பாக்யம்? என்று ஆழ்வார் அநுதபிக்கிறார்.

3. ஸ்ரீ க்ருஷ்ணனாய் அவதரித்தவனும், திருவேங்கட மலையில் வீற்றிருக்குமவனும் ஒரே வ்யக்திதான் - என்பதும் சூசிதமாயிற்று.

(9) அவதாரிகை :— நெஞ்சே! நீ நேற்றுவரை எப்படிப் போது போக்கித் திரிந்தாய்! இன்று எப்படி யானாய்! என்று ஆச்சரிய பரிதராய் அருளிச் செய்கிறார்.

கூடியாடி உரைத்ததே உரைத்தாய் என்நெஞ்சமென்பாய்! துணிந்து-
பாடியாடிப் பலரும் பணிந்தேத்திக் காண்கிலர் [கேள்
ஆடுதாமரையோனும் ஈசனும்அமரர்கோனும் நின்றேத்தும் வேங் -
ஆடுகூத்தனுக்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே! [கடத்து 9

பதவுரை :—என் நெஞ்சம் என்பாய் - என் நல்ல நெஞ்சமே! கூடி - (இதற்கு முன்பெல்லாம் உலகத்தாரோடே) கூடியிருந்து. ஆடி - அவர்களைப் போலவே விஷயாந்தரங்களிலே ஊன்றி. உரைத்ததே உரைத்தாய் - அவர்கள் சொன்ன வார்த்தைகளையே நீயும் உரைத்தாய். துணிந்து கேள் - (நான் சொல்லுகிற வார்த்தையை) விச்வஸித்துக் கேளாய் பலரும் - அநேகம் பேர்கள். பாடி - பகவத் குணங்களைப் பாடிக் கொண்டும். ஆடி - கூத்தர்

டிக் கொண்டும். பணிந்து - ஆச்ரயித்து. ஏத்தி - துதித்தும். காண்கிலா - ஸாக்ஷாத்கரிக்க முடியாதவனும், ஆடு - வெற்றியுடைய. தாமரையோனும் - பிரமனும். ஈசனும் - சிவனும். அமரர்கோனும் - இந்திரனும். நின்று - நிலை நின்று. ஏத்தும் - போற்றுமிடமான, வேங்கடத்து - திருமலையிலே நிற்பவனும். ஆடு கூத்தனுக்கு - முன்பு குடக் கூத்தாடினவனுமான பெருமானுக்கு. இன்று அடிமைத் தொழில் பூண்டாயே.

கருத்து:—விஷயாந்தரங்களிலே மண்டித் திரிகிற ஸம்ஸாரிக ளோடே கூடியும், அவர்கள் அநுபவிக்கின்ற விஷங்களையே அநுபவித்தும், அவர்கள் பேசுகிற பேச்சுக்களையே பேசியும் போந்தாயன்றோ நீ நேற்று வரையிலும்? இப்படி யிருந்த நீ இன்று திடீரென்று எப்படிப்பட்ட நிலைமைக்கு வந்து விட்டாய். நீ பெற்ற பாக்கியம் நீ அறிகின்றிலை. நான் எடுத்துச் சொல்லுகிறேன். அன்புடன் கேளாய்! என் நெஞ்சமே! பலரும் பணிந்து ஏத்தி இறைஞ்சி நின்றும் காண முடியாதவனும், பிரமன் சிவன் இந்திரன்—முதலான மேலாந் தெய்வங்கள் மேவித் தொழப் பெற்றவனுமான திருவேங்கட முடையான் திருவடிகளிலே அடிமைத் தொழில் பூண்டாய் காண். உன் பாக்யமே பாக்யம்.

(10) அவதாரிகை:—நிகமநத்தில் இத்திருமொழியைக் கற்றுருக்குப் பலன் சொல்லுகிறார்.

மின்னுமாமுகில் மேவுதண் திருவேங்கடமலை கோயில்மேவிய
அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமானைக்
கன்னிமாமதிள் மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த இம்
மன்னுபாடல் வல்லார்க்கு இடமாகும் வானுலகே. 10

பதவுரை:—மின்னும் மாமுகில் மேவு - மின்னுகின்ற கார் மேகங்கள் தங்கி இருக்கிற. தண் திருவேங்கடமலை - குளிர்ந்த திருமலையை, கோயில் மேவிய - இருப்பிடமாகக் கொண்டு எழுந்தருளி யிருப்பவனும். அன்னம் ஆய் நிகழ்ந்த - ஹம்ஸ ஸ்வரூபியாய்த் திருவவதரித்தவனும். அமரர் பெருமானை - நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகனாய் இருப்பவனுமான எம்பெருமான் விஷயமாக. கன்னிமாமதிள் - திடமான பெரிய மதிள்களையுடைய. மங்கயர் - திருமங்கை நாட்டில் உள்ளவர்களுக்கு ஸ்வாமியான. கலிகன்றி - ஆழ்வார். இன் தமிழால் - செவிக்கினிய தமிழ் பாஷையாலே. உரைத்த -

அருளிச் செய்த. மன்னு - நித்யமான. இப்பாடல் - இந்தப் பத்து பாசுரங்களை. வல்லார்க்கு - ஓதவல்லவர்களுக்கு. வான் உலகு - பரம பதம். இடம் ஆகும் - இருப்பிடமாகும்.

கருத்து :—மின்னுகின்ற காள மேகங்கள் படிந்து இருப்பதினால் ஸ்வபக சீதலமாய், பரம போக்யமா யிருக்கிற திருவேங்கடமலையை நித்ய வாஸஸ்தாநமாகக் கொண்டவனும், ஹம்ஸ ரூபியாய் திருவவதரித்துப் பிரமனுக்கு வேதங்களை மீட்டுக் கொடுத்தவனுமான எம்பெருமான் விஷயமாகத் திருமங்கை யாழ்வார் இனிய தமிழால் அருளிச் செய்த இத்திருமொழியை ஓத வல்லார்கள் பரம பதத்தை வாஸஸ்தானமாகக் கொள்ளப் பெறுவார்கள்.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ஸரோயோகினே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தனிப்பாசுரங்கள்.

## ஸ்ரீபொய்கையாழ்வார் அருளிச்செய்த முதல் திருவந்தாதி.

---

அவதாரிகை :—ஸ்ரீயஃபதியாய், ஸகல கல்யாண குணாகரனை ஸர்வேச்வரன் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவனார்த்தமாக மயர்வற மதி நலமுடையவரான ஆழ்வார்களை அவதரிப்பித்தருளினான். அவர்களில் முதலாழ்வார்கள் மூவரும், வேறு வேறு ப்ரதேசங்களில் திருவவதரித்துப் பகவத் குணாநுபவமே தாரகமாகக் கொண்டு பூமண்டலத்தில் ஸஞ்சரித்துக் கொண்டு போந்தார்கள்: அப்பொழுது எம்பெருமான் அவர்கள் திறத்தில் திருவருள் செய்யும் பொருட்டுப் பெருத்த இருளையும் கனத்த மழையையு முண்டாக்கினான். அதைக் கண்டு அவர்கள் திருக்கோவலூரிலே ஒரு இடைகழியிலே நெருக்கடியாக நின்றார்கள். உலகளந்த மூர்த்தியும் பெரிய வடிவத்தோடு அவர்களிடையே சென்று மிக்க நெருக்கத்தைச் செய்தருளினான்.

அந்நீர்மைக்கு உகந்து—பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில், கடல் நீரையே நெய்யாகக் கொண்டு, ஸூர்யனை விளக்காக ஏற்றினார். பூதத்தாழ்வார்—அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும், சிந்தையைத் திரியாகவும் கொண்டு, ஞாந தீபத்தை ஏற்றினார். இவ்விரண்டி னொளியாலும் இருளற்றதனால், பேயாழ்வார்—எம்பெருமானைத் தாம் ஸேவித்தமை கூறிய வளவிலே, மூவரும் பகவத் ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்து ஆநந்த மடைந்து, அதனுக்குப் போக்கு வீடாகத் திருவந்தாதி ப்ரபந்தத்தை அருளிச் செய்து உலகத்தாரை உய்வித்தருளினார்கள்.

(26) அவதாரிகை :—அவதாரங்களுக்குப் பிற்பாடானார் இழவைப் போக்குவதற்காகப் பரம ஸுலபனைத் திருவேங்கடமலையில்

வந்து தங்கி இருக்கிறான்—என்று உகந்து அருளிச் செய்கிறார். மேலும் அவனுடைய ஸம்பந்தம் பெற்றதான திருமலையே நமக்குத் தஞ்சம்—என்று கூறுகிறார்.

எழுவார் விடைகொள்வார் ஈன்றுழாய் யானை
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை. 26

பதவுரை :—எழுவார்- (ப்ரயோஜனத்துக்காகக் கையேற்றுக் கிளர்ந்து, அது கைப்பட்டவாறே விட்டகன்று போம்) ஐச்வர்யார்த்திகளும், விடை கொள்வார் - (எங்களுக்கு ஆத்மானுபவமே போதும்—என்று விடை கொண்டு போம்) கைவல்யார்த்திகளும், ஈன் - நிரதிசய போக்யமான, துழா யானை - திருத்துழாய் மாலையைத் தரித்துப் பரம போக்யமா யிருக்கிறவனை, வழுவா - ஒருநாளும் விட்டு நீங்காதே கிட்டி நின்று, வகை - அநுபவ ப்ர காரத்தை. நினைந்து - அநுஸந்தித்து. வைகல் - எப்பொழுதும். தொழு வார் - ஸேவிக்கும் பகவச் சரணார்த்திகள் - ஆகிற இவர்களுடைய. வினைச் சுடரை - பாபாக்நியை. நந்துவிக்கும் - உருத் தெரியாதபடி நசிப்பிக்கும். வேங்கடமே - திருமலையே காணும். வானோர் - நித்ய ஸூரிகளுடைய. மனம் - திருவுள்ளமாகிற, சுடரை - விளக்கை, தூண்டும் - (ச்ரத்தை யாகிற தைலத்தை விட்டு வர்திப்பித்துக் கொண்டு) ஜ்வலிப்பிக்கும். மலை - மலையாம்.

கருத்து :—ப்ரயோஜநாந்தரபரரான ஐச்வர்யார்த்திகளோடு ஆத் மானுபவ மாத்ர பரரான கைவவல்யார்த்திகளோடு ஸதா பகவானை அனுபவிக்கும் பரமைகாந்திகளோடு வாசியற இவர்கள் எல்லா ருடைய பாபாக்னியைச் சமிப்பித்து, நித்ய ஸூரிகளுடைய திருவுள்ள மாகிற ப்ரதீபத்தை ஜ்வலிப்பிக்கும் மலை—பரம போக்யமான திரு மலையே காணும்—நித்ய ஸூரிகளுடைய திருவுள்ளமாகிற விளக்கை ஜ்வலிப்பிக்கும் மாமலை.

(37) அவதாரிகை:—நாம் அந்த அவதாரங்களுக்குப் பிற்பட் டோமிறே. அது தீர்த்தம் ப்ரஸாதித்துப் போயிற்றிறே? என்ன; அவன் தான் இந்த ஸம்ஸாரத்திலே திருமலையை யுகந்து வந்து, ஸர்வ ஸமாச்ரயணீயனாய் எழுந்தருளி யிருக்கவும், அதுக்கு வெறுக்க வேணுமோ? என்கிறார்.

வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்
புகைவிளக்கும் பூம்புனலும் ஏந்தித்—திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்த வூர். 37

**பதவுரை:**—வகையறு - (ப்ரயோஜநாந்தரங்களையும், தேவதாந்தரங்களை யும், ப்ரதி பாதிக்கிற) சாகைகளையும், தத்பரமான புத்தியையும், அறுதியிடு வதற்குறுப்பான. நுண் கேள்வி வாய்வார்கள் - ஸூக்ஷ்மார்த்தங்களின் ச்ரவணமுடைய, வேதியர்கள் - வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். நாளும் - நித்தியமும். புகை விளக்கும் - தூப தீபங்களையும். பூ புனலும் - புஷ்பங் களையும், தீர்த்தங்களையும். ஏந்தி - தரித்துக் கொண்டு. திசை திசையின் - பல திக்குகளில் நின்றும். சென்று - வந்து சேர்ந்து. இறைஞ்சும் - வணங்கு மிடமான. வேங்கடம் - திருவேங்கட மலையானது. வெண் சங்கம் - வெளுத்த நிறமுடைய ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தை. ஊதியவாய் - வாயிலே வைத்து ஊதின. மால் - ஸ்ரீய: பதியாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. உகந்த - திருவுள்ளமு வந்து வீற்றிருக்கிற. ஊர் - திவ்யதேசம்.

**கருத்து:**—ப்ரயோஜநாந்தரங்களையும், தேவதாந்தரங்களையும் ப்ரதிபாதிக்கிற சாஸ்த்ராந்தரங்களை நிரஸிக்கத்தக்கதும், அல்பாசல் பங்களான பலங்களை அறுதியிடுவதற் குறுப்பானதுமான பஹுச்ர வணத்தையுடைய வைதிகர்கள், பல பல திசைகளினின்றும் தினந் தோறும் வந்து, தூப தீப புஷ்ப தோய நைவேத்யாதிகளை ஏந்திக் கொண்டு திருவாராதனம் ஸமர்ப்பிக்கும் திருமலைதான்—பாரதயுத் தத்தில் ஒருவாறு மிருய்க்கப் போகாதே முழுக்காயாக அவியும் படி ஸ்ரீ பாஞ்ச ஜன்யத்தை வாயிலே வைத்து ஊதின ஸ்ரீ கிருஷ் ணன் உகந்தவூர்.

(38) அவதாரிகை:—பரம பதத்தில் உள்ளாருடைய உத்தேச்ய ரான வோபாதி, திருமலையில் வர்த்திக்கும், ஸகல சராசரங்களும் உத்தேச்யமாயிருக்கும். நித்யஸூரிகளுக்குத் தலைவனான எம்பெரு மானும் திருவுள்ள முவந்து இங்கே எழுந்தருளி நித்யவாஸம் பண்ணு கிறான்—என்று அருளிச் செய்கிறார்.

ஊரும் வரியரவம் ஒண்குறவர் மால்யானை
பேர வெறிந்த பெருமணியைக்—காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்
எம்மென்னு மால திடம். 38

பதவுரை :—ஊரும் - திரிகின்ற. வரிஅரவம் - உடம்பில் கோடுகளை யுடைய ஸர்பமானது. ஒண்குறவர் - அழகிய குறவர்கள். மால் யானை - (பட்டி மேய்கின்ற) மலை போலே யிருந்துள்ள பெரிய யானைகள். பேர - (தங்களுடைய புனத்தில் நின்றும்) போவதற்காக. எறிந்து - வீசி யெறிந்த. பெருமணியை - பெரியதொரு மஹார்கமான (அதிக விலையுடைய) மணியை. (கண்டு) கார் உடைய - மேகத்தினிடையே தோன்றுகிற. மின் என்று - மின்னலென்று பிரமித்து. புற்று அடையும் - (மின்னின வனந்தரம் இடியுண்டா மென்று கொண்டு அஞ்சி, அதுக்கு முன்னே) புற்றினுள்ளே நுழையா நிற்கும். வேங்கடம் - திருவேங்கடமலை. மேலசுரர் - மேற்பட்டவர்களான நித்ய ஸூரிகள். எம் என்னும் - ‘எங்களுடையவன்’ ‘எங்களுடையவன்’ என்று அஹமஹமிகையோடு அபிமானிக்கும்படியாகவுள்ள. மாலது - திருமால் உகந்த. இடம் - திவ்யதேசம்.

கருத்து :—தங்களுடைய புனங்களிலே யானைகள் பட்டி மேயப் புக, அவற்றைத் துரத்துவதற்காகப் புனங்களைக் காவல் காக்கும் குறவர்கள் தங்கள் பரண்களிலேயிருந்து, தங்கள் கையிலுள்ள பெரிய மாணிக்கக் கட்டிகளை யானைகளின் மீது எறிவார்கள். அப்போது அங்குத் திரியா நின்ற மலைப் பாம்புகள், யானைகளின் மேல் பட்ட மாணிக்கங்களைக் கண்டு யானைகளை மேகங்களாகவும், ஒளி கொண்ட மாணிக்கங்களை மின்னலாகவும் ப்ரமித்து மின்னலுண்டானவுடனே இடியுண்டாகு மாகையாலே இடிக்கு அஞ்சி, ஒளிக்கு மியல்புடையன வாகையாலே தங்களுடைய புற்றுக்களிலே நுழையும். இப்படி அத்யாச்சர்ய காமான ஸம்பவங்களாலே மிகவும் தர்சநீயமாய், ப்ரகாசியா நிற்கும், பரம போக்யமான திருமலை தான் நித்ய ஸூரிகளாலும் பரம ப்ரீதியோடு அநுபவிக்கப்படும். திருமால் உவந்து தங்கி இருக்கும் திவ்ய தேசம்—என்று ஆழ்வார் அத்யந்தம் வித்தாராகிறார்.

குறிப்பு :—திருவேங்கடத்திலுள்ள எல்லாப் பதார்த்தங்களும் பரமோபாதேயங்கள். ஸ்ரீ குலசேகராழ்வார் “ஊனேறு செல்வத் திருமொழியில்” குருகாய், மீனாய், வட்டிலாய், செண்பகமாய், குவடாய், கானாறாய், நெறியாய், வாசல் படியாய்ப் பிறப்பதை ஆசைப்பட்டார்.

2. யானைகளும், மலைப் பாம்புகளும் திரியா நின்றுள்ள பெரிய காடுகளோடும், புனங்களோடும், ஸ்ரீ குஹப் பெருமாள் போலே பகவத் ஸம்ரக்ஷணத்தில் வ்யக்ரரா யிருக்கிற குறவர்களோடும், நிச்சலும் பகவத் குணங்களை ஸங்கீர்த்தனம் பண்ணும் குறத்திகளோடும் கூடி மஹா மஹிமோபேதமாய் திருவேங்கட மிருக்கிறதென்றும்—ஸூசிதமாயிற்று.

(39) அவதாரிகை :—ஆபத்து நேர்ந்த போது பூமியை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை நிரஸிப்பதற்கும் ஸாதுக்களைத் தனது திவ்ய மங்கள விக்ரஹத்தைக் காட்டி ஸம்ரக்ஷிப்பதற்கும், பகவான் அந்தந்த தேசகாலங்களில் அவதரிப்பான். அவன் எப்போதும் உகந்து வாஸம் செய்வது திருமலையில் தான்—என்று எம்பெருமானுடைய பல செயல்களை அநுஸந்தித்து இனியாரிருர்.

இடந்தது பூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனைமுன் னஞ்சக்—கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது. 39

பதவுரை :—பேர் ஓதம் வண்ணர் - பெரிய கடலின் நிறமுடைய எம்பெருமான். முன் - முன் காலத்தில். இடந்தது - ஆதி வராஹ மூர்த்தியாய் அவதரித்துக் கோட்டாற் குத்தி யெடுத்தது. பூமி - பூமியையாம். எடுத்தது - குடையாக வெடுத்துப் பிடித்தது. குன்றம் - ஸ்ரீ கோவர்த்தன கிரியையாம். அஞ்ச - பயப்பட்டு. கடந்தது - முடிந்து போம்படி பண்ணினது. கஞ்சனை - கம்ஸனையாம். கிடந்ததும் - திருக்கண் வளர்ந்தருளினது. ஓதம் நீர் - பெரு வெள்ளமுடைய. மா கடல் - பெரிய பாற்கடலிலாம். பெரிது - பெருமை யெல்லாம் தோற்ற. நின்றதுவும் - வீற்றிருப்பதும். வேங்கடம் - திருவேங்கடமலையில் தான்.

கருத்து :—முன்பு மஹா ப்ரளயத்தில் அண்ட பித்தியில் கிடந்த பூமியை மஹா வாராஹ மூர்த்தியாய் உத்தரித்தான். இந்திரன் கல் மழை பெய்வித்தவன்று கோகுலத்தைக் காப்பாற்றி அருளுவதற்காகக் கோவர்தன மலையைக் குடையாக வெடுத்துப் பிடித்தான். ஸாதுக்களை ஹிம்ஸிக்கும் கம்ஸனைப் பயமூட்டிக் கொன்றொழித்தான். இந்த அவதாரங்களுக்கு அநுகூலமாகத் திருப்பாற் கடலிலே திருக்கண் வளர்ந்தருளிநின்றான். மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் வைப்பாகத் தன் பெருமையெல்லாம் காட்டிக்கொண்டு பரம ஸுலபனாய், பரம போக்யனாய்த் திருமலையில் வீற்றிருக்கிறான்.

பூமியை யெடுத்த வழகு காணலாவது—ப்ரளயத்திலே; குன்றமெடுத்த வழகு காண்பது—கோவர்த்தன மெடுத்தபோது; வெற்றியழகு காணலாவது—கம்ஸனை அழித்தவன்று; கண் வளர்ந்த வழகு காணலாவது—க்ஷீராப்தியிலே; எப்போதும் உகந்து நின்றருளும் வடிவழகைக் காணலாவது—திருவேங்கட மலையில்.

குறிப்பு :—இடந்தது பூமி, எடுத்தது குன்றம்—என்று ஆழ்வார் பெருமானுடைய அற்புத சேஷ்டிதங்களை மாறி மாறி அநுபவிக்கிறார். வேறொன்றில் நெஞ்சு செலுத்துவதில்லை—என்று ஸூசிதமாயிற்று.

(40) அவதாரிகை :—திருமலையை புகழ்கிறார்.

பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனம்துறந்த வேழம்—இருவிசும்பில்
மீன்வீழக் கண்டுஅஞ்சும் வேங்கடமே மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று. 40

பதவுரை :—பெருவில் - பெரிய வில்லையும். பகழி - அம்புகளையுமுடைய. குறவர் - குறவர்களினுடைய. கை - கையிற் பிடித்திருந்த. செம் தீ - சிவந்த நெருப்புக்கு. வெருவி - பயப்பட்டு. புனம் துறந்த - கொல்லையை விட்டு நீங்கின. வேழம் - யானையானது. இரு விசும்பில் - பரந்த ஆகாசத்தில் நின்றும். மின் வீழ - நக்ஷத்திரம் வீழ. கண்டு - அதனைப் பார்த்து. அஞ்சும் - பயப்படுமிடமான. வேங்கடம் - திருவேங்கடமானது. மேல் - முன்பொருகால். அசுரர்கோன் - அசுரர்களுக்கு ராஜாவான இரணியனை. வீழ கண்டு - முடித்து. உகந்தான் - மகிழ்ந்த ஸர்வேச்வரனுடைய. குன்று - திருமலையாம்.

கருத்து :—யானைகள் கொல்லைகளில் இராக்காலங்களில் பட்டிமேய, அதுகளைத் துரத்துவதற்காக அம்பு தொடுத்தவில்லை ஒரு கையிலேயும், தீவட்டியைக் கொளுத்தி மற்றொரு கையிலேயும் பிடித்துக் கொண்டு குறவர்கள் அதட்டிச் செல்ல, அத்தீவட்டியுமையையும் அம்பு கோத்த வில்லையும் கண்ட அக்களிறு அஞ்சி ஓடிப் போக, அகஸ்மாத்தாக ஆகாசத்தில் நின்றும் நக்ஷத்திரம் அவ்வானை பதறிச் செல்லும் வழியிடையே வந்து பெருந் தேஜஸ்ஸுடனே விழ, அதைக் கண்டு இது நக்ஷத்திரமென்றுணராது 'குறவர்கள் தீவட்டியை எறிந்தார்கள்' என்று ப்ரமித்து, இவ்வழியை நாம் எப்படிக் கடந்து செல்ல வல்லோம்? என்று, நிற்குமிடமாய்க் கண்டார்க்கு அத்யாச்சர்யத்தை விளைவிக்கும் திருவேங்கடமலை தான்—ஸ்வாச்ரித ஜன விரோதியான இரணியனைத் தொலைத்துப் பரம பாகவதாக்ரேஸரனான ப்ரஹ்லாதனைக் காத்தருளின பெருமான், அந்த ஆச்ரித பக்ஷபாத மஹா குணத்தை வெளியிட்டுக் கொண்டு, இன்றைக்கும் ஸேவை ஸாதிக்குமிடம். ஆகையால், அதையே ஆச்ரயி—என்று தம் நெஞ்சைக் குறித்து உபதேசிக்கக் கொண்டு உகக்கிறார்.

(68) அவதாரிகை :—கீழ், ஸர்வேச்வரன் ஞானத்துக்கு விஷயமாகிறான்—என்றார். இப்பாட்டில் அவனை உணர்வதரிது—என்கிறார்.

உணர்வாரார் உன்பெருமை ? ஊழிதோ றூழி
உணர்வாரார் உன்னுருவந் தன்னை ?—உணர்வாரார் ?
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய் ! நீகிடந்த பால். 68

பதவுரை :—விண்ணகத்தாய் - பரமபத நாதனே ! மண்ணகத்தாய் - இந்த மண்ணுலகில் திருவவதரிப்பவனே ! வேங்கடத்தாய் - திருவேங்கட மலையில் வீற்றிருப்பவனே ! பண் நால் வேதம் அகத்தாய் - (உதாத்த - அநுதாத்த - ஸ்வரிதங்கள் - முதலான ) ஸ்வரங்களையே ப்ரதானமாகவுடைய - (ருக் - யஜுஸ் - ஸாம - அதர்வணங்கள் - என்கிற) நான்கு வேதங்களிலும் ப்ரதிபாத்யனாய் இருப்பவனே ! உன் பெருமை - உன்னுடைய பெருமையை. ஊழிதோறூழி - கால தத்வமுள்ளதனையும் ஆராய்ந்தாலும், உணர்வார் ஆர் - அறியக் கூடியவர் யாவர் ? உன் உருவம் தன்னை - உனது திவ்யாத்ம ஸ்வரூபத்தைத்தான், உணர்வார் ஆர் - அறியக் கூடியவர் யாவர் ? நீ கிடந்த பால் - நீ யோக நித்திரை செய்கின்ற திருப்பாற் கடலைத் தான். உணர்வார் ஆர் - அறிய வல்லாரார் ? (எவருமில்லை.)

கருத்து :—பரம பதநாதனே ! பூலோகநாயகனே ! உபய விபூதி நிர்வாஹகனாய், பரம போக்யமான திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே ! காலதத்வ முள்ளதனையும் ஆராய்ந்தாலும் உன் பெருமையை அறியக் கூடியவர்கள் யாவர் ? உன் ஸ்வரூபத்தை உணர்வார் யார் ? ஆர்த்த ரக்ஷணத்துக்காக நீ பள்ளி கொண்டிருக்கும் பாற்கடலைத் தான் அறிய வல்லார் ஆர் ? ஒருவருமில்லை.

குறிப்பு :—1. காலத்தை யெல்லாமொரு பொழுதாக்கி, உன்னுடைய ஸ்வரூப - ரூப - குணங்களை உணரப் புக்கால் உணரவரிது - என்று கருத்து.

2. ஸ்வரத்துக் குள்ளீடாய் நின்று, ப்ரதி பாதிக்கிற வேதங்களுக்கு ப்ரவர்த்தகன் - ஸர்வேச்வரன் - என்று அபிப்ராயம்.

(76) அவதாரிகை :—எம்பெருமானைத் தொழுமவர்கள் நற்கதி பெறுவார் என்று சொல்ல வேணுமோ ? அவனோடு ஸம்பந்தமுடைய திருவேங்கடமலையே தன்னைப் பற்றினோர்க்கு நற்கதியைத் தரும்—என்று கைமுதிக நியாயம் தோற்றப் பேசுகிறார்.

வழிநின்று நின்னைத் தொழுவார் வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே யாவர்— பழுதொன்றும்
வாராத வண்ணமே விண்கொடுக்கும் மண்ணளந்த
சீரான் திருவேங் கடம். 76

பதவுரை :—வழி நின்று - பக்தி மார்க்கத்தில் நிலை நின்று. நின்னை - தேவரீரை. தொழுவார் - ஆச்ரயிக்குமவர்கள். வழுவா - நித்ய நிர்த்துஷ்டமான. மொழி - வேத வாக்யங்களில். நின்ற - சொல்லப்பட்ட. மூர்த்தியர் - ஸ்வரூப ஆவிர்ப்பாவத்தை உடையவராகவே. ஆவர் - ஆவர்கள். (இதைப்பற்றிச் சொல்ல வேணுமோ?) மண் அளந்த - உலகங்களைத் தனது திவ்ய சரண கமலங்களினால் அளந்து, எல்லாரையும் தன் திருவடி ஸ்பர்சத்தால் அனுக்ரஹித்த. சீரான் - பரம புருஷன் எழுந்தருளியிருக்கிற. திருவேங்கடம் - திருமலையே. பழுது ஒன்றும் - ஒரு குறையும். வாராத வண்ணமே - இல்லாதபடி. விண் - மோக்ஷத்தை. கொடுக்கும் - அளிக்கும். (ஸந்தேஹமில்லை.)

கருத்து :—பரமோதாரனாய், பரம காருணிகனாகையாலே உலகங்களையெல்லாம் தன் திருவடி ஸ்பர்சத்தால் நற்கதி யடையும்படி செய்த மஹாநுபாவன், மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் பரம போக்யனாய் எழுந்தருளி யிருக்கும் திருவேங்கடமே குறையொன்றில்லாமல் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைக் கொடுக்குமதாயிருக்க, பக்தி மார்க்கத்திலே நிலை நின்று, அவனை ஆச்ரயிக்குமவர்கள், நித்ய நிர்த்துஷ்டமான வேதாந்தத்தில் சொல்லப்பட்ட ஞானாநந்த ஸ்வரூபிகள் ஆகுவார்—என்பதில் ஸம்சய முண்டோ? அவன் ஸம்பந்தம் பெற்ற திருமலையைத் தொழுமவர்களே நற்கதியடைவார்—என்றால், எம்பெருமானைத் தொழுமவர்கள் நற்கதி பெறுவார்—என்பது கைமுதிக நியாய ஸித்தம்.

குறிப்பு :—1. வழுவா மொழியாவது - வேதம். அதில் சொல்லப்பட்ட மூர்த்தியாவது—ஸ்வஸ்வரூபாவிர்பாவம். "பரம் ஜ்யோதி ருப ஸம்பத்ய ஸ்வேன ரூபேணாபிநிஷ்பத்யதே" என்று சுருதி. "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள் செய்வார்" என்று இதின் அர்த்தத்தை ஆழ்வாரும் சொன்னார்.

2. "திருவேங்கட மாமலை, ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே" என்னும் பாசுரம் இங்கு அநுசந்திக்கத் தக்கது.

3. இந்தப் பாசுரத்தை ஸ்ரீ எம்பார் நாடோறும் விடிவோடே அநுஸந்திப்பது வழக்கமாம்.

(77) அவதாரிகை :—உகந்தருளின நிலங்களில் எம்பெருமான் எழுந்தளி யிருக்கும் படிகளை நாம் அநுஸந்தித்தால் நமது பாபங்களெல்லாம் தீயினில் தூசாகும்—என்று அருளிச் செய்கிறார்.

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும்—நான்கிடத்தும்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாம் இடர். 77

பதவுரை :—வேங்கடமும் - திருவேங்கட மலையும். விண்ணகரும் - ஸ்ரீ வைகுந்த மா நகரமும் (பரமேச்வர விண்ணகரமும்). அஃகாத பூ கிடங்கின் - எப்பொழுதும் மலர்ந்து மாறாதிருக்கும் புஷ்பங்களோடு கூடின நீர் நிலைகளையுடைய. நீள் கோவல் - சிறந்த திருக்கோவலூர் என்கிற திவ்ய தேசமுமாகிய. நான்கு இடத்தும் - நான்கு திவ்ய தேசங்களிலும் (வரிசைக் கிரமமாக எம்பெருமான்) நின்றான் - நின்ற திருக்கோலத்தோடு எழுந்தருளி யிருக்கிறான். இருந்தான் - வீற்றிருக்கிறான். கிடந்தான் - பள்ளி கொண்டிருக்கிறான். நடந்தான் - நடந்த திருக்கோலமாயிருக்கிறான். என்றால் - என்று நாடோறும் அநுஸந்தித்தால். இடர் - துக்கங்களெல்லாம். கெடும் ஆம் - விட்டு ஓடிப்போம்.

கருத்து :—எம்பெருமான் திருப்பதிகளில் நிற்பதும், இருப்பதும், கிடப்பதும், நடப்பதுமான திருக்கோலங்களோடு எழுந்தருளியிருக்கிறான். அந்தப் படிகளையெல்லாம் நாமநுஸந்தித்தால், நாம்—நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் செய்த பாபங்ளெல்லாம் தன்னடையே விட்டுப்போம். அதனால் நம் துக்கங்க ளெல்லாம் தீரும்.

குறிப்பு :—விண்ணகரம்—நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பரமபதமும் ஒன்றாதலால், பரமபதமே யென்னலாம். உப்பிலியப்பன் ஸந்நிதியில், வீற்றிருந்த திருக்கோல மில்லாததினால், அதை இங்குச் சொல்ல முடியாது. கச்சிமா நகரிலுள்ள பரமேச்வர விண்ணகரத்தையும் சொல்லலாம்.

(82) அவதாரிகை :—ஒரு பெண்ணுக்காக மாயமானைப் பின் தொடர்ந்து அம்பு தொடுத்து மாயவிட்ட இராமபிரான் நித்ய வாஸம் பண்ணுகிற மலையாகையாலே திருமலை பெண் பிறந்தாரும் ஸுலபமாகச் சென்று ஆச்ரயிக்கலாம்— என்று அருளிச் செய்கிறார்.

படையாரும் வாட்கண்ணார் பாரசிநாள் பைம்பூந்
தொடையலோடு ஏந்திய தூபம்—இடையிடையில்
மீன்மாய மாசூணும் வேங்கடமே மேலொருநாள்
மான்மாய வெய்தான் வரை. 82

பதவுரை :—*மேல் ஒரு நாள் - முன்னொரு காலத்திலே. மான் - மாரீசனாகிற மாயமான். மாய - இறந்து விடும்படி. எய்தான் - அம்பு தொடுத்து விட்ட இராமபிரான் எழுந்தருளியிருக்கிற. வரை - திருமலையானது. படை ஆரும் வாள் கண்ணார் - வேலாயுதம் போன்று ஒளி பொருந்திய கண்களையுடைய பெண்கள். பாரசி நாள் - த்வாதசி தினத்தில். பை பூ - வாடாத மலர்களைக் கொண்டு தொடுத்த. தொடையலோடு - மாலைகளோடு கூட. ஏந்திய - ஸமர்ப்பித்த. தூபம் - தூபமானது. இடை இடையில் - ஆகாசத்தில் நடுவே நடுவே தோன்றுகின்ற, மீன் - நக்ஷத்ரங்கள். மாய - மறையும்படி. மாசூணம் - மாசு ஏறும்படி பண்ணா நிற்கிற. வேங்கடமே - திருமலையே யாகும்.*

கருத்து :—*அறிவொன்று மில்லாத பெண்களுங்கூட ஸத்வோத்தர காலமான த்வாதசியன்று வாடாத மலர்களைக் கொண்டு தொடுத்த மாலைகளைத் திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பித்து, பின்பு ஸமர்ப்பிக்கும் திவ்ய தூபத்தினால், ஆகாசத்தில் நடுவே நடுவே தோன்றியிருக்கும் நக்ஷத்ரங்களும் மறையும்படி பரம போக்யமாயிருக்கும் திருமலை தான்—முன்பு மாரீசனாகிய மாயமான் இறந்து விடும்படி அம்பு தொடுத்து விட்ட ஸ்ரீ ராமபிரான் உகந்து நித்ய வாஸம் செய்கின்ற திவ்ய தேசம்.*

(99) அவதாரிகை :—*நன் னெஞ்சே! ஸர்வ தேச—ஸர்வகால வர்த்தியானவனும், யோகிகளின் ஹ்ருதயத்தில் உள்ளவனும், திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவனும், திருமலையில் நிற்பவனும், இப்போது நம்மிடத்தில் வந்து புகுந்தான். என்ன நம் பாக்யம்—என்று தமது திருவுள்ளத்தை நோக்கி அருளிச் செய்கிறார்.*

உளன்கண்டாய் நன்னெஞ்சே! உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்து—உளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தி னுள்ளானென்று ஓர். 99

பதவுரை :—*நல் நெஞ்சே - எனக்குப் பாங்கான மனமே! உத்தமன் - புருஷோத்தமனான எம்பெருமான். உளன் கண்டாய் - ஆசிரிதஜன ரக்ஷணத்*

தினால் ஸத்தை பெற்றிருக்கிறான். என்றும் உளன் கண்டாய் - எக்காலத்திலும் சரணாகத ரக்ஷகனாய் இருக்கிறான் காண். உள்ளுவார் - ஆஸ்திகர்களுடைய. உள்ளத்தில் - ஹ்ருதயத்திலே. உளன் கண்டாய் - நித்யவாஸம் பண்ணுகிறான் காண். வெள்ளத்தின் - திருப்பாற் கடலிலே. உள்ளானும் - கண் வளர்ந்தருள்பவனும். வேங்கடத்து மேயானும் - திருமலையில் நிற்பவனும். உள்ளத்தின் - (இப்போது) நம் ஹ்ருதயத்திலே. உள்ளான் - புகுந்து இருக்கிறான். என்று ஓர் - என்று தெரிந்து கொள்.

கருத்து :—நல் நெஞ்சமே! ஸர்வ ரக்ஷகனான புருஷோத்தமன், திருப்பாற் கடல், திருமலை—முதலிய இடங்களில் வந்து தங்கியிருப்பது விலக்காதார் நெஞ்சில் வந்து புகுவதற்காகவே. ஆதலால், அவன் இப்போது நம்முடைய நெஞ்சிலே ஆதர விசேஷத்தோடு வந்து புகுந்தான். இதை நீ அறிந்து உவந்திரு.

குறிப்பு :—நெஞ்சைத் தனிப்பட்டவொரு பொருளாக ஆரோபித்து, நெஞ்சுக்கும் ஒரு உள்ளமிருப்பதாக விளித்துச் சொல்லுகிறார்.

ஸ்ரீ பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே பூதயோகினே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ பூதத்தாழ்வார் அருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி.

---

அவதாரிகை :—முதல் திருவந்தாதியில் பொய்கையாழ்வார் பர பக்தி ப்ரகாசத்தை வர்ணித்தார். இத் திருவந்தாதியில் பூதத்தாழ்வார் பரஜ்ஞாந ப்ரகாசத்தை அபிவர்ணிக்கிறார்.

(25) அவதாரிகை :—ஸங்கல்ப மாத்திரத்திலே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன், தன்னையழிய மாறி, மனுஷ்ய ஸஜாதியனாய் அவதரித்தது—ஸாது பரித்ராணத்திற்காகத் தான். பகவானுடைய அவதாரத்திற்கு முக்ய காரணமிதுவேயாம். துஷ்ட நிக்ரஹமும், தர்ம ஸம்ஸ்தாபனமும், ஸங்கல்ப மாத்திரத்தாலேயே ஸித்திக்கும். பாகவதர்களின் கண்ணுக்கிலக்காய், அவர்கள் செய்யும் கைங்கர்யங்களைத் திருவுள்ளம் பற்றுவதற்காகவும், அவர்களை ஸந்தோஷப் படுத்துவதற்காகவும் தான்—இந்த உலகில் இப்படி விபவாவதாரங்களை எடுத்தும், அர்ச்சா ரூபியாய் ஸேவை ஸாதித்துக் கொண்டும் இருக்கிறான்—என்று அருளிச் செய்கிறார்.

சென்றது இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்
கொன்றது இராவணனைக் கூறுங்கால் — நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து. 25

பதவுரை :—விண்ணவர் தம் வாய் - தேவர்களின் வாயினால் உயர்வாகக் கூறப்படுகின்ற. தொல் புகழான் - அநாதி ஸித்தமான கீர்த்தியையுடைய எம்பெருமான். செவ்வே - நேராக. சென்றது - கோபத்தோடு சென்றது. இலங்கை மேல் - லங்காபுரியின் மேலாகும். தன் சீற்றத்தால் - தனது கோபத்தால். கொன்றது - ஸம்ஹரித்தது. இராவணனை - ராவணாசுரனை. கூறுங்கால் - சொல்லுமிடத்து. வந்து நின்றதுவும் - ஸர்வ ஸமாச்ரயணீயனாய், பரம ஸௌலப்யனாய் வந்து நின்ற இடமானதும். வேய் ஓங்கு - ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில்களோடு நிறைந்திருப்பதினாலே. தண் - குளிர்ந்த. சாரல் - சாரல்களையுடைய. வேங்கடம் - திருவேங்கட மலையேயாகும்,

கருத்து :— தங்களைப் பாதிக்கும் அஸுரர்களை ஸம்ஹரித்து தங்களைக் காப்பாற்றினதற்காகத் தேவர்களால் ஸங்கீர்த்தனம் செய்யப்படுகின்ற பழமையான புகழையுடைய எம்பெருமான்—நேராகச் சீறிச் சென்றது லங்காபுரி மேலாகும்; சினத்தினால் கொன்றது இராவணனை; ஸாது ஜன பரித்ராணார்த்தமாகத் திவ்ய மங்கள விக்ரஹத்தோடு பரம ஸுலபனாய் எழுந்தருளி யிருப்பது மூங்கில்கள் ஓங்கி வளர்ந்ததினால் மிகவும் குளிர்ந்த சோலைகளையுடைய திருவேங்கடமலையிலே யாம்.

குறிப்பு :—எம்பெருமான், துஷ்டர்களைத் தனது ஸங்கல்பமாத்திரத்தாலே நிக்ரஹித்துவிடக் கூடுமாயினும், சிஷ்டர்களை வாழ்விப்பது கேவல ஸங்கல்பத்தால் தலைக்கட்டாது. பகவானிடத்தில் ப்ரேமமானது அதிசயித்து, அவன் திவ்ய மங்கள விக்ரஹத்தினழகைக் கண்ணாரக் காணவேணுமென்றிருக்கும் பக்தர்களின் ஆவல்—நேரில் வந்தவதரித்தால்தான் தீரும். ஆகையினால் தான் எம்பெருமான் விபவாவதாரங்களையும், அர்ச்சாவதாரங்களையும் செய்தருளுகிறான்—என்ற பரமார்த்தம் ஸூசிதமாயிற்று.

(28) அவதாரிகை ;—தாம் அவன் பிரியாத நிலத்தைப் பெறவேணுமென்று விரும்பப் புக்கவாறே, எம்பெருமான் தமது திருவுள்ளத்திலே வந்து குடி கொண்டான்—என்று உகக்கிறார்.

மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் மற்றும்
நினைப்பரிய நீளரங்கத் துள்ளான்—எனைப்பலரும்
தேவாதி தேவ னெனப்படுவான் முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன். 28

பதவுரை :—எனைப் பலரும் - கணக்கில்லாத பூஜ்யர்கள் யாவராலும். தேவாதி தேவன் - தேவர்களுக்கும் தேவன். எனப்படுவான் - என்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படுமவனும். மா கடலான் - பரந்த திருப்பாற்கடலிலே பள்ளி கொண்டிருப்பவனும். முன் ஒரு நாள் - முன்பொரு காலத்தில். மா - குதிரை யுருக்கொண்டு வந்த 'கேசிய' னென்கிற ராக்ஷஸனுடைய. வாய் - வாயை. பிளந்த - கிழித்து எறிந்த. மகன் - சிறு பிள்ளையான கண்ணபிரானாயவதரித்தவனும். மற்றும் - பின்னும். நினைப்பு - நினைப்பதற்கும். அரிய - அருமையான. நீள் அரங்கத்து - பரம போக்ய மான ஸ்ரீரங்கத்திலே பள்ளி கொள்பவனும். வேங்கடத்தான் - திருமலையிலே ஸர்வ ஸுலபனாய் எழுந்தருளியிருப்பவனும். மனத்து - என் மனதில். உள்ளான் - (இப்போது) நித்ய வாஸம் பண்ணுகிறான்.

கருத்து:— நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், பரமபத நாதனான எம்பெருமான், ஜகத் ரக்ஷணார்த்தமாக முதலில் திருப்பாற்கடலிலே வந்து தங்கி, பின்பு ஸ்ரீ க்ருஷ்ணனாயவதரித்து, அதில் திருப்தி பெறுமல், பரம ஸௌலபனா யிருக்கத் திருவுள்ளம் பற்றிக் கோயில் திருமலை—முதலிய திவ்ய தேசங்களிலே நித்ய வாஸம் பண்ணிக் கொண்டு இருந்து, இப்போது என் நெஞ்சிலே வந்து புகுந்து நின்றான். என்ன அவனது மஹௌதார்யமும், வாத்ஸல்யமும்? என்ன எனது பாக்யம்?

(33) அவதாரிகை :—தமக்கு நேர்ந்த மஹா பாக்யத்தை மகிழ்ந்து அருளிச் செய்கிறார்—சிந்தை, வாய், உடல்—என்னும் மூன்று காரணங்களும் பகவத் விஷயத்தில் அவகாஹித்த படியைப் பேசுகிறார்.

துணிந்தது சிந்தை துழாயலங்கல் அங்கம்
அணிந்தவன்பேர் உள்ளத்துப் பலகால் —பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல் விறல்வேங் கடவனையே
வாய்திறங்கள் சொல்லும் வகை. 33

பதவுரை :—சிந்தை - என் மனமானது. துழாய் அலங்கல் - திருத்துழாய் மாலைகளை. அணிந்தவன் - அணிந்துள்ள பெருமானுடைய. பேர் - திருநாமங்களை. பல்கால் - பலமுறை. உள்ளத்து - அநுஸந்திப்பதில். துணிந்தது - த்ருடமாக அத்யவஸாயங் கொண்டது; அங்கமும் - எனது உடலும். பல்கால் - பலமுறை. பணிந்தது - வணங்குவதா யிராநின்றது; வாயும் - என் வாக்கும். வேய் பிறங்கு சாரல் - மூங்கில் மிக்கிருக்கும் தாழ் வரையையுடைய. விறல் வேங்கடவனை - மிடுக்குடைய திருவேங்கடமுடையானுடைய. திறங்களே - தன்மைகளையே. பல்கால் - பலமுறை. சொல்லும் வகை - சொல்லுகிற விதத்திலே. துணிந்தது - துணிவு கொண்டதாயிற்று.

கருத்து :— என் மனஸானது திருத்துழாய் மாலைகளை அணிந்த பெருமான் திருநாமங்களைப் பல முறை அநுஸந்திப்பதில் த்ருடமாய் நின்றது. எனது உடல் அப்பெருமான் திருவடிகளில் பணிந்தது. எனது வாக்கும் மூங்கில் மிக்கிருக்கும் தாழ்வரையை யுடைய திருவேங்கடமலையில் எழுந்தருளி யிருக்கிற மிடுக்குடைய பெருமானது தன்மைகளையே எப்போதும் சொல்லிக் கொண்டிரா நின்றது. ஆஹா! எனது பாக்யமே பாக்யம்.

(45) அவதாரிகை :—நித்ய ஸூரிகள் விரும்பும் எம்பெருமா னுடைய திருவடிகளைப் பயிலுமவர்கள் அர்த்தத்தினுடைய லாபா லாபங்களுக்கு ஈடுபட மாட்டார்—என்று அருளிச் செய்கிறார்.

உளதென் றிறுமாவார் உண்டில்லை யென்று
தளர்த லதனருகுஞ் சாரார்—அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று. 45

பதவுரை :—அளவு அரிய வேதத்தான் - அளவிட முடியாதபடி அநந்த மாயுள்ள வேதங்களினால் ப்ரதி பாதிக்கப்படுமவனும். வேங்கடத்தான் - திருமலையிலே வந்து நிற்பவனும். விண்ணோர் - நித்ய ஸூரிகளின். முடி தோயும் - முடிகள் பணியப் பெற்ற. பாதத்தான் - திருவடிகளையுடையவனு மான ஸர்வேச்வரனுடைய. பாதம் - திருவடிகளை. பயின்று - எப்போது மநுஸந்திக்குமவர்கள். உளது என்று - தமக்குச் செல்வமுள்ளதென்று. இறுமாவார் - செருக்குக் கொள்ள மாட்டார்கள். உண்டு - நேற்று இருந்தது. இல்லை - இன்று அழிந்து போயிற்று. என்று - என்று. தளர்தல் - தளர்ச்சி யடையும். அதன் - ஸ்வபாவத்தின். அருகும் - கிட்டவும். சாரார் - செல்ல மாட்டார்கள்.

கருத்து :— அஸங்க்யாகமான ஸகல வேதங்களிலும் பரம் பொரு ளாகப் பிரதி பாதிக்கப் பட்டவனும், அந்த மேன்மை விளங்குமாறு திருவேங்கடமலையிலே நித்ய வாஸம் பண்ணி யிருப்பவனும், அங்கே நித்ய ஸூரிகளும் வந்து அடிபணிய நிற்பவனுமான எம்பெருமா னுடைய திருவடிகளில் பழகுகின்ற பாகவதர்கள், தமக்குச் செல்வ முள்ள தென்று செருக்குக் கொள்ள மாட்டார்கள். இருந்த செல் வம் அழிந்து போனாலும் சிறிதும் தளர்ச்சி யடைய மாட்டார்கள். லாப நஷ்டங்களில் ஒருபடிப்பட்ட சிந்தை நிலைமையை யுடையரா யிருப்பார்.

குறிப்பு :—உண்டில்லை யென்று—நித்ய தரித்ரன் ஸுகமறியான். சில நாள் செல்வம் உண்டாய், அதில்லை யானவாறே "பாவியோம், பண்டு ஸுக மாக ஜீவித்தோம் ; இப்போது இடிபடா நின்றோம்" என்று மிகவும் தளர்ந்து போவார்கள். அப்படிப்பட்ட நிலைமையிலும் தளரமாட்டார்கள் பகவத்பக்தர் கள்—என்று கருத்து.

(46) அவதாரிகை :—ஸ்வாச்ரிதர்களை இப்படிப் பயிலப் பண் ணுகைக்கு இவர்கள் பட்டதன்று அவன் படுவது. திருமலை முத

லான திருப்பதிகளிலே பல நாள் பயின்றான்—என்று அருளிச் செய்கிறார்.

பயின்றது அரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னாள்—பயின்றது
அணிதிகழும் சோலை அணிநீர் மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால். 46

பதவுரை :—மணி - இந்திர நீலமணியோல். திகழும் - விளங்குமவனும். வண் தடக்கை - உதாரமாய் நீண்ட திருக்கைகளையுடையவனுமான. மால் - ஸ்ரீய:பதியான எம்பெருமான். பயின்றது - நித்ய வாஸம் செய்தருளுமிடம். அரங்கம் - திருவரங்கமும். திருக்கோட்டி - திருக்கோட்டி யூருமாம்; பல் நாள் - அநாதி காலம். பயின்றதுவும் - நித்ய வாஸம் செய்யுமிடமும். வேங்கடமே - திருவேங்கட மலையேயாம்; (பல் நாள் பயின்றதுவும்) அணி திகழும் - அழகு விளங்குகின்ற. சோலை - சோலைகளை யுடைத்தாய். அணி - இந்நிலவுலகுக்கு அலங்காரமான. நீர் மலை - திருநீர் மலையாம்.

கருத்து :—நீலமணி போல் விளங்குமவனும், மஹோதாராங்களான திருக்கைகளையுடையவனுமான எம்பெருமான், ஸ்வாச்ரிதர்கள் லாப நஷ்டங்களில் உகப்பும் வெறுப்புங் கொள்ளா திருக்கும்படி, பல திவ்ய தேசங்களில் நித்யஸந்நிதி பண்ணி க்ருபை பண்ணுகிறான். அவைகளில் ப்ரதான மானவை—திருவரங்கமும், திருக்கோட்டியூரும், திருவேங்கடமும், திருநீர் மலையும். இவைகளில் எம்பெருமான் நித்ய வாஸம் செய்து கொண்டு, பாகவதர்களை ஸ்திதப்ரக்ஞருடையவர்களாக ஆக்கி உய்வித்தருளுகிறான்.

(53) அவதாரிகை :—ஆழ்வார் திருவேங்கடமலையை ஒரு சமத்காரம் பொலிய வர்ணிக்கிறார்-

நெறியாற் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியா திளங்கிரியென் றெண்ணிப்—பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்னும்
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு. 53

பதவுரை :—நெறியார் - திருமலை வழியிலேயே ஊன்றி இருப்பவர்களுடைய. குழல் கற்றை - கேசபாசமானது. முன் நின்று - முன்னே யிருந்து. பின் தாழ்ந்து - பின்னே தொங்கிக் கொண்டு இருக்க. அறியாது - அது மநுஷ்ய வ்யக்தி யென்று அறியாமல். இளகிரி - இது ஒரு சிறு மலை.

என்று எண்ணி - என்று எண்ணிக் கொண்டு. பூங்கொடிகள் - பூங்கொடிக ளானவை. பிரியாது - விட்டுப் பிரியாமல். வைகும் - நித்யமாகப் படர்ந் திருக்கும். பொருபுனல் - அலைகளோடு கூடியிருக்கும் ஜல ஸம்ருத்தியுடைய தான. குன்று - என்றும் மலையென்று புகழ் பெற்ற. வேங்கடமே - திருவேங் கடமே. யாம் - நாம். விரும்பும் - ஆசைப்படக் கூடிய. வெற்பு - திருமலை யாம்.

கருத்து :—சில யஹான்கள், திருமலை யேறும் வழியிலே ஆத ரம் வைத்து, திருமலை வழியில் கிடப்பதே நன்று—என்றெண்ணி, அவ்வழியிலே கிடந்து, மூச்சுகூட விடாமல் எம்பெருமானையே த்யா நித்துக் கொண்டு யோக நிலையில் ஆழ்ந்து கிடக்கின்றனர். அப் போது அவர்களுடைய கூந்தல் கற்றையானது முன்னின்று பின் தாழ்ந்து இருந்தது. அவற்றைக் கண்டு பூங்கொடிகள் "இவை சில சிறு மலைகள்" என்றெண்ணி அவற்றின் மேலே படர்கின்றன.

முன்பு, ஸ்ரீவால்மீகி முனிவர் மீது புற்றுக் கிளம்பினப் போலே, இந்தப் பாகவதர்கள் மேலும் பூங்கொடிகள் படர்ந்திருப்பது, வெகு ஆச்சர்யகாமான காட்சியா யமைந்தது.

இப்படி, பாமாச்சர்யகாமாய், பாம போக்யமா யிருந்துள்ள திருவேங்கடமலையே நாம் விரும்பத்தக்க மலையாம்.

(54) அவதாரிகை :—திருமாலிருஞ் சோலை, திருவேங்கடம்— என்னும் மலைகளிலே எம்பெருமான் ஆதாரிசயத்தை வைத்தாப் போலே தம் திருவுள்ளத்திலும் வைத்திருப்பதாக த்ருடாத்யவ ஸாயம் கொண்டு "உனக்குப் பாலாலயமான திருப்பாற் கடலைவிட்டு விட வேண்டாம்" என்று ப்ரார்த்திக்கிறார்.

வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமேன் றிவ்விரண்டும்
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல்—நிற்பென்று
உளங்கோயில் உள்ளம்வைத் துள்ளினேன் வெள்ளத்
திளங்கோயில் கைவிடே லென்று. 54

பதவுரை :—வெற்பு என்ற - தெற்குத் திருமலை யெனப்படுகிற. இருஞ் சோலை - திருமாலிருஞ் சோலையும். வேங்கடம் - வடக்குத் திருமலை யெனப் படும் திருவேங்கடமும். என்ற இவ்விரண்டும் - ஆகிய இத்திருமலைகளிரண் டும். நிற்பு என்று - நாம் உகந்து வாழுமிடமென்று. நீ மதிக்கும் நீர்மை போல் - தேவரீர் திருவுள்ளம் பற்றியிருக்கும் ஸ்வபாவம் போலவே. உளம்

கோயில் - எனது ஹ்ருதயமாகிற கோயிலும். நிற்பு என்று - நீர் உவந்து வாழுமிடமென்று. உள்ளம் வைத்து - ப்ரதிபத்தி பண்ணி. வெள்ளத்து இளம் கோயில் - திருப்பாற் கடலாகிற பாலாலயத்தை. கைவிடேல் - கைவிட வேண்டா. என்று - என்று. உள்ளினேன் - பிரார்த்திக்கின்றேன்.

கருத்து:—பூதேவிக்கு இரண்டு ஸ்தநங்கள் போலே இருக்கின்ற—"திருமாலிருஞ் சோலை, திருவேங்கடம்"—என்னுமிரண்டு திருமலைகளிலும் தேவரீர் செய்யும் விருப்பத்தை என் உளக் கோயிலிலுஞ் செய்கிறாய். ஆஹா! என்ன உனது ஔதார்யமும், ஆச்ரித வாத்ஸல்யமும்? என் பாக்யமே பாக்யம்! என் ஹ்ருதயத்தில் நீ உகந்து வாழுவதற்காக, ஸாதுஜன ஸம்ரக்ஷணைக ப்ரயோஜனங்களான அவதாரங்களுக்கு மூலகந்தமான திருப்பாற்கடலாகிய பாலாலயத்தைக் கைவிட வேண்டாமென்று நான் கெஞ்சி கேட்டுக்கொள்கிறேன்.

(72) அவதாரிகை:—திருமலையில் திவ்ய ஜந்துக்களும் எம்பெருமானுக்குப் பணிவிடை செய்யும் வகையை எடுத்துக் காட்டி, விவேக சூந்யங்களான அவைகளும் கூடப் பணி செய்யும் போது, விவேகமுள்ள நீ உதாஸீனமாயிருக்கலாமா? நீயும் அப்படிச் செய்ய வேணுமென்று, ஆழ்வார் தம் நெஞ்சைக் குறித்து உபதேசிக்கிறார்.

போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போது உள்ளம்!—போது
மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணிவேங் கடவன்பே ராய்ந்து. 72

பதவுரை:—வானரங்கள் - குரங்குகளும் கூட. போது - ஸத்வோத்ரமான உஷ: காலத்தை. அறிந்து - உணர்ந்து. (அந்தச் சிற்றஞ் சிறுகாலே எழுந்து போய்) பூ சுனை - மலர்ந்த புஷ்பங்களோடு கூடிப் பரம ரமணீயமாயிருந்துள்ள நீர் நிலைகளிலே. புக்கு - அவகாஹித்து (புகுந்து நீராடி). ஆங்கு - அப்போதே. அலர்ந்த - மலர்ந்த. போது - புஷ்பங்களை. அரிந்து கொண்டு - பறித்துக் கொண்டு வந்து ஸமர்ப்பித்து. ஏத்தும் - தோத்திரஞ் செய்யா நின்றன. உள்ளம் - என் அன்புள்ள மனமே! போது - நீயும் அப்படிச் செய்யப் போவாயாக. அணிவேங்கடவன் - அழகிய திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் பெருமானுடைய. பேர் - திருநாமங்களை. ஆய்ந்து - அநுஸந்தித்துக் கொண்டு. வேங்கடவன் - திருவேங்கடமுடையானுடைய. மலர் அடிக்கே - திருவடித் தாமரைகட்கே. செல்ல - சென்று சேரும்படியாக. போதும் - புஷ்பங்களையும். அணி - ஸமர்ப்பிக்கக் கடவாய்,

கருத்து :—ஞானாதிகர்களான மஹர்ஷிகள், "பஞ்ச பஞ்ச உஷ : கால"த்திலே துயில்விட் டெழுந்து இறைவனைத் தொழுமாப் போலே, அறிவில்லாத குரங்குகளும் கூட அந்தச் சிற்றஞ் சிறுகாலே துயி லெழுந்து, பூத்த சுனைகளிலே சென்று ஸ்நாநம் பண்ணி, அங் குள்ள ஸத்யோவிகஸிதமான சிறந்த புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு போய்த் திருவேங்கடமுடையானை வணங்கி, துதி செய்து, பணியா நின்றன. ஆகையால், என் நெஞ்சமென்பாய்! நீயும் அப்படியே ஸத்வோத்தரமான உஷ: காலத்திலே துயிலெழுந்து, பூஞ்சுனைகளிலே தீர்த்தமாடி, மாமலர்களை பறித்துக் கொண்டு போய்த் திருவேங்கட முடையானுடைய திவ்ய கல்யாண குணங்களுக்கு ஸூசகங்களான திருநாமங்களை அநுஸந்தித்துக் கொண்டு, நன் மலர்களை அவனது திருவடித் தாமரைகளில் ஸமர்ப்பிப்பாயாக.

குறிப்பு :—இந்தப் பாசுரத்தில் 'போது' என்ற சொல் நான்கிடத்தில் சொல்லப்பட்டது. 1 வது போது - காலம். 2, 4 வது போது - புஷ்பம். 3 வது வினை முற்றாய் 'புறப்படு' என்னும் பொருளது.

(75) அவதாரிகை :—கீழ்ப் பாட்டில் 'பெருந் தமிழன் நல்லேன் பெரிது' என்று ஆழ்வார் போரப் பொலியச் சொல்லிக் கொண்டார். அப்போது அவரைப் பார்த்து எம்பெருமான் 'நீர் நல்ல பெருந் தமிழர்' என்பதை நாடு நகாமும் நன்கறிய ஒரு பாட்டைச் சொல்லும், பார்ப்போம், என்ன—ஆழ்வார் அத்யாச்சர்யகாமான ச்ருங்கார ரஸம் பொருந்திய இப்பாசுரத்தை அருளிச் செய்கிறார்.

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருக ணிளமூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங் கடம்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை. 75

பதவுரை :—பெருகும் - பெருகா நின்ற. மதம் - மத ஜலத்தை யுடைத்தான. வேழம் - யானையானது. மா பிடிக்கு - சிறந்த தன் பேடையின். முன் நின்று - முன்னே நின்று. இரு கண் - இரண்டு கணுக்களை யுடைத்தாய். இள - இளைய தான. மூங்கில் - மூங்கில் குருத்தை. வாங்கி - பிடுங்கி. அருகு இருந்த - (அந்த மூங்கில் குருத்தை) ஸமீபத்திலுள்ள. தேன் - தேனிலே. கலந்து - தோய்த்து. நீட்டும் - (தனது அன்புள்ள பேடைக்கு ப்ரணயரஸம் பெருக) தன் கையை நீட்டிக் கொடுக்கும். திருவேங்கடம் கண்டீர் - இப்படி அத்யாச்சர்யகாமான ஸம்புவங்களோடு

கூடியிருக்கும் திருவேங்கட மலையன்றோ. வான் கலந்த வண்ணன் - மேகத்தோடொத்த நிறத்தனான பெருமானுடைய. வரை - பர்வதம்.

கருத்து :—துல்யசீல வயோ வ்ருத்தையான தனது பேடையின் மீது காதல் மிகுந்து மதஜலம் பெருக, அந்த ப்ரணயாஸ நிர்பரமான சிறந்த மத்தகஜமானது, பேடையின் முன்னே நின்று, அதற்கு இனிய உணவு கொடுத்து, அதனை த்ருப்தி செய்வித்து, போகாஸத்தை அநுபவிக்க விரும்பி, அதற்கு மிகவும் ப்ரீதிகரமான மூங்கில் குருத்தைத் தனது தும்பிக் கையால் பிடுங்கி, ஸமீப ப்ரதேசத்திலிருக்கும் தேனிலே தோய்த்து, அப்பேடையின் வாயிலே யிட்டு, அதற்கு மகிழ்ச்சியை யுண்டாக்கி, தானும் மஹாநந்தத்தை அநுபவியா நின்றது.

இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளுக்கு இருப்பிடமான திருமலையானது—நீலமேக நிறத்தனான எம்பெருமான் உவந்து எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசம்.

குறிப்பு :—1. இந்த மத்த கஜத்தின் வ்ருத்தாந்தத்தினால் எம்பெருமான் பிராட்டியை உவப்பித்து, அவள் எவின கார்யங்களைச் செய்து லோக ஸம்ரக்ஷணம் பண்ணும் வகை ஸூசிதமாயிற்று.

2. "வரைசெய் மாக்களில்" என்ற பாசுரமும் (பெரிய திருமொழி 1-2-5) இப்பொருள் கொண்டதே. அதனையும் இவ்விடத்தில் அநுஸந்தித்து ஒத்துப் பார்க்கலாம்.

ஸ்ரீ பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே மஹாதாஹ்வயயோகினே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ பேயாழ்வார் அருளிச்செய்த மூன்றாம் திருவந்தாதி.

---

அவதாரிகை :—பரபக்தி பரஜ்ஞான பரம பக்திகளை யுடையாராய், அத்தாலே பகவத் ஸாக்ஷாத்காரத்தை யுடையாராய், தத்தேகானுபவ பரராய், தத்தேகதாரகராய், லோக யாத்ரையில் கண் வையாத அலௌகிகராய் வர்த்தித்தார்கள்—முதலாழ்வார்கள். அதில் 'உபய விபூதி யுக்தன்' என்று அநுஸந்தித்தார்—முதலாழ்வார். 'அதற்கு வாசக சப்தம்' 'நாராயண பதம்' என்றார்—நடுவிலாழ்வார். அதற்கு 'ஸ்ரீ' சப்தம் கூட்டிக் கொள்ள வேணும் என்கிறார்—மாட மாமயிலையிலே திருவவதரித்த பேயாழ்வார்.

(14) அவதாரிகை :—இந்திரிய ஜயம் பண்ணி, பகவானை யறிகை யரிதாயிருக்கும். ஆனால், அசக்தரிழக்கு மத்தனையோ? என்னில், இழக்க வேண்டாத வுபாயம் சொல்லுகிறார்.

மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு
நூற்பால் மனம்வைக்க நொய்திதாம்—நாற்பால
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பணிந்து. 14

பதவுரை :—நாற்பால் வேதத்தான் - நான்கு வகைப்பட்ட வேதங்களாலே ப்ரதி பாதிக்கப்படுமவனும். வேங்கடத்தான் - மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் பரம ஸுலபனாய், திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்குமவனும். விண்ணோர் முடி - நித்ய ஸூரிகளின் கிரீடம். தோயும் - உறையும்படியான. பாதத்தான் - திருவடித் தாமரைகளை யுடையவனுமான எம்பெருமானுடைய. பாதம் - திருவடிகளை. பணிந்து - ஆச்ரயித்து. மால்பால் - அந்த எம்பெருமானிடத்திலே. மனம் - நெஞ்சானது. சுழிப்ப - பொருந்துதலினாலே. மங்கையர் - யுவதிகளின். தோள் - தோள்களோடே அணைய வேணுமென்கிற ஆசையை. கை விட்டு - விட்டு விட்டு. நூல்

பால் - வேத சாஸ்திரங்களிலே. மனம் - நெஞ்சை. வைக்க - செலுத்துவதற்கு. நொய்விது ஆம் - எளிதாகும்.

கருத்து :—நான்கு வேதங்களாலும் வர்ணிக்கப்படுகிற பராத்பரனான எம்பெருமான் பரம ஸுலபனாய், பரம போக்யமான திருவேங்கடமலையிலே மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் ஸமாச்ரயணீயனாய் வந்து வீற்றிருக்கிறான். அவன் திருவடிகளை ஆச்ரயித்து அப் பெருமானிடத்திலே நெஞ்சை ஊன்ற வைத்தால், இந்த உலகத்திலே சிற்றின்பங்களாகிய விஷயாந்தரங்களிலே விருப்பம் ஒழிந்து, எம்பெருமான் படிகளை யுணர்த்துகின்ற சாஸ்திரங்களிலே நெஞ்சைச் செலுத்துவதற்கு அநுகூலமாகும்.

(26) அவதாரிகை :—தண் துழாய் மாலைகளை யணிந்துள்ள எம்பெருமான் திருப்பதிகளோடு என்சிந்தையோடு வாசியறத் திருவுள்ள முவந்து வாழ்கின்றான்—என்று அருளிச் செய்கிறார்.

சிறந்தஎன் சிந்தையும் செங்க ணரவும்
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும்—உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாம்கடவார் தண்துழா யார். 26

பதவுரை :—தண் துழாயார் தாம் - குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்த எம்பெருமான். கடவார் - ஒரு நாளும் விட்டு நீங்காதவராய். உறைந்ததுவும் - நித்ய வாஸம் பண்ணும் திவ்ய திருப்பதிகள். சிறந்த - ப்ரக்ருஷ்டமான. என் சிந்தையும் - என்னுடைய நெஞ்சமும். செம் கண் அரவும் - சிவந்த திருக் கண்களையுடைய திருவனந்தாழ்வானும். நிறைந்த சீர் - நிறைந்த செல்வத்தையுடைய. நீள் - பெரிய. கச்சியுள்ளும் - காஞ்சீபுரமும். வேங்கடமும் - திருவேங்கடமும். வெஃகாவும் - திருவெஃகாவும், வேளுக்கைப் பாடியுமே - திருவேளுக்கைத் திருப்பதியுமே யாம்.

கருத்து :—ஆச்ரித ஜன வசகனான தண் துழாயான் ஸ்ரீமந் நாராயணன்—திருமலையிலும், திருவெஃகாவிலும், வேளுக்கைப் பாடியிலும் கடவாரான மாத்ரம் (அங்கெல்லாம் நிர்வாஹகரான மாத்ரம்); அதாவது—அந்தத் திவ்ய தேசங்களைப் பரிபாலித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கிறான் ; என்னுடைய சிந்தையுள்ளும், திருவந்தாழ்வான் மேலும், நிறைந்த சீர் நீள்கச்சி யுள்ளும் ஸாதரமாக நித்ய வாஸம் பண்ணுகிறான் ; விரும்பி மேல் விழுந்து அநுபவித்துக் கொண்டு வீற்றிருக்கிறான்.

அன்றிக்கே, நிறைந்த நீள்கச்சி யுள்ளும், வேங்கடமும், வெஃகாவும், வேளுக்கைப் பாடியும்—ஆகிய இவைகளிலும் உறைந்ததுவும்; சிறந்தவென் சிந்தையும், செங்கணரவும்தான் கடவார்—என்றும் அந்வயம் சொல்லலாம்; திவ்ய தேசங்களிலே உறைந்தது மாத்திரம்; என் நெஞ்சையோ வென்றால், தான், கடவார்—அதிக்ரமியார்.

அங்கனமன்றிக்கே, கடவார்—அபிமானமெல்லாம் இங்கே (என் நெஞ்சிலே); அங்கெல்லாம் (திவ்ய தேசங்களில்) உறைந்தது மாத்திரம்.

குறிப்பு:—1. 'சிறைந்த' என்று தம் சிந்தைக்கு ஆழ்வார் அடைமொழி கொடுத்தது—எம்பெருமான் விரும்பி மேல் விழுவதற்கு உறுப்பானதாகையாலே.

2. வெஃகா—யதோக்தகாரி ஸந்நிதி. வேளுக்கை—'காமாஸிகா' என்று வழங்கப்படும் அழகிய சிங்கப்பெருமாள் கோயில். இவ்விரண்டு ஸந்நிதிகளும் கச்சிமா நகரிலுள்ளன.

3. 'வேளுக்கைப் பாடி' என்றதை இரண்டாகப் பிரித்து, வேளுக்கையும், திருவாய்ப்பாடியும்—என்றும் பொருள் கூறலாம்.

(30) அவதாரிகை:—ஸ்ரீ யசோதைப் பிராட்டி, அவன் ஸந்நிஹிதனாகையாலே ஸ்நேஹித்தாள். இப்போது அவன் நமக்கு ஸந்நிஹிதனன்றோ? என்னில், அவன் ஸந்நிஹிதனான விடங்கள் சொல்லுகிறார்.

சேர்ந்த திருமால் கடல்குடந்தை வேங்கடம்
நேர்ந்தஎன் சிந்தை நிறைவிசும்பு—வாய்ந்த
மறைபா டகம்அனந்தன் வண்துழாய்க் கண்ணி
இறைபாடி யாய இவை. 30

பதவுரை:—கடல் - திருப்பாற்கடலென்ன. குடந்தை - திருக்குடந்தையென்ன. வேங்கடம் - திருமலையென்ன. நேர்ந்த என் சிந்தை - நேர்ப்பட்ட என்து நெஞ்சமென்ன. நிறை விசும்பும் - ஸுவிசாலமான பரமபதமென்ன. வாய்ந்த மறை - அமைந்த வேதமென்ன. பாடகம்—திருப்பாடகமென்ன. அனந்தன் - திருவநந்தாழ்வானென்ன. ஆய இவை - ஆகிய இவையெல்லாம். வண் துழாய் கண்ணி - அழகிய திருத்துழாய் மாலைகளை அணிந்துள்ள. திருமால் - ஸ்ரீமந் நாராயணன். சேர்ந்த - நித்ய வாஸம்பண்ணப் பெற்ற. இறைபாடி - ராஜதானிகளாம்

கருத்து:—திருப்பாற்கடல், திருக்குடந்தை, திருவேங்கடம், நீள் விசும்பு (பரமபதம்), திருப்பாடகம்,—முதலிய திவ்ய தேசங்களோடு நித்ய நிர்துஷ்டமான வேத சாஸ்த்ரங்களோடு, மிகவும் அந்தரங்கனான திருவநந்தாழ்வானோடு வாசியற என் சிந்தையிலும் எம்பெருமான் உகந்து நித்ய வாஸம் பண்ணுகிறான். என்ன அவனது ஸௌசீல்யமும், ஸௌலப்யமும்? என்று வித்தராகிறார்.

குறிப்பு :—1. இறைப்பாடி—ராஜதானி.

2. திருப்பதிகளில் ஸேவை ஸாதிப்பது போலவே, ஆழ்வாருக்கு வேதங்களிலும் எம்பெருமான் ஸேவை ஸாதிக்கிறான்—என்று வேதங்களையும் உடன் கூறினதால் தெரியவருகிறது.

(32) அவதாரிகை :—இப்பாட்டிலும் எம்பெருமான் நித்ய வாஸம் பண்ணும் திருப்பதிகளைச் சொல்லுகிறார்.

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல்—பாற்பட்
டிருந்தார் மனமும் இடமாகக் கொண்டான்
குருந்தொசித்த கோபால கன். 32

பதவுரை :—குருந்து - குருந்த மரத்தை. ஒசித்த - முறித்தொழித்த. கோபாலகன் - கோபால க்ருஷ்ணன். பாற் கடலும் - திருப்பாற் கடலையும். வேங்கடமும் - திருவேங்கடத்தையும். பாம்பும் - திருவனந்தாழ்வானையும். பனி விசும்பும் - குளிர்ந்திருக்கிற பரம பதத்தையும். நூல் கடலும் - கடல் போன்ற சாஸ்த்ரங்களையும். நுண் நூல - ஸூக்ஷ்மமான சாஸ்த்ரங்களால் நிரூபிக்கப்படும். தாமரை மேல் பால் - ஹ்ருதய கமலத்திலே. பட்டிருந்தார் - எல்லாக் காரணங்களையும் ஊன்றி த்யான யோகத்தில் நிலை நின்ற யோகிகளினுடைய. மனமும் - நெஞ்சையும். இடம் ஆக - இருப்பிடமாக. கொண்டான் - கொண்டிருக்கிறான்.

கருத்து :—திருப்பாற்கடல், திருவேங்கடம், திருவனந்தாழ்வான், ஸ்ரீ வைகுண்டம், வேத வேதாந்தங்கள், பரமயோகிகளுடைய ஹ்ருதய கமல கோசம்—ஆகிய இவற்றை, ஸாதுஜன ஸம்ரக்ஷணார்த்தமாக திருவாய்ப்பாடியில் திருவவதரித்து அஸுரப் பூண்டுகளை நிர்மூலமாக்கின கண்ணபிரான், உவந்து வாஸஸ்தானமாகக் கொண்டு வீற்றிருக்கிறான்.

குறிப்பு :—1. பனி விசும்பு—இந்த ஸம்ஸாரத்தில்பட்ட தாபங்களையெல்லாம் ஆற்றிக் குளிரப்பண்ணும் பரமபதம்—என்கை.

2. நூல் கடல்—ஸமுத்ரம் போல் அபாரமாயிருக்கிற ச்ருதி - ஸ்ம்ருதி - இதிஹாஸ - புராணங்கள் — முதலான சாஸ்த்ரங்கள்.

(39) அவதாரிகை :—சேதநா சேதநங்களாகிற ஸமஸ்த பதார்த்தங்களும் தானே யாயிருக்கும் எம்பெருமான், முன்பு ஸ்வாபகசீதலமாய், பரம போக்யமான திருமலையிலே வந்து தங்கி, பின்பு, என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து அதை விட்டுப் போகிறானில்லை—என்று உகந்து பேசுகிறார்.

இறையாய் நிலனாகி எண்திசையும் தானாய்
மறையாய் மறைப்பொருளாய் வானாய்ப்—பிறைவாய்ந்த
வெள்ளத் தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தி னுள்ளே உளன். 39

பதவுரை :—இறையாய் - ஸர்வ ஸ்வாமியாய். நிலன் ஆகி - ப்ருதிவீ முதலான வஸ்துக்களுக்கு அந்தர்யாமியாய். எண் திசையும் - எட்டுத் திக்குகளையும், எட்டுத் திக்குக்களிலுமுண்டான ஸகல பதார்த்தங்களையும். தானே யாய் - தனக்குச் சரீரங்களாகவுடையவனுமாய். மறை ஆய் - வேதங்களுக்கு நிர்வாஹகனாய். மறைப் பொருளாய் - அந்த நிகில வேதங்களின் பொருளாயிருப்பவனாய். வான் ஆய் - நித்ய விபூதி நிர்வாஹகனாய். பிறை வாய்ந்த - சந்திர பதத்தைக் கிட்டியிருப்பதும். வெள்ளம் அருவி - வெள்ளமிடா நின்ற ஜலத்தோடு கூடிய அருவிகளினுடைய. விளங்கு ஒலி - விளங்குகின்ற கோஷத்தையுடைத்தான. நீர் - நீரையுடையதுமான. வேங்கடத்தான். திருவேங்கடமலையில் வாழ்பவனுமான எம்பெருமான். உள்ளத்தின் உள்ளே - என் நெஞ்சினுள்ளே. உளன் - இருக்கின்றான்.

கருத்து :—ஸர்வ ஸ்வாமியாய், உபய விபூதி யுக்தனாய், பூமியும், எட்டுத் திக்குக்களும், வேதங்களும் தானிட்ட வழக்காயிருக்கப்பெற்றவனும், வேத வேதாந்த ப்ரதி பாத்யனானவனுமான எம்பெருமான், முதலிலே சந்த்ரபதத்தைக் கிட்டின வெள்ளத்தோடு கூடிய அருவிகளுடைய பெரும் சப்தத்தோடு கூடி, பரம சீதல ஸ்வாபகமாயிருந்துள்ளத் திருவேங்கடமலையில் எழுந்தருளி யிருந்து, ஸம்ஸார தாபங்களால் கொதித்துக் கிடக்கிற என் நெஞ்சினுள்ளே நித்ய வாஸம் பண்ணுகிறான். ஆஹா! எனது பாக்யமே பாக்யம்.

குறிப்பு :—1. "பிறை வாய்ந்த"—இது வேங்கடத்திற்கு விசேஷணம்; சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கும் கொடு முடிகளையுடைய வேங்கடமென்றும் பொருள். அன்றிக்கே, அருவி வெள்ளத்திற்கு விசேஷணமாகவுமாம்.

2. "மலைமேல் தான்நின்று என்மனத் துள்ளிருந்தானை" என்ற திருவாய் மொழியையுங் காண்க.

(40) அவதாரிகை :—ஸர்வாதிகனான எம்பெருமான் ஆசை யோடு நம்மிடத்து வந்து புகுந்த பின்பு, நமக்கு ஒரு குறையுமில்லை காண்—என்று தமது திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்கிறார்.

உளன்கண்டாய் நல்நெஞ்சே! உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்து—உளன்கண்டாய்
விண்ணொடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்த மன். 40

பதவுரை :—நல் நெஞ்சே - எனக்குப் பாங்கான மனமே! விண் ஒடுங்க - மேலுள்ள உலகங்களெல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும்படி. கோடு - சிகரங்கள். உயரும் - உயர்ந்து ஓங்கி யிருக்குமதும். வீங்கு - புண்ய தீர்த் தங்களோடு ஸம்ருத்தமான. அருவி - அருவிகளை யுடையதுமான. வேங்க டத்தான் - திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருப்பவனும். மண் - பூமிப் பரப்பெல்லாம். ஒடுங்க - ஒரு பாகத்திலே ஒடுங்கிப் போம்படி. தான அளந்த - தன் திருவடிகளாலே அளந்து. மன் - ஸர்வ ஸ்வாமி யானவன். உளன் கண்டாய் - நம்மை ஸம்ரக்ஷிப்பதனாலே தான் ஸத்தையைப் பெற்று இருக்கிறான். உத்தமன் - புருஷோத்தமனான அப்பெருமான். என்றும் - எக்காலத்திலும். உளன் கண்டாய் - (நம்மை ரக்ஷிப்பதே தீக்ஷையாகக் கொண்டு) இருக்கிறான் காண். உள்ளுவார் - ஆஸ்திகர்களுடைய. உள் ளத்து - திருவுள்ளத்திலே. உளன் கண்டாய் - நித்ய வாஸம் பண்ணுகிறான் காண்.

கருத்து :—எனக்குப் பாங்கான எனது அன்பார்ந்த மனமே! நமக்கு ஒரு குறையும் இல்லை காண். நம்முடைய ஸத்தையை நோக்கு வதற்காகவே, தான் ஸத்தையை பெற்றிருக்கிறான். "எம்பெருமான் உளன்" என்று நாம் இசைந்தாலும் இசையாவிட்டாலும், எப்போ தும் நம்முடைய ரக்ஷணத்திலே முயன்று உளனாயிருக்கிறான், தன்னை த்யானிப்பவர்கள் நெஞ்சிலே படுகாடு கிடக்கின்றான். முன்பு மாயா வாமனனாய், மாவலியை யாசித்து ஓங்கி வளர்ந்து, உலகங்களையெல் லாம் தன் திருவடியின் ஒரு பாகத்திலே ஒடுங்கிப் போம்படி, தன் திருவடிகளை நீட்டி எல்லோருக்கும் தனது திருவடி ஸ்பர்சமுண்டா கும்படி அனுக்ரஹித்து, ஸர்வ ஸ்வாமியான புருஷோத்தமன்—நம்மை ரக்ஷிப்பதற்காகவே, மேலுலகங்களெல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும்படி

சிகரங்கள் உயர்ந்து ஓங்கி யிருக்கப் பெற்றதும், நிறைந்த அருவிகளை யுடையதுமான திருமலையில் நித்ய ஸந்நிஹிதனாய் எழுந்தருளி யிருக்கிறான்.

(45) அவதாரிகை :—பரம போக்யமான பரம பதத்தில் வீற்றிருக்கக் கடவனான எம்பெருமான் நமக்கு ஸுலபனோ வென்னில்; அவன் நம் போன்றவர்களுக்கும் ஆச்ரயிக்க எளியனாய்த் திருமலையிலே வந்து நித்ய ஸந்நிதி பண்ணியிரா நின்றான்—என்று அருளிச் செய்கிறார்:

புரிந்து மதவேழம் மாப்பிடியோடு ஊடித்
திரிந்து சினத்தால் பொருது—விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே மேலொருநாள்
மண்கோட்டுக் கொண்டான் மலை. 45

பதவுரை :—மதம் வேழம் - மதம் பிடித்த யானையானது. மா பிடியோடு - சிறந்த தன் பேடையோடு. புரிந்து - கலவி செய்து. ஊடி - பிரணய கலஹம் பண்ணி. திரிந்து - (பேடையைத் துறந்து) இங்கு மங்கும் ஸஞ்சரித்து. (மணிப் பாறைகளிலே ப்ரதி பிம்பித்திருக்கும் தனது உருவத்துடன்) சினத்தால் - கோபத்தினால். பொருது - யுத்தத்தைச் செய்வதற்காகத் தனது தந்தங்களோடு அந்தப் பாறைகளிலே குத்தி. வெண் கோடு - வெளுத்த கொம்புகளினின்று. விரிந்த சீர் முத்து - சிறந்த முத்துக்களை. உதிர்க்கும் - உதிரச் செய்யுமிடமான. வேங்கடமே - திருவேங்கட மலையே. மேல் ஒரு நாள் - முன்னொரு நாளில். (மஹா வராஹரூபியா யவதரித்து). மண் - பூமியை. கோடு - தனது கோரப் பல்லின்மீது. கொண்டான் - எடுத்துக் கொண்டு வந்த பெருமானுடைய. மலை - திருமலையாம்.

கருத்து :—மத்தகஜ மானது தனது பேடையுடனே கலந்திருந்த போது ப்ரணய கலஹம் உண்டாயிற்று. அதனால் அந்த யானை பேடையை விட்டு விட்டுக் கோபத்தினால் இங்கும் மங்கும் திரிந்தது. அப்போது மணிப் பாறைகளிலே அதனுருவம் தோன்றிற்று. அதைக் கண்டு அது வேறொரு யானையென்று ப்ரமித்து, அத் தோடு யுத்தத்தைச் செய்வதற்காகத் தந்தங்களை அந்த மணிப்பாறைகளிலே யிட்டுக் குத்துகின்றது. அப்போது அத் தந்தத்தினின்று வெண் முத்துக்கள் உதிர்கின்றன. இப்படி இருக்கும் திருமலைதான் முன்பு வராஹாவதாரம் செய்தருளின பெருமானுடைய இருப்பிடம்.

(58) அவதாரிகை :—திருச் சித்திர கூடத்தில் ஸ்ரீ சீதா பிராட்டியார் பெருமாளுடன் கூடி லீலா ரஸத்தை யநுபவித்தது போல் திருமலையில் குரங்குகளும் அநுபவித்து நின்றன—என்றும், திருமலையின் சிகரங்கள் சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்றனவென்று மதிசயோக்தி தோன்றவும் வர்ணிக்கிறார்.

தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி—விளங்கிய
வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே மேலொருநாள்
மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு. 58

பதவுரை :—தெளிந்த ஸ்வச்சமாயிருக்கிற. சிலாதலத்தின் மேல் - ஸ்படிக சிலாதலத்தின்மீது. இருந்த - உட்கார்ந்திருக்கும். மந்தி - பெண் குரங்கானது. அளிந்த - தன் பக்கலிலே ஸ்நேஹமுள்ள. கடுவனை - ஆண் குரங்கை. நோக்கி - பார்த்து. விளங்கிய - ப்ரகாசிக்கின்ற. வெண் மதியம் - வெளுத்த சந்திரனை. தா - பிடித்துக் கொண்டு வந்து எனக்குக் கொடு. என்னும் - என்று சொல்லும்படி யிருக்கிற. வேங்கடம் - திருவேங்கடமானது. மேல் ஒரு நாள் - முன்னொரு காலத்தில். மண் - பூமியை. மதியின் - தனது புத்தி சாதுர்யத்தினால். கொண்டு - மாவலியிடத்தில் பெற்றுக் கொண்டு. உகந்தான் - திருவுள்ள முவந்த எம்பெருமான். வாழ்வு - நித்ய சந்நிதி பண்ணுமிடம்.

கருத்து :—திருமலையில் ஒரு நிலா நாளில் ராத்திரி ஸமயத்தில் மிகவும் ஸ்வச்சமான ஸ்படிக சிலாதலத்தின்மீது ஒருபெண் குரங்கு உட்கார்ந்து கொண்டிருந்தது. அதனருகில் ஆண் குரங்கும் பேடையின் அபேக்ஷிதத்தைத் தீர்க்கவேணு மென்று ஆசைப் பட்டுக் கொண்டுப் ப்ரணய ரஸம் ஒழுகும்படி நேசித்து இரா நின்றது. அப்போது அதற்கு ஸமீபத்தில் சந்திரன் சென்றான். அவனைக் கண்டு ஆசைப்பட்டு "அந்த பூர்ண சந்திரனைப் பறித்துத் தா" என்று தனது கடுவனை நோக்கிப் பெண்குரங்கு சொல்லிற்று. இப்படி அத்யாச்சர்யகரமான ஸம்பவங்களோடு கூடி யிருக்கும் திருமலை தான்—பண்டொரு காலத்தில் மாவலியினிடமிருந்து பூமியைத் தனது புத்தி சாதுர்யத்தினால் பெற்றுக் கொண்டு திருவுள்ள முவந்துவந்த ஸர்வேச்வரன் நித்ய வாஸம் செய்யுமிடம்.

குறிப்பு :—1. மந்தி - பெண் குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு.

2. மண் மதியில் கொண்டு—பரம தானசீலனான மாவலியிடத்தில் யாசகம் தவிர வேறு உபாயம் இல்லை—என்று தீர்மானித்துச் சென்றது—புத்தி சாதுர்யமிறே.

(61) அவதாரிகை :—எம்பெருமான் ஆச்ரிதர்களுடைய இடைஞ்சல்களைப் போக்குவது மாத்ரமல்ல; அவர்களுக்காகவே இந்த நிலத்தில் திவ்ய தேசங்களில் எழுந்தருளி யிருக்கிறான். அன்றியே, என்னுடைய நெஞ்சகம் எம்பெருமானுக்குக் கிடைப்பதற்கு முன்பு தான், அவன் திருப்பதிகளை ஆதரித்தான். இப்போது அவைகளை எட்டிக் கூடப் பார்ப்பதில்லை என்று உகந்து பேசுகிறார்.

பண்டேல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல்—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் தன்விண் ணகர். 61

பதவுரை :—வைகுந்தம் - ஸ்ரீ வைகுண்டத்தை. கொண்டு - இருப்பிடமாகக் கொண்டு. அங்கு - அவ்விடத்திலே. உறைவார்க்கு - வாஸம் பண்ணும் பெருமானுக்கு. பாற் கடல் - திருப்பாற் கடலும். வேங்கடம் - திருவேங்கடமும். வண்டு வளம் - வண்டுகளின் ஸமூஹமானது. கிளரும் - மிகுந்திருக்கிற. நீள் சோலை - பரந்த சோலைகளை யுடைத்துதாய். வண் - அழகியதாய். பூ - போக்யமான. கடிகை - திருக்கடிகாசலமும். இளம் குமரன் தன் - நித்ய யுவாவான அவனுடைய. விண்ணகர் - திருவிண்ணகரமும். பண்டு எல்லாம் - என் நெஞ்சகம் கிடைப்பதற்கு முன் காலத்தில். கோயில் போல் - கோயில்களாக இருந்தன போலும்.

கருத்து :—இப்பாட்டுக்கு இரண்டு விதமாகப் பொருள் கூறலாம். (1) வேங்கடம், பாற்கடல், வைகுந்தம்—இவை யெல்லாம் முன் காலத்தில் எம்பெருமானுக்குக் கோயில்களாக இருந்தன. இப்போது இளம் குமரன் தனக்குக் கோயிலாக—வண்டு வளங்கிளரும் நீள் சோலையான அழகிய திருக்கடிகைக் குன்று—இருக்கிறது. திருவேங்கடம்—பரமபதம் போல் நித்ய ஸூரிகளுக்கு அநுபவ யோக்யமாயிருக்கிறது. இப்போது இந்த பூலோகவாசி ஜனங்களுக்கு அநுபவ யோக்யமாயிருக்கும் கோயில்—பரம போக்யமான கடிகாசலம்—என்று பாமார்த்தம்.

(2) அங்ஙனமன்றிக்கே, எம்பெருமான் திருப்பதிகளில் வஸித்திருந்தது முன் காலத்தில். இப்போது அவன் விரும்பி எழுந்தருளி

யிருப்பதற்குப் பாங்காக என்னுடைய நெஞ்சகம் நித்ய வாசஸ்தான மாகக் கிடைத்து விட்டது; ஆகையால் இப்போது அவைகளை அநாதரித்து அவைகளில் பண்ணும் விருப்பத்தையெல்லாம் என் நெஞ்சிலே வைத்துத் தங்கியிருக்கிறான்—என்று பொருள்.

(62) அவதாரிகை :—எம்பெருமான் ஸம்ஸாரத்தில் நிற்பது மாத்திர மல்ல. பரம பதத்தைக் காட்டிலும் அதிகமான ஆதரத்தை உகந்தருளின தேசங்களான திருப்பதிகளிலே வைத்து நித்ய வாஸம் பண்ணுகிறான்—என்று அருளிச் செய்கிறார்.

விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை—மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு. 62

பதவுரை :—விண்ணகரம் - திருவிண்ணகரமும். வெஃகா - திருவெஃகாவும். விரி திரை நீர் - விரிந்து அலையேறுகிற நீர் வளங்களோடு பொருந்திய. வேங்கடம் - திருவேங்கட மலையும். மண் நகரம் - பூலோக வைகுண்டமான. மா மாடம் - மஹோந்நதங்களான மாட மாளிகைகளோடு கூடியிருக்கும். வேளுக்கை - திருவேளுக்கையும். மண் அகத்த - பூலோகத்தில் ச்லாக்யமான. தென் குடந்தை - அழகு பொருந்திய திருக்குடந்தையும். தேன் ஆர் - தேன் வெள்ளமிடுகின்ற பூஞ்சோலைகளோடு கூடியிருக்கும். திருவரங்கம் - திருவரங்க மா நகரமும். தென் கோட்டி - தென் திக்குகளுள்ள திருக்கோட்டியூரும் (அழகிய இந்தத் திருப்பதிகள்). தன் குடங்கை - தனது உள்ளங் கையாலே. நீர் - (மாவலி பக்கல்) தாந ஜலத்தை. ஏற்றான் - பெற்ற எம்பெருமான். தாழ்வு - தங்குமிடங்களாம்.

கருத்து :—“ உப்பிலியப்பன் ஸந்நிதி ” என்னும் திருவிண்ணகரமும், “யதோக்தகாரி ஸந்நிதி” என்னும் திருவெஃகாவும், திருவேங்கடமும், “ ஆளழகிய சிங்கர் ஸந்நிதி ” என்னும் கச்சித்திரு வேளுக்கையும், திருக்குடந்தையும், திருவரங்கம் பெரிய கோயிலும்—ஆகிய இத் திருப்பதிக ளெல்லாம்—எம்பெருமான் பரம ப்ரீதியோடு நித்ய வாஸம் செய்யும் திவ்ய தேசங்கள்.

குறிப்பு :— தாழ்வு - தாழ்ச்சி தோற்ற இருக்குமிடங்கள்.

(63) அவதாரிகை :—ஆழ்வாருக்கு எம்பெருமான் ஆச்சர்யகாமான தனது ஹரிஹர ஸ்வரூபத்தை ஸேவை ஸாதித்தான். அதை ஸாக்ஷாத் கரித்து இனியராய், இந்தப் பாசுரத்தில் வர்ணிக்கிறார்.

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றாய் இசைந்து. 63

பதவுரை :—தாழ் சடையும் - தாழக் கட்டின ஜடாஜூடமும். நீள் முடியும் - நீண்ட திவ்ய கிரீடமும். ஒண் மழுவும் - அழகியதான "மழுவு" என்ற ஆயுதமும். சக்கரமும் - திருவாழி யாழ்வானும். சூழ் அரவும் - சுற்றி அணிந்துள்ள நாகாபரணமும். பொன் நாணும் - ஸ்வர்ண மய மான அரைநாணும் (முதலான ஹரிஹர ஸ்வரூபங்களுக்கு அஸாதாரணங்க ளான சிஹ்னங்களை தரித்து). இரண்டு உருவும்-(ஒன்றுக்கொன்று சேராச் சேர்த்தியாயிருக்கிற) இரண்டு வடிவும், சூழும் - நாற்புறமும். திரண்டு - திரள் திரளாக ப்ரவஹிக்கும். அருவி - அருவிகள். பாயும் - பெருகப் பெற்ற. திருமலைமேல் - திருவேங்கட மலைமேல் எழுந்தருளியிருக்கும். எந்தைக்கு - நம் அப்பனுக்கு. ஒன்று ஆம் - ஒரு வடிவுமாய், இசைந்து - அமைந்து. தோன்றும் - விளங்கா நின்றது. ஆல் - ஆச்சர்யம்.

கருத்து :—" ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ர: " என்று ச்ருதி வர்ணிக்கும்படியே ஸகல சராசராத்மகமான ப்ரபஞ்சமெல்லாம் எம்பெருமானுக்குச் சரீரமானாப்போலே, ப்ரஹ்ம ருத்ர மஹேந்த்ராதி களும், அவனுக்குச் சரீர பூதர்களாகையாலே அவன் திருமேனியில் எல்லா வடிவுமிருக்கின்றன. உபாஸகாநுக்ரஹார்த்தமாக அவ்வோரவர் களின் ஆசையை அநுஸரித்து, அந்தந்த ஸ்வரூபங்களை ஸர்வ ஸ்வாமி யான எம்பெருமான் ஸாக்ஷாத்கரிப்பான். இப்பொழுது இவ்வாழ் வாரின் குதூஹல முணர்ந்து, தனது ஹரிஹர ஸ்வரூபத்தைக் காட்டி ஆழ்வாரை ஸந்தோஷப்படுத்துவதாகத் திருவுள்ளம்பற்றி, திருவேங் கடமுடையான் விலக்ஷணமாக ஸேவை ஸாதித்தான். அதி விலக்ஷண ஸ்வரூபத்தைக் கண்ணாரக் கண்டு ஹர்ஷபுலகீக்ருத காத்ரராய் மகிழ்ந்து அந்த ஸ்வரூபத்தை அபிவர்ணிக்கிறார்.

ஹரனுக்கு அஸாதாரண சிஹ்னங்களான—தாழ் சடை, ஒண் மழுவு, சூழ் அரவு முதலானவைகளையும், ஹரி ஸ்வரூபத்திற்கு அஸாதாரண ரூபங்களான நீள்முடி, திருச்சக்கரம், பொன்நாண்— முதலானவைகளையும் தரித்துக் கொண்டு ஒன்றுக் கொன்று சேராச் சேர்த்தியா யிருக்கிற இரண்டு வடிவும், என் திருமலை யப்பனுக்கு ஒரு வடிவாய், மிகவும் அழகாய் அமைந்து விளங்கா நின்றதே ! ஆஹா ! என்ன ஆச்சரியம் ! என்ன ஆச்சரியம் !

(68) அவதாரிகை :—*திருமலையில் இருக்கும் ஆச்சர்யகரமான ஒரு ஸம்பவத்தை அபிவர்ணிக்கிறார்.*

பார்த்த கடுவன் சுனைநீர் நிழல்கண்டு
பேர்த்தோர் கடுவ னெனப்பேர்ந்து—கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே மேல்நாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு. 68

பதவுரை :—*சுனை நீர் - தெளிந்த சுனையின் நீரிலே. பார்த்த - கவிந்து பார்த்த. கடுவன் - ஆண் குரங்கானது. நிழல் - நீரினுள்ளே பிரதி பலிக்கின்ற தன் நிழலைக் கண்டு. பேர்த்து ஓர் கடுவன் என - தனக்கு எதிரியான வேறொரு குரங்கு என்று ப்ரமித்து. பேர்ந்து - அவ்விடம் விட்டு நீங்கி. கார்தத - கரியத்த. களங்கனிக்கு - களாப் பழத்திற்கு. கை நீட்டும் - கையை நீட்டும். வேங்கடமே - திருவேங்கட மலைதான். மேல் நாள் - முன்னொரு நாள். விளகனிக்கு - அஸுராவேசம் கொண்ட விளாம்பழத்தின்மீது. கன்று - வத்ஸாஸுரனை (எறி அணிலாகக் கொண்டு). எறிந்தான் - வீசி யெறிந்த பெருமானுடைய. வெற்பு - திருமலை.*

கருத்து :—*ஒரு தெளிந்த சுனையின் கரையிலே களாச் செடிகளில் களாப் பழங்களைப் பறித்துத் தின்னத் தொடங்கின குரங்கானது அச்சுனை நீரை எட்டிப் பார்த்தவாறே, அதில் தன் உருவம் ப்ரதி பிம்பித்தது. அதைக் கண்டு அங்கே வேறொரு குரங்கு இருப்பதாகவும் அது களாப் பழங்களைப் பறிப்பதாகவும் ப்ரமித்து, "எனக்கும் கொஞ்சம் களாப் பழங்களைப் பறித்துத் தா" என்று கையை நீட்டிக் கேட்கின்றது, இப்படி அத்யாச்சர்ய கரமான ஸம்பவங்களோடு கூடி, மிகவும் ஸ்ப்ருஹணீயமாயிருக்கும் திருமலை தான்—முன்னொரு காலத்தில் வத்ஸாசுரனைக் கொண்டு கபித்தாஸுரன்மீது வீசி எறிந்து இரண்டு பேரையும் ஒரு நொடியில் முடித்த ஸ்ரீ கண்ணபிரான் திருவுள்ளமுவந்து வாழும் திவ்ய தேசம்.*

குறிப்பு :—*திருமலையிலிருக்கும் ஸகல ஜந்துக்களும் உபாதேயமாயிருக்கையாலே பகவத்குண சேஷ்டிதங்களை அநுபவிக்கப் புகுந்த ஆழ்வார் - அங்குள்ள வாநரங்களின் சேஷ்டிதங்களையும் உவந்து வர்ணித்து ஆநந்தத்தை அநுபவிக்கிறார்.*

(69) *அவதாரிகை :—பகவத் குணாநுபவரஸம் உன் மஸ்தக மானவாறே கரை புரண்டு பெருக ஆழ்வார், தாமான தன்மையை விட்டு, ஒரு பிராட்டிமாருடைய தன்மையை அடைந்து, எம்பெரு*

மானுடையப் பிரிவை பொறுக்க முடியாமல் கஷ்டப்பட்டார்—அந்த நாயகியினுடைய அவஸ்தையை அவளுடைய திருத்தாயார் சொல்லுவதாக அருளிச்செய்கிறார்.

அங்ஙு நன்றிக்கே, லோகத்தாருக்கு "நீங்கள் எதைச் செய்தா லும், எம்பெருமான் ஸம்பந்தமுண்டாகும்படி செய்யுங்கள்; அவ் வழியிலேயே நற்பேறு பெறலாம்."—என்று உபதேசிக்கிறார்.

வெற்பென்று வேங்கடம் பாடும் வியன்துழாய்
கற்பென்று சூடும் கருங்குழல்மேல்—மல்பொன்ற
நீண்டதோள் மால்கிடந்த நீள்கடல்நீ ராடுவான்
பூண்டநா ளெல்லாம் புகும். 69

பதவுரை :—(என் மகள்) வெற்பு என்று - 'மலை' என்று ப்ரஸக்தியுண்டானால். வேங்கடம் - திருவேங்கட மலையைப்பற்றி. பாடும் - பாடுகின்றாள். கற்பு என்று - தகுந்திருக்கிறதென்று. வியன் துழாய் - விலக்ஷணமான திருத் துழாயை. கரு குழல்மேல் - தனது கரிய கூந்தலில். சூடும் - சூட்டிக் கொள்ளுகிறாள். மல் - மல்லர்களை. பொன்ற - பொடிபடுத்தின. நீண்ட தோள் - நீண்ட திருத்தோள்களையுடைய. மால் - ஸர்வேச்வரன். கிடந்த - பள்ளி கொண்டிருக்கும், நீள் கடல் - பரந்த திருப்பாற் கடலிலே. நீராடுவான் - தீர்த்தமாடுவதற்காக. பூண்ட நாள் எல்லாம் - விடிந்த விடிவுகள் தோறும். புகும் - புறப்படுகின்றாள்.

கருத்து :—என் மகள் ஏதேனுமொரு மலையைச் சொல்லப் புகுந்து திருவேங்கட மலையைப் பாடுகின்றாள். பரம விலக்ஷண மான திருத்துழாய் மலரைச் சூடிக் கொள்வதே தனது கற்புக்குத் தகுந்ததென்று, தன் குழல்மேல் அதனைச் சூடிக் கொள்ளுகின்றாள். மல்லவதம் செய்தருளின ஸ்ரீ கண்ணபிரான் திருக்கண் வளர்ந்தருளும் திருப்பாற் கடலில் தீர்த்த மாடுவதே தகுதி என்று அங்கேறப் புறப்படுகின்றாள்.

ஸ்ரீ நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார்—முதலானோருடைய பாசுரங்களில் இந்த மாதிரியான அந்யாபதேசமுண்டே யொழிய, முதலாழ்வார்களின் பாசுரங்களில் காண்கிறதில்லை—ஆகையால் இவ் வர்த்தம் சரியில்லையென்றால்;—வேறு யோஜனையும் சொல்லலாம். "பாடும், சூடும், புகும்" என்ற வினை முற்றுக்களை முன்னிலையில் வந்தவையாகக் கொண்டு—"ஓ உலகங்களே! நீங்கள் எதாவதொரு மலையைப் பாடவேண்டில், திருவேங்கடமலையைப்பாடுங்கள்; ஏதேனு

மொரு மலரைக் குழலில் சூடவேண்டில், திருத்துழாய் மலரைச் சூடிக்கொள்ளுங்கள். நீராடவேண்டில் திருப்பாற்கடலிலே சென்று தீர்த்தமாடுங்கள்—என்று பொருள் சொல்லக்கூடும்.

(70) அவதாரிகை :—யானைகளும் திருமலையப்பனை ஆராதிக்கும் க்ரமத்தைச் சமத்காரமாக வர்ணிக்கிறார்.

புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக் கையால்—மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்டு விறல்வேங் கடவனையே
கண்டு வணங்கும் களிறு. 70

பதவுரை :—களிறு - மதித்த யானையானது. புகு மதத்தால் - சிரோபாகத்தில் நின்றும், கண்ட ஸ்தலங்களில் நின்றும் பெருகும் மத ஜலத்தாலே. வாய் பூசி - வாயைக் கொப்பளித்து (ஆசமனம் பண்ணி) கீழ் தாழ்ந்து - மேலிருந்து கீழ் ப்ரவஹிக்கும். அருவி உகு - அருவிபோலே வந்து பெருகுகின்ற. மதத்தால் - மத ஜலத்தால், கால் கழுவி - கால்களைக் கழுவிக் கொண்டு (பாத ப்ரக்ஷாளனம் செய்து கொண்டு). கையால் - துதிக்கையாலே. மிகு மதம் - மிகுந்த மதத்தை யுண்டுபண்ணக் கூடிய. தேன் - தேனையுடையதும். விண்ட - மலர்ந்ததுமான. மலர் - தாமரைப் புஷ்பத்தை. கொண்டு - (பக்தியோடு) பறித்துக் கொண்டு. விறல் - பெருமிடுக்கனான. வேங்கடவனையே - திருமலை யப்பனையே. கண்டு - ஸேவித்து. வணங்கும் - தெண்டம் ஸமர்ப்பிக்கின்றது.

கருத்து :—திருமலையிலே மத்த கஜமானது, கன்னங்களிலிருந்து பெருகுகின்ற மத ஜலத்தினால் வாயைக் கொப்பளித்து, ஆசமனம் பண்ணி, அருவிபோல் காலளவும் பெருகுகின்ற மத ஜலத்தினால் காலைக் கழுவிக் கொண்டு, பரிசுத்தமாய், தனது தும்பிக்கை நுனியினாலே மகரந்த நிர்பரமான தாமரைப் புஷ்பத்தைப் பறித்துக் கொண்டு போய், பக்தி ச்ரத்தைகளுடன் பரம போக்யனான திருவேங்கடமுடையானை ஸேவித்து, அவன் திருவடித் தாமரைகளில் மலரை ஸமர்ப்பித்து வணங்குகின்றது.

குறிப்பு :—1. திருமலையில் திர்யக் ஜந்துக்களும் ஸதாசாரபரங்களாய்ப் பகவானை ஸேவித்துக் கொண்டிருக்கின்றன என்று சூசிதமாயிற்று.

2. மதித்த யானைக்கு கும்பஸ்தலத்தில் நின்றும், கன்னங்களில் நின்றும் பெருகும் மதஜலம் அதின் வாயில் விழும்; கால்களில் வெள்ளமிடும். இந்த ஸ்வபாவஸித்தமான கார்யத்தை ஆழ்வார் தம் அத்யவஸாயத்துக்கு அநுகுணமாக வர்ணிக்கிறார்.

(71) அவதாரிகை :—*திருமலையில் ஆச்சர்யகாமான ஒரு நிகழ்ச்சியை வர்ணிக்கிருர்.*

களிறு முகில்குத்தக் கையெடுத் தோடி
ஒளிறு மருப்பொசிகை யாளி—பிளிறி
விழக்கொன்று நின்றதிரும் வேங்கடமே மேல்நாள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று. 71

பதவுரை :—*களிறு - யானையானது. கை எடுத்து - தனது துதிக் கையை எடுத்துக் கொண்டு. ஓடி - வேகமாக வோடி. முகில் - (மத யானை போலெழுந்த) மேகங்களை. குத்த - வேருெரு யானையென்று நினைத்துக் குத்த. யாளி - இதைக் கண்ட யாளியானது. ஒளிறு - (யானையினுடைய) விளங்குகின்ற. மருப்பு - கொம்பை, ஒசி - முறிக்கிற. கை - கையை யுடைத்ததாய்க் கொண்டு. பிளிறி - அந்த யானை வாய்விட்டலறிக் கொண்டு விழும்படி. கொன்று - அதனைக் கொன்று. நின்று - அங்கேயே நின்று கொண்டு. அதிரும் - பெரு முழக்கம் செய்யப் பெற்ற. வேங்கடமே - திருவேங்கடமே. மேல் நாள் - முன்பொரு காலத்தில். குழ கன்று - இளங் கன்றை. கொண்டு - எறி குணிலாகக் கொண்டு. எறிந்தான் - விளங்கனி மீது எறிந்த பிரானுடைய. குன்று - திருமலையாம்.*

கருத்து :—*திருமலையிலுள்ள யானையானது, மலை முகட்டில் படிந்திருந்த மேகத்தை எதிரியானதொரு யானையென்று மயங்கி, பெரிய வேகத்தோடே சென்று துதிக்கையினுல் குத்த, இதனை ஒரு யாளி கண்டு "இதுககு இவ்வளவு மதமா ?" என்று சினந்து, ஓடி வந்து, அந்த யானையின்மேல் பாய்ந்து, அதன் கொம்பை முறித்து எறிந்து, அது வாய்விட்டு அலறிக் கொண்டு விழும்படியாகக் கொலை யுஞ் செய்து, அவ்வளவிலும் சீற்றம் தணியாமையாலே, அவ்விடத்திலேயே நின்று, மற்றுள்ள ஜந்துக்களும் மண்ணுண்ணும் படியாகக் கர்ஜித்தது.*

(72) அவதாரிகை :—*திருவேங்கடமலையில் மூங்கில்கள் சந்திர மண்டலத்தளவும் ஓங்கி வளருகின்றன—என்பதை ஒரு அதிசயோக்தியினுல் வர்ணிக்கிருர்.*

குன்ருேன்றி ஞய குறமகளிர் கோல்வளைக்கை
சென்று விளையாடும் தீங்கழைபோய்—வென்று
விளங்குமதி கோள்விடுக்கும் வேங்கடமே மேலை
இளங்குமரர் கோமா னிடம் 72

பதவுரை :—குன்று ஒன்றினாய் - திருமலை யொன்று தவிர வேறொரிடமும் அறியாதிருக்கிற. குற மகளிர் - குறத்திகள். கோல்வளை - அழகிய வளைகளணிந்த. கை - கைகளினாலே. சென்று - மேலேறி. விளையாடும் - விளையாடா நிற்கப் பெற்ற. தீம் கழை - அழகிய மூங்கில்கள். போய் - சந்திர மண்டலத்தளவும் போய். வென்று - ராஹுவைத் தகர்த்து. விளங்கு - விளங்கா நின்ற. மதியோன் - சந்திரனுடைய. விடுக்கும் - கிரஹணத்தை விடுவிக்கப் பெற்ற. வேங்கடமே - திருமலையே. மேலை - மேலுலகத்திலுள்ள. இளம் குமரர் கோமான் - நித்ய யுவாக்களான நித்ய ஸூரிகளுக்குத் தலைவனான பெருமானுடைய. இடம் - வாஸ ஸ்தானம்.

கருத்து :—திருமலையை ஒரு நொடிப் பொழுதும் விடாமல், அங்கே நித்ய வாஸம் பண்ணுகிற குறத்திகள் ஊஞ்சலாடுகை—முதலான விளையாடல்களுக்காக, வளைகளணிந்த கைகளினாலே பிடித்துக் கொண்டு மேலேறி நிற்கப் பெற்ற அழகான மூங்கில்கள், சந்திர மண்டலத்தளவும் உயர்ந்து சென்று, சந்திரனை க்ரஹிக்கின்ற ராஹுவைக் குத்தி அப்புறப்படுத்தி, அச்சந்திரனை மகிழ்விக்கின்றனவை. அப்படிப் பட்ட நிகழ்ச்சிகளுக்கு இருப்பிடமான திருமலை தான், மேலுலகத்திலுள்ள நித்ய யுவாக்களான நித்ய ஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் திவ்யதேசம்.

குறிப்பு :—விளையாடுகின்ற குறத்திகளின் அழகிய வளைக்கையானது சென்று நல்ல மூங்கில் செறிவை நீக்கி, சந்திரனைப் புகுரச்செய்யும் திருமலை—என்றும், குறத்திகளின் வளைகளின் ஒளியானது, சந்திரனொளி புகுரப் பெறாத மூங்கிலிருளை அகற்றி வெளியாக்கி, சந்திரன் மறுவையும் போக்கும் திருமலை—என்றும், இப்பாசுரத்திற்குப் பொருள் கூறுவர்—சிலர்.

(73) அவதாரிகை :—ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தி யாயிருந்து அவன் தேரை நடத்துபவனும், ஆசையோடு கோபிமாருடன் குடக்கூத்தாடினவனும், திருவேங்கடத்தில் வீற்றிருப்பவனுமான எம்பெருமானுடைய திருவடிகளை எத்துவதே நா விருப்பதற்கு உள்ள ப்ரயோஜனம்—என்று உபதேசிக்கிறார்.

இடம்வலமேழ் பூண்ட இரவித்தே ரோட்டி
வடமுக வேங்கடத்து மன்னும்—குடம்நயந்த
கூத்தனாய் நின்றான் குரைகழலே கூறுவதே
நாத்தன்னா லுள்ள நலம். 73

பதவுரை :—எழ் பூண்ட - ஏழு குதிரைகளைப் பூண்ட. இரவி தேர் - ஸூர்யனுடைய தேரை. இடம் - (மேருவுக்கு) இடப் பக்கமாகவும். வலம் -

வலப் பக்கமாகவும். ஓட்டி - அந்தர்யாமியா யிருந்து நடத்துகிறவனும். வட முகம் - வட திசைக்கு எல்லையாயிருக்கிற. வேங்கடத்து - திருவேங்கட மலையில். மன்னும் - நித்ய வாஸம் பண்ணுமவனும். குடம் நடந்த கூத்தன் - ஆசையோடு குடக் கூத்தாடின கண்ணபிரான். ஆய் நின்றான் - போன்று நின்றவனுமான எம்பெருமானுடைய. குரை கழல் - ஆபரணங்களின் ஒலி பொருந்திய திருவடிகளை. கூறுவதே - ஏத்துவதே. நா தன்னால் உள்ள - நாவினால் கொள்ளக் கூடிய. நலம் - ப்ரயோஜனம்.

கருத்து :—காயத்ரீ. ப்ருஹதீ, உஷ்ணிக், ஜகதீ, த்ரிஷ்டுப், அநுஷ்டுப், பங்க்தீ—என்கிற ஏழு சந்தஸ்ஸுக்களாகிற ஏழுகுதிரை களைப் பூண்ட ஸூர்யனுடைய தேரை மேருவுக்கு இடப்பக்கமாகவும் வலப்பக்க மாகவும், ஸூர்யனுக்கும், அவனுடைய ஸாரதிக்கும், வாஹனங்களாகிற குதிரைகளுக்கும் அந்தர்யாமியா யிருந்து நடத்து கிறவனும், முன்பு கோகுலத்தில் ஆசையோடு கோபிமாருடன் கூடிக் குடக் கூத்தாடினவனும், இப்போது எல்லோருக்கும் எளிய னாய், எல்லாரையும் காப்பாற்றுவதற்காக, வடநாட்டுக்கும், தென் னாட்டுக்கும் நடுநாயகமாயிருக்கும் திருவேங்கடமலையில் பரம க்ருபா மூர்த்தியாய், எழுந்தருளியிருக்கும் ஸ்ரீயঃபதியான எம்பெருமான் திருவடிகளைத் துதிப்பதே நாவிருப்பதற்குப் பயனாகும்.

குறிப்பு :—1. எம்பெருமானுக்கு ஸூர்ய மண்டலமும் வாழுமிடம்.

2. "ஸப்த யுஞ்ஜந்தி ரதமேக சக்ரம்" என்று வேதத்திலும், ஹயாச்ச ஸப்தச் சந்தாம்ஸி தேஷாம் நாமானி மே ச்ருணு, காயத்ரீ ச ப்ரு ஹத்யுஷ்ணிக் ஜகதீ த்ரிஷ்டு பேவ ச, அநுஷ்டுப் பங்க்தி ரித்யுக்தா: சந்தாம் ஸி ஹரயோ ரவே:" என்று உப ப்ரும்ஹணங்கிலும் "காரார் புரவியேழ் பூண்ட தனியாழித் தேரார் நிறை கதிரோன்" என்று சிறிய திருமடலிலும் ஏழு குதிரைகள் (சந்தஸ்ஸுக்கள்) ஸூர்யனுடைய தேரை வஹிக்குமென்று சொல்லப்பட்டது காண்க.

3. இரவியினுடைய தேரைப் பாரதஸமரத்திலே நடத்தி—என்றுமாம்.

(75) அவதாரிகை :—திருமலையின் சிகரம் ஓங்கி உயர்ந்திருக் கிறது—என்பதை ஒரு அதிசமத்காரமான அதிசயோக்தியினால் வெளியிடுகிறார்.

சார்ந்தகடு தேய்ப்பத் தடாவியகோட் டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும் வெண்மதியி னுண்முயலைச்—சேர்ந்து
சினவேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு. 75

பதவுரை :—தடாவிய - விசாலமான. கொடு - சிகரங்களினுடைய. உச்சிவாய் - உச்சியிலே. அகடு - கீழ் வயிறு தேய்ப்ப - உராயும்படியாக. சார்ந்து - கிட்டி, ஊர்ந்து - மெல்ல மெல்ல. இயங்கும் - ஸஞ்சரிக்கின்ற. வண் மதியின் - அழகிய சந்திரனுடைய மத்ய ப்ரதேசத்திலே இருக்கிற. ஒண் - அழகான. முயலே - முயலே. சினம் வேங்கை - (பிடித்துக் கொள்ள முடியாததினால்) கோபங் கொண்ட வேங்கைப் புலியானது. சேர்ந்து - அதை ஸமீபித்து. பார்க்கும் - (ஒன்றும் செய்ய முடியாததினால்) உற்றுப் பார்த்த படியே நிற்கப் பெற்ற. திருமலையே - திருமலை தான். ஆயன் - கோபாலகனு யவதரித்த பெருமானுடைய. புனம் வேங்கை - செழிப்புற்ற வேங்க மரங் கள். நாறும் - கமழப் பெற்றதான. பொருப்பு - திருமலை.

கருத்து :—ஆகாசத்தில் திரிகின்ற சந்திரன் திருமலையின் சிகர நுனியில் தனது கீழ் வயிறு தேயும்படியாகச் செல்லுகின்றான். அப் போது அவனிடத்திலிருக்கிற முயலை, அங்குத் திரிகின்ற வேங்கைப் புலி ஒன்று கண்டு, அதனைத் தனக்கு உணவாகக் கொள்ளக் கருதி, பிடிக்கப் போய், அது முடியாததினால், உறுத்துப் பார்த்துக் கொண்டே நின்றது. இப்படி அத்யாச்சர்யகரமான நிகழ்ச்சிக ளோடு கூடின திருமலைதான்—வேங்கை மலர்களின் திவ்ய ஸுகந் தம் வீசப் பெற்றதாய், கண்ணபிரா னுவந்து வர்த்திக்கும்—திவ்ய தேசமாம்.

குறிப்பு :—சந்திரனிடையே கருப்பாகத் தோன்றும் வஸ்துவை— 'மான்'' என்பர் சில கவிகள் ; "முயல்'' என்பர் சிலர் ; மற்றும் பல்வகை யால் கூறுவார் பலர். "அங்கம் கேபி சசங்கிரே'' என்னும் ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. "ம்ருகாங்கః'' என்றும், "சசாங்க:'' என்றும் பெயர் களும் சந்திரனுக்கு வழங்கப்படுகின்றன. அதில் "முயல்'' என்ற கொள்கை யிங்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

(89) அவதாரிகை :—திருமலையின் நிலவளத்தையும் ஒழுக்கத் தையும் மிகவும் சமத்காரமாக வர்ணிக்கிறார்.

முடிந்த பொழுதில் குறவாணர் ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள் வித்தத்—தடித்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும் வேங்கடமே மேலொருநாள்
தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு. 89

பதவுரை :—முடிந்த பொழுதில் - யௌவன பருவம் முடிந்த நிலைமை யிலுள்ள. குறவாணர் - கிழவர்களான குறவர்கள். ஏனம் - காட்டுப் பன்றி கள். படிந்து - மூங்கில்கள் வேர் பறிந்து விழும்படி படிந்து. உழு - உழுத.

சால் - சால்களிலே. பை தினைகள் - புதிய தினை விதைகளை. வித்து - விதைக்க. தடிந்து - அறுத்துப் போட்ட பின்பும். எழுந்த - நில வளத்தினால் ஓங்கி வளர்ந்த. வேய்ங்கழை - மூங்கில் தடிகளானவை. போய் - மேலே சென்று. விண் - ஆகாசத்தை. திறக்கும் - அளாவப் பெற்ற. வேங்கடம் - திருவேங்கட மா மலைதான். மேல் ஒரு நாள் - முன்பொரு நாள். தீம் குழல் - மதுரஸ்வரத்தையுடைய புல்லாங்குழலை. வாய் - தனது திருப்பவளத்தில். வைத்தான் - வைத்து ஊதின கண்ணபிரானுடைய. சிலம்பு - நித்யவாஸ ஸ்தானமான திருமலை.

கருத்து :—இளம்பருவம் முடிந்த கிழக் குறவர்கள், தங்கள் தொழிலாகிய—தேன் திரட்டுதல், வேட்டையாடுதல்—முதலான கார்யங்களைச் செய்ய முடியாததினால், க்ருஷியினால் ஜீவிக்கப் பார்த்தார்கள். அதுதன்னிலும் தாங்களே உழுது பயிரிடுதலும் அவர்களுக்கு முடியவில்லை. அதற்குமேல் அவர்கள் யோசித்துச் சில பாகங்களிலே காட்டுப் பன்றிகள், தங்கள் செருக்குக்குப் போக்கு வீடாக மூங்கில்களை வேர்பறியுண்டு விழும்படி தள்ளி, அந்நிலங்களை மூக்காலே குத்தித் தள்ள, அந்த நிலங்களிலே தினைகளை விதைத்து ஜீவிப்பார்கள்.

ஏற்கனவே பன்றிகள் தள்ளிவிட்டிருந்த மூங்கில்கள் பயிருக்குக் களையாக வொண்ணுதென்று அவற்றை அவர்கள் நன்றாகக் களைந்துப் போட்டாலும், அவை நிலப் பண்பினால் பண்டு போலவே வளர்ந்து ஆகாசத்தை அளாவுகின்றன.

இப்படிப்பட்ட நிலவளம் வாய்ந்த பரம போக்யமான திருமலை தான்—முன்பு ஸ்ரீ கிருஷ்ணனாய்த் திருவவதரித்து, அழகான புல்லாங்குழலைத் தனது திருப்பவளத்தில் வைத்து ஊதி, மதுரமான இசையினால் கோகுலத்தை அமிருத மயமாக்கி ஸம்ரக்ஷித்தருளின எம்பெருமான், உவந்து ஸர்வாபீஷ்ட பலப்ரதனாய், பரம ஸுலபனாய் நித்ய வாஸம் பண்ணும்—திவ்யபர்வதம்.

குறிப்பு :—1. கிழக் குறவர் தங்கள் ஜாதித் தொழிலை விட்டு க்ருஷியில் இறங்கினதற்குக் காரணம் கூறுவது "முடிந்த பொழுதின்" என்ற அடைமொழி.

2. வாணர் - வாழ்நர். சிலம்பு - மலை.

ஸ்ரீ பேயாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே பக்திஸாராய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமழிசைப்பிரான் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதி.

---

அவதாரிகை :—முதலாழ்வார்கள் மூவரும், எம்பெருமானது நிர்ஹேதுக க்ருபா கடாக்ஷத்தினால் பெற்ற பக்திப் பெருங்காதலினால் பகவானை யநுபவித்து, அவ்வநுபவ பரீவாஹமான இன்னிசைத் தமிழ் மாலைகளாலே, 'ஸ்ரீமந் நாராயணனே பரதத்வ'மென்று நிஷ்கர்ஷித்தருளினர். அவர்கட்கு அடுத்த ஆழ்வாராகிய ஸ்ரீ திருமழிசை யாழ்வாரும் அவர்கள் போலவே எம்பெருமானது க்ருபா விசேஷத்தினால் மயர்வற மதிநலம் பெற்று, பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், திவ்ய கல்யாண குணங்களையும், திவ்ய மங்கள விக்ரஹத்தையும், அவனை இடைவிடாது அநுபவித்துக் கொண்டிருக்கும் பிராட்டிமார்களையும், நித்ய ஸூரிகளையும், பேரின்பமான பரமபதத்தையும், லீலா விபூதி யோகத்தையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரித்து, அநுபவித்துக் கொண்டு, நெடு காலம் இந்த விபூதியில் எழுந்தருளி யிருந்து, ஸம்ஸாரிகள் படும் அநர்த்தத்தைக் கண்டு பொறுக்க மாட்டாமல், பரம க்ருபையினால் அனைவரும் பகவத் ப்ரவணராய் உஜ்ஜீவிக்கும்படி இப் ப்ரபந்த மூலமாய்த் திருத்தி யருளினார்.

இப் ப்ரபந்தம், முதற் குறிப்பென்று மிலக்கண வகையால் "நான்முகன் திருவந்தாதி" என்றும், முதலாழ்வார்களின் திருவந்தாதிகள் மூன்றுக்கும் பின்னர் இத் திருவந்தாதி திருவவதரித்ததால் "நாலாந் திருவந்தாதி" என்றும் வழங்கப் படுகிறது.

இதில் திருவேங்கட முடையான் விஷயமாக 13 பாசுரங்கள் இருக்கின்றன.

(34) அவதாரிகை :—அதில் இந்தப் பாசுரத்தில்—திருவேங்கடம் முதலான திவ்ய திருப்பதிகளிலே ஸர்வ ஸுலபனாய் எழுந்தருளியிருக்கும் பரம போக்யமான எம்பெருமான் திருவடிகளை மறந்திருக்க என்னால் முடியுமோ? என்று அபிநிவேசத்துடன் பேசுகிறார்.

குறிப்புஎனக்குக் கோட்டியூர் மேயானை யேத்தக்
குறிப்புமனக்கு நன்மை பயக்க—வெறுப்பனோ?
வேங்கடத்து மேயானை மெய்வினைநோய் எய்தாமல்
தான்கடத்தும் தன்மையான் தாள். 34

பதவுரை :—கோட்டியூர் மேயானை - திருக்கோட்டியூரில் நித்ய வாஸம் பண்ணுமவனும். வேங்கடத்துமேயானை - திருவேங்கட மலையில் நித்ய வாஸம் பண்ணுமவனுமான ஸர்வேச்வரனை. ஏத்த - துதிப்பதற்கு. எனக்கு - எனக்கு. குறிப்பு - ஆசை. நன்மை - பகவதநுபவத்தினாலுண்டான பெருமையை. பயக்க - பெறுவதற்காக. எனக்கு குறிப்பு - எனக்கு ஆசை. மெய்வினை - சரீர சம்பந்தத்துக்குக் காரணமான கர்மங்களும். நோய் - வியாதிகளும். எய்தாமல் - வந்து சேராதபடி. தான் - தானே.' கடத்தும் - போக்கியருளும். தன்மையான் - ஸ்வபாவத்தையுடையவனுமான எம்பெருமானுடைய. தாள் - திருவடிகளை. வெறுப்பனோ - மறந்திருப்பனோ.

கருத்து :— திருக்கோட்டியூரிலும், திருமலையிலும் நம்மைக் காப்பாற்றுவதற்காக நித்ய வாஸம் செய்யும் எம்பெருமானைத் துதித்து, அவனுக்குப் பல்லாண்டு பாட வேண்டுமென்றும், அவனை ஒரு க்ஷணகாலமும் இடைவிடாது அநுபவித்து, ஆத்மாவுக்கு நன்மையை விளைவித்துக் கொள்ள வேணுமென்றும் மிகவும் ஆசை கொண்டு இருக்கிறேன். சரீர ஸம்பந்தத்துக்கு அடியான கருமங்களும், துக்கங்களும் எனக்கு வந்து கிட்டாதபடி செய்து என்னைக் காத்தருள்கின்ற அப்பெருமானுடைய திருவடிகளை, நான் எப்படி உபேக்ஷித்திருக்க முடியும்.

(39) அவதாரிகை :—திருவேங்கட முடையானை ஸேவிக்கப் பெற வேணுமென்றும், திருமலையில் நித்ய வாஸம் பண்ணப் பெற வேணுமென்றும்—என்னுடைய பொழுது போக்கு நல்லதாகவேயிருக்கப் பெற்றேன். இதுவே எனக்கு ஆவலாயிருக்கின்றது—என்று அருளிச் செய்கிறார்.

அழைப்பன் திருவேங் கடத்தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட—மழைப்பேர்
அருவி மணிவரன்றி வந்திழிய யானை
வெருவி யரவோடுங்கும் வெற்பு. 39

பதவுரை :—*திருவேங்கடத்தானை - திருவேங்கடமுடையானை. காண - கண்ணால் ஸேவிக்க. அழைப்பன் - கூப்பிடா நின்றேன். மழை - தாரை தாரையாய்ப் பெருகுகின்ற. பேர் அருவி - பெரிய அருவிகளானவை. மணி - ரத்னங்களை. வரன்றி - திரட்டிக் கொண்டு. இழிய - வந்து இழிய. யானை - யானைகளானவை. வெருவி - (அந்த ரத்னங்களின் ஒளியை அக்நி ஜ்வாலை யாக ப்ரமித்து) பயப்பட்டு நிற்க. அரவு - மலைப் பாம்புகள். ஒடுங்கும் - (அந்த ரத்னங்களை மின்னலாக ப்ரமித்து மயங்கி) புற்றிலே சென்று மறையப் பெற்ற. வெற்பு - திருமலையை. கூட - சென்று கூட வேணுமென்று. திருக்கூடல் இழைப்பன் - திருக்கூடற்குறி என்னும் சகுனத்தைப் பார்க்கி றேன். (மணலில் சக்ராகாரமாக எழுதிப் பார்க்கின்றேன்).*

கருத்து :—*திருவேங்கட முடையானைக் கண்ணாரக் கண்டு மகிழ வேண்டுமென்று வாய்விட்டுக் கூப்பிடா நின்றேன். மழை சொரி வதுபோல் சொரிகின்ற அருவிகள், அங்கு மிங்கும் கிடக்கிற ரத்னங் களைத் திரட்டிக் கொண்டு இழிய, அந்த ரத்னங்களின் ஒளியைக்கண்டு, கொள்ளி வட்டமென்று பிரமித்து, யானைகள் பயப்பட்டு நிற்கவும், மலைப் பாம்புகள் இந்த ரத்னங்களை மின்னலாக ப்ரமித்து புற்றிலே சென்று மறையவும் பெற்ற திருவேங்கட மலையைச் சென்று நித்ய வாஸம் பண்ணப்பெற வேணுமென்னும்—இதுவே எனக்கு ஆவலா யிருக்கின்றது.*

குறிப்பு :—1. *பின்னடிக்கு இன்னொரு வகையாகவும் கருத்துக் கூற லாம்—அருவிகளில் விழுந்த ரத்னங்களைக் கண்ட யானைகள் "இவை கொள்ளி வட்டம்" என்று பரமித்து ஓடப்புக்கவாறே மலைப் பாம்புகளின் வாயிலே விழும்படியாயின—என்று. யானை வெருவவும், அரவு ஒடுங்கவும் பெற்ற மலை—என்று முதல் யோசனையில் பதவுரை; யானையானது வெருவி அரவின் வாயிலே ஒடுங்கப் பெற்ற மலை—என்பது இரண்டாவது யோஜனை யில் பதவுரை.*

2. *"திருக்கூடல் இழைப்பன்". கூடலிழைத்தலாவது—சகுனம் பார்க் கும் வகை; அதாவது—மணலில் வட்டமாகக் கோடு கீறி, அதற்குள்ளே சுழி சுழியாகச் சுற்றும் சுழித்து, இரண்டிரண்டு சுழியாகக் கூட்டிப் பார்க் கும்போது இரட்டைக் கணக்காக முடிவு பெற்றால் கூடுகை; ஒற்றைக் கணக்*

காக முடிவு பெற்றால் கூடாமை—என்று ஸங்கேதம் ஏற்படுத்திக் கொண்டு குறிப்பார்க்கையாம். இது—கூடல், கூடலிழைத்தல், கூடல் வளைத்தல், கூடற் குறி—என்று பலவிதமாக வழங்கப்படுகிறது. "தெள்ளியார் பலர்" என்னும் பாட்டில் ஸ்ரீ ஆண்டாள் இதை அநுஷ்டித்தாள்.

3. திருக்கூடலிழைத்தல் பெண்டிர்க்கே உரியதாகையாலே, "இழைப்பன் திருக்கூடல்" என்று நாயகீ பாவத்தில் ஆழ்வாருளிச் செய்கிறார்—என்று சிலர் கூறுவார்.

(40) அவதாரிகை :—விநோதார்த்தமாகப் பர்வதங்களைச் சொல்லும்போது யாத்ருச்சிகமாக "திருவேங்கடம்" என்று என் வாயில் வந்து விட்டது. அவ்வளவைக் கொண்டு எம்பெருமான் தன்னைச் சொன்னவனாக என்னைக் கணக்கிட்டு, அந்தரங்க பக்தனாக அபிமானிக்கிறான். என்ன அவனது ஔதார்யம்! என்ன காருணிகத்வம்—என்று முக்தராகிறார்.

அங்ஙனமன்றிக்கே எம்பெருமான் ஒரு வலையில் அகப்பட்டான்; நானொரு வலையில் அகப்பட்டேன்—என்று சமத்காரமாகச் சொல்லுகிறாராகவுமாம் :

வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன்—கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண். 40

பதவுரை :—வெற்பு என்று - விநோதமாகப் பல மலைகளைச் சொல்லும் போது. வேங்கடம் - திருவேங்கட மலையையும். பாடினேன் - சொன்னேன். (இவ்வளவைக் கொண்டு) வீடு - மோக்ஷத்தை. ஆக்கி - கைக்கண்ட பலனாகக் கொண்டு. நிற்கின்றேன்—அமர்ந்திருக்கிறேன். நின்று நினைக்கிறேன்—"ஒரு சிறிய சொல்லுக்குப் பெரிய பேறு கிடைத்ததே" என்று ஆச்சர்ய சகிதனாய் இருக்கின்றேன். கற்கின்ற - ஓதப்படுகிற. நூல் - வேத சாஸ்த்ரங்களாகிற, வலையில் - வலையினுள்ளே. பட்டிருந்த - அகப்பட்டு நிலை பேராமல் நிற்கிற. நூலாட்டி கேள்வனார் - ஸ்ரீ மஹா லக்ஷ்மீ நாயகனான எம்பெருமானுடைய. கால் வலையில் - திருவடித் தாமரைகளாகிற வலையில், பட்டிருந்தேன் காண் - அகப்பட்டு நிலை பேராமல் நிற்கின்றேன் காண்.

கருத்து :—விநோதமாகப் பல மலைகளைச் சொல்லும்போது யாத்ருச்சிகமாக என் வாயில் "திருவேங்கடம்" என்ற சொல் வந்து

விட்டது. இவ்வளவைக் கொண்டு எம்பெருமான்—"என் ஊரைச் சொன்னாய்; என் பேரைச் சொன்னாய்; என்னை நோக்கினாய்" என்று மடிமாங்காயிட்டு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைக் கரதலாமலக மாக்கினான். இந்த மஹா குணத்தை நினைத்து நினைத்து உருகிப் போகின்றேன்.

பாம்பரையாக ஓதப்பட்டு வருகின்ற வேத சாஸ்த்ரங்களாகிற வலையிலே நிலை போராமல் அகப்பட்டிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளாகிற வலையிலே, நான் நிலை போராமல் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நான் அஹ்ருதயமாகச் சொன்ன சொல்லையும் அவன் ஸஹ்ருதயமாகக் கொண்டு மடிமாங்காயிட்டு அடியேனைக் கடாக்ஷித்தருளுகிறானைகயாலே, நான் அவன் திருவடிகளை ஒரு நொடி நேரமும் விடமாட்டேன்—என்று ஹார்தமான அபிப்ராயம்.

குறிப்பு :—1. நின்று நினைக்கின்றேன்—புத்தி பூர்வகமாக நாம் ஒரு நல்ல சொல்லையும் சொல்லாதிருக்கவும், எம்பெருமான் தானே நம்மைத் திருவுள்ளம் பற்றுகிறான். என்ன ஆச்சர்யம்—என்று இதனையே அநுஸந்தித்துக் கொண்டு ஈடுபடா நின்றேன்—என்று கருத்து.

2. கற்கின்ற நூல் வலையிற் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்—"மந்த்ராதீனம் து தைவதம்" என்கிறபடியே, அபௌருஷேயமாய், நித்ய நிர்துஷ்டமாய், பரம்பரையாக அத்யயநம் பண்ணப்பட்ட வேத சாஸ்த்ரங்களால் ப்ரதிபாதிக்கப்படுமவர்களாகையால், பெருமாள் "நூலாளன்" என்றும், பிராட்டி "நூலாட்டி" என்றும் வழங்கப்படுவார்கள். நூலாட்டி கேள்வனாகிய புருஷ ஸிம்ஹமானது சாஸ்த்ர விஹிதங்களான கர்ம - ஞான யோகங்களோடு கூடிய பக்தி யோகமாகிற வலையில் அகப்படுவான். அந்த புருஷோத்தம ஸிம்ஹத்தை வேறொரு ஸாதனத்தாலும் கட்ட முடியாது. பக்தி யொன்றால் தான் கட்ட முடியும். அது போலவே புருஷாதமனாகிற நான் கட்டுக்கடங்காதிருந்து, தான் தோன்றியாகத் திரிந்தவன், அவனது திருவடித் தாமரைகளால் கட்டப்பட்டேன். எம்பெருமான் ஒரு வலையில் அகப்பட்டான்; நானும் ஒரு வலையில் அகப்பட்டேன்—என்று உள் கருத்து.

(41) அவதாரிகை :—கருணாநிதி! நீ திருவேங்கடமலையை விட்டு என் உள்ளத்திலே குடி கொண்டு இருக்கிறாய்; ஆயினும் நான் அந்தத் திருமலை தன்னையும் ஸேவிக்க வேணுமென்று காதல் கொண்டிருக்கின்றேன்—என்று தம் குதூஹலத்தை அருளிச் செய்கிறார்.

காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலியதிரப்—பேணி
வருவேங் கடவா ! என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கடமதனைச் சென்று. 41

பதவுரை :—கல் அருவி - சப்திக்கின்ற அருவிகளில். முத்து - முத்துக்கள். உதிர - உதிரப் பெற்றதாய். ஓணம் விழவில் - திருவோணத் திருநாளில். ஒலி - மங்களாசாஸன த்வனியினால். அதிர - அதிரப் பெற்றதாய். பேணி வரு - விரும்பிப் பக்தர்கள் வந்து சேரப் பெற்றதாய் இருக்கும். வேங்கடவா - திருவேங்கட மலையில் வீற்றிருக்கும் எம்பெருமானே ! என் உள்ளம் - நீ என் நெஞ்சிலே. புகுந்தாய் - புகுந்து விட்டாய். (ஆயினும் நான்) திருவேங்கடம் அதனை - அத்திருமலை தன்னையும். சென்று - சென்று. காணல் உறுகின்றேன் - ஸேவிக்க விருப்பம் கொண்டிருக்கிறேன்.

கருத்து :—பேரொலி செய்து கொண்டு வீழ்கின்ற அருவிகளிலே முத்துக்கள் உதிரப்பெற்றதும், திருவேங்கடமுடையான் திருநக்ஷத்ரமான திருவோணத் திருவிழாவில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் செய்யும் மங்களாசாஸன த்வநியானது எங்கும் வ்யாபித்து இருக்கப் பெற்றதும், பல திசைகளில் நின்றும் பல பக்தர்கள் விரும்பி வந்து பணியப் பெற்றதுமான திருவேங்கடமலையில் பரம போக்யனாய் எழுந்தருளியிருக்கும் பிரானே ! நீ அத்திருமலையைவிட்டு என்னுள்ளம் புகுந்தாய்; நானோவென்றால், அத்திருமலை தன்னைச் சென்று காண வேணுமென்று விரும்புகிறேன்.

குறிப்பு :—நானோ திருமலையில் வந்து உன்னைக் காண விரும்பி யிருக்கின்றேன் ; நீயோ அங்கு நின்றும் வந்து என்னுள்ளத்திலே உறைகின்றாய். இனி நான் என் செய்வேன் ?—என்னும் பொருள் கூறலாம்.

(42) அவதாரிகை :—அன்பர்களாகிய லோகத்தாருக்கு உபதேசிக்கிறார்.

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால்—என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத் தானும்
அடிக்கமல மிட்டேத்தும் அங்கு. 42

பதவுரை :—(என் அன்பர்களே !) சேண் உயர் - மிகவும் ஓங்கி வளர்ந்திருக்கின்ற கொடு முடிகளையுடைய. வேங்கடத்தை —திருவேங்கட மலையை

சென்று வணங்குமின் - அடைந்து ஸேவியுங்கள். (அத்திருமலை) நீர்மையால் - தன் ஸ்வபாவத்தினால். நின்று - நிலை நின்று. வினை கெடுக்கும் - பாவங்களைப் போக்கும். அங்கு - அத்திருமலையில். கடி கமலம் - அதி விலக்ஷணமான பரிமளம் நிறைந்த பகவானுடைய திருநாபீ கமலத்திலே பிறந்தவனை. நான்முகனும் - நான்முகங்களால் நால் வேதங்களை ஓதுகின்ற பிரமனும். கண் மூன்றத்தானும் - ஸகலேதர விலக்ஷணமாக மூன்று கண்களையுடையனுமாய், மஹா மஹிமோபேதனை ஸ்ரீ சிவபிரானும். என்றும் - எக்காலத்திலும். அடி - எம்பெருமான் திருவடிகளிலே. கமலம் - தாமரைப் புஷ்பங்களை. இட்டு - ஸமர்ப்பித்து. ஏத்தும் - துதித்துக் கொண்டிருப்பார்கள்.

கருத்து :—என் அன்பர்களே! ஸம்ஸாரிகளே! நீங்கள் விரைவில் சென்னியோங்கு தண் திருவேங்கடத்தைச் சென்று வணங்குங்கள். அந்தத்திருமலை தானே உங்கள் பாவங்களையெல்லாம் நாசமாக்கி விடும். தேவாதி தேவர்களான பிரமன், பரமசிவன்—முதலானவர்களும் தங்கள் தங்கள் அதிகாரம் பெறுவதற்காகத் திருமலையிலே சென்று திருவேங்கடமுடையான் திருவடிகளிலே எப்போதும் தூய மா மலர்களை ஸமர்ப்பித்து, இறைஞ்சித் துதியா நிற்பர்கள். நீங்களும் அங்கே சென்று வணங்கி உஜ்ஜீவியுங்கள்.

குறிப்பு :—1. 'சேண்' என்றாலும் உயர்த்தியே பொருள், "சேண் உயர்" மிகவும் உயர்ந்த என்றர்த்தம்.

2. பாவங்களைப் போக்குவதே திருமலைக்கு ஸ்வபாவம். வேம் - பாவங்கள். கடம் - எரித்தல். ஆச்ரிதர்களுடைய ஸர்வ பாவங்களையும் திருவேங்கடம் தீயினில் தூசாக்கும்.

3. "வேங்க டங்கள்" என்னும் ஸ்ரீ நம்மாழ்வார் பாசுரத்தை இங்கு அநுஸந்திக்கலாம்.

(43) அவதாரிகை :—ப்ரஹ்ம ருத்ரர்கள் தினந்தோறும் வந்து அந்தி தோறும் திருவந்திக் காப்பு இடுகின்றார்.—என்று கூறுகிறார்.

மங்குல்தோய் சென்னி வடவேங் கடத்தானைக்
கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்—திங்கள்
சடையேற வைத்தானும் தாமரைமே லானும்
குடையேறத் தாங்குவித்துக் கொண்டு. 43

பதவுரை :—மங்குல் - மேக மண்டலத்தளவும் சென்று. தோய் - அதைக் குத்தித் தள்ளும். சென்னி - சிகரங்களையுடைய. வடவேங்கடத்தானை - வட திசையிலுள்ள திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெரு

மானுக்கு. காப்பு - திருவந்திக் காப்பை. அணிவான் - ஸமர்ப்பிப்பதற்காக. திங்கள் - சந்திரனை. சடை - ஜடா ஜூடத்திலே. ஏற வைத்தானும் - அலங்கரித்துக் கொண்டிருக்கும் பரமசிவனும். தாமரை மேலானும் - தாமரைப் பூவில் பிறந்த பிரமனும். தாம் - ஆகிய இவர்கள். குடை - திரு முத்துக் குடை முதலான உபகரணங்களை. ஏற குவித்துக் கொண்டு - சேகரித்துக் கொண்டு. கங்குல் - ஸாமுகமான ஸந்த்யா காலந்தோறும். புகுந்தார்கள் - திருமலைக்குச் செல்லுவார்கள்.

கருத்து :—என் அன்பர்களே! மேக மண்டலத்தளவும் ஓங்கி வளர்ந்துள்ள சிகரங்களையுடைய ஸ்ரீ வடவேங்கடத்தானைத் திருவடி தொழுது, அவனுக்கு அந்தி தோறும் திருவந்திக் காப்பு இடுவதற் காகச் சந்திர சேகரனை பரமசிவனும், நான்முகனை பிரமனும் கூட, திருமுத்துக் குடை—முதலான ஆராதனோப கரணங்களையெல் லாம் சேகரித்துக் கொண்டு செல்லுவார்கள். ஆகையால், நீங்களும் அங்கே சென்று உஜ்ஜீவியுங்கள்.

குறிப்பு :—குடையைச் சொன்னது—சாமரம்—முதலிய நிகில பூஜோப கரணங்களுக்கும் உபலக்ஷணம்.

(44) அவதாரிகை :—அன்பர்களே! இளமொளி யிளமை கெடு வதன் முன்னம் திருமலைக்குச் சென்று சேருங்கள் —என்று உல கத்தாரைத் தூண்டுகிறார்.

கோண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய்த்
தண்ட வரக்கன் தலைதாளால்—பண்டெண்ணிப்
போம்குமரன் நிற்கும் பொழில்வேங் கடமலைக்கே
போம்குமர ருள்ளீர்! புரிந்து. 44

பதவுரை :—குமரர் உள்ளீர் - இளமையில் இருப்பவர்களே! பண்டு - முன்பொரு காலத்தில். குடங்கால்மேல் - பிரமன் மடியிலே. கொண்டு வைத்த - எடுத்து வைக்கும். குழவி ஆய் - சிறு குழந்தையாய்க் கொண்டு. தண்டம் - தண்டிக்கத்தக்க. அரக்கன் - இராவணனுடைய. தலை - பத்துத் தலைகளையும். தாளால் - தன் திருவடியாலே. எண்ணி - கீறி எண்ணிக் காட்டி. போம் - மறைந்த. குமரன் - நித்ய யுவாவான ஸர்வேச்வரன். நிற்கும் - நிற்குமிடமான. பொழில் வேங்கடம் - சோலைகள் சூழ்ந்த திருவேங்கடமென்னும். மலைக்கே - திருமலைக்கே. புரிந்து போம் - ஆசை கொண்டு சென்று சேருங்கள்.

கருத்து :—கிளரொளி இளமை கெடாமல் இருப்பவர்களே! என் வார்த்தையை ஸாவதானமாகக் கேளுங்கள். முன்பொரு காலத்தில் இராவணன் தன் பத்துத் தலைகளையும் மறைத்துக் கொண்டு நான்முகனிடஞ் சென்று அவனை வஞ்சித்து வரம் கொள்ளு மளவில், எம்பெருமான் ஒரு குழந்தையாய்க் கொண்டு பிரமன் மடியிலே தோன்றி, "இவன் பத்துத் தலையுடைய இராவணன் காண்; இவன் உம்மை வஞ்சித்து வரம்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீர் வரமளித்தால் பெருந் தீங்காக முடியும்" என்று தெரிவிப்பதற்காகத் தன் திருவடியால் அவன் பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டினான். அப்படி ஸமாச்ரித ஸம்ரக்ஷண தத்பரனாய், "யுவாகுமார:". என்று நித்யயுவாவாய் இருக்குமவனான ஸர்வேச்வரன் ஸர்வ ஸுலபனாய் எழுந்தருளியிருக்கும் பரம போக்யமான திருவேங்கட மலைக்கே ஆசையோடு செல்லுங்கள். உங்களுடைய வினைகளெல்லாம் தீரும்; ஸர்வாப்யுதயங்களும் உண்டாம்.

குறிப்பு :—1. இப்பாட்டில் உதாஹரிக்கப்பட்ட கதை; "ஆமே யமரர்க் கறிய" (1. தி. 40. பா.) என்ற பாட்டிலும், "ஆய்ந்தவரு மறையோன்," (3. தி. 75. பா.) என்ற பாட்டிலும் எடுக்கப்பட்டது. இந்தக் கதை. "சிமாலிகனவனோடு" என்ற விடத்தில் சொன்ன கதை முதலானது போல், புராணாதிகளில் காணப் பெறாத போதிலும், ஆழ்வாரால் மாத்திரம்; பகவத் க்ருபையினால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டது—என்று கண்டு கொள்க.

2. வயது முதிர்ந்த பின்பு நெஞ்சால் நினைக்கவும் முடியாததால் கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம் திருமலைக்குச் சேர வேண்டும்—என்று "குமாருள்ளீர்" என்பதற்குக் கருத்து.

(45) அவதாரிகை :—இந்தத் திருமலை, இந்நிலத்திலுள்ளாருக்கு மாத்திரமல்ல, வானுலகத்தாருக்கும் பரம ப்ராப்யமாயிருக்கிறதென்று விஸ்தாரமாய்ப் பேசுகிறார்.

புரிந்து மலரிட்டுப் புண்டரீகப் பாதம்
பரிந்து படுகாடு நிற்பத்—தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. 45

பதவுரை :—புண்டரீகம் பாதம் - திருவடித் தாமரைகளில். புரிந்து - அன்பு பூண்டு. மலர் - புஷ்பங்களை. இட்டு - பணி மாறி. பரிந்து - மங்க

ளாசாசனம் பண்ணி. படுகாடு - வெட்டி வீழ்ந்த மரங்கள் போல. நிற்ப - கால் பேராமல் நிற்கும்படியாக. எங்கும் - எல்லா விடங்களிலும். தெரிந்து - விளங்கி. தான் ஓங்கி - ஸ்வரூப குணங்களால் தான் பெருமை பெற்று இருக்கும் ஸர்வேச்வரனுடைய. தண் அருவி - குளிர்ந்த அருவிகளை யுடைய தான. வேங்கடமே - திருவேங்கட மலையே, வானோர்க்கும் - நித்ய விபூதியிலுள்ள நித்ய ஸூரிகளுக்கும். மண்ணோர்க்கும் - இந்த லீலா விபூதியிலுள்ள ஸம்ஸாரிகளுக்கும். வைப்பு - நிதியாயிருக்கும்.

கருத்து :—பக்தர்கள், மிகவும் ஆதரத்துடன் ஸேவித்து, தூய மாமலர்களைப் பணிமாறி, இந்த விபவத்துக்கு என்ன தீங்கு வரு கிறதோ? என்று வயிறு பிடிக்காமல், "பல்லாண்டு பல்லாண்டு" என்று மங்களா சாஸனம் பண்ணி, கால் பெயர்ந்து வெளியிலே போகமாட்டாமல், அவ்விடத்திலேயே குடிகொண்டிருக்கும்படியாகக் குளிரக் கடாக்ஷித்தருளும் எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுமிடமாய், குளிர்ந்த அருவிகள் பாய்ந்து பரம போக்யமாயிருந்துள்ள திருவேங்கடமலை, நித்ய ஸூரிகளோடு ஸம்ஸாரிகளோடு வாசியற அனைவர்க்கும் ஸமாச்ரயணீயமாய், பரம போக்யமாயிருக்கின்றது.

குறிப்பு :—1. "பரிந்து"—பரிவானது—ப்ரஸக்தி யில்லாத விடத்தில் பயசங்கை பண்ணி அன்பு பாராட்டிக் காப்பிடுவது. அது தான் மங்களா சாஸனம்.

2. "படுகாடு நிற்ப"—படுகாடு போலே (வெட்டி விழுந்த மரங்கள் போலே) கால் பேராமல் நிற்கும்படியாக.

3. வைப்பு - நிதி. நிதிபோல் விரும்பத்தக்கது - என்று பொருள்.

(46) அவதாரிகை :—அத்யாச்சர்யகாமான ஒரு நிகழ்ச்சியை மிகவும் ரஸமயமாக வர்ணிக்கிறார்.

வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று
எப்பொழுதும் கைநீட்டும் யானையை—எப்பாடும்
வேடுவளைக் கக்குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே
நாடுவளைத் தாடுமேல் நன்று. 46

பதவுரை :—மாமதியை - ப்ரக்ருஷ்டனான சந்திரனை. மாலுக்கு - திருவேங்கடமுடையானுக்கு. மணி விளக்கு ஆ - மங்கள தீபமாக. வைப்பன் - ஸமர்ப்பிக்கக்கடவேன். என்று - என்றெண்ணி. எப்பொழுதும் - ஸதா ஸர்வ காலங்களிலும். கை நீட்டும் - அந்தச் சந்திரனைப் பிடிப்பதற்காகத்

தனது தும்பிக்கையை உயரத் தூக்கினபடியே யிருக்கிற. யானையை - மத்த கஜத்தைப் (பிடிப்பதற்காக). எப்பாடும் - நால் பக்கமும். வேடு வளைக்க - வேடர் சூழ்ந்து கொள்ள. குறவர் - குறவர்கள். வில் - வில்லை. எடுக்கும் - எடுத்துக் கொண்டு போகுமிடமான. வேங்கடமே - திருமலையை. நாடு - நாட்டிலுள்ளா ரனைவர்களும். வளைத்து - ப்ரதக்ஷிணம் பண்ணி. ஆடுதும் எல் - ஆனந்த பரவசராய் நர்த்தனம் செய்யப் பெற்றால். நன்று - நல்லது.

கருத்து :—அன்பர்களே! ஆகாயத்தில் மங்கள தீபம் போல் ப்ரகாசிக்கும் சந்திரனை ஒரு யானையானது கண்டு, "இதனை நம் பெருமானுக்கு நந்தா விளக்காக வைத்தால் நன்று யிருக்கும்" என்று கருதி, அச் சந்திரனைப் பிடிப்பதற்காகத் தனது தும்பிக்கையை நீட்டிற்று; எவ்வளவு நேரமானாலும், சந்திரன் பிடிக்கக் கிடைக்காமையினால் நீட்டின கையை நீட்டினபடியே நின்று பகவானை த்யானம் பண்ணிக் கொண்டு நிஷ்பந்தமாய் நிற்றது. நெடு நாளாக அவ் வானையைப் பிடிக்க யத்னம் பண்ணிக் கொண்டிருந்த வேடர்கள், இந்த த்யாநபரவசதையையே பற்றாசாகக் கொண்டு, மெள்ள வருகில் வந்து, வளைத்துக் கொள்ள, குறவர்கள் அவ்வானையின்மேல், அன்றிக்கே, பரம ப்ரபந்ந சிகாமணியான அவ்வானையை அவ்வேடர்களின் வலையில் நின்றும் விடுவிப்பதற்காக அவ்வேடர்களின்பேரில், அம்பு தொடுப்பதற்காக, வில்லை எடுத்துக் கொண்டு போகுமிடமான திருமலையை நாமெல்லோரும் வலம் வந்து மகிழ்ந்து கூத்தாடுவோமாயின், நமக்கு ஸ்வரூபோபாய புருஷார்த்தங்க ளெல்லாம் ஸித்திக்கும்.

குறிப்பு :—1. சந்திர மண்டலத்தளவும் திருமலை எட்டியிருக்கிறதென்னும் அதன் ஒக்கம் வெளியிடப்பட்டது.

2. திருமலையில் இருக்கும் குரங்குகளோடு மிருகங்களோடு வாசியற எல்லாப் பிராணிகளும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதே தொழிலாக இருக்கின்றன காண்—என்றும் ஸூசிதமாயிற்று.

3. ஆழ்வார் தம்மைப் போலவே எல்லா ஜந்துக்களும் எம்பெருமானைத் தொழுது தரிக்கிறதாகக் கொள்ளுகிறார்—என்று தெரிகிறது.

4. ஆகையாலே, இங்கு, குறவர்கள் பாகவத சிகாமணியாகிற அவ்வானையின் நற்செயலை அறிந்து, அதற்கு நேர்ந்த ஆபத்தைக் கவனித்து, அந்த ஆபத்தை நீக்குவதே நமக்குப் பரம தர்மம்—என்று எண்ணி வேடர்களை நீக்குவதற்காக வில்லை எடுத்துக் கொண்டு ஓடுகிறார்கள்—என்று தான் கருத்துக் கூறவேண்டும். ப்ரபந்தஜன ஸம்ரக்ஷணமாகிற பரம தர்மத்தை அறிந்தவர்க

ளிறே திருமலையில் வர்த்திக்கும் குஹப் பெருமாள் ஸத்ருசரான குறவர்கள். ஸ்ரீ வசன பூஷணத்தில்—" த்ரௌபதீபரிபவம் கண்டிருந்தது க்ருஷ்ணுபி ப்ராயத்தாலே (பாண்டவர்களுக்கு) ப்ரதாந தோஷம். பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க வைத்தது—த்ரௌபதியினுடைய மங்கள ஸூத்ரத்துக்காக" என்று 'ப்ரபந்ந பரிபவம் கண்டிருப்பது—மஹாபசாரம், பகவானுடைய நிக்ரஹத்துக்கு இலக்காம்—என்று ஸ்ரீ பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்தார்.

(47) அவதாரிகை :—திருவேங்கடமுடையானேபாதி, திருமலையிலிருக்கும் ஸகல பதார்த்தங்களும் உத்தேச்ய மானவை—என்று வெளிப்பட இப்பாசுர மருளிச் செய்கிறார்.

நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும்
பொன்மணியும் முத்தமும் பூமரமும்—பன்மணிநீ
ரோடு பொருதுருளும் கானமும் வானரமும்
வேடு முடைவேங் கடம். 47

பதவுரை :—ஆளியும் - யாளிகளும். கோள் அரியும் - வலிமை தங்கிய சிங்கங்களும். பொன் - பொன்களும். மணியும் - மாணிக்கங்களும். முத்தமும் - முத்துக்களும். பூ மரமும் - பூத்த மரங்களும். பல் மணி - பல் வகைப்பட்ட ரத்னங்களும். நீரோடே - அருவிகளோடே. பொருது - கலந்து. உருளும் - உருண்டு விழப் பெற்ற. கானமும் - காடுகளும். வானரமும் - குரங்குகளும். வேடும் - வேடர்களும்—ஆகிய இவற்றை. உடை - உடையதான. வேங்கடம் - திருமலையானது. நல் மணி வண்ணன் - சிறந்த இந்த்ர நீல ரத்னம் போன்ற வடிவழகை யுடையவனை எம்பெருமானுடைய. ஊர் - வாஸ ஸ்தானம்.

கருத்து :—யாளிகள், சிங்கங்கள், நவரத்னங்கள், புஷ்ப விருக்ஷங்கள், நவரத்னங்களைக் கொழித்துக் கொண்டு வந்து வீழ்கின்ற அருவிகள் நாற்புறமும் பாயப் பெற்ற காநநங்களும், குரங்குகளும், வேடர்களும், —ஆகிய இவை எல்லாம் உபாதேயதமங்க ளாகும்படி அணிந்துள்ள திருமலை தான் நீலமணிவண்ணன் உகந்து வர்த்திக்கும் திவ்யத் திருப்பதி.

(48) அவதாரிகை :—பரம பதத்திலே எம்பெருமானை இடைவிடாது அநுபவிக்கும் நித்ய ஸூரிகளும், அங்கே பரத்வத்திற்கு உரிய மேன்மை குணங்களை அநுபவிக்கலாமே யொழிய, ஸௌலப்ய ஸௌசீல்யாதிகளான—எளிமைக் குணங்களை அநுபவிக்க முடியா

தாகையாலே, அந்தச் சீலாதி குணங்களை யநுபவிப்பதற்காகத் திருமலையில் வந்துக் காத்திருக்கிறார்கள்; மேலும் இந்தத் திருமலைதான்—ஆச்ரிதர்களுடைய ஸகல ப்ரதி பந்தகங்களையும் போக்கி ரக்ஷித்தருளும் எம்பெருமான் உகந்தவூர்—என்றும் அருளிச் செய்கிறார்.

வேங்கடமே விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்—வேங்கடமே
தானவரை வீழத்தன் ஞாழிப் படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை. 48

பதவுரை :—விண்ணோர் - நித்ய ஸூரிகள். மெய்ம்மையால் - உண்மையான பக்தியுடனே. தொழுவதுவும் - ஆச்ரயிப்பதும். வேங்கடமே - திருமலையைத் தான். வினை-பாபங்களையும், மெய் நோய் - சாரீரக துக்கங்களையும், தீர்ப்பதுவும் - நிர்மூலமாக்க வல்லதும். வேங்கடமே - திருமலைதான். தானவர் வீழ் - அஸுரப் பூண்டுகள் மாளும்படி. தன் ஆழி - தனது சக்ராயுதத்தை. படை தொட்டு - பிடித்து. வானவரை - தேவர்களை. காப்பான் - காத்தருளும் எம்பெருமானுடைய. மலை - திருமலை. வேங்கடமே - திருவேங்கடமே யாம்.

கருத்து :—சுத்த ஸத்வ மயமான பாம பதத்திலே எல்லோரும் ஸஜாதீயரா யிருக்கையாலே, எம்பெருமானுடைய ஸௌலப்யாதி கல்யாண குணங்கள் ப்ரகாசிப்பதில்லை. இருட்டறையில் விளக்குப் போலே அவையெல்லாம் ப்ரகாசிப்பது இந்நிலத்திலே தான். ஆகையாலே, ஸதா பச்யந்திகளான நித்ய ஸூரிகளும், அந்தக் கல்யாண குணங்களை அநுபவிப்பதற்காகப் பரம பக்தியுடன் திருமலையில் வந்து பகவானைத் தொழுது கொண்டிருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட திருமலை தானே ஆச்ரிதர்களுடைய எல்லா வினைகளையும், மெய் நோய்களையும் தீர்க்கும்; ஆகையினால், அது ஒன்றையே தொழ நம் வினைகளெல்லாம் தீரும். அது "வேங்கட" மில்லையா? 'வேம்' என்றால்—பாபங்கள், (அதுகளை) 'கட' மென்றால்—தீர்க்கும் என்று பொருள். அதனால் இந்த மலைதான்—தன்னை ஆச்ரயித்த தேவர்களைக் காப்பாற்றுவதற்காக, தனது சக்ராயுதத்தை ப்ரயோகித்து அவர்களுக்கு விரோதிகளான அஸுரர்களை ஸம்ஹரித்த பரம புருஷன் உவந்து எழுந்தருளியிருக்கும் திவ்ய திருப்பதி.

குறிப்பு :—1. வேம் - பாவங்கள். கடம் - எரித்தல். ஸர்வ பாவங்களையும் எரிப்பதனால் திருமலை "வேங்கடம்" என்னும் பெயரைப் பெற்றது.

இந்த வ்யுத்பத்தியை உட்கொண்டு ஆழ்வார் இங்கு இரண்டாம் அடியை அருளிச் செய்தார் போலும்.

2. எம்பெருமான் - தனது திருவாழியால் அஸுரர்களைத் தொலைத்து, தேவர்களைக் காத்தருளினது போலவே, நாம் அவனை ஆச்ரயித்தால், நம்முடைய துன்பங்களையும் தொலைத்தருள்வதற்காகவே தான் திருமலையில் எழுந்தருளியிருக்கிறான் — என்று பின்னடிகளால் ஸூசிதமாயிற்று.

(90) அவதாரிகை :—திருவேங்கட முடையான் திருவடிகளிலே அடிமை செய்வார்களே பரம பதத்தை ஆள்பவர்கள்; அதிலும்—அபிமானிக்கப் படுமவர்கள்—விலக்ஷணமான பாகவத ப்ராப்தி காமராய், அதைப் பெறுவார்கள். அவர்களே சிறந்தவர்கள். மேலும் "யதோபாஸந பாவி பலம்" (உபாஸநானுகுணமாகப் பலத்தைப் பெறுவர்கள்) என்கிற ந்யாயத்தாலே பாகவத ஸமாச்ரயணத்தாலே பாகவதர்களைப் பெறுவார்கள் — என்று அருளிச் செய்கிறார்.

வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான்
பால்திருந்த வைத்தாரே பல்மலர்கள்— மேல்திருந்த
வாழ்வார் வருமதிபார்த்து அன்பினராய் மற்றவர்க்கே
தாழ்வா யிருப்பார் தமர். 90

பதவுரை :—விண் - பரம பதத்தில். வீற்றிருந்து - பெருமை பொலிய இருந்து. ஆள வேண்டுவார் - ஆட்சி செய்ய விரும்பி, அப்படியே பேறு பெற்றவர்கள். வேங்கடத்தான் பால் - திருவேங்கடமுடையான் விஷயத்தில். பல் மலர்கள் - பலவிதமான புஷ்பங்களை. திருந்த - நன்றாக. வைத்தாரே - ஸமர்ப்பித்தவர்களே யாவர். வரும் மதி - பகவானுடைய திருவுள்ளத்தில் ஓடுகின்ற கருத்தை யறிந்து. அன்பினராய் - பக்தர்களாய். மற்றவர்க்கே - அந்த எம்பெருமானுக்கே. தமர் - அடிமைப்பட்டவர்கள். மேல் திருந்த வாழ்வார் - முன் சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும் விலக்ஷணராக வாழ்பவராகுவர்.

கருத்து :—திருவேங்கட முடையான் திருவடிகளில் பல விதமான சிறந்த புஷ்பங்களைப் பக்தி ச்ரத்தைகளுடன் நன்றாக ஸமர்ப்பித்தவர்களே—பரமபதத்தில் பெருமை பொலியவிருந்து ஆட்சி செய்ய விரும்பி அப்படியே பேறு பெற்றவர்கள். ஆயினும், அந்த எம்பெருமானுக்கு அடிமையாயிருந்து ததிய கம்பீர மனோஹஸாரிகளான பாகவதர்களால் "இவர்கள் நம்முடையவர்கள்" என்று

அங்கீகரிக்கப்படுமவர்கள் முன்னடிகளில் சொல்லப்பட்ட அதிகாரி களிற் காட்டிலும் சிறந்து வாழ்பவர்.

குறிப்பு :—1. பாகவதர்களால் அங்கீகரிக்கப் பெறுபவர்கள் எல்லாரி லும் மேற்பட்டவர்கள்—என்று இப்பாசுரத்திற்கு ப்ரதான தாத்பர்யம்.

2. "வரும் மதிபார்த்து"—எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பின்பற்றி செல்லுமவர்கள்—என்று கருத்து.

3. "பவந்தி லீலா விதயச்ச வைதிகா: த்வதீய கம்பீர மநோநு ஸாரிண:" என்னும் ஸ்தோத்ர ரத்ன சுலோகம்—இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

ஸ்ரீ திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே பக்திஸாராய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமழிசைப்பிரான் அருளிச்செய்த திருச்சந்த விருத்தம்.

---

அவதாரிகை :—இனிய ஓசையால் அமைந்த விருத்த மாகையால் "திருச்சந்த விருத்தமெனப்படு மிப்ப்ரபந்தத்தால், பரமதயாளுவான ஸ்ரீ திருமழிசையாழ்வார், உலகத்தாரை வாழ்விப்பதற்காகத் தாம் பெற்ற பேற்றை இனிதாகப் பேசி மகிழ்ந்து போற்றுகிறார்.

நான்முகன் திருவந்தாதியில்—ஸ்ரீமந் நாராயணனது பரத்துவத்தைப் பலவாறாக அருளிச் செய்தார்; இப் ப்ரபந்தத்தில் விஷயாந்தரங்களிலும், தேவதாந்தரங்களிலும் கால் தாழ்ந்து பாழ்பட்டொழியாமே, எம்பெருமானுடைய பெருமையை வாய் வெருவுவதே போது போக்காகப் பெற்றோம்; நம் பாக்யமே பாக்யம்—என்று அருளிச் செய்கிறார்.

இப் ப்ரபந்தத்தில் திருவேங்கடமுடையான் விஷயமாக இரண்டு பாசுரங்கள் உள்ளன.

(60) அவதாரிகை :—அதில் இந்தப் பாசுரத்தில்—தன்னை ஆச்ரயித்தவர்கள் பக்கலுண்டான வ்யாமோஹத்தாலே தான், எம்பெருமான் திவ்யத் திருப்பதிகளில் உகந்தருளி யிருக்கிறான்—என்று அருளிச் செய்கிறார்.

செழுங்கொழும் பெரும்பனி பொழிந்திட உயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள் நின்று
எழுந்திருந்து தேன்பொருந்து பூம்பொழில் தழைக்கொழுஞ்
செழுந்தடங் குடந்தையுள் கிடந்தமாலு மல்லையே? 60

பதவுரை :—செழும் கொழும் - இடைவிடாதே தாரைகளாய் விழுகின்ற. பெரும் பனி - கனத்த மூடுபனியானது. பொழிந்திட - சொரிய. உயர்ந்த வேய் - உயர வளர்ந்திருக்கும் (மஹோந்நதமான) மூங்கில் பணைகள்

விழுந்து - அந்தப் பனியின் கனத்தாலே தரையிலே சாய்ந்து. உலர்ந்து - பின்பு ஸூர்ய கிரணங்களாலே உலர்ந்த பிறகு. எழுந்து - உயரக் கிளம்பி. விண் - ஆகாசத்தை. புடைக்கும் - கிட்டும். வேங்கடத்துள் - திருவேங்கட மலையில். நின்று - நின்று கொண்டு. தேன் - வண்டுகளானவை. எழுந்து - கிளர்ந்து. இருந்து - திரும்பவும் படிந்து. பொருந்து - வர்த்திக்கிற. தழை - சாகோபசாகங்களாய். கொழு - விசாலங்களாய். பூம் - புஷ்பங்களோடு கூடின. பொழில் - மரங்களோடும். கொடிகளோடும் ஸம்ருத்தங்களாயிருக்கிற சோலைகளோடே கூடியிருக்கப் பெற்றதும். செழும் - ஜல ஸம்ருத்தங்களாய், அழகு பொருந்திய. தடம் - தடாகங்களையுடைய. குடந்தையுள் - திருக்குடந்தையிலே. கிடந்த - கண் வளர்ந்தருளுகிற. மால் - ஆச்ரிதர் பக்கல் அதிக வ்யாமோஹத்தையுடைய பெருமான். அல்லையே - அன்றோ?

கருத்து :—கனத்த மூடு பனியானது இடைவிடாதே தாரை தாரையாய்ச் சொரிய, அந்தப்பனியின் கனத்தாலே மிகவும் உயர்ந்த மூங்கில்கள் தரையளவும் சாய்ந்து, பின்பு ஸூர்ய கிரணங்களாலே பனி உலருகையாலே, அம்மூங்கிற் பணைகள் உயரக் கிளம்பி ஆகாசத்தி னெல்லை யளவிலே போய் முட்டும் படியாகப் பெற்ற மஹோந்நதமான திருவேங்கடமலையில் நின்றருளியும், வண்டுகள் உயரக் கிளம்புவதும், மலர்களில் திரும்பவும் படிந்து பலவகைக் கோலாஹலங்களைச் செய்து கொண்டு களிக்கப்பெற்ற வித விதங்களான புஷ்பங்களோடு கூடின மரங்களோடும், கொடிகளோடும் ஸம்ருத்தமாயிருக்கிற சோலைகள் வாய்ந்து, ஜல பூர்ணங்களாய் ரமணீயங்களாயிருக்கும் திவ்ய தடாகங்களோடு கூடியிருக்கிற திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருளியும், அடியார் பக்கல் அத்யந்த வ்யாமோஹத்தைக் கொண்டு மகிழ்ந்திருக்கு மவனல்லவா எம்பெருமான்?

குறிப்பு :—1. திருமலையிலே ஸம்பந்தித்தவை யெல்லாம் உபாதேயங்களாகையாலே பனியை "செழுங் கொழும் பெரும்" என்று போரப் பெலிய வர்ணித்தார்.

2. "செழுங் கொழும்" என்பதை வேயிலே அந்வயித்து 'செழுங் கொழும் உயர்ந்த வேய், பெரும் பனி பொழிந்திட விழுந்து' என்றும் பொருள் கூறலாம். திருவேங்கடமுடையானின் விசேஷ கடாக்ஷமே விளை நீராக வளருகிற மூங்கில்களாகையாலே எல்லாமும் பொருந்தும்.

(81) அவதாரிகை :—ஆச்ரித விரோதிகளை நிர்மூலமாக்கி, ஆச்ரிதர்களை ஸம்ரக்ஷிப்பதே பரம தர்மமாகக் கொண்டு வெற்றியோடு திருமலையில் வர்த்திக்கிற திருவேங்கடமுடையான் திருவடிகளையே

நாள் தோறும் ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கள்—என்று பரம க்ருபை யாலே ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்கிறார்.

கடைந்தபாற் கடல்கிடந்து காலநேமியைக் கடிந்து
உடைந்தவா லிதன்தனக்கு உதவவந்து இராமனாய்
மிடைந்தஏழ் மரங்களும் அடங்கவெய்து வேங்கடம்
அடைந்தமால் பாதமே அடைந்துநாளும் உய்ம்மினோ. 81

பதவுரை :—கடைந்த - (கூர்ம ரூபியாயிருந்த போது) கடையப்பட்ட. பால் கடல் - க்ஷீராப்தியிலே. கிடந்து - திருக்கண் வளர்ந்தருளியும். காலநேமியை - (இராவணனுடைய மாதுலனான) காலநேமி யென்னுமஸுரனை. கடிந்து - ஒழித்தருளியும். உடைந்த - பயப்பட்டுக் கிடந்த. வாலி தன்தனுக்கு - வாலியின் தம்பியான ஸுக்ரீவனுக்கு. உதவ - ஸஹாயம் செய்ய. இராமனாய் வந்து - ஸ்ரீராமபிரானாய் வந்து அவதரித்து. மிடைந்த - ஒன்றோடொன்றாகப் பிணைந்து கிடந்த. ஏழ் மரங்களும் - ஏழு மராமரங்களையும். அடங்க - ஏழேழாக இருந்த குல பர்வதாதிகளையும். எய்து - ஒரு பாணத்தாலே துளைப்படுத்தி. வேங்கடம் அடைந்த - (அந்த வெற்றி விளங்க) திருவேங்கட மலையில் வீற்றிருப்பவனான. மால் - ஸ்ரீயபதியான எம்பெருமானுடைய. பாதமே - திருவடிகளையே. நாளும் - நாள்தோறும். அடைந்து. ஆச்ரயித்து. உய்ம்மின் - உஜ்ஜீவியுங்கள்.

கருத்து :—அன்பர்களே! ஸம்ஸாரிகளே! அடியார்களான அமரர்களுக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்து, நிலை ஜகத்ரக்ஷண யோக சிந்தையோடு அதில் கண் வளர்ந்தருளியும், தாரகாஸுர யுத்தத்தில், மிகவும் துர்ஜயனான 'கால நேமி' என்னும் இராவண னுடைய மாதுலனான அஸுரனை ஸம்ஹரித்தும், பயப்பட்டுத்தாய் நடுங்கிக்கிடந்த வாலி தம்பியான சுக்ரீவனுடைய நம்பிக்கைக்காக ஒரே பாணத்தினால் ஸப்தஸால வ்ருக்ஷங்களையும், ஸப்த குல பர்வதங்களையும் துளைத்தருளியும், அந்த வெற்றிகள் விளங்கப் பரமபோக்யஸ்தானமான திருவேங்கடமலையில் வீற்றிருக்கும் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளையே நாள் தோறும் ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கள்.

குறிப்பு :—1. 'கால நேமி' என்பவன் இராவணனுடைய மாமா; தாரகாஸுர யுத்தத்தில் இவன் எம்பெருமானால் கொல்லப்பட்டான்.

ஸ்ரீ திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

-ꟷ-

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம்.

---

அவதாரிகை :—ப்ரபந்நஜந கூடஸ்தரும், மயர்வற மதிநல மருளப் பெற்ற ஆழ்வார்களில் தலைவரும், அங்கி ஸ்வரூபருமான ஸ்ரீ நம்மாழ்வார்—முறையே நான்கு வேதங்களின் ஸாரமாகத் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி—என்கிற நான்கு திவ்ய ப்ரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளினர். அதில் முதல் ப்ரபந்தமான இத் திருவிருத்தத்தில், ஆழ்வார் தமது ஞானக் கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி 'தேவரீரை அநுபவிக்கைக்கு இடைஞ்சல்களாக இருக்கிற தேஹ ஸம்பந்தத்தைப் போக்கி யருளவேணும்' என்று ஸம்ஸார ஸம்பந்த நிவ்ருத்தியை அபேக்ஷிக்கும் முகத்தால், இவ் விருள்தருமா ஞாலத்தில் இருப்பு, தமக்கு மிகவும் அஸஹ்யமா யிருக்கிற செய்தியையும், எம்பெருமானுடைய நித்யாநுபவத்திலேயே தமக்குக் காதல் கிளர்ந்த செய்தியையும் அபிவர்ணிக்கிறார்.

ஆழ்வார் தமது வ்ருத்தங்க (செய்திக)ளை எம்பெருமான் முன்னிலையில் விண்ணப்பஞ் செய்கையால், இப் ப்ரபந்தத்துக்கு "திருவிருத்தம்" என்று திருநாமமாயிற்று.

இந்த ப்ரபந்தத்தில் திருவேங்கட முடையான் விஷயமாக 8 பாசுரங்கள் அமைந்துள்ளன.

(8) அவதாரிகை :—அதில் இந்தப் பாசுரத்தில்—பகவல் லாபதசையிலே ஆச்வாஸஜநகரான அன்புடைய பாகவதர்கள், பகவத் பரராய்க் கொண்டு திருமலைக்குப் போக விரும்ப, அதை யறிந்த இவர், அவர்கள் பிரிவாற்றுமையால் அவர்களை நோக்கி, தலைமகன் பொருள் வயின் பிரிவறிந்து, தலைமகள் தனது தோழிக்கு உரைத்த வார்த்தையாலே, அருளிச் செய்கிறார்.

பொருளீட்டுதற் பொருட்டுத் தலை மகளைப் பிரியக் கருதிய தலை மகன், தலை மகளிடத்திலே பணிவான செய்கைகளைச் செய்தலும், சில பணிவான சொற்களைச் சொல்லுதலும் செய்ய, அது நோக்கித் தலை மகள் "இதற்கு முன்பு இவர் இப்படி ஒரு நாளும் இருந்த தில்லை. இது அதிவிலக்ஷணமா யிருக்கிறது: இதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கவேணும். அது எதுவாக இருக்கக் கூடும்? பொருள் சம்பாதிக்கும் பொருட்டு நம்மைப் பிரிந்து போக நினைத்ததா யிருக்க வேண்டும். பிரிந்துபோக நினைத்திலராகில், இப்படிப்பட்ட புதிய செய்கைகளைச் செய்ய நேர மாட்டாது" என்று நிச்சயித்து, அந்த நிச்சயத்தைத் தனது தோழியிடம் வாய்விட்டுச் சொல்லுகிற பாசுரமாமிது.

கட்டளைக் கலித்துறை.

காண்கின் றனகளும் கேட்கின் றனகளும் காணில்இந்நாள்
பாண்குன்ற நாடர் பயில்கின் றனஇதெல் லாம்அறிந்தோம்
மாண்குன்ற மேந்திதண் மாமலை வேங்கடத்து உம்பர்நம்பும்
சேண்குன்றம் சென்று பொருள்படைப் பான்கற்ற திண்ணனவே. 8

பதவுரை :—குன்றம் நாடர் - மலைகளை யுடைத்தான நாட்டுக்குத் தலைவரான நாயகர். இந்நாள் - இன்றைய தினத்தில். பயில்கின்றன - பலவாறாகக் நடத்துகின்றவையான. காண்கின்றனகளும் - காணப்படுகிற செய்கைகளும். கேட்கின்றனகளும் - கேட்கப்படுகிற சொற்களும். காணில் - ஆராய்ந்து பார்க்குமிடத்து. பாண் - வெளியுபசார மாத்திரமாம். இது எல்லாம் - இந்த உபசாரங்களெல்லாம். மாண் - மாட்சிமை தங்கிய. குன்றம் - கோவர்த்தன கிரியை. ஏந்தி - அநாயாஸமாக எடுத்த கண்ணபிரானுடைய. தண் - குளிர்ந்த. மா மலை - சிறந்த மலையாகிற. வேங்கடத்து - திருவேங்கட மலையின். உம்பர் - மேலுலகத்தாரால். நம்பும் - விரும்பப்படும். சேண் - உயர்ந்த. குன்றம் - சிகரத்தை. சென்று - போய் அடைந்து. பொருள் படைப்பான் - பொருளீட்டும் பொருட்டு. கற்ற - (புதிதாக) அப்யஸித்த. திண்ணனவு - வலிமையின் செயல் (என்று). அறிந்தோம் - தெரிந்து கொண்டோம்.

கருத்து :—அன்பு புரிந்த என் தோழியே! மலைகளை யுடைத்தான நாட்டுக்குத் தலைவரான நாயகர், இன்றைய தினத்தில் பல வகையாக நடத்துகின்ற செய்கைகளும், சொல்லுகின்ற சொற்க ளும், ஆராய்ந்து பார்த்தால் புறப் பூச்சாகத் தோன்றுகின்றன. இங்ஙனம் வரம்பு கடந்த விதமாக இவர் செய்வதற்கும், சொல்வ

தற்கும் ஒரு கருத்து இருக்க வேண்டும். அது எதுவாக இருக்கக் கூடுமென்றால்; மாட்சிமை தங்கிய கோவர்தனகிரியை ஏந்தி, ஆனிரைக்காத்த கண்ணபிரான் உகந்து எழுந்தருளியிருக்கும் தண் மாமலைத் திருவேங்கடத்து உம்பர் விரும்பும் சேண் குன்றம் சென்று, பொருள் சம்பாதிக்கும் பொருட்டு நம்மைப் பிரிந்து போக நினைத்ததா யிருக்க வேண்டும். பிரிந்து போக நினைத்திலாகில், இப்படிப் பட்ட புதிய செய்கைகளைச் செய்யவும், புதிய வார்த்தைகளைச் சொல்லவும் நேரமாட்டாது.

குறிப்பு :—1. இப்பாசுரம்—தலைமகள் தோழியை நோக்கிக் கூறியதாகவுமாம்; தலைவனை நோக்கியே முன்னிலைப் படர்க்கையாகக் கூறியதாகவுமாம்; தலைமகன் பொருள்வயிற் பிரிவறிந்த தோழி தலைவனை நோக்கிக் கூறியதாகவுமாம்.

2. ஆழ்வாரைப் பிரிந்துப் போகலுற்ற பாகவதர், இவரநுமதி பெற்று விடை கொள்ள வேண்டி, இவர் பக்கலிலே பலவாறு பணிந்து, வணக்கத்தோடு சில வார்த்தைகளை விண்ணப்பஞ் செய்ய, 'இது வெல்லாம் இவர்கள் பிரிவுக்கு அடியாம்' என்று அறிந்து, "இவர்கள் பணிவுகளெல்லாம் வெளி உபசாரமாக உள்ளன. இதின் அபிப்ராயத்தை அறிந்தோம். குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன் சென்றுசேர் திருவேங்கட மாமலையிலே நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் மஹோந்நதமான சிகரத்தைச் சென்று சேர்ந்து, அங்கு வைத்த மாநிதியான அலர்மேல் மங்கையுறை மார்பனைப் பெற்று ஸேவிப்பதற்குத் துணிந்த துணிவே இது" என்று ஆழ்வார் அருளிச்செய்கிறார்—என்று ஸ்வாபதேசார்த்தம்.

(10) அவதாரிகை :—பிரிய மாட்டாத அன்பான பாகவதர் இவ்வாழ்வாருடைய அவயவச் சோபையிலும், அருளிச் செய்கிற இனிய சொற்களிலும் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தையை, தோழியும், தலை மகளும் ஒன்று கூடிப் புனங் காத்திருக்கிற ஸமயத்திலே எதிர்ப்பட்ட தலைவன் மதி யுடன்படுத்தலுற்றுக் (தோழியின் கருத்தைத் தனது கருத்தோடு ஒரு வழிப்படச் செய்து) குறையுற உரைத்த பாசுரத்தாலே அருளிச் செய்கிறார்.

மாயோன் வடதிரு வேங்கட நாடவல் லிக்கொடிகாள்!
நோயோ உரைக்கிலும் கேட்கின்றி லீர்உரை யீர்நுமது
வாயோ? அதுவன்றி வல்வினை யேனும் கிளியுமெள்கும்
ஆயோ? அடும்தொண்டை யோ? அறை யோ? இ தறிவரிதே. 10

பதவுரை :—மாயோன் - ஆச்சரியகரமான திவ்ய கல்யாணகுண சேஷ்டிதங்களையுடைய எம்பெருமானது. வட திருவேங்கடம் - வட திசைக்கு எல்லையாயிருக்கிற திருவேங்கடமாமலையை. நாட - இருப்பிடமாகவுடைய. வல்லி கொடிகாள் - பூங்கொடி போன்ற இளம் பெண்களே! நோய் ஓ - காதல் நோயையோ. உரைக்கிலும் - நான் சொன்னாலும். கேட்கின்றிலீர் - கேட்கிறீரில்லை. நுமது - உங்களுடைய. வாயோ - வாயின் அழகோ. அது அன்றி - அதுவல்லாமல். வல்வினையேனும் - (கால் தாழ்ந்து) கொடிய தீவினையையுடைய நானும். கிளியும் - உங்கள் புனத்திலே போகம் படிந்து உண்ணும் கிளியும். எள்கும் - தளரும்படியான. ஆயோ - 'ஆயோ' என்கிற சொல்லோ? தொண்டையோ - அக்காலத்தில் தொண்டைப் பழம் (கோவைக் கனி) போலே சிவந்த உங்களது அதர சோபையோ? அடும் - (என்னை) உயிர்க்கொலை செய்யா நிற்கும். இது அறிவு - இவற்றில் இன்னது என்னை வருத்துமென்பது அறிய. அரிது - அரிதாயிருக்கின்றது. உரையீர் அறையோ - நீங்கள் சொல்லவல்லீராகில் சொல்லுங்கள்.

கருத்து :—ஆச்சர்ய குண சேஷ்டிதனான எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் வட திருவேங்கடமலையில் வாழ்கின்ற பூங்கொடிகள் போன்ற இளம் பெண்களே! நான் படும் நோயை நானே சொல்லிக் கொண்டாலும், அந்தோ! காது கொடுத்துக் கேட்கின்றீரில்லையே! நான் வருத்தப்படுவது எனக்குத் தெரிகிறதே யொழிய, அதற்குக் காரணம் இன்னது என்பது எனக்குத் தெரியவில்லை. நீங்களே தயவு செய்து சொல்லுங்கள். உங்களுடைய வாய் அழகோ? அன்றிக்கே, நானும், என் கிளியும் தளரும்படியான உங்களுடைய "ஆயோ!" என்ற சொல்லோ? கோவைக் கனி போல் சிவந்த உங்களது அதர சோபையோ, என்னை உயிர்க்கொலை செய்யா நிற்கிறது? இவற்றில் இன்னது தான் வருத்துகின்றது— என்று அறிய அரிதாயிருக்கிறது. இதைத் தயவு செய்து நீங்களே உரையிரே.

குறிப்பு :—ஆச்சர்ய கல்யாணகுண சேஷ்டிதனான எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்தமாகப் பரமபதத்தை விட்டுத் திருமலையில் வந்து வீற்றிருக்கும் நீர்மையை நாடுகின்றவரும், கொடிபோல் பாரதந்திரிய ஸ்வரூபத்தையுடையவருமான ஆழ்வாரே! உம்மிடத்து ப்ரீதி விசேஷத்தினால் நாங்கள் படும் பாட்டை விண்ணப்பம் செய்தாலும் கேட்கின்றீரில்லை. உம்முடைய திருமுக மண்டல மலர்ச்சியோ? அன்றிக்கே, உம்மைப் பிரிந்து போக முடியாதபடி கட்டுகிற பாசபந்தத்தையுடைய யாமும், பைங்கிளி வண்ணனான எம்பெருமானும் ஈடுபடும்படியான உமது திருவாய் மொழியோ? வாயின் அழகோ? குரலோசையோ? இவற்றில் எம்மை வருத்துவது இன்னதென்று பகுத்தறி

தல் அரிதாயிருக்கிறது. தயவு செய்து நீர் தாமே இதனை நிச்சயித்துச் சொல்வீர்—என்று இப்பாசுரத்திற்கு ஸ்வாபதேசம்.

(15) அவதாரிகை :—ஆழ்வாருடைய ஞான விசேஷத்திலே ஈடு பட்டவர்கள், அவருடைய ஞான பரிபாகத்தைத் துதிக்கச் செய்தே உதாஸீனரா யிருப்பார் சிலரைக் குறித்து, அவர்கள் ஹ்ருதய சோத நார்த்தமாகப் பக்கத்திலிருக்கும் அன்பர்கள் சொன்ன பாசுரத்தை, புனத்திடைக் களிறு வினவ வந்து தலைமகளின் கண்ணழகைக் கொண்டாடின தலைமகனைக் குறித்துக் கருத்தறிந்து தோழி உரைத்த பாசுரத்தாலே, அருளிச் செய்கிறார்.

கயலோ நுமகண்கள்? என்று களிறு வினவிநிற்றீர்
அயலோ ரறியிலும் ஈதென்ன வார்த்தை? கடல்கவர்ந்த
புயலோ டுலாங்கொண்டல் வண்ணன் புனவேங் கடத்தெம்மோடும்
பயலோ விலீர்கொல்லை காக்கின்ற நாளும் பலபலவே. 15

பதவுரை :—களிறு வினவி - யானை இங்கு வரக் கண்டதுண்டோ? என்று கேட்கத் தொடங்கி (அத்தை மறந்து) கயலோ நும கண்கள் - உங்களுடைய கண்கள் கயல் மீன்கள் தாமோ? என்று - என்று (எங்களுடைய கண்ணழகைக் கொண்டாடிக் கொண்டு) நிற்றீர் - கால் பேராமல் நின்றீர். அயலோர் - அயலார். அறியிலும் - அறிந்தாலும். ஈது - இது. என்ன வார்த்தை - என்ன பொருந்தாத வார்த்தை. கடல் - கடல் நீரை. கவர்ந்த - முழுதும் கொள்ளை கொண்டதும். புயலோடு - மழையோடு. உலாம் - மந்தமாகச் சஞ்சரிப்பதுமான. கொண்டல் - காள மேகம் போன்ற. வண்ணன் - திருநிறத்தையுடையவனான எம்பெருமானது. புனம் - பல கொல்லைகளையுடைய. வேங்கடத்து - திருவேங்கட மலையிலே. கொல்லை - புனங்களை. காக்கின்ற - காத்து வருகிற. நாளும் பல பல - பல பல நாள்கள் ஒன்றிலும். எம்மோடும் - எங்களோடு (நீர்). பயலோ இலீர் - பாகமுடையீரல்லீர்.

கருத்து :—ஐயா! நீர் யானையைப் பற்றிக் கேட்க வந்தவராயின், அந்தக் கேள்வியோடு நில்லாமல், எமது கண்ணழகைப் பற்றிப் பேசுகின்றீரே! அஸங்கதமான இவ்வார்த்தை அக்கம் பக்கத்தார் காதில் விழுந்தால் என்ன நினைப்பார்கள்? இவர்களுக்கு ஏதோ ஸம்பந்தமுண்டு போலும்—என்றல்லவா நினைப்பார்கள். ஆதலால், நீர் கூட்டுப்பயிர் பார்ப்பவர் போல் இங்கு எம்முடன் நெடும் பொழுது வீண் பேச்சுப் பேசி நிற்பது தகாது. நீருண்ட மேகம் போன்ற திருமேனி நிறத்தை யுடைய எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் திரு

வேங்கடமலையில் நாங்கள் புனல்காப்பது நேற்று இன்று அல்ல; பல வருஷ காலமாகத் தினந் தோறும் புனங்காத்து வருகிறோம். இப்புதுமையை ஒருநாளும் கண்டதில்லை—என்று "இவை கண்களோ? கயல்களோ? என்ற நாயகன் கேள்விக்குக் கருத்தை குறிப்பாலறிந்த தோழி, அவனது ஆசையை மறுப்பதாகப் பிறர்க்குத் தோன்றும்படி இசைக்கும் வகையாக—கருத்து.

அங்ஙன மன்றிக்கே,—அன்பு மிகுதி தோற்றச் சொல்லு மபிப்பிராயத்திற் கிணங்கவும் யோசித்துக் கருத்து கூறலாம்; அது எப்படி யென்றால் காண்மின் :—

நும கண்கள் கயலோ? என்று எங்கள் கண்ணழகி லீடுபட்டுப் பேசினீர்; உமது உகப்புக்கு மிகவும் மகிழ்ச்சி யடைந்தோம். ஆனால், யானையைப்பற்றிக் கேட்டீரே, அது எதுக்கு? இப்படிக் களிறு வினவி நிற்பது உமக்குத் தகுமோ? அன்பை அயலோர் அறியினும் அறிக. அதனால் நமக்கென்ன? வந்த காரியத்தை விட்டுக் களிறு வினவுதல் ஒரு வார்த்தையோ? நாங்கள் உமக்கு அயலார் அல்லோம். உமது வரவை எதிர்பார்த்து நாங்கள் நெடு நாளாகக் கொல்லை காத்திருக்க, நீர் இன்றளவும் வந்திலீரே? என்றுத் தலைமகளின் காதலைத் தலைமகனுக்குத் தோழி குறிப்பித்தாள்—என்று உள் கருத்து.

குறிப்பு:—1. தமிழர்கள் இதை "வேழம் வினாதல்" என்பார்கள். அதாவது—நாயகன் நாயகியையும் தோழியையும் கண்டு, ஏதோ வேட்டைக்காகத்தான் காட்டிடத்தே வந்ததாகவும், அங்கு ஒரு யானை தன் பிடியைத் துறந்து ஓடிச் சென்றதாகவும், அதனைத் தேடிக் கொண்டு தான் வருவதாகவும் பாவனைக் காட்டி, 'இங்ஙனே ஒரு மத யானை வரக் கண்டதுண்டோ?' என்று புனங் காப்பாரைக் கேட்பது. இதைக் "களிறு வினாதல்" என்றும் சொல்லுவார்கள். இன்னமும், கலைமான் வினாதல், வழி வினாதல், பதி வினாதல், பெயர் வினாதல்—என்று பல வினாக்களுமுண்டு.

2. ஆழ்வார் தாமே எழுந்தருளியிருந்த இருப்பைக் கண்டு அப் பாகவதர்கள் அஸங்கத பாஷணம் பண்ணவே, ஆழ்வாருடைய ஞான பரிபாகத்திலே இழிந்தவர்கள் அவர்களையும் திருத்தி உள்ளே புகுரவிட்டார்கள்—என்று ஸ்வாபதேசம்.

(31) அவதாரிகை:—பகவத் விஷயத்திலே அவகாஹித்த இவருடைய நெஞ்சை யகல்விக்கைக்கு ஸர்வ சக்தியானவன் தனக்கும் சக்யமின்றிக்கே யிருக்க, நம்மாலே செய்யலாமோ? என்று அவர்கள் கைவிட்டபடியை யறிந்து, திருமலையை நோக்கிச் சொல்லுகிற

சில உதார ஸ்வபாவரைக் கண்டு, இவர்கள் நமக்குக் கடகராகக் கூடு மென்று நினைத்து, மேகங்களைத் தூதாக விடத்தேடு நாயகி வார்த் தையாலே, அருளிச் செய்கிறார்.

இசைமின்கள் தூதென்று இசைத்தால் இசையிலம் என்தலைமேல்
அசைமின்க ளென்றால் அசையுங்கொ லாம்? அம்பொன் மாமணிகள்
திசைமின் மிளிரும் திருவேங் கடத்துவன் தாள்சிமய
மிசைமின் மிளிரிய போவான் வழிக்கொண்ட மேகங்களே! 31

பதவுரை :—அம் பொன் - அழகிய பொன்னும். மா மணிகள் - சிறந்த ரத்னங்களும். திசை - திக்குக்கள் தோறும். மின் மிளிரும் - மின்னல் போல ஒளி வீசப் பெற்ற. திருவேங்கடத்து - திருவேங்கட மலையினது. வல் தாள் - வலிய அடிவாரத்தையுடைய. சிமயம் மிசை - சிகரத்தின் மேலே. மின் மிளிரிய போவான் - மின்னல்கள் விளங்கச் செல்லும் பொருட்டு. வழிக் கொண்ட - ப்ரயாணப்பட்ட. மேகங்கள் - மேகங்களானவை. தூது - தூதுக்கு. இசை மின்கள் - இசைந்து சென்று (என் கணவனிடம் என் வார்த்தையை) சொல்லுங்கள். என்று - என்று. இசைத்தால் - சொல்லி வேண்டினால். இசையிலும் - அதற்கு உடன்பட்டுச் செல்லக் காண்கிறோ மில்லை. என் தலையின்மேல் அசைமின்கள் - நீங்கள் 'என் தலையின்மேல் பொருந்துங்கள்' என்று வேண்டினால். அசையும் கொல் ஆம் - அங்குச் செல்லக் கூடுமோ?

கருத்து :—அழகிய பொன்களும், சிறந்த ரத்னங்களும், எங்கும் மின்னல் போல ஒளி வீசப் பெற்ற பரம போக்யமான திருவேங் கடமலையின் மேல் சென்று சேருவதற்காகப் புறப்பட்ட மாமுகில் களைத் தலைமகள் நோக்கி, "எனது தலைமகனுக்கு என் நிலைமையைச் சொல்லும் பொருட்டு நீங்கள் எனக்குத் தூதாக வேணும்" என்று வேண்டிக் கொள்ள, அதற்கு அவை உடன்படக் காணாமையால், மீண்டும் அவற்றை நோக்கி "எனது தலையின் மேல் உங்கள் ஸ்ரீ பாதத்தை வைத்தாவது நீங்கள் செல்லுங்கள்" என்று ப்ரார்த்தித் தாள். அதற்கும் அவை இசைய வில்லை. அதைக் குறித்துத் தலைவி இரங்குகிறாள்.

குறிப்பு :—1. இசையிலம் - இசையப் பெற்றிலோம். ஆம் - அசை. தாள் - பாதம். (ப்ரத்யந்த பர்வதம்). (மலைச் சாரல்).

2. அன்பர்களான பாகவதர்கள், ஆழ்வாருடைய பகவத்பரமான நெஞ்சை மீளச் செய்வது ஸர்வ சக்தனுக்கே அரிது என்றால் நம்மால் முடி

யுமோ? என்று கைவிட, ஆழ்வார் திருமலையை நோக்கிச் செல்லுகிற சிலரைக் கண்டு 'இவர் நம் குறையை எம்பெருமானிடம் விண்ணப்பஞ் செய்து, நம்மை அவனோடு சேர்ப்பதற்கு ஏற்ற புருஷகாரமாவர்' என்று நிச்சயித்து அவர்களை ஆசார்யராக வரிக்க, அவர்கள் இவருக்கு ஆசார்யராவதற்கு இசையாமையால், "நமது தலைமேல் இவர்களின் திருவடிகளை வைப்பதும் பரம புருஷார்த்த மாகும்" என்று கருதி அதனை வேண்டிக் கொள்ளுகிறார்.

(50) அவதாரிகை :—பகவானுடைய அலாபத்தினால் ஆழ்வார்க் குண்டான ஆர்த்தியைக் கேட்டுத் தேசாந்தரத்திலிருக்கும அன்பு டைய பாகவதர்கள், உடனே இவரைக் கண்ணாரக்காண வேணு மென்று வேகமாக வந்த ப்ரகாரத்தை, பொருள் வயிற்பிரிந்து வினை முற்றி மீண்டத் தலைமகன், தலைமக ளாற்றாமை நினைத்து, பாகனைத் தேரை விரைந்து நடத்தச் சொன்ன பாசுரத்தாலே, அருளிச் செய்கிறார்.

பொருளீட்டிவரப் பிரிந்து சென்ற நாயகன், காரியந் தலைக் கட்டித் தேரில் திரும்பி வருகிறான். வரும்போது தான் காலங் கடந்து வருகின்றமை கருதி நாயகி மிகவும் துயரப்படுவள்—என்றெண்ணித் தேர்ப்பாகனை நோக்கி "விரைந்து தேரை நடத்து" என்று கட்டளை யிடுகிறான்.

ஒண்ணுதல் மாமை யொளிபய வாமை விரைந் துநந்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவ! கடாகின்று தேன்நவின்ற
விண்முதல் நாயகன் நீள்முடி வெண்முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்று அருவிசெய் யாநிற்கும் மாமலைக்கே. 50

பதவுரை :—வலவ - பாகனே! ஒண்நுதல் - அழகிய நெற்றியை யுடை யவளான தலைவியின். மாமை ஒளி - மேனி நல் நிறத்தின் விளக்கம். பயவாமை - பசப்பு அடையாதபடி (அதற்கு முன்னதாகவே). நம் தேர் - நமது தேர். விரைந்து - மிகவும் வேகமாக. நண்ணுதல் வேண்டும் - சென்று சேர வேண்டும். தேன் - வண்டுகள். நவின்ற - பாடப் பெற்ற. விண் முதல் நாயகன் - பரமபத நாயகனான பெருமானுடைய. நீள் முடி - நீண்ட திருமுடியில் தரித்த. வெண் முத்தம் - வெளுத்த நல்ல முத்துக் களோடு கூடிய. வாசிகைத்து ஆய் - மாலைகள் போல் (முடி தொடங்கி). மண் முதல் - அடிவாரத்து நிலத்திலே. சேர் வுற்ற - சேரும்படியான. அருவி- நீர்ப் பெருக்கை. செய்யா நிற்கும் - செய்து நிற்கிற. மா மலைக்கு - பெரிய திருமலைக்கு. இன்று - இப்போது. கடாக - தேரை நடத்துவாயாக.

கருத்து:—நெடுநாள் நாயகியைப் பிரிந்த நாயகன், தான் மீண்டும் வரக்கடவதாக முன்பு சொல்லி வந்த ஸமயம் ஆஸந்நமான வளவிலே, அவளாற்றாமையைக் கருதி, நெடுநாட் போன வழியைச் சிறிது பொழுதில் கடந்து மீண்டும் வர ஆவல் கொண்டு பாகனை "விரைந்துத் தேரை நடத்து" என்று கட்டளையிடுகிறான்.

ஓ பாகனே! அழகிய நெற்றியை யுடையவளான என் அன் பார்ந்த நாயகியின் மேனி நல்நிறத்தின் விளக்கம் மாறிப் போவதற்கு முன்னம், வண்டுகள் பாடப் பெற்றதும், நீண்ட திருமுடியில் தரித்த வெண்முத்து மாலைகள் போலே, முடி தொடங்கி அடிவாரத்து நிலத் திலே விழுகின்ற அருவிகளோடு கூடி ஸௌபகசீதலமா யிருக்கும் திரு வேங்கடமா மலைக்குப் போய்ச் சேர வேண்டும். ஆகையால், விரை வாகத் தேரை நடத்து.

குறிப்பு:—எம்பெருமானையும், அவனடியாரையும் பிரித லாலாகிய துயரை ஆற்றி, ஆழ்வாரைத் தேற்றுவதாக மனோரதம் மேற்கொண்ட பாகவ தர்கள், தங்களுடைய நெஞ்சை விரையத் தூண்டி, திவ்யமான ஊர்த்வ புண்ட்ரத்தால் விளங்குகின்ற திருநெற்றியையுடைய ஆழ்வாரது அழகான திருமுக மண்டலத்தின் இயற்கை வண்ணங் கெடாதபடி, வெகு சீக்கிரமாக ஆழ்வார் எழுந்தருளி யுள்ள மேலான இடத்தைச் சென்று சேருகிறார்கள்— என்று ஸ்வாபதேசார்த்தம்.

(60) அவதாரிகை:—பக்கத்தி லிருப்போருங் கூட ஈடுபடும்படி யான இவருடைய ஆர்த்தியைக் கண்ட பரிவாரானவர்கள், ஈச்வர னுடைய அநந்ய ஸாத்யதையை அறியாதே, அவனை அடைவதற்கு உபாயங்களான பக்த்யாதிகள் பூர்ண மன்றியிலே யிருக்க, நடக்கிற த்வரையானது என்னா யிருக்கிறதென்று சொல்லுகிற பாசுரத்தை, தலைவி தலைவனை பிரிந்த நிலையில் ஆற்றாது வருந்தி வாய் பிதற்றிக் கண்ணீர் சொரிந்து உடலிளைத்து வடிவம் வேறுபட, அதைக் கண்ட தாய், இதற்குக் காரணம் என்னவோவென்று கவலைப்பட்டு, அவளது உயிர்த் தோழியைக் கேட்க, அவள் ஒளிக்காமல் உண்மையைக் கூறிவிட, அது கேட்ட தாய் இவளது இளமையைக் கருதி இரங்கிக் கூறிய துறையால், அருளிச் செய்கிறார்.

முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங் குழல்குறிய
கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல்மண்ணெல்லாம்
விலையோ வெனமிளி ரும்கண் இவள்பர மே? பெருமான்
மலையோ திருவேங் கடமென்று கற்கின்ற வாசகமே. 60

பதவுரை :—முலையோ - யௌவன ஸூசகமான முலைகளோ வென்றால். முழு முற்றும் - மிகவும் முழுக்க (ஸமக்ரமாக). போந்தில - தோற்றத்தினவில்லை. மொய் பூங்குழல் - செறிந்த பூவையுடைத்தான குழல். குறிய - முடி கூடாமல் குட்டையாயுள்ளன. கலையோ - ஆடையோ வென்றால். அரை இல்லை - இடையில் பொருந்த உடுக்கப்படுவதில்லை. நாவோ - நாக்கோ வென்னில். குழறும் - திருந்தச் சொல்லாது. கண் - கண்களோ வென்னில். கடல் - கடல் சூழ்ந்த. மண் - உலக முழுவதும். விலையோ என - இவற்றுக்கு விலைப் பொருளோ? என்று சொல்லும்படி. மிளிரும் - செவ்வே நோக்கும்படி மிளிரா நின்றன. பெருமான் மலையோ - தலைவனுன பெருமான் இருப்பிடமோ. திருவேங்கடம் - திருவேங்கட மலை. என்று - என்று. கற்கின்ற - பலகாலும் சொல்லிப் பயில்கின்ற. வாசகம் - வார்த்தை. இவள் பரமே - இளமைப் பருவமுடைய இவளிடம் உண்டாகக் கடவதோ ?

கருத்து :—நாயகனை வசப்படுத்துவது, முலையழகாலே யாதல், சொற் சாதுர்யத்தாலே யாதல், கருத்தோடு கடைக் கணித்துப் பார்க்கும் குறிப்பு நோக்குதலிலுதலால் கூடுவதாயிருக்க, முலையும் அரும்பாதே, குழலும் முடிகூடாதே, ஆடையும் செவ்வனுடுக்க அறியாதே, வார்த்தை சொல்லும் க்ரமத்தையு மறியாதே, விலாஸமாகக் கடைக்கண்ணுல் நோக்கிக் கருத்தை ஸரஸமாகத் தெரியப்படுத்தவும் அறியாதே, இப்படி அமாயகமாக இருக்கும் இந்தப் பேதைக்கு இப்படித் தலைவனிடம் விருவுதல் உண்டாவது எங்ஙனே பொருந்தும்? இது மிகவும் ஆச்சர்யகரமா யிருக்கிறது; விசித்ரமாயிருக்கிறது.

குறிப்பு :—1. ஸ்வாப தேசத்திலே, 'முலை'—பக்தி, 'பூங்குழல்'—ப்ராணமம், 'கலை' (ஆடை)—முயற்சி ; 'நாவோ குழறும்'—நாம ஸங்கீர்த்தனமில்லை, 'கண் மிளிரும்'—த்யானமில்லை—என்று பொருள்.

எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிப்பதற்கு உபகரணமான பக்தி முதிர்ந்து பரம பக்தியாகப் பரிணமித்ததில்லை. தலையாலே பிரணமம் பூர்ணமாகத் தோன்றவில்லை. அரையில் ஆடையை இறுக உடுத்துக் கொண்டு முந்துற்றுக் கிளம்பும் முயற்சியில்லை ; இடைவிடாமல் பகவந்நாம ஸங்கீர்த்தனம் செய்வதில்லை. த்யானரூபமான ஞானமின்றும் பிறக்கவில்லை ; பாரதந்தர்ய வேஷத்தோடு இருக்கு மிவருக்கு விரைவை (த்வரயை) ஸாதனமாக ஏறிட்டுக் கொள்ளுதல் தகுமோ ?

2. இப்பாசுரத்தில்—ஆழ்வார் திருவவதரித்ததே தொடங்கி எம்பெருமானுல்லது தரியாமை வெளியாகிறது.

(67) அவதாரிகை :—ஆழ்வாருடைய ஞாந வைலக்ஷண்யத்தைப் போக்தாக்கள் உகந்து, உரைத்த பாசுரத்தை, தலைமகள்

கண்ணழகைக் கண்டு தலைவன் வியந்து உரைத்த பாசுரத்தாலே, அருளிச் செய்கிறார்.

காவியும் நீலமும் வேலும் கயலும் பலபல்வென்று
ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு அசுரைச்செற்ற
மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம்சேர்
தூவியம் பேடையன் னாள்கண்க ளாய துணைமலரே. 67

பதவுரை :—அசுரை - அசுரர்களை. செற்ற - அழித்த. மா - பெரிய. விய - ஆச்சரியகரமான. புள் - ஸ்ரீ கருடாழ்வாரை. வல்ல - ஏறி நடத்து கிற. மாதவன் - திருமகள் கணவனும். கோவிந்தன் - பசுக்களைக் காப்பவனு மான பெருமானுடைய. வேங்கடம் - திருவேங்கடமா மலையிலே. சேர் - பொருந்தி வாழ்கிற. தூவி அம் - சிறகழகையுடைய. பேடை - அன்னப் பேடை. அன்னாள் - போன்றவளாது. கண்கள் ஆய - கண்களாகிய. துணை மலர் - ஒன்றோடொன்று ஒத்த இரண்டு தாமரை மலர்கள். காவியும் - செங் கழுநீர்ப் பூவையும். நீலமும் - கரு நெய்தற் பூவையும். வேலும் - வேற்படை யையும். பல பல - (இவைகள் முதலான) மிகப் பல பொருள்களையும். வென்று - ஜயித்து. பாரிப்பு - என்னை வருத்துவதற்கு அடியான பரப்பு. ஆவியின் தன்மை - (எனது) உயிரின் தன்மைக்கு ஏற்ற. அளவு அல்ல - அளவல்ல.

கருத்து :—அசுரர்களை யழித்த பெரிய ஆச்சர்யகரமான ஸ்ரீ கருடப் பறவையை ஏறிச் செல்லுகிற திருமா மகள் கேள்வனு டைய போக ஸ்தாநமாகிய திருவேங்கடமாமலையிலே பொருந்தி வாழ்கிற அன்னப் பேடைபோல் நடையழகையுடையவளான தலைவி யின் இரண்டு தாமரைப் புஷ்பங்கள்போன்ற கண்களானவை, உத்தம ஜாதி லக்ஷணமாகிய ரேகைகளின் செம்மையால் செங்கழு நீரையும், கரு நிறத்தால் நீலோத்பல புஷ்பத்தையும், கூர்மையாலும், ஒளியா லும், வருத்துதலாலும் வேலாயுதத்தையும், குளிர்ச்சியாலும், வடிவத் தாலும் கயல் மீனையும், மற்றும், மருட்சி—முதலியவற்றால் மற்றுங் கண்ணுக்கு ஒப்பாகின்ற மான்விழி—முதலிய மிகப் பல பொருள் களையும், தமக்கு ஒப்பாகாதபடி ஜயித்து, என்னை வருத்துவற்கு அடி கோலிய பரப்பு, எனது உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவல்ல. என் உயிரின் அளவை மீறிக் கிடக்கின்றது—அவைகளின் அளவு. மெல்லிய என் உயிரை மாய்ப்பதற்கு இத்தனைப் பெரிய முயற்சி கொள்ளத் தேவையே யில்லையே.

குறிப்பு :—1. துஷ்ட நிக்ரஹ சீலனும், ஸ்ரீ கருடவாஹநாரூடனும், வேத வேதாந்தங்களாகிய உத்தம ப்ரமாணங்களால் ப்ரதிபாத்யனுனவனும்

புருஷகார ஸ்வரூபிணியும், பரம கருணாமூர்த்தியும், பரம ரமணீய மங்கள திவ்ய தேஹையும், மங்கள தேவதையுமான அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்பனாகிய திருமாலினது போக ஸ்தானமான திருவேங்கடமா மலையில் கனத்த ஈடுபா டுடைய ஆழ்வார், தமது ஞான வைபவத்திற்கு எம்மை வசப்படுத்திக் கொள்வது ஒரு பெரிய காரியமோ? என்று ஸ்வாபதேசக் கருத்து.

2. 'வேங்கடஞ் சேர் தூவி யம்பேடை யன்னாள்' என்பதனால்—ஆகார த்ரய ஸம்பன்னை யான அலர்மேல் மங்கையோடு ஸாம்யம் ஆழ்வாருக்கு ஸூசிக்கப்பட்டது.

3. கண்களாய துணை மலர்—தமக்கும், தம்மடியார்க்கும் துணையாகிற பரந்த ஞானானுஷ்டான வகைகள். அந்த ஞானம் காவியை வென்றதாகச் சொன்னது—செந்நிறத்ததாகிய ரஜோ குணத்தைக் கடந்தமை சொன்னபடி; நீலத்தை வென்றதாகச் சொன்னது—கருநிறத்ததான தமோகுணத்தைக் கடந்தமை சொன்னபடி; வேலை வென்றதாகச் சொன்னது—வெண்ணிறத்ததான ஸத்வ குணத்தையுங் கடந்தமை சொன்னபடி; கயலை வென்றதாகச் சொன்னது—இந்த முக்குணங்களையும் கடந்து, சஞ்சலத் தன்மை யில்லாமை சொன்னபடி.

(81) அவதாரிகை:—இப்படி ஆர்த்தரான ஆழ்வாரை ஆற்றுவிக்க வேணுமென்று பரிவரானவர்கள், தங்கள் பரிவின் கனத்தாலே வேறு சில பரிஹாரங்களைச் செய்யப்புக, அவரது தன்மையை யறிந்த அன்பர்கள், இவராற்றாமையைத் தணிக்கும் வழிகளில் இழியாமல் வேறு வழிகளில் இழிந்து என்ன பயன்? என்று வெறுத்து உரைக்கும் பாசுரத்தை, தலைவி தளர்த்தியைக் கண்டு தாயார் முதலானோர் வெறியாடலுற, தலைவி நினைவறிந்த பாங்கி வெறி விலக்கலுற்று, அவர்கள் கேட்கும்படி தன்னி லுரைத்த பாசுரத்தை அருளிச் செய்கிறார்.

உறுகின்ற கன்மங்கள் மேலான ஓர்ப்பில ராய்இவளைப்
பெறுகின்ற தாயார்மெய்ந் நொந்து பெறார்கொல்? துழாய்குழல்வாய்த்
துறுகின் றிலர்தொல்லை வேங்கட மாட்டவும் சூழ்கின்றிலர்
இறுகின்ற தால்இவ ளாகம் மெல்லாவி யெரிகொள்ளவே. 81

பதவுரை:—ஓர்ப்பு இலர் ஆய் - (இவளுக்கு நேர்ந்துள்ள நோயின் தன்மையையும், அதன் நிதானத்தையும், அதனைத் தீர்க்கும் உபாயத்தையும்) ஆராய்ந்து தெளிதலில்லாதவர்களாய். உறுகின்ற - (தாய்மார் விடாமல்) பொருந்தி நடத்துகிற. கன்மங்கள் - (வெறியாட்டு முதலிய) காரியங்கள்.

மேலன - மேன் மேலும் நடத்தப்படுகின்றன. இவளை - இந்தத் தலைவியை. பெறுகின்ற - பெற்று வளர்க்கிற. தாயார் - தாய்மார். மெய் நொந்து - உடம்பு வருந்தி. பெறார் கொல் - பெற்றாரில்லையோ? குழல்வாய் - இவளது கூந்தலிலே. துழாய் - பகவத் ஸம்பந்தமுடைய திருத்துழாயை. துறுகின்றிலர் - சூட்டுகின்றாரில்லை. தொல்லை - மிகவும் புராதனமான. வேங்கடம் - திருவேங்கட மலையிலே. ஆட்டவும் - இவளைக் கொண்டு போய்ச் சேர்க்கவும். சூழ்கின்றிலர் - யோசனை செய்வதில்லை. இவள் ஆகம் - இவளது உடம்பு. மேல் ஆவி - மேன்மையான உயிரை. எரி - விரஹாக்னியானது. கொள்ள - கவர்ந்து கொள்ளும்படி. இறுகின்றது - முடிகிறவளவாகா நின்றது.

கருத்து :— தலைமகள், திருமாலாகிய தலைமகன் விஷயமான வேட்கை நோய் கொண்டு, மேனி மெலிந்து வடிவு வேறுபட, அது நோக்கிய தாய்மார் அதற்குப் பரிஹாரமாக வெறியாட்டு, க்ரஹ சிகிச்சை—முதலானவைகளைச் செய்யத் தொடங்க, நோயொன்றும், மருந்தொன்று மாதலால், அவைகளை ஸஹியாமல் நாயகி மேன் மேலும் மிக வருந்த, தலைவி நினைவறிந்த தோழி, அத் தாய்மார் செவிப்பட முன்னிலைப் படர்க்கையாகக் கூறுகிறாள்.

இப்போது இவளுக்கு நேர்ந்துள்ள நோயின் ஸ்வரூபத்தையும், அதன் நிதானத்தையும், அதனைத் தீர்க்கும் உபாயத்தையும் ஆராய்ந்து தெளிய கில்லாத இவர்கள், வெறியாட்டு—முதலிய அநநுரூபமான காரியங்களை வீணாக நடத்துகிறார்களே, அந்தோ! இவளைப் பெற்ற தாய், மெய் நொந்து பெற்றவளாயும், வளர்க்கிற செவிலித் தாயார், வருந்திப் பிள்ளை பெற்றவளாயும் இருந்தால், இவள் பிழைக்கும் வழியிலே முயலாது, இங்ஙனம் இவளை இழக்கைக் குறுப்பான கெட்ட வழிகளிலே தலையிடுவார்களோ? எம்பெருமானது திருத் துழாயை முடியிற் சூட்டுதலும், அவனது திருப்பதியான திருவேங் கடமலைக்கு அழைத்துக் கொண்டு போதலுமே—இந்நோய்க்கு ஏற்ற பரிஹாரமாயிருக்க, அவையொன்றும் செய்யக் காண்கிலோமே! ஸுகுமாரமான இவளது உயிரை விரஹாக்நி கவர்ந்து கொள்ளும்படி இவட்குத் தளர்ச்சி மென் மேல் மிகுகின்றதே! இதைக் கொஞ்சமும் கவனிக்கும் பாடில்லை. என்ன பரிதாபம்?—என்றாயிற்று.

குறிப்பு :—1. உறுகின்ற கன்மங்கள்—இவள் நோயின் தன்மை ஆராயாதே உற்று நடத்துகிற வெறி முதலான கர்மங்கள்.

ஆட்டுதல்—அங்கே நடையாடப் பண்ணுதல்

சூழ்தல்—விரகு செய்தல்; அன்றியே திரளுதல் ஆகவுமாம்.

2. எறி கொள்ள இழுகின்ற தாலி வளாகம்—கோடாத்தில் (பொந்தில்) பற்றின நெருப்புப் போலே பாவ பந்தமடியாக வந்த நோவானகையாலே, உள்ளே பிடித்து வெந்து சரீர மகப்பட அற்றழிந்து போகா நின்றது.

இத்தால், ரக்ஷிப்பிப்பார்க்கும், ரக்ஷகனுக்கும் இடறும்படியான தசையையும், கண்டார்க்கும் உபாயமாம்படி பகவத் விஷயத்திலே அவகாஹித்த படியையும் சொல்லுகிறது.

3. பிரிவின் கனத்தாலே நிரூபியாமல் வேறு வகைகளாலே இவள் ஆர்த்தியைப் பரிஹரிக்கத் தேடா நின்றார்கள்; பகவத் ப்ரஸாதமும், தேசவாஸமுமே பரிஹாரமாயிருக்க, அது செய்யாமையாலே, ஸத்தையும் குலையும்படி சைதில்யமே விஞ்சா நின்றது. இவாருமை யறிந்து வருந்திக் கிட்டினவர்களல்லரோ இவர்கள்—என்று இவருடைய ப்ரக்ருதியை அறிந்த ஸுஹ்ருத்துக்கள் உரைத்த பாசுரமாமிது.

4. ஆழ்வாருக்கு, எம்பெருமானது திருத்துழாய் முதலான ப்ரஸாதங்களை அநுபவிப்பதும், அவன் உகந்தருளின நிலங்களிலே வர்த்திக்கையும், அவனுடைய திருநாம ஸங்கீர்த்தனமும்—ஆகிய இவைகள் தாம், இவ்வாற்றாமைக்குப் பரிஹாரங்கள்; அவை செய்யாமையால் இவருக்குத்தளர்ச்சி மேன்மேலும் மிகுகின்றது—என்று உள் கருத்து.

ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருவந்தாதி.

---

அவதாரிகை :—ஆழ்வார், திரு விருத்தத்தில்—தமது ஞானக் கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி, "தேவரீரை அநுபவிப்பதற்கு இடையூறான தேஹ ஸம்பந்தத்தைத் தொலைத்துத் தந்தருள வேணும்" என்று அபேக்ஷித்தார். எம்பெருமான், அப்படி அவர் ப்ரார்த்தனையை உடனே தலைக்கட்டித் தந்தருளாமல், இவரைக் கொண்டு உலகத்துக்கு நன்மையாகச் சில திவ்ய ப்ரபந்தங்களை வெளியிடுவித்து, அவற்றால் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றி, இவரை இந்நிலத்திலே நிறுத்துவதற்காகத் தன்னுடைய கல்யாண குணாநுபவத்தை இவருக்குக் காட்டிக் கொடுத்தான். ஆழ்வார் அவற்றைக் கண்டு பரமாநந்தத்தை அநுபவித்தார் திருவாசிரியத்தில். அப்படி அநுபவித்த அநுபவம், உள்ளடங்காமல் கரைபுரண்டு பெருகிச் செல்லுகிற படியைப் பேசுகிறார் இந்தப் பெரிய திருவந்தாதித் திவ்யப் ப்ரபந்தத்தில்.

இதில் திருவேங்கட முடையான் விஷயமாக ஒரே ஒரு பாசுரம் அமைந்திருக்கின்றது.

(68) அவதாரிகை :—கீழ் மூன்று பாசுரங்களில் ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்கு ஹிதத்தை உபதேசித்தார். அதற்குப் பலன் உடனே கை புகுந்தபடியை இதன் முதல் மூன்று பாசுரங்களிலே பேசுகிறார். இந்தப் பாசுரத்தில் எம்பெருமான் திவ்ய மங்கள விக்ரஹத்தோடே தமது நெஞ்சிலே புகுந்து இருக்கும் படியைப் பேசுகிறார்.

கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென் றொழிந்தனகொல்? ஏபாவம்! —வெல்ல
நெடியான் நிறம்கரியான் உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத் தகம். 68

பதவுரை :—வெல்ல நெடியான் - மிகவும் உயர்ந்தவனும். நிறம் கரியான் - கரிய நிறமுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையவனுமான கண்ணபிரான். உள் புகுந்து - உள்ளே ப்ரவேசித்து. அடியேனது - அடியேனுடைய. உள்ளத்தகம் - நெஞ்சகத்தை விட்டு. நீங்கான் - நீங்குகிறுனில்லை. கல்லும் - திருவேங்கட மலையும். கனை கடலும் - கோஷிக்கின்ற திருப்பாற்கடலும். வைகுந்தம் - ஸ்ரீ வைகுண்ட மென்கிற. வான் நாடும் - வானுலகமும். புல்லென்று - த்ருணீகரித்து (அல்பங்களென்று). ஒழிந்தன கொல் - விட்டன போலும். ஏ பாவம் - ஐயோ! பாவம்.

கருத்து :—மிகவும் உயர்ந்தவனுய், துர்லபனுன கரியமேனி வண்ணன் கண்ணபிரான், தனது நிர்ஹேதுக க்ருபையினுலே சிறியவனுன என் நெஞ்சகத்தினுள்ளே வந்து புகுந்து " அகலகில்லே னிறையும்" என்று ஸ்திரமாக வீற்றிருக்கிறுன். ஆகையால், முன்பு அவனுக்கு உகந்தருளின திவ்ய தேசங்களாயிருந்த திருவேங்கடமாமலே, திருப்பாற்கடல், ஸ்ரீவைகுந்தமாநகரம்—முதலான இடங்களெல்லாம் புல்மூடிப்போய், காடு மேடாய்விட்டன.

குறிப்பு :—1. வெல்ல—மிகவும். நெடியான்—துர்லபன் (பராத்பரன்). அன்றிக்கே. வெல்ல—வெல்வதற்கு. நெடியான்—முடியாதவன்.

2. பக்தர்களுடைய திருவுள்ளத்தில் ஸமயம் பார்த்துப் புகுவதற்காகவே திவ்ய தேசங்களில் எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிறுன். அது ஸித்தித்தால், திவ்ய தேசங்களில் அவனுக்கு ஆதரம் குறையும்—என்று ஸ்ரீ வசனபூஷணத்தில் அருளிச் செய்வதற்கு இப் பாசுரம் மூலமாக விருக்கலாம் போலும்.

3. இந்தப் பாசுரத்தை இரவில் பள்ளிகொள்ளும் போது பலகால் அநுஸந்திக்க வேணுமென்று பெரியோர்கள் கூறுவார்கள்.

4. "கல்லும்" கல்—என்று மலேயைச் சொல்லிற்றுய், அது இங்கே சிறப்பாய்—திருவேங்கட மலேயைச் சொல்லுகிறது.

5. புல்லென்று—அற்பத்தனமடைந்தது. எனது நெஞ்சின் முன்னே அவையெல்லாம் அற்பமாய்விட்டன போலும்—என்று பொருள். அன்றிக்கே, அவை புல் மூடிப் போயினவை போலும்—என்றும் பொருளுரைக்கலாம்.

6. "பனிக் கடலில்" "தடவரைவாய்" என்னு மிரண்டு பாசுரங்களும் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை.

ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழி.

---

(1. 8. 3.) அவதாரிகை:—எம்பெருமான் மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் அநுபாவ்யனாய், திருவேங்கடமலையில் வீற்றிருக்கிறான். என்ன அவனது ஸௌசீல்யமும், ஸௌலப்யமும்? என்ன வாத்ஸல்யம்? என்ன ஐச்வர்யம்? என்று முக்தராய்ப் பேசுகிறார்.

கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு
தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே. 1. 8. 3.

பதவுரை:—மண்ணோர் விண்ணோர்க்கு - இந்த லீலா விபூதியாகிற மண்ணுலகத்தி லிருப்பார்க்கும், நித்ய விபூதியாகிற விண்ணுலகத்தி லிருப்பார்க்கும். என்றும் - எப்போதும். கண் ஆவான் - கண் போல் ரக்ஷகனாயிருக்கிற எம்பெருமான். தண் ஆர் - குளிர்ச்சி நிறைந்த. வேங்கடம் - திருவேங்கடமென்னும். விண்ணோர் வெற்பன் - நித்ய ஸூரிகளுக்கும் ஸ்ப்ருஹணீயமாயிருக்கும் திருமலையில் வீற்றிருக்குமவன்.

கருத்து:— இருள்தருமா ஞாலமாகிய இந்த மண்ணுலகத்திலுள்ளார்க்கும், கண் போல் ஸதஸத் பதார்த்தங்களைக் காட்டி, நற்கார்யங்களில் ப்ரவ்ருத்தியை யுண்டாக்கிக் காப்பாற்றியருளுமவனான எம்பெருமான்—ஸ்வபாக சீதலமாய், பரம போக்யமாயிருக்கும் 'திருவேங்கட' மென்னும் ப்ரஸித்தியைப் பெற்ற நித்யஸூரி ஸம்ஸேவ்யமாயிருக்கும் திருமலையில் எழுந்தருளி யிருக்கும் பரம புருஷன் தான்.

குறிப்பு:—ரக்ஷ்யாபேக்ஷகனாயிருக்கும் எம்பெருமானது தாபமும், ரக்ஷகாபேக்ஷகனாயிருக்கும் சேதனனுடைய தாபமும் ஸவாஸநமாகத் தீரும்படி ஸ்வபாக சீதலமாயிருக்கிற தென்று "தண்ணார் வேங்கடம்" என்பதினால் ஸூசிதமாயிற்று.

(2. 6. 9.) அவதாரிகை:—கீழ்ப் பாட்டில் தம்மை விட்டுப் பிரியக்கூடாது—என்று ப்ரார்த்தித்தார். இதில் விட்டுப்போக வேணுமென்று பார்த்தாலும் போக முடியாது—என்று சொல்லுகிறார்.

எந்தாய் ! தண்திருவேங்கடத்துள்நின்றாய் ! இலங்கைசெற்றாய்-
மைந்தா ளேழுருவ ஒருவாளி கோத்த வில்லா ! [மராமரம்
கொந்தார் தண்ணந்துழாயினாய் ! அமுதே ! உன்னைஎன் னுள்ளே-
[குழைத்தஎம்
ஈமந்தா ! வானேறே ! இனிஎங்குப் போகின்றதே ? 2. 6. 9.

பதவுரை :—*தண் - குளிர்ந்த. திருவேங்கடத்துள் - திருவேங்கடமா மலையில். நின்றாய் - எழுந்தருளி யிருக்கிறவனே. மராமரம் - மராமரங்களுடைய. பைந்தாள் - பருத்த அடிப் பாகங்களின். ஏழும் - எழிலும். உருவ - உள்ளே புகுந்து ஓடும்படி. ஒரு வாளி - ஒரு பாணத்தை. கோத்த - தொடுத்த. வில்லா - சிறந்த வில்லை யுடையவனே. கொந்து - இலைகள். ஆர் - நிறைந்த. தண் - குளிர்ந்த. அம் - அழகிய. துழாயினாய் - திருத் துழாயை யுடையவனே ! வான் - பரமபதத்தில் இருக்கிற நித்ய ஸூரிகளுக்கு. ஏறே - தலைவனே. அமுதே - அம்ருதம் போல் மிகவும் இனியவனே ! எந்தாய் - என் ஸ்வாமியே ! உன்னை - (என்னை விட்டுப் பிரியாதபடி) உன்னை. என்னுள் - என்னோடு. குழைத்த - ஒன்றாகப் பண்ணின. என் மைந்தா - என்னுடைய மிடுக்கனே, இனி - இனிமேல். எங்கு - எங்கே. போகின்றது - போகிறது.*

கருத்து :—*ஆச்ரிதர்களுடைய எல்லாத் தாபங்களும் தீரும்படி ஸ்வபாக சீதலமாயிருக்கும் திருவேங்கடமலையில் பரம போக்யனாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே ! முன்பு இராமபிரானாயவதரித்து, மஹாராஜர் (ஸுக்ரீவனு)க்கு நம்பிக்கை உண்டு பண்ணுவதற்காக விஷமங்களாயிருந்த ஏழு மராமரங்களின் பருத்த அடிப் பாகங்களில் புகுந்து ஓடும்படி, ஒரு பாணத்தைத் தொடுத்து, அவைகளையும், ஸப்தகுல பர்வதங்களையும் துளைத்து, உன்னுடைய ஒரு வில்வலவனாகிற தன்மையை அவர்களுக்குக் காட்டினதுபோல், அடியேனுக்கும் காட்டினாய்.*

*இலைகளோடு கூடிக் குளிர்ந்து அழகாயிருக்கும் திவ்ய பரிமளம் நிறைந்த பரம போக்யமான திருத்துழாய் மாலைகளை அணிந்து கொண்டு உன்னுடைய லோகாதிசாயி ஸௌந்தர்யத்தையும் காட்டினாய். சுத்த ஸத்வமயமான பரம பதத்திலே ஆநந்தைகார்ணவமான திருமாமணி மண்டபத்திலே பிராட்டி மார்களாலும், நித்ய முக்தர்களாலும் பரம குதூகலத்துடன் அம்ருதம் போல் அநுபவிக்கப் படும் போக்யதாதிசயத்தையும் காட்டினாய். இவைகளை எல்லாம் எனக்குக் காட்டி, உன்னை அமுதம் போல் அநுபவிக்கும்படி செய்*

தாய், உன்னை என்னுடன் ஒரு தத்வமாகச் செய்தாய். அதனாலே, உனக்குப் புதிதான யௌவன முண்டாயிற்று. இப்படியிருக்கிற நீ என்னை விட்டுப் போவேன் என்றால், போக முடியுமோ? போகத் தான் இடமுண்டோ?

(2. 6. 10.) அவதாரிகை :—என்னை நீ விட வேண்டாம்; உன்னையும்நான் விடேன்—என்று இதில் ப்rார்த்திக்கிறார்.

போகின்றகாலங்கள் போயகாலங்கள் போதுகாலங்கள் தாய்தந்தையுயி
ராகின்றாய் உன்னைநான் அடைந்தேன் விடுவேனோ?
பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே! பரமா! தண்வேங்கடம்
மேகின்றாய்! தண்துழாய் விரைநாறு கண்ணியனே! 2. 6. 10.

பதவுரை :—பாகின்ற - பிரஸித்தமாய். தொல் - அநாதி ஸித்தமாயுமுள்ள. புகழ் - திருக் கல்யாண குணங்களினாலுண்டான கீர்த்தியையுடையவனாய், மூ உலகுக்கும் - மூன்று லோகங்களுக்கும் (த்ரிவித சேதநாசேதநங்களுக்கும்). நாதனே - ஸ்வாமியானவனே! பரமா - மேற்பட்டவன் இல்லாதவனே (பராத்பரனே). தண் வேங்கடம் - ஸம்ஸார தாபங்களைப் போக்கும்படி மிகவும் குளிர்ந்த திருவேங்கட மலையில். மேகின்றாய் - உவந்து வீற்றிருக்குமவனே. தண் - குளிர்ந்து, பரிசுத்தமாய், அழகாய் இருக்கும். துழாய் - திருத்துழாயின். விரை - பரிமளம். நாறு - பரிமளிக்கும். கண்ணியனே - தோமாலைகளை உடையவனே! போகின்ற காலங்கள் - நடக்கின்ற காலங்களிலும். போய காலங்களிலும் - நடந்த காலங்களிலும், போகு காலங்கள் - நடக்கப்போகிற காலங்களிலும். தாய் - மாதாவைப் போல் அன்பு பாராட்டுமவனும். தந்தை - பிதாவைப் போல் ஹிதத்தைச் செய்யுமவனும். உயிர் - ப்ராணனைப்போல் ஸத்தாதாரகனும். ஆகின்றாய் - ஆய் இருந்து ரக்ஷிக்குமவனே. உன்னை - தேவரீரை. நான் - 'தேவரீர் ஸ்வாமி' என்றும், அடியேன் தாஸாநு தாஸன்' என்றும் அறிந்த நான். விடுவேனோ-இனிமேல் விடுவேனோ? (ஒரு நாளும் விடமாட்டேன்).

கருத்து :—ப்ரஸித்தமாயும், அநாதி ஸித்தமாயுமுள்ள திருக் கல்யாண குணங்களாலுண்டான கீர்த்தியை யுடையவனே! மூன்று லோகங்களுக்கும், மூன்று வகையாயிருக்கும் சேதநாசேதநங்களுக்கும் நிருபாதிக ஸ்வாமியாய் இருக்குமவனே! ஒத்தவரும், மேற்பட்டவரும் இல்லாதவனாய், தனிக்கோல் செலுத்தும் பிரானே! ஸம்பக சீதலமான திருவேங்கடமலையில் வீற்றிருக்குமவனே! குளிர்ந்து, பரிசுத்தமாயும், அழகாயும், திவ்ய பரிமள பரிதமாயும் இருக்கிற

திருத்துழாய் மாலைகளை அணிந்து, பரம போக்யனா யிருக்குமவனே! பூத - பவிஷ்யத் - வர்த்தமாநங்களாகிற ஸர்வ காலங்களிலும், தாய் போலே அன்பு பாராட்டுமவனும், தகப்பன் போல் ஹிதத்தைச் செய்யுமவனும், உயிர் போல் ஸத்தா தாரகனுமாய், ஸகலவித பந்து வாய் இருக்கும் எம்பெருமானே! தேவரீரை அடியேன் ஒரு நாளும் விடமாட்டேன். தேவரீருக்கும், அடியேனுக்கு மிருக்கும் ஸம்பந் தத்தையும், தேவரீர் செய்யும் மஹோபகாரங்களையும் அறிந்த பின்பும், என்னிடம் நேசித்து ஒன்றாய்க் கலந்திருக்கும் தேவரீரை விடுவேனோ?.

(2. 7. 11.) அவதாரிகை:—எம்பெருமான், நம்மை ஒரு நாளும் விடமாட்டான்—என்று அருளிச் செய்கிறார்.

பற்ப நாபன் உயர்வற வுயரும் பெருந்திறலோன்
எற்பரன் என்னையாக்கிக்கொண்டு எனக்கேதன்னைத் தந்த
கற்பகம் என்அமுதம் கார்முகில் போலும் வேங்கடநல்
வெற்பன் விசும்போர்பிரான் எந்தை தாமோதரனே. 2. 7. 11.

பதவுரை:—பற்பநாபன் - பிரமனுக்கு பிறப்பிடமான தாமரைப் புஷ்பத்தை தனது நாபீ கமலத்தில் உடையவனும். உயர்வு அற - தன்னுடைய உயர்த்தியைக் காட்டிலும் வேறு உயர்த்தி யில்லாதபடி. உயரும் - பெருமை தங்கியிருக்கும். திறலோன் - தேஜஸ்ஸையும், பல - வீர்ய-பராக்ரமாதிகளையும் உடையவனும். என்னை - பரம நீசனான அடியேனை. ஆக்கிக் கொண்டு - தனக்கு அந்தரங்க தாஸனாக ஆக்கிக் கொண்டு. எனக்கே - எனக்கொருவனுக்கே. தன்னை - அபரி மிதனாய், அபரிச் சேத்யனாயிருக்கும் தன்னை முழுவதும். தந்த - நன்றாக முழுவதும் அநுபவிக்கும்படியாகக் கொடுத்த. கற்பகம் - கற்பக விருக்ஷமானவனும். என் அமுதம் - எனக்கு அமிருதம் போல் பரம போக்யனானவனும். கார்முகில் போலும் - மழைக் காலத்து மேகம் போல் மிக்க ஔதாரியமுள்ள. வேங்கட நல் வெற்பன் - 'திருவேங்கடமென்னும் சிறந்த மா மலையில் எழுந்தருளி யிருக்குமவனும். விசும்போர் - பரமபத வாஸிகளான ஸதா பச்யந்திக (நித்ய ஸூரிக)ளுக்கு. பிரான் - மஹோபகாரகனானவனுமான. எந்தை - என் ஸ்வாமியான. தாமோதரன் - ஸ்ரீ யசோதைப் பிராட்டியால் கண்ணிநுண் சிறுத் தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெரு மாயன். எற்பரன் - என்னிடத்திலேயே ஆசையைக் கொண்டு இருக்கிறான்.

கருத்து:—பிரமனுக்கு உற்பத்தி ஸ்தானமான தாமரையைத் தனது திருநாபியில் வஹித்து, அளவில்லாத அழகையுடையவனாய்,

அதனாலே அளவில்லாமல் உயர்வற உயரும் பெரும் திறலையுடைய வனாய், பொருளில்லாத என்னைப் பொருளாக்கித் தனக்குப் பரமாக்கி வைத்து, வேறு விஷயங்களில் ஆசை செல்லாமல் தன்னையே இனிய வனாக அநுபவிக்கும்படி செய்து, நான் ஒருவனே முழுதும் அநுப விக்கும்படியாக, கற்பக விருக்ஷம்போல் எனக்குத் தன்னைக் கொடுத்த உயர்ந்த ஔதார்ய குணமுடையவனாய், எனக்கு மிகவும் அமிருதம் போல் இனியனாய், பரம போக்யமாய், கார்முகில்போல் அளவில் லாத ஔதார்யமுடைய திருவேங்கடமலையில் எழுந்தருளி யிருக்கு மவனாய், சிறந்தவர்களான நித்ய ஸூரிகளுக்கும், நீசாதி நீசனான எனக்கும், வாசியற ஸ்வாமியாய், கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனுமாய் இருக்கும் என்னப்பன், என்னிடத்திலேயே மிகவும் ஆசையைக் கொண்டு நித்யவாஸம் பண்ணு கிறான். அவன் ஒருநாளும் நம்மை விடமாட்டான்.

(3. 5. 8.) அவதாரிகை :—எம்பெருமானை அநுபவித்து அந்த அநுபவத்தினால் பெருகுகிற ஆநந்தரஸம் உள்ளடங்காமல் கூத்தாடு கிற பரம பாகவதர்களை இதில் கொண்டாடுகிறார்.

வார்புன லந்தணருவி வடதிரு வேங்கடத் தெந்தை
பேர்பல சொல்லிப் பிதற்றிப் பித்தரென்றே பிறர்கூற
ஊர்பல புக்கும் புகாதும் உலோகர் சிரிக்கநின்றாடி
ஆர்வம் பெருகிக் குனிப்பார் அமரர் தொழப்படுவாரே. 3. 5. 8.

பதவுரை :—வார்புனல் - எப்போதும் அளவில்லாமல் பெருகுகிற ஜலத்தையுடைய. அம் தண் - அழகாயும் குளிர்ந்தும் உள்ள. அருவி - அருவிகளை யுடைய. வட திருவேங்கடத்து - தமிழ் நாட்டுக்கும், வட நாட்டுக்கும் எல்லை யாயிருக்கிற திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கிற. எந்தை - என் ஸ்வாமியினுடைய. பேர் - திருநாமங்களை. பல - அநேகம். சொல்லி - ஸம்கீர்த்தனம் பண்ணி. பிறர் - பகவத் குணங்களினுடைய சுவடறியாதார் சிலர். பித்தரென்றே - இவர்கள் பைத்தியகாரர்கள் என்றே. கூற - சொல் லும்படி. பல ஊர் - பல கிராமங்களினுள்ளே. புக்கும் - ப்ரவேசித்தும். புகாதும் - ப்ரவேசிக்காமலும். உலோகர் - உலகத்திலுள்ளவர். சிரிக்க - சிரிக்கும்படி. நின்று ஆடி - தன்மயராய் நின்று பாடி யாடி. ஆர்வம் பெருகி - எம்பெருமானிடத்தில் ஆசை பெருகி வெள்ளமிட. குனிப்பார் - கூத்தாடுகிறவர்கள். அமரர் - நித்ய ஸூரிகளால். தொழப்படுவார் - கொண் டாடப்பட்டு ஸேவிக்கப்படுவார்கள்.

கருத்து :—எப்போதும் தாரை தாரையாய்ப் பெருகுகின்ற நீரோடே கூடி அழகாயும், சீதலமாயும், பாவனமாயுமுள்ள அருவிக ளோடு கூடிப் பரம ரமணீயமாய்த் தமிழ் நாட்டுக்கும், வடநாட்டுக்கும் எல்லையாயிருக்கிற பரம போக்யமான திருவேங்கடமாமலையில் மண் ணோர்க்கும், விண்ணோர்க்கும் பரம ஸுலபனாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய பல பல திருநாமங்களை வாயார ஸம்கீர்த்தனம் பண்ணிக்கொண்டு இவர்களைப் பித்தரென்று பிறர் சொல்லும்படியும், உலகத்தார் இவர்களைச் சிரிக்கும்படியும், ஊர்களில் புகுந்தும், புகுரா மலும், திரிந்து கொண்டு, எம்பெருமான் மீது ஆர்வம் அதிசயித்து வெள்ளமிட, ஆடியாடி அகம்கரைந்து இசை பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி, கூத்தாடும்படியான பரம பக்தாக்ரேஸரர்கள் நித்ய ஸூரிகளா லும் ஸேவிக்கப்படுவார்கள்.

(3. 9. 1.) அவதாரிகை :—ஆழ்வார் தமக்குத் துணையாக இந்த உலகத்திலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கூப்பிட நினைத்தார். ஆனால்,அவர்கள் விஷயாந்தரங்களில் ப்ரவணராய், எம்பெருமானைப் பாடாமல் மனிதர்களைப் பாடிக்கொண்டு திரியா நின்றனர். இப்படி அநர்த்தப்படும் அவர்கள் க்லேசத்தைக் கண்டு, தன் வருத்தத்தை மறந்து அவர்களுக்கு உபதேசிக்கிறார்—இத் திருவாய்மொழியில்.

அதில் முதற் பாட்டில் என்னை ஸ்துதிப்பிக்கைக்காகத் திருமலை யிலே நித்ய வாஸம் பண்ணும் உபகாரகனையொழிய வேறொருவரை யும் ஸ்தோத்திரம் பண்ணேன்—என்று தனது நிச்சயத்தை அருளிச் செய்கிறார்.

சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ
என்னாவி லின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்
தென்னா தெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத்து
என்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாகவே. 3. 9. 1.

பதவுரை :—இது சொன்னால் - நீங்கள் மனிதர்களை ஸ்தோத்திரம் பண்ணுகையைத் தவிருகைக் குறுப்பான இந்த ஹிதத்தைச் சொன்னால். விரோதம் - உங்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாயிருக்கும். ஆகிலும் - ஆயிருக்கிலும். சொல்லுவன் - உங்களுடைய அநர்த்தத்தைப் பொறுக்க மாட் டாது சொல்லக் கடவேன். கேண்மின் - நீங்கள் செவி தாழ்த்துக் கேளுங் கள். வண்டு - வண்டுகளானவை. தென்னா தெனா என்று - மதுபான ப்ரீதி யாலே தென்னா தென்னாவென்று. முரல் - ஆலாபிக்குமவர்களைப் போலச்

சப்திக்கின்ற. திருவேங்கடத்து - திருவேங்கட மலையிலே. என்னானை - நித்ய ஸந்நிஹிதனாய். என்னப்பன் - எனக்கு உபகாரகனாய். எம்பெருமான் - என் ஸ்வாமியானவன். உளனாக - இக்கவிப் பாட்டாலே தான் உளனாயிருக்க. என் நாவில் - எனது நாவிலே. இன்கவி - அந்த ஈச்வரனுக்கு இனிதான கவிதையை. யான் - அவனுக்கு அநந்யார்ஹ சேஷபூதனான நான். ஒருவர்க்கும் - வேறொருவர்க்கும். கொடுக்கிலேன் - கொடுக்கச் சக்தனல்லேன்.

கருத்து :—அன்பர்களான ஸம்ஸாரிகளே! மனிதர்களை ஸ்வல்ப ப்ரயோஜநங்களுக்காகக் கவிபாடா நின்றீர்கள். அதைத் தவிருகைக்கு உறுப்பான ஹிதவாக்ய மொன்றைச் சொல்லுகிறேன். அது உங்கள் அபிமதத்துக்கு விருத்தமாயிருக்கும். ஆனாலும், ஹிதபுத்தியோடு சொல்லுகிறேன் ; ச்ரத்தையுடன் கேளுங்கள்.

பூவில் தேனை நன்றாகப் பாநம் செய்து வண்டுகளானவை "தென்னா தென்னா" என்று, பாடுகளைப்போலே, ஆலாபநத்தைச் செய்யும் பரம போக்யமான திருவேங்கடத்தில் நித்ய வாஸம் செய்யுமவனும், எனக்கு உபகாரகனாய், எனக்கு ஸ்வாமியாயிருக்கும் எம் பெருமான் இக்கவிபாட்டாலே தான் உளனாயிருக்க, எனது நாவிலே அந்த ஈச்வரனுக்கு இனிதான கவிதையை, அவனுக்கு அநந்யார்ஹ சேஷபூதனான அடியேன் வேறொருவர்க்கும் என் கவிதையைக் கொடுக்கச் சக்தனல்லேன்.

(4. 5. 11) அவதாரிகை :—திருவேங்கட முடையானைப் பற்றிப் பாடிய இந்தத் திருவாய்மொழியை அப்யஸிக்குமவர்களுக்கு எம்பெருமானை அநுபவிப்பதற்கு இடைஞ்சல்களான வினைகளைப் பிராட்டியே தீர்ப்பாள்—என்று பலத்தை அருளிச் செய்கிறார்.

மாரிமாறாததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை
வாரிமாறாதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர்
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்துஇப்பத்தால்
வேரிமாறாதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே. 4. 5. 11.

பதவுரை :—மாரி - மழையானது. மாறாத - ஓயாமல் பெய்து கொண்டிருக்கிறபடியாலே. தண் - குளிர்ந்து. அம் - அழகாயிருக்கிற. வேங்கடம் மலை - திருவேங்கட மா மலையிலே எழுந்தருளியிருக்கிற. அண்ணலை - ஸ்வாமியைப்பற்றி. வாரி - ஜல ஸம்ருத்தியானது. மாறாத - எப்போதும் குறையாமல் இருக்கிற. பைம் - பசுமையான. பூம்பொழில் - பூஞ்சோலைகளாலே. சூழ் - சூழப்பட்ட. குருகூர் நகர் - திருநகரியிலே அவதரித்த.

காரி - காரியின் திருக்குமாரரான, மாறன் - 'மாறன்' என்னும் பேரையுடைய, சடகோபன் - சடவாயுவை நிரஸித்தவரான ஸ்ரீநம்மாழ்வார், சொல் - அருளிச் செய்த. ஆயிரத்து - ஆயிரம் பாசுரங்களில், இப்பத்தால் - இப்பத்துப் பாசுரங்களினால், வேரி மாறாத - பரிமளம் மாறாமலிருக்கும், பூமேல் இருப்பாள் - தாமரைப் பூவின்மேல் எழுந்தருளியிருக்கும் பிராட்டி, வினை - பகவானுடைய அநுபவத்துக்கு விரோதிகளான எல்லாப் பாபங்களையும், தீர்க்கும் - போக்கியருள்வள்.

கருத்து :—மழையானது ஓயாமல் பெய்து கொண்டிருக்கிற படியாலே குளிர்ந்து அழகாயிருக்கும் திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் பரம வாத்ஸல்ய மூர்த்தியான பெருமாளைப்பற்றி, ஜலஸம்ருத்தி ஒருநாளும் குறையாத பூஞ்சோலைகளாலே சூழப்பட்ட திருக்குருகூர் மா நகரில் எழுந்தருளியிருக்கும் காரி குமாரராகிய 'மாறன்' என்றும் திருநாமமுடைய, சடவாயுவை அடக்கின, ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்த இந்தத் திருவாய்மொழியை ஓதவல்லார்களுடைய ஸகல பாபங்களையும், பரிமளம் மாறாத பத்மத்தின் மேல் வீற்றிருக்கும் பரம க்ருபாமூர்த்தியாயும், பரம ஸுகுமார ஸ்வரூபிணியாயுமுள்ள பெரிய பிராட்டியார், போக்கி யருள்வள்.

குறிப்பு :—1. பெரு மழையானது காட்டுத் தீயை அணைப்பது போல், ஸம்ஸார தாபாக்நியைத் திருவேங்கடமா மலை தீர்க்கும்—என்று உள் கருத்து.

2. பிராட்டி எம்பெருமானுடைய வாத்ஸல்யாதிகளை உத்போதனம் செய்யுமவளாகையினாலே, அந்தக் கல்யாண குணங்களை ப்ரதி பாதிக்கும் இந்தத் திருவாய்மொழியைக் கற்றாருடைய வினைகளை, பிராட்டி தீர்க்குமென்று மிகவும்பொருத்தமாயிருக்கிறது காண்க.

(6. 6. 11.) அவதாரிகை :—திருவேங்கடமுடையானைக் குறித்து அருளிச் செய்த இந்தப் பாசுரங்களைக் கற்றார் நித்ய ஸூரிகளுடைய போகத்தை அநுபவிப்பார்கள்—என்று அருளிச்செய்கிறார்.

கட்டெழில்சோலை நல்வேங்கடவாணனைக்
கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல்
கட்டெழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர்
கட்டெழில்வானவர் போகமுண்பாரே. 6. 6. 11.

பதவுரை :—கட்டு எழில் - நறுமணம் மிக்க முழுவதும் விளங்கா நின்றுள்ள, சோலை - சோலைகள் நிறைந்த, நல் - பரம போக்யமான, வேங்கடம் - திருவேங்கட மலையிலே, வாணனை - வாழ்பவனான எம்பெருமான்

விஷயமாக. கட்டு எழில் - பகவத் ஸம்பந்தம் பெற்றதாகையாலே அரணழகு பொருந்திய. தென் குருகூர் - அழகான குருகூரில் அவதரித்த. சடகோபன் - சடவாயுவை ஜயித்த நம்மாழ்வார். சொல் - அருளிச் செய்ததான. கட்டு எழில் - முழுவதும் அழகான. ஆயிரத்து - ஆயிரத்தினுள்ளே. இப் பத்தும் - இந்தப் பத்துப் பாசுரங்களையும். வல்லவர் - ஓத வல்லவர்கள். கட்டு எழில் - முழுவதும் விளங்குகின்ற பரம விலக்ஷணமான. வானவர் - நித்ய ஸூரிகளுடைய, போகம் - போகத்தை. உண்பார் - அநுபவிப்பார்கள்.

கருத்து :—நறுமணம் முழுவதும் வீசுகின்ற விளங்கும் சோலைகளால் நிறைந்து, பரம போக்யமான திருவேங்கடமலையில் வீற்றிருக்கும் எம்பெருமானைக் குறித்து, பகவத் ஸம்பந்தமாகிற அரணழகைப் பெற்ற திருநகரியிலே வாழ்பவரான ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்த முழுவதும் தொடையழகை யுடைத்தான ஆயிரத்துள் பரம ரமணீயமான இந்தப் பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர், பரம விலக்ஷணமான ஸதா பச்யந்திகளுடைய போகத்தை அநுபவிக்கப் பெறுவார்கள்.

(6. 9. 5.) அவதாரிகை :—முக்தர்கள் என்னிடம் வரும்படி நான் வைகுந்தத்தில் இருக்க வேண்டாமா? அதை விட்டு வேறு இடங்களுக்கு வரக் கூடுமோ? என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து அதற்குப் பதில் சொல்லுகிறார்.

விண்மீ திருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடற்சேர்ப்பாய்!
மண்மீ துழல்வாய்! இவற்று ளெங்கும் மறைந்துறைவாய்!
எண்மீ தியன்ற புறவண் டத்தாய்! எனதாவி
உண்மீ தாடி உருக்காட் டாதே ஒளிப்பாயோ 6. 9. 5.

பதவுரை :—விண்மீது - பரமபதத்தில். இருப்பாய் - உட்கார்ந்திருப்பவனே! மலைமேல் - திருவேங்கட மலையின்மேல். நிற்பாய் - நின்ற திருக்கோலமாயிருக்கிறவனே! கடல் - திருப்பாற் கடலில். சேர்ப்பாய் - சயன திருக்கோலமாயிருக்குமவனே! மண்மீது - பூமியின்மேல். உழல்வாய் - விபவாவதாரங்களைக் கொண்டு ஸகல மநுஜ நயந கோசரனாய் அழகாகத் திரிகிறவனே. இவற்றுள் - இந்த உலகத்திலிருக்கும் எல்லா வஸ்துக்களிலும். எங்கும் - எல்லா இடங்களிலும். மறைந்து - அறியாதபடி உள்ளே வ்யாபித்து நின்று. உறைவாய் - வஸிக்கிறவனே! எண்மீது இயன்ற - எண்ணுக்குமேல் போன (அஸங்க்யாகமான). புற அண்டத்தாய் - அண்டாந்தரங்களிலும் இருக்குமவனே! எனது ஆவியுள் - என் ப்ராணத்தினுள்ளேயும். மீது - மிகவும்.

ஆடி - நடமாடி. உரு - உனது அழகான ரூபத்தை, காட்டாதே - காட்டா மல். ஒளிப்பாயோ - மறைப்பாயோ ?

கருத்து :—வைகுந்தத்தில் வீற்றிருக்கிற ஸ்வாமியே! நீ பரம க்ருபாமூர்த்தியாய், விண்ணுலகத்தாரும், மண்ணுலகத்தாரும் ஸேவிக்கும்படி பரம போக்யமான திருவேங்கடமலையில் நின்றிருக் கிறாய். ஆர்த்தர்களுடைய ஆர்த்தியைக் கேட்பதற்காகத் திருப்பாற் கடலில் திருக்கண் வளர்ந்தருளியிருக்கிறாய். எல்லாரும் உன் அழகை ஸேவிக்கும்படி ராமகிருஷ்ண த்யவதாரங்களை எடுத்து, பூமியில் ஸஞ்சரித்தாய். ஸகல சேதநாசேதநங்களிலும் உள்ளே ப்ரவேசித்து எங்கு மொக்க வ்யாபித்து, இந்த அண்டத்திலிருக்கும் வஸ்துக்களி லும், அஸம்க்யாகமான அண்டாந்தரங்களில் இருக்கும் வஸ்துக்களி லும், அவைகளால் அறியாதபடி வியாபித்திருக்கிறாய். இது மாத் திரமா ? என்னுடைய ப்ராணத்துக்கும் ப்ராணனாயிருக்கிறாய். இப்படி அத்யந்த ஸந்நிஹித ப்ரதேசங்களிலிருந்தும், உன்னைக் காணமுடியாத படி ஒளிந்து கொண்டிருக்கிறாய். இஃது தேவரீருக்குத் தகுந்ததோ ?

(8. 2. 1-) அவதாரிகை :—ஆழ்வார் எம்பெருமானைக் கண் ணாலே காண வேணுமென்று ஆசைப்பட்டு, அது கிடைக்காமையினால் காதல் நோய் முற்ற, இந்தத் திருவாய்மொழியில் அவனைக் காண வேணுமென்று, தலைவனை விட்டுப் பிரிந்த தலைவியின் பாசுரத்தாலே, அருளிச் செய்கிறார்.

"உன் வருத்தத்துக்குக் காரணமென்ன ? நீ ஆசைப்படுவது எது ? நீ ஆசைப்படுவதற்கு விஷயமுண்டோ ?" என்று நாயகியைத் தோழிகள் கேட்க, ஆழ்வார் நாயகி இந்தப் பாசுரத்தில் பதில் சொல்லுகிறாள்.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நங்கள் வரிவளை யாயங் காளோ !
நம்முடை யேதலர் முன்பு நாணி
நுங்கட்கு யானொன்று ரைக்கும் மாற்றம்
நோக்குகின் றேன்எங்கும் காண மாட்டேன்
சங்கம் சரிந்தன சாயி ழந்தேன்
தடமுலை பொன்னிற மாய்த்த ளர்ந்தேன்
வெங்கண் பறவையின் பாகன் எங்கோன்
வேங்கட வாணனை வேண்டிச் சென்றே. 8. 2. 1.

பதவுரை :—நங்கள் - நம்முடைய. வரிவளை - கோடுகளையுடைய வளைகளை யுடையவர்களான. ஆயங்காள் ஓ - அன்பு பொருந்திய தோழிகளே! நம்முடை - நம்முடைய. ஏதலர் முன்பு - சத்துருக்கள் முன்னால். நாணி - வெட்கப்பட்டு. நுங்கட்கு - உங்களுக்கு. உரைக்கும் - சொல்லத் தகுந்த. மாற்றம் ஒன்று - வார்த்தை ஒன்றை. யான் - நான். நோக்குகின்றேன் - யோசித்துப் பார்க்கின்றேன். எங்கும் - ஒரு வழியிலும். காணமாட்டேன் - இதைப் பார்க்கமாட்டேன். வெம் கண் - கொடுமையான கண்ணையுடைய. பறவையின் - ஸ்ரீ கருடப் பக்ஷியின். பாகன் - நாயகனும் நடத்துமவனுமான. வேங்கட வாணனை - திருவேங்கட நாதனை. வேண்டி - ஆசைப்பட்டு. சென்று - போய் (அடைந்து). சங்கம் - வளைகள். சரிந்தன - கைகளை விட்டு நழுவின. சாய் - உடம்பின் காந்தியை. இழந்தேன் - இழந்தேன். தடமுலை - விசாலமான ஸ்தநங்கள். பொன் நிறமாய் - கெட்ட நிறமுள்ளவைகளாய். தளர்ந்தேன் - தளர்ச்சியை அடைந்தேன்.

கருத்து :—எனது அன்பு புரிந்த தோழிகளே! நான் இப்படிக் கைவளைகள் நழுவ வருத்தப் படும்போது நீங்கள் வரிவளைகளைத் தரித்து ஸந்தோஷமா யிருக்கிறீர்களே! இது உங்களுக்கு நியாயமா? நாயகனிடம் போக முயற்சித்த என்னை விரோதிகள் போல் தடுக்கிற தாய்மார்கள் முன்னால் வெட்கத்தினால் பதில் சொல்ல முடியவில்லை. அப்படியே உங்களுக்கும் எந்தச் சொல்லைக் கொண்டு சொல்லுகிறதென்று யோசித்துப் பார்க்கின்றேன். என் வருத்தத்தை உள்ளபடி அறிவிப்பதற்குத் தகுந்த சொல் எனக்குத் தோன்றவில்லை. இதை நான் சொல்லுவானேன்? என் உடம்பைப் பார்த்தால் உங்களுக்குத் தெரியவில்லையோ? ப்ரதிகூலர்களைக் கொடுமையாய்ப் பார்க்கும் ஸ்ரீ கருடப் பக்ஷியின்மேல் ஏறிக் கொண்டு வருகிறவனாய், எல்லோரும் தன்னை வந்து அடையும்படி பரம போக்யமான திருவேங்கடமலையில் பரம ஸுலபனாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை ஒரு நொடி நேரமும் விடாமல் ஆசைப்படுகிறேன். அவனைக் காணப் பெறாமையால் என் கைகளிலிருந்து வளைகள் நழுவிவிட்டன. என் உடம்பின் காந்தி போய்விட்டது. என் மனோஜ்ஞமான நிறம் மாறிவிட்டது. என் உடம்பும் தளர்ந்து போயிருக்கிறது. இதற்குக் காரணத்தை நீங்களே யோசித்துக் கொள்ளுங்கள்.

குறிப்பு :—'நம்முடைய' என்று தோழிகளைச் சேர்த்துக் கொண்டு சொல்லுவதின் கருத்து என்னவெனில்;—அவர்கள் இவளோடு ஸமதுஃக ஸுக பாகிகளாகையாலும், நாயகனோடு தான் சேரும் போது அவர்களும் ஸந்தோஷப்படுகிறவர்களாகையாலும் இப்படிச் சேர்த்துச் சொல்லுகிறாள்.

(9. 3. 8) அவதாரிகை :—எம்பெருமானை அநுபவிப்பதற்கு வைகுந்தத்திற்குப் போக வேணுமோ? அவன் பரம ஸௌலப்யனாய்த் திருமலையில் கிட்டவே இருக்கவில்லையோ? என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார்.

கலிவிருத்தம்.

இன்றிப் போக இருவினை யும்கெடுத்து
ஒன்றி யாக்கைபு காமை உய்யக்கொள்வான்
நின்ற வேங்கடம் நீள்நிலத் துஉள்ளது
சென்று தேவர்கள் கைதொழு வார்களே. 9. 3. 8.

பதவுரை :—இரு வினையும் - புண்ணியம், பாபம் என்கிற இரண்டுவித கர்மங்களையும். இன்றி போக - இல்லாமல் போக. கெடுத்து - நாசம் செய்து. ஒன்றி - பிரிக்க முடியாதபடி ஒன்றாய். ஆக்கை புகாமை - உடம்பில் மறுபடியும் புகாதபடி. உய்யக் கொள்வான் - உஜ்ஜீவிக்கச் செய்யுமவனான எம்பெருமான். நிறை - உகந்து வர்த்திக்குமிடமான. வேங்கடம் - திருவேங்கடமலை. நீள் நிலத்தில் - மிகவும் உயர்ந்த பூ ப்ரதேசத்தில். உள்ளது - இருக்கிறது. சென்று - அங்கேபோய். கை தொழுவார்கள் - கைங்கர்யம் செய்யுமவர்கள். தேவர்கள் - நித்ய ஸூரிகள்.

கருத்து :—புண்ய பாபங்களாகிற இருவினைகளும் நிச்சேஷமாய், மறுபடியும் சேராமல், அவைகளை நாசமாக்கி, சரீர ஸம்பந்தத்தை ஸ்வாஸநமாக அறுத்து, உடம்பில் மறுபடியும் புகாதபடி உஜ்ஜீவிப்பித்து எல்லாரையும் வாரிக்கொண்டு போய்த் தன்னிலத்திலே சேர்த்து அநுபவிக்க வேணுமென்கிற ஆசையினால், எல்லாரும் வந்து தன்னை ஆச்ரயிக்கும்படி ஸர்வஸ்வ தாநம் பண்ணிக் கொடுத்துக் கொண்டு எம்பெருமான் வீற்றிருக்கு மிடமான திருவேங்கடமாமலையானது—மஹோந்நதமாய், பரம ச்லாக்யமான இந்தப் பூமியிலிருக்கிறது. இது உண்மைதான். ஆனால், அதனால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? அங்கே போய் அவனுக்குக் கைங்கர்யம் செய்கிறவர்கள் நித்ய ஸூரிகள் தாம் அன்றோ? அங்கே நான் போகத் தகுந்தவனோ?

குறிப்பு :—"நீணிலத்துள்" என்பதற்கு விசாலமான ப்ருதிவீ மண்டலத்தில்—என்றும் பொருள் கூறலாம். இங்கே திருவேங்கடமலை யிருப்பதாலே, பூ மண்டலத்துக்கு ஒரு தனிப் பெருமை இருக்கிறது என்று காட்டப்படுகிறது.

(10. 5. 6.) அவதாரிகை :—எம்பெருமானைக் கண்ணாரக்கண்டாலன்றோ, அவன் திருவடித் தாமரைகளில் அடிமை செய்யலாம்? என்றால், பதில் சொல்லுகிறார்.

மேயான் வேங்கடம் காயா மலர்வண்ணன்
பேயார் முலையுண்ட வாயான் மாதவனே. 10. 5. 6.

பதவுரை :—காயா மலர் வண்ணன் - காயாம் பூப் போன்ற நிறத்தை யுடையவனும். மாதவன் - பெரிய பிராட்டிக்கு நாயகனும். பேயார் - 'பூதனை' என்கிற பேய்ச்சியினுடைய. முலை - ஸ்தனத்திலிருக்கும் விஷமிச்ரமான க்ஷீரத்தை (அவள் உயிருடன்). உண்டான் - அமுது செய்தவனுமான கண்ணபிரான். வேங்கடம் - திருமலையில். மேயான் - மிக்க உவந்து வர்த்திக்கிறான்.

கருத்து :—காயாம் பூவின் வர்ணமுள்ள திருமேனியை யுடையவனும், அகலகில்லேன் இறையுமென்றலர்மேல் மங்கையுறை மார்பனானவனும், பூதனை யென்கிற பேய்ச்சியினுடைய விஷம் நிறைந்த முலையை உண்டவனுமான கண்ணபிரான்—எல்லாரும் தன் திருவடிகளை ஸேவித்து, உஜ்ஜீவிக்க வேணுமென்ற எண்ணத்தினால் தான் ஸர்வ ஸுலபனாய்த் திருமலையில் எழுந்தருளியிருக்கிறான். ஆகையால், அவன் திருவடிகளில் ஸுகமாக அடிமை செய்து உஜ்ஜீவிக்கலாம்.

குறிப்பு :—1. நீல நிறமான எம்பெருமான் திருமேனிக்குப் பொன் நிறத்தை உண்டாக்கி ஒரு விலக்ஷணமான சோபையைப் பிராட்டி உண்டுபண்ணுகிறாள்—என்பது இங்கு "மாதவன்" என்கிறதுக்குக் கருத்து.

2. பூதனையின் வ்ருத்தாந்தத்தினால்—ஆச்ரிதர்களுடைய பக்திக்கு இடையூறான ப்ரக்ருதியை எம்பெருமான் நாசமாக்குகிறான்—என்று தெரிவிக்கப்படுகிறது.

(10. 7. 8.) அவதாரிகை :—எம்பெருமான் உவந்து நித்ய வாஸம் பண்ணும் போகஸ்தாநங்களைச் சொல்லுகிறார்.

திருமா லிருஞ்சோலை மலையே திருப்பாற் கடலே என்தலையே
திருமால் வைகுந்த மேதண் திருவேங் கடமே எனதுடலே
அருமா மாயத்து எனதுயிரே மனமே வாக்கே கருமமே
ஒருமா நொடியும் பிரியான் என்னூழி முதல்வன் ஒருவனே. 10. 7. 8.

பதவுரை :—திருமாலிருஞ் சோலை மலையே - 'திருமாலிருஞ் சோலை மலை' என்னும் அழகர் ஸந்நிதியும். திருப்பாற் கடலே - க்ஷீராப்தியும். என் தலையே - அடியேன் தலையும். திருமால் வைகுந்தமே - "வைகுண்டேது பரே லோகே" என்று வர்ணிக்கப்படும் ஸ்ரீயඃ பதியினுடைய ஸ்ரீ வைகுந்தமும். தண் - ஸ்வபக சீதலமான. திருவேங்கடமே - 'திருவேங்கட' மென்னும் மா மலையும். எனது உடலே - அடியேனுடைய சரீரமும். அரு - அருமையானதும். மா - விசாலமானதுமான. மாயத்து - ப்ரக்ருதி மண்டலத்தில். எனது உயிரே - என்னுடைய ப்ராணமும். மனமே - மனமும். வாக்கே - வாக்கிந்த்ரியமும். கருமமே - நான் செய்யும் காரியங்களும் (ஆகிய இவைகளை விட்டு) ஒரு மா நொடியும், மிகவும் குறைந்த ஒரு க்ஷண காலமும். என் ஊழி முதல்வன் - எனது ஸ்வாமியான ஜகத்காரண பூதன். ஒருவன் - ஸ்ரீமந் நாராயணன் ஒருவன். பிரியான் - பிரிகிறதில்லை.

கருத்து :—கல்பத்தை நியமனம் பண்ணுகிற பிரமன் முதலான எல்லா மேலாந் தேவதைகளையும் ஸ்ருஷ்டி பண்ணின எம்பெருமான் ஸ்ரீமந் நாராயண னொருவன், திருமாலிருஞ்சோலை மலையையும், திருப் பாற்கடலையும் விடாததுபோல், என் தலையையும் ஒரு க்ஷணகாலமும் விடுகிறதில்லை. தான் பிராட்டி முதலானோருடன் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ வைகுந்தத்தையும் ஸம்ஸார தாபத்தைப் போக்கும் பரம போக்யமான திருமலையையும் விடாததுபோல், என் உடம்பையும் ஒரு நொடிகாலமும் விடுகிறதில்லை. எள்ளிலே எண்ணெய் போலவும், தாருவில் அக்நிபோலவும் விட்டுப் பிரிக்க அரிதாயிருந்த ப்ரக்ருதி மண்டலத்தில் விழுந்து உழன்று கொண்டிருந்த என் உயிரையும், மனத்தையும், வாக்கையும், நான் செய்யும் வேலைகளையும் ஒரு க்ஷணமும் விட்டுப் போவதில்லை. ஆஹா! என்திறத்தில் அவனுக்கு என்ன ஆசை? என்ன அபிமானம்? என்ன அநுராகம்? நான் மிகவும் தந்யனானேன். இனி எனக்கு நிகரில்லை.

குறிப்பு :—1. ஆழ்வார் தலைக்கு உதாஹரணமாகத் திருமாலிருஞ் சோலை மலையையும், திருப்பாற் கடலையும், உடலுக்கு ஸ்ரீ வைகுந்தத்தையும் திருப்பாற் கடலையும் சொன்னார். உபமானங்களையும் உபமேயத்தையும் ஒரு ராசியிலே சேர்த்துச் சொன்னதுக்குக் கருத்து—எம்பெருமான் அவைகளில் எவ்வளவு பிரீதி பண்ணுகிறானோ, கொஞ்சமும் குறையாமல் அவ்வளவு பிரீதி இவைகளிலும் செய்கிறான்—என்பது தோற்றுகைக்காக.

2. இரண்டு இரண்டு உபமானங்களைச் சொன்னது, அவை யிரண் டிரண்டிற் செய்யும் ஆதாரத்தை இவர் ஒரு தலையிலும், உடம்பிலும் செய்கிறானென்பது தோற்றுவிக்கைக்காக.

3. எம்பெருமானுக்கு, திருப்பாற் கடல்போலே திருமாலிருஞ்சோலை நிகில லோக ரக்ஷண யேக நித்ரா ஸ்தானமென்றும், ஸ்ரீ வைகுந்தம் போல் திருவேங்கடம் போக ஸ்தானமென்றும், ஆழ்வாருடைய அவயவங்கள் இரண்டுக்கும் ஸ்தானங்களென்றும் ஸூசிக்கப்படுகின்றன.

4. எம்பெருமான்—கிருஷ்ணவதாரத்தில் மஹிஷிகளுடனும், கோபிமாருடனும் அநேகமான உருவங்களைக் கொண்டு எழுந்தருளி, அவர்களை அநுபவித்துத் திருப்தியை விளைவித்தாற்போல், ஆழ்வார் அவயவங்களிலும், இந்திரியங்களிலும், செயல்களிலும் எழுந்தருளி, போகத்தை அநுபவித்து ஆழ்வாருக்குப் பெரும் ஆனந்தாநுபவத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறான்—என்று உள் கருத்து.

ஸ்ரீ நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே பட்டநாதாய நம:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸ்ரீ பட்டநாதர் அருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி.

---

அவதாரிகை :—மங்களாசாஸந பரரான ஆழ்வார்களில் பெரியவரான ஸ்ரீ 'பட்டநாதர்' என்னும் பெரியாழ்வார், தமது திருப்பல்லாண்டு ப்ரபந்தத்தில் ஸ்ரீ ந்ருஸிம்ஹ - ராமாத்யவதாரங்களிற் காட்டிலும் அதிகமாக மங்களாசாஸநம் பண்ணினது க்ருஷ்ணாவதாரத்துக்குத்தான். ஆழ்வார்களெல்லாருமே க்ருஷ்ணாவதாரத்தில் மண்டியிருப்பார்கள். அவர்களெல்லாரையும் போலல்லவிறே க்ருஷ்ணாவதாரத்தில் இவருக்கு உண்டான ப்ராவண்யம். க்ருஷ்ணாவதார வைபவங்களை அநுபவிக்கத் தொடங்கின இவ்வாழ்வார், அதினுடைய ரஸம் உந்மஸ்தக மானவாறே, தாமான தன்மையை மறந்து, க்ருஷ்ண குண சேஷ்டிதங்களை அநுபவிக்கும் பாக்யத்தைப் பெற்ற ஸ்ரீ யசோதா தேவியின் தன்மையை யடைந்து, க்ருஷ்ணனுடைய பால்ய க்ரீடாரஸாநுபவம் உள்ளடங்காமையால், திவ்ய ப்ரபந்த முகத்தாலே வெளியிடுகிறார்.

இதில் திருவேங்கட முடையான் விஷயமாக 7-பாசுரங்கள் இருக்கின்றன.

(1. 4. 3.) அவதாரிகை :—அதில் இந்தப் பாசுரத்தில் ஸ்ரீ யசோதைப் பிராட்டி சந்திரனை "வா வா" என்று கூப்பிடுகிற தனது குழந்தையான க்ருஷ்ணனுக்கு உகப்பாகத் தானும் பலகால் சந்திரனை அழைத்த ப்ரகாரத்தை, ஆழ்வார் தாமும் பேசி இனியராகிறார்.

சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யினும் என்மகன் முகம்நே ரொவ்வாய்
வித்தகன் வேங்கட வாணன் உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவா மேஅம் புலி! கடி தோடிவா. 1. 4. 3.

பதவுரை :—ஒளி - ஒளியை யுடைத்தான. வட்டம் - மண்டலமானது. சுற்றும் - நாற்புறமும். சூழ்ந்து - சூழ்ந்து கொண்டு. எங்கும் - எல்லாத் திக்குகளிலும். சோதி - தேஜஸ்ஸாலே. பரந்து - பரவி. எத்தனை செய்யிலும் - எல்லாம் செய்தாலும். என் மகன் - என் மகனுடைய. முகம் - ஒள்ளிய முகத்துக்கு. நேர் ஒவ்வாய் - (எல்லாப் படியாலும்) ஒப்பாக மாட்டாய். வித்தகன் - ஆச்சர்யப்படத்தக்கவனும். வேங்கட வாணன் - திருவேங்கடமலையிலே எழுந்தருளி யிருக்கிறவன். உன்னை - ஆகாயத்தில் இருக்கும் உன்னை. விளிக்கின்ற - ஆதரித்தழைக்கின்ற. கைத்தலம் - திருக்கைத்தலம். நோவாமே - நோவாதபடி. அம்புலி - சந்திரனே. கடிது - விரைவாக. ஓடிவா - ஓடிவா.

கருத்து :—ஒளியை யுடைத்தான உன் மண்டலமாவது க்ஷயமின்றிக்கே சுற்றும் சுழன்று, களங்கரஹிதமாய், எங்கும் தேஜஸ்ஸாலே வ்யாப்தமாய், எல்லாம் செய்தாலும், என் மகனுடைய பரமவிலக்ஷணமான திருமுகத்துக்கு ஒப்பாகமாட்டாய்; அழகாலும், மங்களகுண சேஷ்டிதங்களாலும் ஆச்சரிய பூதனும், நீசர்களை அநாதரித்துத் திருமலையை ஆதரித்து வர்த்திக்கிறவன், உன்னை ஆதரித்து அழைக்கிறான். இது உனக்குப் பெரும் பாக்யமில்லையா? அவனது திருக்கைத்தலம் நோவாதபடி அம்புலீ! மிகவும் விரைந்து ஓடிவா.

குறிப்பு :—அம்புலி—சந்திரன்.

(1. 8. 8.) அவதாரிகை :—கண்ணன் ஓடி வந்து தன்னை அணைத்துக் கொள்ள வேண்டும்படி ஸ்ரீ யசோதை ஆசைப்பட்டு, அது தன்னை அவனைக் குறித்து அபேக்ஷித்து, அவன் சைசவாநுகுணமாக வந்து அணைத்துக் கொள்ள, அந்த ரஸத்தை அநுபவித்தாள்; அந்த ப்ரகாரத்தை அப்படியே ஆழ்வார் தாமும் அநுபவித்து, ஸந்தோஷத்தை அடைகிறார் இந்தத் திருமொழியில்.

என்னிது மாயம்? என்னப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாயென்ன
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னு முடியனே! அச்சோ வச்சோ
வேங்கட வாணனே! அச்சோ வச்சோ. 1. 8. 8.

பதவுரை :—(திருமால் மாவலியிடமிருந்து நீரேற்றுத் திரிவிக்ரமனும் வளர்ந்து, தன் திருவடிகளாலே அளக்கப்புக, அது கண்ட மஹாபலி குமாரனை நமுசி ஓடிவந்து). இது - இதுவென்ன. மாயம் - ஆச்சர்யச் செய்கை.

இது - இத்தை. என் - என்னுடைய. அப்பன் - தகப்பனானவன். அறிந்திலன் - அறியவில்லை. (ஆதலால்) முன்னைய - நீ யாசித்த போது இருந்த. வண்ணமே கொண்டு - வடிவையே கொண்டு. அளவாய் - அளப்பாயாக. என்ன - என்று சொல்லிக் கொண்டு. மன்னு - பிடிவாதமாய் நின்ற. நமுசியை - அந்த நமுசியை. வானில் - ஆகாயத்தில். சுழற்றிய - சுழலச் செய்து எறிந்துவிட்ட. மின்னும் - விளங்குகிற. முடியனே - திருவபிஷேக (கிரீட)த்தை யுடையவனே ! அச்சோ அச்சோ - ஓடிவந்து என்னை அணைந்துகொள். வேங்கடம் வாணனே - திருவேங்கடத்துக்குத் தலைவனாய் நிற்கிறவனே ! அச்சோ அச்சோ - விரைந்து ஓடிவந்து என்னை அணைந்து கொள்.

கருத்து :—திருக்கையிலே தான ஜலம் விழுந்தவாறே ஓங்கி வளர்ந்து திருவடிகளால் மாவலி கொடுத்த பூமியை அளக்கப்புக, இந்த ஆச்சர்யத்தைக்கண்ட மஹாபலி புத்திரனான நமுசி ஓடிவந்து "இது வென்" என்று வளருகிற திருவடிகளைத் தகைய, "நீ தகைகிறதென்? நான் தானம் பெற்றது அளந்து கொள்ள வேண்டாவோ?" என்ன, "நீ செய்தது க்ருத்ரிமமன்றோ ? என்னுடைய பிதாவானவன் உன்னுடைய மாயையில் அகப்பட்டு, உன்னுடைய படியொன்றையும் அறிந்திலன்" என்று, எவ்வளவு சொன்னாலும், தாம் பிடித்த பிடிவாதத்தை விடாதே உறுதியாயிருக்க, வளர்ந்த திருவடியினால் அவனை ஆகாசத்திலே கொண்டு போய்ச் சுழற்றி எறிந்துவிட்டு விளங்குகிற திருவபிஷேகத்தை யுடையவனே ! விரைந்து ஓடிவந்து என்னைச் சைசவாநுகுணமாக அணைந்து கொள் ; திருவேங்கட நாதனே ! துவரிதமாக ஓடிவந்து என்னை அணைந்துகொள்.

குறிப்பு :—1. "அச்சோ, அச்சோ" என்றது அணைந்துகொள் - என்றபடி. இருகால் சொல்லுகிறது ஆதராதிசயத்தாலே.

2. அவன் வந்து அணைந்து கொள்ளுகையை அபேக்ஷிக்கையும், அந்தச் செயலின் ரஸத்தை யநுபவிக்கையுமே, ஆழ்வாருக்கு ஸ்ரீ யசோதைப் பிராட்டியோடு இருக்கும் ஸாம்யமாகிறது.

3. "அன்று ஞால மளந்த பிரான்" என்னும்படி ஸ்ரீ வாமநாவதார சேஷ்டிதமடையத் தோன்றத் திருமலைக்கு நிர்வாஹனாய் இருக்கிறான்— என்று ஸூசிதமாயிற்று.

(2. 6. 9) அவதாரிகை —ஸ்ரீ யசோதைப் பிராட்டி கண்ணனுக்குத் திருக்குழல் வாரின வநந்தரம் பூச்சூடுவதாகத் தேடுகிறவளவிலே, 'கண்ணபிரான் கன்றுகள் மேய்த்து மறுக்கிற கோலைத்

தா' என்று பிடிவாதம் பிடிக்க, அப்படியே கோலை வாங்கித் தருகிறேன்—என்று சொல்லி, அவனை அழுகை மருட்டி, "அக்காக்காய் கோல் கொண்டுவா, அக்காக்காய் கோல் கொண்டுவா" என்று பலகாலும் சொல்லி அவனை உகப்பித்தாள். அந்த ப்ரகாரத்தை ஆழ்வாரும், தத்பாவயுக்தராய்க் கொண்டு, அவளைப் போலே தாமும் பேசி, அந்த ரஸத்தை அநுபவிக்கிறார் இந்தத் திருமொழியில்.

அதில், இந்தப் பாசுரத்தில் ஸ்ரீராமபிரானா யவதரித்து இராவணனை ஸம்ஹரித்து, 'அந்த வெற்றி தோன்றத் திருமலையில் வீற்றிருக்கும் என் கண்ணபிரானுக்கு 'கோல் கொண்டுவா' என்று காக்காயை நோக்கி அருளிச் செய்கிறார்.

தென்னிலங்கை மன்னன் சிரம்தோள் துணிசெய்து
மின்னிலங்குபூண் விபீடண நம்பிக்கு
என்னிலங்கு நாமத் தளவும் அரசென்ற
மின்னலங்காரற்கு ஓர்கோல் கொண்டுவா
வேங்கட வாணற்கு ஓர்கோல் கொண்டுவா. 2. 6. 9.

பதவுரை :—தென்—" மதிளரண், மலையரண், காட்டரண் " என்கிற மூவகைப்பட்ட அரண்களை யுடைத்தான தாகையாலே கட்டளைப்பட்டிருக்கிற இலங்கை - இராக்கதர் வாழும் இலங்கைக்கு. மன்னன் - தலைவனான இராவணனுடைய. சிரம் - பத்துத் தலைகளையும். தோள் - இருபது தோள்களையும். துணிசெய்து - அம்பினால் அறுத்துப் போகட்டு. மின் இலங்கு - ஒளி விடாநின்றுள்ள, பூண் - ஆபரணங்களை அணிந்த. நம்பி - சக்ரவர்த்தி திருமகனை அடைக்கலம் புகுகையால் வந்த திருவால் நிறைந்தவனான. விபீடணனுக்கு - ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு. இலங்கு - விளங்கா நின்றுள்ள. என்னுமத்தளவும் - என்னுடைய பெயர் இந்த லோகத்தில் செல்லுந்தனையும். அரசு என்ற - உனக்கு அரசு செல்லக்கடவது என்றருளிச் செய்தவனாய். மின் - மின்போலவே. இலங்கு - விளங்கா நின்றுள்ள. ஆரற்கு - நவமணிகள் கோத்துச் சமைத்த ஹாரத்தை யுடையவனுக்கு. ஓர் கோல் கொண்டுவா - (அக்காக்காய்! கன்றுகள் மேய்க்கைக்கு) ஒரு கோல் தேடிக் கொண்டு தா. வேங்கடம் - திருவேங்கடமா மலைக்கு. வாணர்க்கு - ஸ்வாமியானவனுக்கு. ஓர் கோல் கொண்டு வா - ஒரு கோல் தேடிக் கொண்டு வா.

கருத்து :—அக்காக்காய்! மூன்று விதமான அரணை யுடைத்தானதாகையாலே அழகாய்க் கட்டப்பட்டிருக்கிற இராக்கதர் வாழ் இலங்கைக்குத் தலைவனான ராவணனுடைய பத்துத் தலைகளையும்,

இருபது தோள்களையும் அம்பினால் அறுத்துப் போகட்டு ஒளிவிடா நின்றுள்ள ஆபரணங்களைப் பூண்டவனாய், சக்ரவர்த்தி திருமகனை அடைக்கலம் புகுகையால் வந்த திருவால் நிறைந்தவனான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு, 'என்னுடைய விளங்கும் பெயர் இந்த உலகத்தில் செல்லுந்தனையும் உனக்கு அரசு செல்லக்கடவது' என்று அருளிச் செய்தவனாய், மின்னல் போலே விளங்கா நின்றுள்ள நவரத்தினங்கள் கோத்துச் சமைத்த திவ்ய ஹாரங்களைத் தரித்து அழகாய் இருக்கிறவனுக்கு, கன்று மேய்க்கைக்குரியதோர் கோல் தேடித்தா; திருவேங்கட நாதனுக்கு ஒரு கோல் தேடிக் கொண்டு தா.

குறிப்பு :—துஷ்டர்களை நிரஸித்து, சிஷ்டர்களைக் காப்பாற்றுமவனான எம் கண்ணபிரானுக்கு அழகானதொரு நல்ல கோல் கொண்டு வா. கொண்டு வாராவிட்டால், உன்னையும் தண்டிப்பான்—என்று உள் கருத்து.

(2. 7. 3.) அவதாரிகை :—ஸ்ரீ யசோதைப் பிராட்டி தனது அழகான கண்ணபிரானுக்குக் குழல் வாரிப் பின்னி, அவனுக்குப் பூச்சூட்டுவதாகக் கோலி, அவனை உகப்பிப்பதற்காக—செண்பகம், மல்லிகை, செங்கழுநீர், இருவாட்சி, தொடக்கமாய், நிறத்தாலும், மணத்தாலும் ஒன்று போலன்றிக்கே விலக்ஷணமாயிருக்கும் புஷ்பங்களை யுண்டாக்கி, அவற்றைத் தனித்தனியே சொல்லி "உனக்கு இன்ன இன்ன பூச்சூட்டும்படி வா" என்று அநுவர்த்தித்து அழைத்துப் பூச்சூட்டினாள். அந்த ப்ரகாரத்தை தத்பாவ யுக்தராய்க் கொண்டு அநுபவிக்க ஆசைப்பட்டு, அவனைக் குறித்து அவள் பேசினாற் போலே பேசி, அந்த ரஸத்தை அநுபவிக்கிறார் ஆழ்வார் இத் திருமொழியில்.

அதில், இந்தப் பாசுரத்தில்—கோபிமாருடன் நிச்சலும் தீமைகள் செய்து, அவர்களுக்கு மிக்க எளியனாய், திருவேங்கடமலையில் பரத்பரனாய், எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே ; பச்சைத் தமனகத் தோடு பாதிரிப் பூச் சூட்டவாராய்! என்று கூப்பிடுகிறார்.

மச்சொடு மாளிகை யேறி மாதர்கள் தம்மிடம் புக்குக்
கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி
நிச்சலும் தீமைகள் செய்வாய்! நீள்திரு வேங்கடத்து எந்தாய்!
பச்சை தமனகத் தோடு பாதிரிப் பூச்சூட்ட வாராய். 2. 7. 3.

பதவுரை :—மச்சொடு - நடு நிலங்களிலும். மாளிகை - மேல் நிலங்களிலும். சென்று - ஏறி, மாதர்கள் தம்மிடம் - பெண்களிருக்கிற விடங்களில்.

புக்கு - புகுந்து. கச்சொடு - அவர்கள் முலைக் கச்சையும். பட்டை - அதற்கு மேலே தரிக்கத்தக்க பட்டையும். கிழித்து - கிழித்ததுமன்றி. காம்பு துகிலவை - வேலைத் திறமுள்ள கரையை யுடைத்தான புடைவைகளையும். கீறி - கிழித்தும். நிச்சலும் - நாடோறும். தீமைகள் - தீம்புகளை. செய்வாய் - செய்யுமவனே. நீள் - பரமாகாசத்தை யளாவும்படியான உயர்த்தியையுடைய. திருவேங்கடம் - திருவேங்கடமா மலையிலே எழுந்தருளியிருக்கிற. எந்தாய் - என் ஸ்வாமியானவனே! பச்சை - பசுமை நிறம் குன்றாத. தமனகத்தொடு - தவனத்தோடு மாலையாகச் சமைத்த. பாதிரிப் பூ - பரம போக்யமான பாதிரிப் பூவை. சூட்ட - நான் சூட்டும்படி. வாராய் - வந்தருளவேணும்.

கருத்து :—மச்சோடே கூட மாளிகையிலே சென்றேறி, பெண்களிருக்கிற விடங்களிலே புக்கு, அவர்கள் முலைக் கச்சோடே அதற்கு மேலிடான பட்டுக்களையும் கிழித்து, பணிப் புடைவைகளான வற்றையும் கிழித்து, நாடோறும் தீம்புகளைச் செய்யுமவனே! ஓக்கத்தையுடைத்தான வடக்குத் திருமலையிலே காநகமும், வானரமுமான வற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிற என் ஸ்வாமியே! பசுமை குன்றாத தமனகத்தோடே, அதுக்குப் பாபாகமான நிறத்தையுடைய பாதிரிப் பூவையும் சூட்டும்படி வந்தருள வேணும்.

குறிப்பு :—மச்சு—நடு நிலம். மாளிகை—மேல் நிலம். கச்சு—(ரவிகை) 'கஞ்சுகம்' என்கிற வடசொற் சிதைவு. பட்டு—பட்டாடை. காம்பு துகில்—விளிம்பில் பணியுடன் சேர்ந்த புடவை (கரை கட்டின சேலை). நிச்சல்—'நித்தியம்' என்ற வடச்சொல் விக்ருதி. தமநகம்—தவனத்திற்கு வடசொல்.

(2. 9. 6.) அவதாரிகை :—கண்ணபிரான் செய்யும் தீம்புகளை ஸஹிக்க மாட்டாமல், ஊரிலகங்களிலே உள்ளார் அனைவரும் வந்து முறைப்பட்டு "உன் பிள்ளையை இங்கே அழைத்துக் கொள்ளாய்" என்று ஸ்ரீ யசோதை இடம் சொல்ல, அவளும் அவனை அழைத்துக் கொள்ளுகைக்காக, பலகாலும் இவனை ஸ்தோத்திரம் பண்ணுவது, "உன்னைப் பிறர் சொல்லும் பரிபவம் எனக்குப் பொறுக்கப் போகிறதில்லை; வாராய்" என்பதாய், இப்புடைகளிலே பலவற்றையும் சொல்லி அழைத்த ப்ரகாரத்தைத் தத்பாவ பாவிதராய்ப் பேசி அநுபவித்து ஸந்துஷ்டராகிறார்—இத் திருமொழியில்.

அதில் இந்தப் பாசுரத்தில் அசலகத்தார் "அசோதை நங்காய்! உன் மகனைக் கூவாய்" என்றவாறே தன் மகனை இவள் அழைத்த படியைச் சொல்லுகிறது.

எண்சீர் விருத்தம்.

போதர்கண் டாய்இங்கே போதர் கண்டாய்
போதரே னென்னுதே போதர் கண்டாய்
ஏதேனும் சொல்லி அசல கத்தார்
ஏதேனும் பேசநான் கேட்க மாட்டேன்
கோது குலமுடைக் குட்ட னேயோ!
குன்றெடுத் தாய்! குட மாடு கூத்தா!
வேதப் பொருளே! என்வேங் கடவா!
வித்தக னே! இங்கே போத ராயே. 2. 9. 6.

பதவுரை :—*கோது குலமுடை- எல்லாரும் கொண்டாடத்தக்க சீரை யுடைய. குட்டனே - பிள்ளையானவனுய். குன்று - (பசுக்களையும் இடை யரையும் ரக்ஷிக்கைக்காக) கோவர்த்தன பர்வதத்தை. எடுத்தாய் - குடை யாக எடுத்தவனுய். குடமாடு - குடக் கூத்தாடின. கூத்தா - கூத்தை யுடையவனே! வேதப் பொருளே - எல்லா வேதங்களாலும் ப்ரதி பாதிக்கப் படுமவனே. என் - என்னுடையவன் என்னும்படி. வேங்கடவா - திருமலை யிலே இரண்டு விபூதியிலுள்ளார்க்கும் அநுபவ யோக்யனுய் நிற்கிறவனே! வித்தகனே - எல்லாராலும் வியக்கப்படத் தக்கவனே! இங்கே - என்னிடம். போதர் கண்டாய், போதர் கண்டாய் - விரைவாக ஓடிவா; ஓடிவா. (என்று யசோதை அழைக்க, அவன் "வரமாட்டேன்" என்ன). போதரேன் என் னுதே - வரமாட்டேன் என்று சொல்லாமல். போதர் கண்டாய் - (இசைந்து உடனே) வருவாயாக. (என்னை நீ ஏன் இவ்வளவு வருந்தி யழைக்கிறுய்? என்னை என் செய்யப் போகிறுய்—என்று கண்ணன் கேட்க). அசல் அகத் தார் - அசல் வீட்டுக்காரர்கள். ஏதேனும் - உன்பேரில் இன்னது என்று எடுத்துக் கூற வொண்ணுதபடியுள்ள சில குற்றங்களைச் சொல்லிக் கொண்டு. (அவ்வளவோடு நில்லாமல்) ஏதேனும் - என் காதால் கேட்கவும், வாயாற் சொல்லவும் ஒண்ணுத சில துர்பாஷணங்க (கடுஞ் சொற்க)ளை. பேச - சொல்ல. (அவற்றை எல்லாம்) நான் - (உன்னை உயிராகக் கொண்டு இருக்கும்) நான். கேட்கமாட்டேன் - கேட்டுப் பொறுக்கமாட்டேன். (ஆத லால்) இங்கே போதராய் - (அவர்கள் வாய்க்கு இரையாகாமல், என் கண்ணே! என்னிடம் ஓடிவா; இங்கே ஓடிவா.*

கருத்து :—*எல்லாரும் கொண்டாடும் சீரையுடைய பிள்ளாய்! அப்படி யிருந்த நீ, எல்லாரும் பழிக்கும்படி இப்படி இருப்பதே! அசலகத்தா ரானவர்கள் உன் விஷயமாக வாசா மகோசரமான தோஷங்களைச் சொல்லி, அவ்வளவு மன்றிக்கே, என்பக்கலிலே வந்து என் செவியால் கேட்கவும், வாக்கால் சொல்லவும் ஒண்ணுதபடி*

உன்பேரில் குற்றங்களையும், தூர்பாஷணங்களையும் சொல்லிக் கொண்டு நிற்க, என்றால், கண்ணே! பொறுக்க முடியாது. பொல்லாதவர்கள் உள்ள அவ்விடங்களில் நிற்காமல் என்னிடம் விரைவாக ஓடிவா; துரிதமாக ஓடிவா.

கோக்களையும், கோகுலத்தையும், கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து ஸம்ரக்ஷித்தவனல்லவா நீ? ஐச்வர்யச் செருக்குக்குப் போக்கு வீடாகக் கூடக் கூத்தாடினவனல்லவா நீ? அப்படி இக்குலத்துக்கு ரக்ஷகனாய், இக்குலத்தில் பிறப்பால் வந்த ஐச்வர்யமே உனக்கு ஐச்வர்யமென்று நினைத்து இருக்குமவனன்றோ நீ? இதற்கு ஈடாகவர்த்திக்க வேண்டாமோ நீ? ஸகலவேத ப்ரதிபாத்யனாய், அவ்வளவுமன்றிக்கே, கண்ணாலே காணலாம்படி, மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் வைப்பான திருவேங்கடமலையிலே எல்லாரையும் ஒரு துறையிலே அநுபவிப்பித்துக் கொண்டு, 'என்னுடையவன்' என்னும் படி நிற்கிறவனே! ஆச்சர்யகுண சேஷ்டிதனே! உன்னுடைய குணஹாநியைச் சொல்லுவார் வர்த்திக்கிறவிடத்தில் நிற்காமல், உன்னுடைய குணங்களையே பேசா நிற்கும் என்னிடத்தில் விரைவாக ஓடிவா.

குறிப்பு:—1. கோது குலமுடைய—எல்லாருடைய கௌதூஹலத்தையும் தன்மேல் உடைய—என்று பொருளாய், எல்லாரும் விரும்பத்தக்க, (கொண்டாடத்தக்க) சீரையுடையவன்—என்று கருத்தாம்.

2. குடமாடு கூத்து—குடங்களெடுத்து ஆடின கூத்து. அதாவது—இடையருக்குச் செல்வம் விஞ்சினால், அந்த செருக்குக்குப் போக்கு வீடாக அவர்கள் ஆடுமொரு கூத்து; தலையிலே அடுக்குக் குடமிருக்க, இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க, இரு கையிலும் குடங்களை யேந்தி, ஆகாசத்திலே எறிந்து ஆடுவதொரு கூத்து. சிலப்பதிகாரத்தில் விளக்கமாகக் காண்க.

(3. 3. 4.) அவதாரிகை:—கண்ணபிரான் கன்றுகளை மேய்த்து மீண்டு வருகிற போது அலசுதலை யடைந்த அவன் திருமேனியைக் கண்டு பொறுக்க முடியாதவளாய் "கண்ணா நீ நாளைத்தொட்டுக் கன்றின் பின் போகேல் கோலம் செய்திங்கே யிரு" என்னுமளவாக விரைந்து இரைத்த யசோதையின் பாசுரத்தை, தன்மயதையை யடைந்த ஆழ்வார் அப்படியே பேசி, அந்தரஸத்தை அநுபவிக்கிறார் இத் திருமொழியில்,

அதில் இந்தப் பாசுரத்தில் "உன் செந்தாமரையடிகள் வெதும்பி, கண்கள் சிவந்து அசைந்திட்டாய், எம்பிரானே!" என்று மனம் தளர்ந்து பேசுகிறார்.

எழுசீர் விருத்தம்.

கடியார் பொழிலணி வேங்கடவா! கரும்போ
ரேறே! நீயு கக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக்
கொள்ளாதே போனாய் மாலே
கடியவெங் கானிடைக் கன்றின் பின்போன
சிறுக்குட் டச்செங் கமல
அடியும் வெதும்பி உன்கண்கள் சிவந்தாய்
அசைந்திட் டாய்நீ எம்பிரான். 3. 3. 4.

பதவுரை:—கடி ஆர் - மலர்களின் பரிமளம் நிறைந்த. பொழில் - பொழில்களை யுடைத்தாய். அணி - அழகாயிருந்துள்ள. வேங்கடவா - திருவேங்கட மலையில் நித்ய வாஸம் பண்ணுமவனே! கரு - கருத்த நிறத்தையுடைத்தாய். போர் - செருக்காலே பொருது. ஏறே - (தன்னிச்சைப் படி திரியா நின்றுள்ள) ரிஷபம் போலவே நாணிப்பு தோற்றத் திரிகிறவனே! நீ - பரம குதூஹலமுடைய நீ. உகக்கும் - விரும்புமவையாய். குடையும் - (மழைத் துளிகள் மேல் விழாதபடி காக்குமதான) குடையையும். செருப்பும் - முள்ளுறுத்தாமை—முதலியவற்றுக்கு ரக்ஷகமான திருவடி நிலைகளையும். குழலும் - கன்றுகளை யமைத்து மேய்க்கைக்கும், மறிக்கைக்கும் உறுப்பாக உனது கைக்குடலான வேய்ங் குழலையும். தருவிக்க - தருவிக்கச் செய்தே. கொள்ளாதே - இவற்றை வாங்கிக் கொள்ளாதே. மால் - கன்றுகள் மேய்க் கையிலுண்டான மிகுந்த ஆசையாலே. போனாய் - அவற்றின் பின்னே போனவனே! கடிய வெம் - மிகவும் வெம்மையை யுடைத்தான. கானிடை - காட்டிலே. கற்றின் பின் - கன்றுகள் போன விடமெங்கும். போன - பின் தொடர்ந்து போன. சிறு குட்டன் - சிறு பிள்ளையான உன்னுடைய. செங்க மலம் - செந்தாமரை மலரை யொத்த. அடியும் - திருவடிகளும். வெதும்பி - கொதித்து. உன் - உன்னுடைய. கண்கள் - திருக் கண்களும். சிவந் தாய் - சிவந்து. அசைந்திட்டாய் - இளைத்திட்டாய். எம்பிரான் - எனக்கு மஹோபகாரகனாய், ஸ்வாமியானவனே! (நீ மிகவும் அசைந்திட்டாய் பரம ஸுகுமாரமான உன் கரிய திருமேனியும் வாடி வதங்கிவிட்டது. இதை நான் எப்படிப் பொறுப்பேன்; என்னையனே! திருவடிகள் வெதும்பித் திருக் கண்கள் சிவந்தனவேயோ? ஊருக்குள்ளே திரியும்போது "கரும்போரேறு" என்னும்படிச் செருக்கித் திரியக்கடவ நீ போர இளைத்துவிட்டாயே! என்று சொல்லுகிறாள்).

கருத்து:—மலர்களின் பரிமளம் நிறைந்த பொழில்களை யுடைத் தாய், மிகவும் அழகியதா யிருந்துள்ள திருமலையிலே நித்ய வாஸம்

பண்ணுமவனே! கருத்த நிறத்தையுடைத்தாய், செருக்காலே எதிரே பொருது தன்னிச்சைப்படி திரியா நின்றுள்ள ரிஷபம் போலே, திருவாய்ப் பாடியை மூலையடியே நடத்தி, மேனாணிப்புத் தோற்றத் திரிகிறவனே! எம்பெருமானே! நீ யுகக்கும் வர்ஷாதப நிவாரகமான குடையும், கண்டகாதி பரிஹாரகமான திருவடி நிலைகளும், கன்றுகளை யமைத்து மேய்க்கைக்கும், அழைக்கைக்கும் உறுப்பாக ஊதுகைக் குடலான வேய்ங்குழலும், இவைகள் முதலான சிறந்த வஸ்துக்களை யெல்லாம் தருவிக்கச் செய்தே, இவற்றை வாங்கிக் கொள்ளாதே கன்றுகள் மேய்க்கையில் வ்யாமோஹத்தாலே போனவனே! மிகவும் வெம்மையை யுடைத்தான காட்டிலே கன்றுகள் போன விடமெங்கும் தொடர்ந்துபோன சிறு பிள்ளையான உன்னுடைய சிவந்த கமலம்போன்ற திருவடிகளும் கொதித்து, உன் திருக்காங் களும் சிவந்து, அசைந்திட்டாய்! ஐயோ! என் கண்ணே! நான் எப்படி ஸஹிப்பேன். இனிமேல் நீ நாளை தொட்டுக் காட்டுக்குப் போக வேண்டாம்; கோலம் செய்து இங்கே இரு.

குறிப்பு:—செங்கமல வடி—என் கையாலே திருவடிகளினுடைய மென்மை, குளிர்த்தி—முதலானவற்றைச் சொல்லுகிறது.

(5. 4. 1.) அவதாரிகை:—எம்பெருமான்—பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரங்களான ஸ்வரூபங்களோடு எழுந்தருளி யிருப்பது—சேதநரைத் திருத்துகைக்கும், திருந்தினரை அடிமை கொள்ளுகைக்குமிறே. அவனுடைய ஸௌலப்யாதி ஸகல கல்யாண குணங்களும் பூர்ணமாகக் காணலாவது—திருவேங்கடமலையில் எழுந் தருளி நிற்கிற நிலையிலேதான். இவ்வாழ்வாருக்கு ப்ரதம ஸுக்ருதம் இந்த எம்பெருமான் தான். அவன் இவருக்கு அநுபவமாகிற ஏருவை யிட்டு, விசத ஞானமாகிற நீரைத் தேக்கி, ஸங்கமாகிற நெல்லை வித்தி, விரோதியில் அருசியையும், ப்ராப்யத்தில் ருசியையும் பிறப்பித்து இவரைத் திருத்தினன்.

இப்படித் திருந்தின இவரைக்கண்டு அவனுகக்க, அவனுகப்பைக் கண்டு இவருகக்க, "இவர் கார்யத்திலே நாம் முதலடி யிட்டிலோம்" என்று அவன் பதறுகிற பதற்றத்தைக் கண்டு "விரோதிகளடையக் கழிந்தன; அபேக்ஷிதங்களில் பெறவேண்டு மம்சங்க ளடையப் பெற்றேன்; இனி, தேவரீர் பதறுகிறதென்! என்று கூறி அவன் பதற்றத்தைத் தவிர்க்கிருர்.

அறுசீர் விருத்தம்.

சென்னி யோங்கு தண்திரு வேங்கட முடையாய்! உலகு
தன்னை வாழ நின்ற நம்பீ! தாமோதரா! சதிரா! [கொண்டு
என்னையுமென் னுடைமை யையுமுன் சக்கரப் பொறியொற்றிக்-
நின்னரு ளேபுரிந் திருந்தேன் இனிஎன் திருக்கு றிப்பே? 5. 4. 1.

பதவுரை:—ஓங்கு - ஆகாசத்தளவும் உயர்ந்து நிற்கிற. சென்னி - கொடு முடிகளையும். தண் - குளிர்ச்சியையுமுடைய. திருவேங்கடம் - திருவேங்கட மலையை. உடையாய் - இருப்பிடமாகவுடையவனும். உலகு தன்னை - எல்லா உலகங்களையும். வாழ நின்ற - வாழ்வித்தருளுகிற. நம்பீ - நிகில கல்யாணகுண பூர்த்தியையுடையவனே! தாமோதரா - ஸ்ரீ யசோதைப் பிராட்டியால் திருவுதர பாகத்தில் கயிற்றால் கட்டப்பட்டு 'தாமோதரன்' என்று ப்ரஸித்தமான திருநாமத்தை யுடையவனே; சதிரா - ஆச்ரிதர்களுடைய குற்றத்தைக் கண்ணிட்டுப் பாராத சதிரையுடையவனே! என்னையும் - எனது ஆத்மாவுக்கும். என்னுடைமையையும் - என்னுடைமையான சரீரத்துக்கும். உன் - ப்ராப்த சேஷியான உன்னுடைய. சக்கரப்பொறி - ஸ்ரீ ஸுதர்சனாழ்வானுடைய திருவிலச்சினையை. ஒற்றிக் கொண்டு - இடுவித்துக் கொண்டு. நின் - உன்னுடைய. அருளே - க்ருபையையே. புரிந்து - விரும்பி. இருந்தேன் - இருக்கிறேன். இனி - இப்படியான பின்பு. திருக்குறிப்பு - திருவுள்ளக் கருத்து. என் - என்ன? அத்தை அருளிச் செய்ய வேணும்.

கருத்து:—ஆகாசத்தளவும் ஓங்கி உயர்ந்திருக்கப் பெற்ற கொடு முடிகளையுடைய குளிர்ந்த திருவேங்கட மலையிலே வீற்றிருந்து உலகத்தாரை யெல்லாம் வாழ்வித்தருளுகிற திவ்ய கல்யாணகுண பூர்த்தியை யுடையவனாய் இருக்கும் எம்பெருமானே! கண்ணிநுண் சிறுத்தாம்பினாற் கட்டுண்ணப் பண்ணிய பெருமானாதலால், அத்தாம்பின் தழும்பு திருவயிற்றில் தோன்றப் பெற்றவனான தாமோதரனே! ஆச்ரிதர் குற்றங்களைக் கண்ணிட்டுப் பாராத சதிரையுடையவனே! என் கண்ணபிரானே! என் ஆத்மாவையும், என்னுடலையும், உன் ஸுதர்சனாழ்வானுடைய திருவிலச்சினையினால் ஒற்றிக் கொண்டு, உன்னுடைய கருணையையே புருஷார்த்தமாகக் கருதியிருக்கிறேன். இனி உன் திருக்குறிப்பு என்?

விஷயாந்தர ப்ரவணனாய், அங்கு மிங்கும், அலை பாய்ந்து நெடு நாள் திரிந்த அடியேனை உன் வைலக்ஷண்யத்தைக் காட்டி, உனக்கு வசப்படுத்திக் கொண்டு ஆத்மாத்மீயங்களை யெல்லாம் உனக்கே

சேஷப்படுத்தி விட்டு, உன் அருளையே புருஷார்த்தமாக ப்ரதிபத்தி பண்ணிக் கொண்டிருக்கும் படியான நிலைமையையும் அடியேனுக்கு அமைத்தருளினாய். இதனால் உன் அபேக்ஷிதமும் தலைக்கட்டிற்று; அடியேன் அபேக்ஷிதமும் தலைக்கட்டிற்று. இனிச் செய்ய வேண்டுவதொன்று மில்லை. இப்படியிருக்க உன் திருவுள்ளத்தில் குறை எதற்கு?

குறிப்பு:—1. சென்னியோங்கு—உதயகிரியிலே ஸூரியன் கிளம்பினால் எல்லாருக்கும் ப்ரகாசிக்குமா போல, திருவேங்கடமலையின் சென்னியிலே நின்றால், உபய விபூதியிலும் ப்ரகாசிக்கும்—என்று கருத்து.

2. தண்—ரக்ஷகனுக்கு ரக்ஷ்யத்தைப் பெறாத விடாயையும், ரக்ஷ்யத்துக்கு ரக்ஷகனைப் பெறாத விடாயையும் தீர்க்கும்படியானது.

3. நம்பீ—வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம்—முதலான கல்யாணகுண பூர்த்தியை யுடையவன்.

4. சதிர்—ஆச்ரிதர்களுடைய தோஷம் காணாத சதிர்.

5. "என்னையும்" ஆத்மாவுக்குத் திருவிலச்சினை சாத்துகையாவது—அநந்யார்ஹ சேஷத்வ ஞானம் பிறக்கை. அது பிறந்தமை தோற்றவிறே, தோளுக்கு அலங்காரமாகத் திருவிலச்சினை யிடுவது.

6. இருந்தேன்—உபாயாந்தரமும், உபேயாந்தரமும், குலைகை; விரோதி நிவ்ருத்தியும் பிறந்து, அபேக்ஷிதமும் பெற்றதாகில், இனிப் பதறுகிறதென்? என்று கருத்து.

ஸ்ரீ பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமத்யை கோதாதேவ்யை நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார் அருளிச்செய்த நாச்சியார் திருமொழி.

---

(1. 1.) அவதாரிகை :—ஸ்ரீ பெரியாழ்வார் திருமகளாராகிய ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார், எம்பெருமானிடத்திலிருக்கும் தனது ப்ரணய (காதல்) வ்யாமோஹம் கரை புரண்டு வெள்ளமிட, அவனைக் கூடுவதற்கு அநேக விதமான உபாயங்களை அநுஷ்டித்த போதிலும், அவை யெல்லாம் பலியாமையாலே, கலங்கி, மார்கழித் திங்கள் முழுதும் நோன்பு நோற்று, அவன் கலவியை எதிர் பார்த்தும், அவன் வந்து கலக்கக் காணாமையாலே தரித்திருக்க மாட்டாமல், பிரிந்தாரைக் கூட்டிப் போருகையே இயல்பாகவுடைய காம தேவனை ஆச்ரயித்து, அவனது அநுக்ரஹத்தினால் எம்பெருமானைப் பெறுவதற்கு உபக்ரமிக்கிறாள்.

ஓ காமதேவா! உன்னையும், உன் தம்பியையும் வணங்குகிறேன். நீ க்ருபை செய்து எப்படியாவது திருவேங்கடமுடையானுக்கே என்னைக் கைங்கர்யம் பண்ணும்படி கல்பிக்க வேணும்—என்று ப்ரார்த்திக்கிறாள்.

அறுசீர் விருத்தம்.

தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித்து அனங்கதேவா!
உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி
உன்னையும் உம்பியை யுந்தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே. 1. 1.

பதவுரை :—தையொரு திங்களும் - தை மாஸம் முழுவதும். தரை - ஸர்வேச்வரனுடைய ஸ்தலத்தை. விளக்கி - சோதித்து. தண் - குளிர்ந்து (அழகான). மண்டலம் - மண்டலாகாரமான கோலத்தை. இட்டு - இட்டு. மாசி - மாசி மாஸத்தின். முன்னாள் - முதல் பக்ஷத்தில். ஐய - அழகிய தாய். நுண் - ஸூக்ஷ்மமான. மணற் கொண்டு - மணலைக் கொண்டு. தெரு - அவன் வரும் தெருவை. அழகினுக்கு - அவனழகுக்காகவே. அணிந்து - அழகு பெறும்படி. அலங்கரித்து - அலங்காரம் செய்து. அநங்க தேவா - காம தேவா. உய்யவு மாங்கொலோ - உஜ்ஜீவிக்கவும் கூடுமோ? என்று சொல்லி - என்கிற வாசையாலே. உன்னையும் - (மன்மதனை) உன்னையும், உம்பியையும் - உன் தம்பியான சாமனையும். தொழுதேன் - வணங்கினேன். வெய்து - (ப்ரதிகூலர்மேல்) உக்ரமான. தழல் - நெருப்புப் பொறிகளை. உமிழ் - உமிழா நின்றுள்ள. ஓர் - அத்விதீயமான. சக்கரம் - திருவாழியை. கை - திருக்கையிலே தரித்த. வேங்கடவற்கு - திருவேங்கடமுடையானுக்கு. என்னை - (அநந்யசரணையான) என்னை. விதிக்கிற்றியே - நித்ய கைங்கர்யம் பண்ணும்படி கல்பிக்க வேணும்.

கருத்து :—ஓ அநங்க தேவா! மார்கழி மாசம் முழுவது மொரு மாசமும், நோன்பு நோற்றூர்களாய் இராநின்றோம். இனி இத் தை மாஸமொரு மாஸமும், ஸர்வேச்வரன் வரும் இடத்தைச் சோதித்து, அழகாக மண்டலாகாரமான கோலத்தையிட்டு மாசி மாசத்தின் முதல் பக்ஷத்தில், அழகிய தாய், அவனுடைய ஸௌகுமார்யத்துக் குச் சேரும்படி நுண்ணியதான மணலைக் கொண்டு, அவன் வரும் தெருவை அழகனுக்காகவே அழகு பெறும்படி அலங்காரம் செய்து, 'உஜ்ஜீவிக்கக் கூடுமோ?' என்கிற ஆசையாலே காமனை உன்னையும், உன் தம்பியான சாமனையும் வணங்கினேன். ஆகையால், க்ருபா மூர்த்தியான மன்மதனே! ப்ரதிகூலர் பக்கல் நெருப்புப் பொறிகளை உமிழா நின்றுள்ள அத்விதீயமான திருவாழியைத் திருக்கையிலே ஏந்தியிருக்கும் திருவேங்கடமுடையானுக்கு ஸர்வவித கைங்கர்யங் களையும் பண்ணும்படி, என்னைக் கல்பிக்க வேணும்.

குறிப்பு :—அஞ்சு குடிக்கு ஒரு ஸந்ததியாய், ஆழ்வார்கள் தன் செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய், பிஞ்சாய்ப் பழுத்த ப்ரபன்ன சிகாமணியான ஆண்டாள், இப்படி தேவதாந்தர ஸமாச்ரயணம் பண்ணலாமோ? என்னில்; ப்ராப்யத்வரையினாலே கலங்கி, ஸர்வேச்வரனை உடனே பெற வேணு மென்று துடித்து, அந்தக் கலக்கத்தாலே, தன்னுடலை அழிய மாறி நின்று பிரிந்தாரைக் கூட்டும் தேவனாகிய காமனை ஆச்ரயிக்கிறாள். இது, அநுப பன்னமன்று.

(1, 3.) அவதாரிகை :—கடகருகந்ததே தேடியிட வேண்டு மாகையாலே, ரஜோகுண ப்ரசுரனான காம தேவனுக்கு அநுரூபமாம் படி மதகரமான மதமத்தை (ஒருவகையான ஊமத்தை)யினுடைய தன்றுண செவிப்பூ, முருக்கம் பூ—முதலானவற்றைக் கொண்டு, திருத்துழாய் பறிக்கும் குடியிலே பிறந்த ஆண்டாள், இப்போது இவனுக்கு இடத்தேடுகிறாள்.

அறுசீர் விருத்தம்.

மத்தநன் னறுமலர் முருக்கமலர்
கொண்டுமுப் போதும்உன் னடிவணங்கி
தத்துவ மிலியென்று நெஞ்சேரிந்து
வாசகத் தழித்துஉன்னை வைதிடாமே
கொத்தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்த னென்பதோர் பேரெழுதி
வித்தகன் வேங்கட வாணனென்னும்
விளக்கினில் புகஎன்னை விதிக்கிற்றியே. 1. 3.

பதவுரை :—மத்தம் - ஊமத்தையினுடைய. நல் நறுமலர் - நல்ல வாஸனையுள்ள புஷ்பங்களையும். முருக்க மலர் - முருக்கம் பூக்களையும் கொண்டு - கையில் கொண்டு. முப்போதும் - கால த்ரயத்திலும். உன் - உன்னுடைய. அடி - ஸ்ரீபாதங்களிலே. வணங்கி - தெண்டனிட்டு. தத்துவ மிலியென்று - இவன் ஸத்யம் தப்பினவன் என்று சொல்லி. நெஞ்செரிந்து - நெஞ்சு கொதித்து. வாசகத்து - வாயாலும். அழித்து - பழித்து. உன்னை - உன்றன்னை. வைதிடாமே - பலரும் வையாதபடி. கொத்து - கொத்துக் கொத்தாக. அலர் - அலர்கின்ற. பூ - புஷ்பங்களாகிற. கணை - பாணங் களை. தொடுத்துக் கொண்டு - ஸந்தித்து. கோவிந்தன் என்பது - 'கோவிந் தன்' என்று சொல்லப்படுவதான. ஓர் பேர் - ஒரு திருநாமத்தையும். எழுதி - நெஞ்சிலே தரித்துக் கொண்டு. வித்தகன் - விஸ்மயனீயனான. வேங்கடவாணன் என்னும் - திருவேங்கடத்தான் என்று சொல்லப்படுகிற. விளக்கினில் - விளக்குப் போல் விளங்குகிற எம்பெருமானிடத்தில். புக - சேரும்படி. என்னை - அவனுக்கு அநந்யார்ஹ சேஷபூதையாயிருக்கிற என்னை. விதிக்கிற்றியே - கல்பிக்க வேணும்.

கருத்து :—ஓ காம தேவா! நல்ல மணமிக்க ஊமத்த மலர்களை யும், முருக்க மலர்களையும் கொண்டு வந்து முப்போதும் உன் பாதங் களிலே தெண்டனிட்டு உன்னை ஆராதனம் செய்கிறேன். நான் உன் அடிபணிவதற்குப் பலனாக என் மனோரதத்தை நீ நிறைவேற்று

தொழியில், எனது நெஞ்சானது மிகவும் கொதிப்படைந்து "மன்மதன் மெய்யே பலன்தருந் தெய்வ மல்லன்; இவன் பொய்த் தெய்வம்" என்று நாடெங்கு மறியும்படி நான் உன் மஹிமையை அழித்து நிந்திக்க நேரிடும். அப்படிப்பட்ட பரிபவத்தை நீ அடையாது, தப்பாமல் பேறு பெறுவிக்கப் பாராய்.

நீ எனக்குச் செய்ய வேண்டிய கார்யத்தைச் சொல்லுகிறேன் கேளாய் மன்மதனே! கொத்துக் கொத்தாக அலர்ந்திருக்கிற மலர்களாகிய அம்புகளை வில்லில் தொடுத்துக் கொண்டு எங்களுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடி யிருக்குமவனுடைய "கோவிந்தன்" என்கிற ஓர் பேரை நெஞ்சிலே எழுதி, அற்புதமான திருவேங்கடமுடையான் என்கிற திவ்யஜ்யோதியிலே, அடிவீச்சி சேரும்படி நீ செய்ய வேணும்.

குறிப்பு:—உனக்கு முகமலர்ச்சி உண்டாகும்படி நீ யுகந்த மலர்களைக் கொண்டு முப்போதும் நான் உன் அடி வணங்கிப் பூஜிப்பேன்; நீ க்ருபை செய்து உன் அன்பினால் என் நெஞ்சில் கோவிந்த நாமத்தை எழுதி, அவனிடத்தில் என்னைச் சேர்க்க வேணும் என்று பொருள். அன்றிக்கே, உன் வில்லில் மலர்களாகிற அம்புகளைத் தொடுத்து, என்னை உதாஸித்து இருக்கும் அவன்மேல் ப்ரயோகித்து, அதற்கும் அவன் ஆபிமுக்யத்தைக் காட்டாவிட்டால், அவன் பேரைப் பல விடங்களில் எழுதி, 'கோவிந்த' னென்று பெயரைப் பெற்ற இவன், ஒரு பெண்ணை, அநந்யார்ஹ சேஷபூதையான பேதையை, இப்படி அநாதரித்து இருக்கிறான். இதுதானோ "கோவிந்த" நாமத்தினுடைய வைபவம்? என்று எல்லோருக்கும் தெரியப்படுத்தி, எப்படியாவது அவனை இசைவித்து, அவனோடு சேரும்படி என்னை நீ செய்ய வேண்டும்—என்றும் பொருளும் கூறலாம்.

இங்கு, பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை அழகாக இரண்டு விதமான யோஜனையைக் காட்டியிருக்கிறார்:—மதுவிரியா நின்றுள்ள புஷ்ப பாணங்களைத் தொடுத்துக் கொண்டு, (கடல் போலே ச்ரமஹரமான வடிவை யுடையவனுடைய) "கோவிந்தன்" என்னும் திருநாமத்தை அம்பிலே எழுதிக் கொண்டு என்னுதல்; ஹ்ருதயத்திலே எழுதிக் கொண்டு என்னுதல்—என்று.

அதில் முதல் பக்ஷத்திற்கு—'கோவிந்த' நாமத்தை அம்பிலே எழுதி, அந்த அம்பை அவன்மீது எய்து, இந்த நாமந்தான், கோதையின் நெஞ்சில் எப்பொழுதும் அநுஸந்திக்கப்படுகிறது—என்று அவனுக்குத் தெரியப்படுத்தி, அவனுக்கு என்மீது இரக்கம் உண்டாகும்படி செய்து, என்னோடு அவனைக் கூட்டி வைப்பாயாக என்று பொருள்.

அன்றிக்கே, உனது அம்பிலே அவன் கோவிந்த நாமத்தை எழுதி என் மீது எய்து, அவனிடத்திலேயே என் நெஞ்சைச் செலுத்தி, அவனோடு 'ஏக தத்வ' மென்னலாம்படி என்னைக் கூட்டுவாயாக. இராமபிரானுடைய திருநாமத்தினால் அங்கிதமான அங்குளீயகத்தைத் திருவடி பிராட்டிக்குக் கொடுத்தாப் போலவும், ஆசார்யன் சிஷ்யனுக்குத் திருவிலச்சினையைச் சாத்தி, தாஸ்ய நாமத்தை இடுமாப் போலேயும், நீ அவனது திருநாமத்தால் அங்கிதமான உன்பாணத்தை என்மீது எய்து, என்னை அவனுக்கே அங்கிதமாக்குவாயாக (அநந்யார்ஹ சேஷமாக்குவாயாக). பிராட்டி ராமநாமாங்கிதமான அங்குளீயகத்தைக் கண்டு மகிழ்ந்தாப் போலவும், அவன் பிரிவாற்றாமை தரித்தாற் போலவும், நானும் அநுபவிப்பேன்—என்று பரமார்த்தம்.

இரண்டாம் பக்ஷத்திற்கு—உன் நெஞ்சிலே அவனுடைய திருநாமத்தை எழுதிக் கொண்டு—அவனோடு என்னைக் கூட்டுவதற்கு ஸங்கல்பித்து, அவனோடு என்னைச் சேர்ப்பாயாக; உன் நெஞ்சிலே அவனது நாமத்தை எழுதிக் கொண்டாயாகில், அந்தத் திருநாம ப்ரபாவத்தினால் உனக்கும் என்னிடத்தில் இரக்கமுண்டாகும்; அவனிடத்தில் ப்ரேமரஸ முண்டாய், காதல் பெருகி, ஆற்றாமை உண்டாகும்; அப்பொழுது எனது ச்ரமம் தெரியும்; என்னிடத்தில் அநுதாபம் உண்டாகும்; அப்பொழுது என்னை அவனோடு கட்டாயம் சேர்ப்பாய். அதில் ஸந்தேஹமில்லை—என்று கருத்து.

அன்றிக்கே, என் நெஞ்சில் அவன் திருநாமத்தை எழுதி அவனுக்கு என்னைச் சேஷமாக்கி, நிருபாதிக ப்ராப்த சேஷியான அவனோடு என்னைச் சேர்த்தருளுவாயாக.

இப்படி ரஸத்தை அநுபவிக்கப் புகுந்தால், இதற்கு அளவில்லை.

(4. 2.) அவதாரிகை :—எம்பெருமான் எனக்கு இசைவு உண்டோ, இல்லையோ? என்று சங்கித்து, திருவேங்கடமலையில் வந்து தங்கித் தாமஸித்து இருக்கிறான் போலும்; நானோ இப்படிச் சிரமத்தை அநுபவிக்கின்றேன். என் ஆற்றாமையைத் தெரிந்து கொண்டு சடக்கென ஓடிவந்து என்னைத் தன்னோடே அணைத்துக் கொள்ளுமாறு விதி வாய்க்க வேணுமென்று ஆசைப்படுகிறாள்.

கலி விருத்தம்.

காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்டரா வந்துஎன் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே! 4. 2.

பதவுரை :—கூடலே - கூடல் தெய்வமே. காட்டில் - அரண்ய ப்ரதேச மான. வேங்கடம் திருவேங்கடமா மலையிலும். கண்ணபுர நகர் - நகர மாகிய திருக்கண்ணபுரத்திலும். வாட்டமின்றி - (ஸம்ஸாரிகள் நடுவிலிருப் பால்) மனத்தளர்ச்சி யின்றிக்கே. மகிழ்ந்து - திருவுள்ள முவந்து. உறை - நித்ய வாஸம் செய்கிற. வாமனன் - வாமனவதாரம் செய்தருளின எம்பெரு மான். ஓட்டரா வந்து - ஓடி வந்து. என் கை - என்னுடைய கையை. பற்றி - பிடித்து. தன்னொடும் - தன்னோடு. கூட்டும் ஆகில் - அணைந்து கொள்ளுமாகில், நீ கூடிடு - நீ கூடவேணும்.

கருத்து :—ஓ கூடல் தெய்வமே! ஸ்ரீ தண்டகாரண்யத்தில் ரிஷி களோடே கூடியிருந்து வநவாஸம் அநுபவித்தாப் போலவும், அன்றிக்கே, ஸ்ரீப்ருந்தா வனத்தில் கோபிமாருடன் கூடியிருந்தாப் போலவும், திருவேங்கடமலையில் எழுந்தருளி யிருக்குமவனும், திரு வயோத்தியிலே அனைவருடன் கூடியிருந்து நகரவாஸ ரஸம் அநுப வித்தாப் போலவும், அன்றிக்கே, திருவாய்ப் பாடியிலே இடைப் பெண் களோடு கூடியிருந்தாப் போலவும், திருகண்ண புரத்தில் வீற்றிருக்கு மவனும், நகரவாஸத்தோடு வனவாஸத்தோடு வாசியற இரண்டை யும் இனிதாகக் கொள்ளும் மனப்பான்மையுடையவனும், ஆச்ரிதர்க ளான தேவர்களுக்காக, ஸ்ரீய:பதியாய், அவாப்த ஸமஸ்த காம னாய், நித்ய முக்தாநுபாவ்யனாய், பாரத்பானாய் யிருக்கும் தனது தன்மையையும் மாற்றிக்கொண்டு, வாமன ப்ரம்மசாரியாய் அவத ரித்து, யாசக வ்ருத்தியையும் பண்ணி நிகில லோகங்களையும் தனது திருவடி ஸ்பர்சத்தாலே உத்தரித்தருளின எம்பெருமான், பரம க்ருபையோடு ஓடிவந்து எனது கையைப் பிடித்து அணைத்துக் கொள் வனாகில், நீ கூடவேணும். அதாவது—அவன் எழுந்தருளி என்னைக் கூட்டிக் கொள்ளும்படியாக, நீ அநுகூலிக்க வேணும்.

குறிப்பு :—வாட்டமின்றி மகிழ்ந்துறை—பரமபதத்திலே "நித்ய ஸூரி கள் நடுவே அத்யுஜ்வலனாய் எழுந்தருளியிருக்கும் நாம், அவ்விடத்தை விட்டு. ஸம்ஸாரிகளாகிற இவர்கள் நடுவே இராநின்றோமே" என்று திருவுள்ளத்தில் ஒரு வாட்டமின்றிக்கே, அவர்கள் நடுவே நிரதிசயாநந்த யுக்தனாய் நித்ய வாஸம் பண்ணும் பரம வாத்ஸல்ய மூர்த்தி—என்று கருத்து.

(5. 2.) அவதாரிகை :—நோவுக்குப் பரிஹாரம் பண்ண வேணுமென்றால், இருக்கும் நிலையை யறிவிக்க வேணுமிறே? என்றால், தன்னை எம்பெருமான் நோவுபடுத்துகிற படியை அருளிச் செய்கிறாள்.

எழுசீர் விருத்தம்.

வெள்ளை விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்குஉருக் காட்டான்
உள்ளம் புகுந்துஎன்னை நைவித்து நாளும்
உயிர்பெய்து கூத்தாட்டுக் காணும்
கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடும் குயிலே!
மெள்ள இருந்து மிழற்றி மிழற்றாதுஎன்
வேங்கட வன்வரக் கூவாய். 5. 2.

பதவுரை :—கள் அவிழ் - மகரந்த ரஸம் பெருகா நின்றுள்ளதாய், பூ - பூத்திருந்துள்ள. செண்பக மலர் - செண்பகப் பூவிலே. கோதி - ஸார மான அம்சத்தை அநுபவித்து. களித்து - (அதனால்) ஆனந்தமடைந்து. இசை பாடும் - (அந்த ஆனந்தத்திற்குப் போக்கு வீடாக) இசைகளைப் பாடா நின்றுள்ள. குயிலே - கோகிலமே! வெள்ளை - வெண்மையை யுடைத்தாய். விளி - (கைங்கர்ய ருசியுடையாரை) அழைக்குமதான. சங்கு - ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தை. இடங்கையில் - இடது திருக்கையிலே. கொண்ட - ஏந்திக் கொண்டு இருக்கிற. விமலன் - (தன் ஸ்வரூபாதிகளெல்லாம் பிறர்க்கே என் றிருக்கும்) ஹ்ருதய சுத்தியையுடைய பரம புருஷன். எனக்கு - அவனை யாசைப்பட்ட எனக்கு. உரு - தன் வடிவை (திவ்ய மங்கள விக்ரஹத்தை). காட்டான் - ஸேவை ஸாதிக்க மாட்டேன்—என்கிறான். (அதுவுமன்றியே) உள்ளம் - என் மனஸ்ஸிலே, புகுந்து - ப்ரவேசித்து. என்னை - அவனையே நம்பியிருக்கும் என்னை, நைவித்து - வருந்தப்பண்ணி, உயிர் பெய்து - (இன்னமும் ஹிம்ஸிப்பதற்காக) பிராணனையும் பெருக்கடித்து. (மரிக்கவு மொட்டாதே) நாளும் - நாள்தோறும். கூத்தாட்டு - கூத்தாடுவித்து. காணும் - (இத்தை) கண்டிராநின்றான். (நீ செய்ய வேண்டிய தென்ன வென்றால்) இருந்து - என் அருகில் இருந்து கொண்டு. மெள்ள - மந்த வாக, மிழற்றி - மழலைச் சொற்களைச் சொல்லி. மிழற்றாது - விலாஸ சேஷ் டிதங்களைப் பண்ணாமல். என் - என் ஸ்வாமியான. வேங்கடவன் - திரு வேங்கடமுடையான். வர - இங்கே வரும்படியாக. கூவாய் - கூப்பிட வேணும்.

கருத்து :—தேன் பெருகாநின்றுள்ள செண்பகப் பூவிலே, அஸா ரமான அம்சத்தைத் தள்ளி, ஸாரமான அம்சத்தை அநுபவித்து, ஆநந்தமடைந்து, அதற்குப் போக்கு வீடாக இசைகளைப் பாடா நின்றுள்ள கோகிலமே! கார்முகில் போன்ற கரிய திருமேனிக்குப் பரபாகமான வெண்மையை யுடைத்தாய், "என்னைப் போலே நீங்க

ளும் கைங்கர்யம் பண்ண வாருங்கள்" என்று அழைப்பது போன்ற முழக்கத்தை யுடைத்தான ஸ்ரீ பாஞ்சஜந்யத்தைத் தனது இடத் திருக்கையிலே ஏந்தியிராநின்றுள்ள எம்பெருமான், தன்னைக் காண் கையிலே மிக்க ஆசையுள்ள எனக்குத் தன் திருவுருவத்தைக் காட் டாதே மறைத்திடாநின்றான். அவன், இப்படி உபேக்ஷிக்கையாலே, அவ்வுருவத்தை மறந்து பிழைப்போம் என்று பார்த்தாலோ; அது செய்யவும் ஒட்டுகிறிலன்; என்னுடைய நெஞ்சிலே வந்து புகுந்து, "நினைதொறும், சொல்லுந் தொறும் நெஞ்சிடிந்துருகும்" என்கிற படியே சைதில்யத்தை யுண்டாக்கி அந்தத் தளர்த்தியாலே உயிர் மாயுமளவான நிலைமை நேர்ந்தவாறே, "இவ்வளவோடு இவளை முடித்துப் பிழைக்க வொட்டலாமா? இன்னும் நெடு நாளைக்குத் துன்பப்படுத்த வேண்டாவா?" என்றெண்ணி மறுபடியும் உயிரைத் தலையெடுக்கச் செய்து, பழையபடியே ஹிம்ஸிப்பதாய், இப்படித் துடிக்கவிட்டு, இதுவே போது போக்காயிராநின்றான். நான் இப்படி நோவுபடா நிற்க, நீ இப்படி ஆநந்தமாக இசை பாடிக் கொண்டு, பொழுது போக்குவது உனக்கு ந்யாயமா?

நீ எனக்குச் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறேன் கேள்:—

நீ எப்போதும் என்னருகிலே யிருந்து கொண்டு, மதுர மதுர மாக மழலைச் சொற்களை சொல்லுவதும், விலாஸ சேஷ்டிதங்களைப் பண்ணுவதுமா யிருக்கிறாயே! இந்த இருப்பைத் தவிர்ந்து, எனக் காகத் திருமலையிலே வந்நிராநின்ற பெருமானை, இங்ஙனே நாலடி நடந்து வரும்படியாக நீ கூவவேண்டும்; உன்னை வேண்டிக் கொள்ளு கிறேன்.

(10. 5.) அவதாரிகை:—ஆண்டாள் எம்பெருமான் பிரிவாற் றாமையைத் தரிப்பதற்காக உத்யான வனத்திற்குச் சென்றாள். அங்கு, முல்லைப் பூவானது கண்ணுக்கிலக்காய்த் துன்பப்படுத்தியது. அங்கு நின்றும் முகத்தை மாறவைத்து எந்தப்பக்கம் நோக்கினாலும், ஒவ்வொரு புஷ்பம் கண்ணிலே தோன்றி ஹிம்ஸகமா யிருந்தது; ஆகவே, கண்ணை மூடிக்கொண்டாள். கண்ணை மூடிக்கொள்ள முடிந் ததே யொழிய, அவளுடைய ஹிம்ஸை நீங்கவில்லை; செவி புதைக்க முடியாமையாலே, குயில்களின் பாட்டுக்கள் உடனே செவிப் பட்டன. அவற்றைக் கேட்டுத் தரிக்க மாட்டாதவளாய், அக்குயில் களை நோக்கி "நீங்கள் ஏன் இப்படிக் கர்ண கடோரமாகக் கத்து

*கின்றீர்கள்? போதும், போதும்; உங்கள் பாட்டினழகு; தயவு செய்து நிறுத்துங்கள்." என்று சொல்லுகிறாள்.*

கலி நிலைத்துறை.

பாடும் குயில்காள்! ஈதுஎன்ன பாடல்! நல்வேங்கட
நாடர் நமக்குஒரு வாழ்வுதந் தால்வந்து பாடுமின்
ஆடும் கருளக் கொடியுடை யார்வந் துஅருள்செய்து
கூடுவ ராயிடில் கூவிநம் பாட்டுக்கள் கேட்டுமே. 10. 5.

பதவுரை :—*பாடும் - ஆனந்தமாகப் பாடுகின்ற. குயில்காள் - குயில்களே. ஈது - கர்ண கடோரமான இக்கூச்சல். என்ன பாடல் - என்ன பாட்டு. நல் வேங்கடம் நாடர் - பரம போக்யமான திருவேங்கட மலையை இருப்பிடமாகவுடைய பெருமான். நமக்கு - என் விஷயத்தில். ஒரு வாழ்வு - ஒரு வாழ்ச்சியை. தந்தால் - பண்ணிக் கொடுப்பானாகில். (அப்போது) வந்து (நீங்கள் இங்கே) வந்து. பாடுமின் - பாடுங்கள். ஆடும் - (ஆனந்தத்தாலே) ஆடுகின்ற. கருளன் - பெரிய திருவடியை (ஸ்ரீ கருடனை) கொடி உடையார் - த்வஜமாகக் கொண்டு இருக்கிற அப்பெருமான். அருள் செய்து - க்ருபைபண்ணி. வந்து - (இங்கே) வந்து. கூடுவர் ஆயிடில் - சேர்வானாகில். கூவி - (அப்போது உங்களை) வரவழைத்து. நும் பாட்டுக்கள் - உங்களது பாட்டுக்களை. கேட்டும் - நாம் கேட்போம்.*

கருத்து :—*உடம்பு தெரியாமல் பாடுகின்ற குயில்களே! கர்ண கடோரமான உங்களுடைய இந்தக் கூச்சல்கள் போதும்; நிறுத்துங்கள். இவை என்ன பாட்டுக்கள்? இக்காலத்தில் பாடுவதா! போதும், போதும், அதின் அழகு! நிறுத்துங்கள். உங்களுடைய பாட்டைக் கேட்கும் படியாகவா நானிருக்கிறேன்! ஐயோ! என்ன பாட்டு; என்ன பாட்டு? பாவிகாள்! பாடினது போதும், இப்போதைக்கு நிறுத்துங்கள்; கோபித்துக் கொள்ளாதீர்கள்.*

*எம்பெருமான் க்ருபை செய்து இங்கே யெழுந்தருளி என்னை அணைத்து கொண்டு வாழ்விக்கும் காலம் வாய்க்குமாகில், அப்போது நீங்கள் இங்கு வந்து ஆசைதீரப் பாடுங்கள்.*

*"திருவேங்கட நாடர் வந்து உனக்கு வாழ்வு கொடுக்கும் ஸமயம் எங்களுக்கு எப்படித் தெரியும்?" என்கிறீர்களா? அவருடைய வரவுக்கு ஸூசகமாகப் பெரிய திருவடிநாயனார் சிறகை விரித்துக் கூத்தாடிக் கொண்டு வருவார்; அந்த அடையாளத்தைக் கொண்டே,*

நீங்கள் தெரிந்து கொள்ளலாம். ஒருகால் நீங்கள் தெரிந்துகொள்ளா விட்டாலும், அப்போது நானே உங்களை வரவழைத்து, உங்கள் பாட்டைக் கேட்பேன்; நீங்கள் சந்தேஹப்பட வேண்டாம்.

குறிப்பு :—ஈதென்ன பாடல்—இக்காலத்திலே பாடுவதே! இப்பாட்டைப் பாடுவதே! இரண்டருகும் நெருப்புப் பற்றி எரியா நிற்கச் செய்தே, நடுவே யிருந்து சாந்து பூசுவாரைப் போல இருந்து, பாட்டுக் கேட்கும் தசையோ என் தசை? நெருப்புக் கிடந்த விடத்தே சுடுமாபோலே, அவற்றினுடைய ஆச்ரயத்தையும் அழிக்கும் என்றாள்—என்று உள் கருத்து.

(10. 8.) அவதாரிகை :—ஆண்டாள் வர்ஷாபி முகங்களான மேகங்களை நோக்கி, தனது பிரிவாற்றாமை ஜ்வலிக்கப் புக்கவாறே பொறுக்க முடியாமல், அவைகளோடு பேசுகிறாள்.

மழையே! மழையே! மண்புறம் பூசிஉள் ளாய்நின்ற
மெழுகூற்றி னாற்போல் ஊற்றுநல் வேங்கடத் துள்நின்ற
அழகப் பிரானார் தம்மைஎன் னெஞ்சத் தகப்படத்
தழுவிநின்று என்னைத் ததைத்துக்கொண்டு ஊற்றவும் வல்லையே?
10. 8.

பதவுரை :—மழையே! மழையே! - ஓ மேகங்களே! புறம் - மேல் புறத்திலே, மண் பூசி - மண்ணைப் பூசிவிட்டு, உள்ளாய் நின்ற - உள்ளே யிருக்கும், மெழுகு - மெழுகை, ஊற்றினால் போல் - உருக்கி வெளியில் தள்ளுமா போல, ஊற்றும் - என்னை அணைந்து அந்தஸ் ஸாரமான ஆத்மாவை உருக்கி யழிப்பவராய், நல் வேங்கடத்துள் - பரம விலக்ஷமான திருவேங்கட மலையிலே, நின்ற - நிற்குமவரான, அழகப்பிரானார் தம்மை - அழகிய பெருமானை, என் நெஞ்சத்து - என் நெஞ்சிலே, அகப்பட - ஸேவை ஸாதிக்கிறபடியே, தழுவி நின்று - நான் அணைக்கும்படி பண்ணி, என்னை - என்னை, ததைத்துக் கொண்டு - அவரோடே நெருக்கி வைத்து, (பிறகு) ஊற்றவும் வல்லையே - வர்ஷிக்க வல்லையோ?

கருத்து :—ஓ மேகங்களே! வர்ஷிக்கின்ற மேகங்களே! மேலே மண்ணை இணைத்து உள்ளிருக்கும் மெழுகைத் தள்ளிவிடுவது போல, அப் பெருமானும், உடம்பின்மேலே அணைந்து உள்ளிருக்கும் ஸத்து உருகிக் கழிந்து போம்படி செய்கிறான். அப்படிச் செய்யவல்லனான அழகிய பெருமானை, என் நெஞ்சிலே ஸேவை ஸாதித்தபடியே, நான் அணைக்கும்படி பண்ணி, என்னை அவனோடே நெருக்கி வைத்துப் பிறகு வர்ஷிக்க வல்லீர்கள்.

குறிப்பு :—1. மழையே மழையே—என்று இரண்டுதரம் சொன்னதுக்குக் கருத்து—மேகங்கள் எத்தனை தூரம் சென்றாலும், அவற்றின் செவியிலே இந்தக் கூச்சல் படும்படி கூப்பிடுகிறாள்—என்று.

2. மண் புறம் பூசி—தாம்ர விக்ரஹம், வெண்கலப் பாத்திரம்—முதலியன செய்யுமவர்கள், முதலில் அவைகளின் வடிவத்துக்கு ஒப்ப மண்ணைக் கட்டி, அதன்மேல் சுற்றிலும் மெழுகை வைத்து, பின்னையும் அம்மெழுகின் மேல் மண்ணைப் பூசி, ஓரிடத்திலே த்வாரமாக்கி, உள்ளிருக்கும் மெழுகை வெதுப்பி, அவ்வழியாலே வெளியே ஊற்றுவார்கள்; அவ்வாறாக, திருவேங்கடத்தானும் உடம்பின் மேலே அணைத்து உள்ளிருக்கும் என் ஸத்து உருகிக் கழிந்து போம்படி செய்ய வல்லவனா யிராநின்றான்—என்று கருத்து.

"உடம்பிலே அணைத்து அகவாய் குடிபோம்படி பண்ணுமவராய்த்து" என்று பரம ரஸிக ஸார்வ பௌமரும், வ்யாக்யாத்ரு குல திலகரும், பரம காருணிகருமான ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்தார்.

3. 'தழுவி' என்பது எச்சத்திரிபு; 'தழுவ' என்னும் செய வென்னெச்சம் செய்தென்னெச்சமாகத் திரிந்து நின்றது. 'விண்ணின்று பொய்ப்பின்' (திருக்குறள்) என்புழிப் போல.

4. 'உள்ளாய் நின்று' என்பது பழைய பாடம்.

ஸ்ரீ சூடிக்கொடுத்த நாச்சியார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே முநிவாஹநாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருப்பாணாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய அமலனாதிபிரான்.

---

அவதாரிகை :—திருமாலினது ஸ்ரீ வத்ஸத்தின் அம்சஜராய், ஓர் அந்தணாளனது கழனியிலே நெற்பயிர்க் கதிரில் அவதரித்து, ஒரு பாணர் குலத்து அந்த்ய குலஜனால் போஷிக்கப்பட்ட திருப்பாணாழ்வார்—திருமாலருளால் தோன்றியவராதலால், இயற்கையிலே உலகப் பற்றற்று, எம்பெருமானது திருவடித் தாமரைகட்குத் தம் மனத்தை மதுகரமாக்கிக் கொண்டு தன் மயதையை அடைந்ததுமன்றி, தாம் புகுந்த குலத்துக்கு எற்ற யாழ்ப்பாடலிலும் தேர்ச்சி பெற்று, நாரத பகவானைப் போல் ஞான வைராக்யாதிகளோடு ஸங்கீத ஸாமர்த்தியமும் முதிர்ந்து நின்று முன்பு 'கைசிக' மென்னும் பண்ணின் ப்ரபாவத்தினால் ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸின் தீவினை தீர்த்து, நற்கதி அடைவித்துத் தானும் பரம பதத்தை அடைந்த நம்பாடுவான் போலே, பக்தியால் பரவசமடைந்து, நெஞ்சு நெக்குருகக் கண்கள் ஆநந்த பாஷ்பத்தின் அருவி சொரிய, உடல் மயிர்க் கூச்செறிய நாடோறும் வைகறையிலே வந்து இசைபாடா நிற்க, இவரிடத்திலே முதலில் அபசாரபட்ட லோகஸாரங்க மாமுனிவர், பகவந் நியமனத்தினால் அதைச் சமிப்பித்துக் கொள்ளுவதற்காக, இவரை நிர்பந்தித்து, தனது திருத் தோளிலே ஏறி யருளப் பண்ணிக்கொண்டு, திருவரங்க நாதனது திரு முன்பே கொண்டு சென்றார்.

உடனே இந்த முனிவாஹநர், அருள் கொடுத்து அடியாரை ஆட்கொள்வானை அணியரங்கனது, உல்லோக ஸௌந்தர்யஸீமா பூமியான திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பாதாதிகேச பர்யந்தமாகக் கண்கள் குளிர, தன்மயராய் ஸேவித்து, அளவில்லாத ஆநந்தத்தை அநுபவித்தார் ; அந்த அநுபவரஸம் உள்ளடங்காமல், அத்யாச்

சர்யகரமான இத் திவ்ய ப்ரபந்த மூலமாக, ப்ரபந்நஜன பாகதேய பரிபாகத்தினால், வெளிப்பட்டுக் கரை புரண்டு ப்ரவஹித்தது.

"திருவரங்கப் பெரு நகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையா லடிவருடப் பள்ளி கொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்ட, மனத்தோடே பற்றி நின்றது" இப் ப்ரபந்த மாலையாலே—

எல்லாப் ப்ரபந்தங்களிலும், இப் ப்ரபந்தம் அதி விலக்ஷண மாயும், அதி போக்யமாயும், அநதி ஸங்குசித - விஸ்த்ருதமாயும், ப்ரமாண தமமாயும், பரமோபாதேயமாயும் இருக்கிறது. இதில் முதல் மூன்று பாட்டுக்கு முதலக்ஷரங்கள், அ—உ—ம, ஆகையால் ப்ரணவம் முதலான ரஹஸ்யங்கள், இதில் சேர்க்கப்பட்டு இருக்கின்றன.

"முதல் குறிப்பு" என்னும் இலக்கணத்தால் இந்நூலுக்கு "அமலநாதி பிரான்" என்று திருநாமம் வந்தது.

இதில் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு அவயவமாகப் பாதாதி கேசாந்தம் அநுபவித்து, இறுதியில் "என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று 'இவ்வரிய பெரிய இனிய மாநிதியைக் கண்ணாரக் காணப்பெற்ற எனது கண்களானவை இனி வேறொரு பொருளையும் காணமாட்டா' என்று தமது உறுதியை வெளியிட்டருளினார்.

இதில் திருவேங்கட முடையான் விஷயமாக இரண்டு பாசுரங்கள் அமைந்துள்ளன. (1) அவற்றுள் இந்த முதல் பாசுரத்தில் பெரிய பெருமாள் திருவடியழகு மேல்விழுந்து தம்மைப் பரவசமாக்கி அடிமை கொண்டது—என்று முக்தராய்ப் பேசுகிறார்.

ஆசிரியத் துறை.

அமல னாதிபிரான் அடியார்க்கு என்னை யாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதி வானவன் நீள்மதி ளரங்கத்தம் மான்திருக்
கமல பாதம் வந்துஎன் கண்ணி னுள்ளன வொக்கின்றதே. 1.

பதவுரை :— அமலன் - மிகவும் பரிசுத்தனாய். ஆதி - ஸ்ப்ருஹணீய (விரும்பத் தக்கவ)னாய், அன்றிக்கே, ஜகத்காரணபூதனாய். பிரான் - (இவ் விவ் நிலைகளை எனக்கு அறிவித்த) உபகாரகனாய். அடியார்க்கு - தனது தொண்டர்க்கு, என்னை - நாயேனை, ஆட்படுத்த - சேஷமாக்கின, விமலன் -

ஔஜ்வல்யத்தை (சிறந்த புகழை)யுடையவன். விண்ணவர்கோன் - பரம பதத்திலுள்ள நித்ய ஸூரிகளுக்கு நாயகனாயிருந்து வைத்து ஆச்ரிதர்களுக்காக. விரையார் - பரிமளம் நிறைந்த. பொழில் - சோலைகளையுடைய. வேங்கடவன் - திருவேங்கட மலையில் மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் பரம போக்யனாய் எழுந்தருளியிருக்குமவனாய். நிமலன் - நான் விரும்பாதிருக்க உபகரிக்கையால் வந்த சிறந்த புகழையுடையவனாய். நின்மலன் - (அடியார்க் காட்படுத்துவதனால் வந்த) ஔஜ்வல்யத்தையுடையவன், அன்றிக்கே, ஆச்ரிதர்களுடைய குற்றத்தைக் காண்கையாகிற தோஷமில்லாதவன். நீதி வானவன் - முறை தப்பாத நித்ய விபூதியிலே யுள்ளவனாய். நீள் மதிள் - மஹோந்நதமான ப்ராகாரங்களால் சூழப்பட்ட. அரங்கத்து - ஸ்ரீரங்கமா நகரத்துக்கு. அம்மான் - ஸ்வாமியான அழகிய மணவாளனுடைய. திருக் கமல பாதம் - திருவடித் தாமரைகளானவை. வந்து - தானே வந்து. என் கண்ணின் உள்ளே - என் கண்ணுக்குள்ளே. உள்ளன - புகுந்தனபோ லிராநின்றனவை.

கருத்து :—ஹேய வஸ்துக்களின் ஸம்பந்தத்தாலே தனக்கொரு கெடுதி விளையப் பெறுதவனாய், எல்லாராலும் விரும்பத் தக்கவனாய், எல்லா உலகங்களினுடைய, ஸ்ருஷ்டி, ஸ்திதி—முதலான எல்லாக் கார்யங்களுக்கும் காரணபூதனாய், இவைகளாலே விளங்கா நின்றுள்ள குணகணங்களையுடையவனாய், கருணாமூர்த்தியாய், இவ்விவ் நிலைகளை எனக்கு அறிவித்து மஹோபகாரகனாய், 'எனக்கு' என்றும், 'பிறர்க்கு' என்றும் இருந்து திரிந்த வென்னை, தனக்கும், தன்னடியார்க்கும் ஆளாக்கி வைத்து, சிறந்த புகழையுடையவனாய், பரம போக்யமான பரமபதத்தில் ஸதாபச்யந்திகளான நித்ய ஸூரிகளுக்கு ஸ்வாமியாயிருந்தும், லீலா விபூதியிலுள்ளாரை அடிமைகொள்வதற் காகப் பரிமளம் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட ஸுபகசீதலமா யிருந்துள்ள திருவேங்கடமாமலையில் வந்து தங்கினவனாய், அடியேன் விரும்பாதிருக்க எனக்கு உபகரிக்கையினாலே மிகவும் ப்ரகாசியா நின்றவனாய், தன்னடியார்க்கென்னை யாட்படுத்துகையால் வந்த ஔஜ்வல்யத்தையுடையவனாய். 'உடைமை, உடையவன்'—என்ற முறைமை தப்பாத நித்ய விபூதியிலே யுள்ளவனாய், உயர்ந்த திரு மதிள்களையுடைய கோயிலிலே கண் வளர்ந்தருளுகிறவனாய், ஸர்வ ஸ்வாமியான அழகிய மணவாளனுடைய, செவ்வியும், குளிர்த்தியும், விகாஸமும், பரிமளமும் பொருந்திய பரம போக்யமான, திருவடித் தாமரைகளானவை, தாமே க்ருபைசெய்து வந்து, அதிநிக்ருஷ்டனான என் கண்ணுக்கு இலக்காகியும், பழைய நிலைமை குலையாதிருக்கின்றனவே; ஆஹா! இது என்ன ஆச்சர்யம்?

குறிப்பு :—1. இதில்—அமலன், விமலன், நிமலன், நின்மலன்—என்ற நான்கு பதங்களுக்கும் பொருள் ஒன்றே ; கருத்துத்தான் வேறாகக் கொள்ள வேண்டும்.

பரம நிஹீனனான தாம் ஸந்நிதிக்குள்ளே புகுவதனால், பெருமாளுக்குப் பெருத்த அவத்யம் உண்டாகும்—என்று அஞ்சியிருந்தவர், அந்தச் சங்கை தவிர்ந்தமை தோற்ற " அமலன் " என்கிறார்.

தமது சிறுமையை நோக்காதே, தம்மைப் பாகவதர்கட்கு ஆட்படுத்தி ஒரு பொருளாக ஆக்குகையாலே எம்பெருமானது திருமேனியில் பிறந்த ஒரு விலக்ஷண தேஜஸ்ஸை அநுபவித்து " விமலன் " என்கிறார். தன்னுடைய ஒரு சாக்கு மிக்க சிறப்புப் பெற்றால், ஸ்வாமியின் மேனி ஒளி பெறுமல்லவா ?

அடியார்க்கு எளியனாயிருக்குந் தன்மையை வெளியிட்டு நிற்குமவன்—என்று தோற்ற " நிமலன் " என்கிறார்.

அடியார்களுடைய குற்றங்களைக் காண்கையாகிற குற்றமில்லாதவன்—என்று தோற்ற " நிமலன் " —என்று சொல்லுகிறார்.

2. ஆதி—ஜகத்காரணபூதன் ; அல்லது ஸ்பிருஹணீயன் (விரும்பத் தக்கவன்).

3. என்னை—அதி நிக்ருஷ்டனான அடியேனை.

4. " அரங்கத்தம்மான் " என்கையாலே சேஷித்வத்தையும், " கமல பாதம் " என்கையாலே போக்யத்வமும், " வந்து " என்கையாலே—உபாயத்வமும் சொல்லிற்றாய் விட்டன.

5. ஒக்கின்றது—நிலை குலையாதே இருக்கின்றது ; அல்லது இருதலைக்கும் ப்ரயோஜனம் ஒத்திரா நின்றது ; சேஷிக்குச் சீல ஸித்தியும், சேஷனுக்கு ஸ்வரூப ஸித்தியும்.

6. பெரிய பெருமாளை அநுபவிக்க இழிந்த இவ்வாழ்வார் திருவேங்கடமுடையான் பக்கல் போவானேன் ? என்றால், ஸ்ரீ பிள்ளைத் திருநறையூர் அரையர் பணிக்கும்படி—" ஆற்றிலே அழுந்துகிறவன் ஒரு காலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ ? என்று கால் தாழ்க்குமா போல, ஆழ்வாரும் பெரிய பெருமாள் அழகிலே அழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால் தாழ்ந்தார் ; அங்ஙனமன்றிக்கே, பரமபதத்தில் நின்றும் ஸ்ரீ மதுரையிலே தங்கித் திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே, ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் திருமலையிலே தங்கி யாயிற்றுக் கோயிலுக்கு வந்தது ; அவ்வாலாற்றைப் பாடுகிறபடி—என்று.

(3) அவதாரிகை :—இப் பாட்டில் பெரிய பெருமாள் பக்கலிலே திருவேங்கட முடையானான தன்மை உண்டென்றும், திருப்

பீதாம்பரத்தின் அழகு திருநாபிக் கமலத்தின்மேலே வீசி, அடியேன் உள்ளத்தின் உயிரை ஆட்கொண்டது—என்றும் அருளிச் செய்கிறார்.

மந்தி பாய்வட வேங்கட மாமலை வானவர்கள்
சந்தி செய்யநின் றான்அரங் கத்தரவி னணையான்
அந்தி போல்நிறத் தாடையும் அதன்மே லயனைப் படைத்ததோரெழில்
உந்தி மேலதன் றோஅடி யேனுள்ளத் தின்னுயிரே. 3.

பதவுரை :—மந்தி - குரங்குகளானவை. பாய் - ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளைக்குத் தாவப் பெற்ற. வட - செந்தமிழுக்கு வட வெல்லையாகிய. வேங்கட மாமலை - திருவேங்கடமென்ற உயர்ந்த திருமலையிலே. வானவர்கள் - நித்ய ஸூரிகள், சந்தி செய்ய - புஷ்பங்களைக் கொண்டு ஆராதிக்கும்படி. நின்றான் - நின்றவனாய். அரங்கத்து - அணியரங்க நகரிலே, அரவு இன் அணையான் - திருவனந்தாழ்வானாகிய பரம போக்ய மான படுக்கையின்மேல் பள்ளிகொண்டருளுமவனுடைய. அந்தி போல் - செவ்வானம் போன்ற. நிறத்து - நிறத்தையுடைய. ஆடையும் - பீதாம்பரமும். அதன் மேல் - அப்பீதாம்பரத்தின் மேலே. அயனை - பிரமனை. படைத்தது - உற்பத்தி செய்த. ஓர் - ஒப்பற்ற. எழில் - அழகையுடைய. உந்தி மேலது அன்றோ - திருநாபீ கமலமும்—ஆகிய இவற்றின்மேல் துவக் குண்டு அல்லவா. அடியேன் - தொண்டனேன். உள்ளத்து - மனஸ்ஸிலே விளங்குகிற, இன் உயிர் ஏ - இனிதான ஆத்ம ஸ்வரூபமே (பதிந்தது).

கருத்து :— அதி சஞ்சலமான விசித்ர சேஷ்டிதங்களை செய்து கொண்டு விநோதத்தை விளக்கும் குரங்குகளானவை, ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளைக்கு இடைவிடாமல் தாவுகின்றனவாய், செந்தமிழுக்கு வடவெல்லையாகிய திருவேங்கடமென்னும் உயர்ந்த திருமலையிலே, நித்ய ஸூரிகளும் புட்பங்களைக் கொண்டு தன் திருவடிகளை ஆராதிக்கும்படி, வீற்றிருக்குமவனாய், பரம போக்யமான திருவரங்கம் பெரிய கோயிலிலே, அழகு. குளிர்ச்சி, மார்தவம், பரிமளம், வெண்மை—என்னும் ஐந்து குணங்களோடு கூடி மிக்க போக்யமாயிருக்கும் திருவநந்தாழ்வானாகிற திவ்ய பர்யங்கத்திலே திருக்கண் வளர்ந்தருளுமவனான எம்பெருமானுடைய செவ்வானம் போன்ற திருப் பீதாம்பரத்தின் மேலும், அதற்கு மேல் நான்முகனுக்கு உற்பத்தி ஸ்தானமான ஒப்பற்ற அழகையுடைய திருநாபீ கமலத்தின் மேலும் அன்றோ துவக்குண்டு, அடியேன் உள்ளத்தின் இன்னுயிர் பதிந்தது. இஃது என்ன ஆச்சரியம், என்ன ஆச்சரியம்!

குறிப்பு :—1. "மந்திபாய்". ஒன்றை யொன்று பற்றி மாலை மாலையாக நாலா நிற்கும்; திருச் சின்னக் குரல் கேட்டவாறே பாந்து ஓடா நிற்கும்—என்றுமாம்.

நின்றவா நில்லா நெஞ்சினையுடையவராய், ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகிற சபலர்களான ஸம்ஸாரிகளுக்கு உபலக்ஷணமாக இங்கே வாநரங்கள் வர்ணிக்கப்பட்டன.

2. சந்தி செய்ய—ஆராதனம் செய்ய; இது எப்படிக் கூடும்? என்றால், சந்தியென்று சந்த்யா காலத்தில் செய்யும் பகவத் வந்தனத்துக்குப் பேராய், அது இங்கு பகவதாஜ்ஞையால் செய்யும் பகவத் கைங்கர்ய ரூபமாய்த் தலைக்கட்டுகிறது.

பகவானுடைய ஸௌலப்யாதிகளை இங்கே அநுபவித்து அதினாலுண்டான பக்த்யதிசயத்தாலே, அதற்குப் போக்கு வீடாக நித்ய ஸூரிகள் புஷ்பங்களால் பகவானை ஆராதிக்கிறார்கள்—என்று உள் கருத்து.

3. "அந்திபோல் நிறம்" என்பதுக்கு—அடியாருடைய அஜ்ஞான இருளைக் கழிக்க வல்ல நன்ஞானமாகிற ஸூர்யோதயத்துக்குக் கிழக்கு ஸந்த்யை போலவும், அவர்களுடைய தாபத்ரயத்தை ஆற்றுதற்கு மேற்கு ஸந்த்யைப் போலவும் இராநின்ற—என்று ஸ்ரீ வேதாந்த தேசிகன், முனிவாஹந போகத்தில், அருளிச் செய்தார்.

ஸ்ரீ திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே பரகாலாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழி.

---

(4. 3. 8.) அவதாரிகை :—முன்பு தன் திருப்பேரனாகிய அநிருத்தனைச் சிறை விடுவிப்பதற்காக, பாணாஸுரன் தோள்களைத் திருவாழியினால் துணித்தவனான கண்ணபிரானும், பரம போக்யமான திருவேங்கடமலையில் வீற்றிருக்கும் திருவேங்கடமுடையானும், எனக்குச் செம்பொன் செய் கோயிலினுள்ளே பேரருளாளப் பெருமாளாக ஸேவை ஸாதிக்க, நான் கண்டு வணங்கி வாழ்ந்தொழிந்தேன்—என்று அருளிச் செய்கிறார்.

அன்றிய வாண னாயிரம் தோளும்
துணியஅன்று ஆழிதொட் டானை
மின்திகழ் குடுமி வேங்கட மலைமேல்
மேவிய வேதநல் விளக்கைத்
தென்திசைத் திலத மனையவர் நாங்கைச்
செம்பொன்செய் கோயிலி னுள்ளே
மன்றது பொலிய மகிழ்ந்துநின் றானை
வணங்கிநான் வாழ்ந்தொழிந் தேனே. 4. 3. 8.

பதவுரை :—அன்றிய - கோபித்து எதிரிட்ட. வாணன் - பாணாஸுரனுடைய. ஆயிரம் தோளும் - ஆயிரந் தோள்களும். துணிய - அறுந்து விழும்படி. அன்று - தனது திருப்பேரனை அநிருத்தனைச் சிறையில் வைத்த காலத்திலே. ஆழி - திருவாழியாழ்வானை. தொட்டானை - ப்ரயோகித்த ஸ்ரீ க்ருஷ்ணனும். மின் திகழ் - ஒளி விளங்கா நின்ற. குடுமி - சிகரங்களையுடைய. வேங்கடம் - திருவேங்கடமென்னும். மலைமேல் - சிறந்த மலையின்மேல். மேவிய - பொருந்தி யிருப்பவனும். வேதம் - வேதங்களால் காணக் கூடிய. நல் விளக்கை - நல்ல விளக்கானவனும். தென் திசை - தென் திசைக்கு. திலகம் அனையவர் - திலகம் போன்ற மஹான்கள் வாழ்கின்ற.

நாங்கைச் செம்பொன் செய் கோயிலின் உள்ளே - இந்தத் திவ்ய தேசத்திலே. மன்று அது பொலிய - ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டி விளங்க. மகிழ்ந்து - திருவுள்ளமுவந்து. நின்றானை - நிற்பவனுமான பெருமானை. நான் - நிறையொன்றுமில்லாத அடியேனும். வணங்கி - (கண்ணால் ஸேவித்து, அவன் திருவடிகளைத்) தொழுது. வாழ்ந்து ஒழிந்தேன் - உஜ்ஜீவனத்தைப் பெற்றேன்.

கருத்து :—தன் பேரனாகிய அநிருத்தனைச் சிறையிலே வைத்து எதிரிட்ட பாணாஸுரன் ஆயிரம் தோள்களையும் தனது திருவாழியால் அறுத்து, அவனும், அவனுக்கு ரக்ஷகனான பரம சிவனும் சரணம் புக, அவனை உயிரோடு வைத்த ஆச்சர்யகுண சேஷ்டிதனான கண்ணபிரானும், எல்லா உலகங்களுக்கும் திலகமாய் நின்ற திருவேங்கடமலையில் மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் பரம போக்யனாய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீயஃபதியும், நித்ய நிர்துஷ்டமான வேத பாகங்களில் விளக்குப் போலே ப்ரகாசிக்கும் பரம புருஷனும், தென் திசைக்குத் திலகம் போல் சோபாவஹர்களான மஹான்கள் வாழ்கின்ற பரம போக்யமான திருநாங்கைச் செம்பொன் செய் கோயிலினுள்ளே நாலாயிரம் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திவ்ய கோஷ்டி விளங்க, திருவுள்ள முவந்து, நிற்பவனுமான பெருமானைக் கண்ணாலும் கண்டு, வணங்கி, நான் அத்யாச்சர்யகரமாக வாழ்ந்தொழிந்தேன்.

குறிப்பு :—1. "ஆழி தொட்டானை" என்பதால் வெகு லாகவமாகத் தோள்களைத் துணித்தான்—என்று எம்பெருமானது ஸாமர்த்யம் ஸூசிதம்.

2. பலர் திரட்சியாகக் கூடியிருக்கு மிடத்திற்கு "மன்று" என்று பெயர். இந்தத் திவ்ய தேசத்தில் எப்போதும் நாலாயிரம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸேவாகாலம் பண்ணிக் கொண்டு இருப்பார்கள்—என்று ப்ரஸித்தி. "நாங்கை நாலாயிரம்" என்று பழமொழியும் உண்டு.

(4. 7. 5) அவதாரிகை :—வடநாட்டுக்கும், தென்னாட்டுக்கும், திலக ஸ்தானங்களாயுள்ள திருவேங்கடமலையிலும், திருவெள்ளக் குளத்திலும் பரம போக்யனாய் எழுந்தருளி யிருப்பவனே! உன்னையே பாடிக் கொண்டிருக்கும் அடியேன் வினைகளை நீக்க வேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

வேடார்திரு வேங்கடம் மேயவி ளக்கே!
நாடார்புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்
சேடார்பொழில் சூழ்திரு வெள்ளக் குளத்தாய்!
பாடாவரு வேன்வினை யாயின பாற்றே. 4. 7. 5.

பதவுரை :—வேடு ஆர் - வேடர்கள் மலிந்திருக்கிற. திருவேங்கடம் - திருவேங்கட மாமலையின் சிகரத்திலே. மேய - நித்யஜ்யோதியாய் விளங்கா நின்றுள்ள. விளக்கே - மங்கள தீபம் போன்றவனே! நாடு ஆர் புகழ் - நாடெங்கும் நிறைந்திருக்கும் புகழையுடையவரான. வேதியர் - வைதிகர்கள். மன்னிய - நித்ய வாஸம் பண்ணுகிற. நாங்கூர் - திருநாங்கூரில். சேடு ஆர் - திரண்டு இருக்கின்ற. பொழில் சூழ் - சோலைகளால் சூழப்பட்ட. திருவெள்ளக் குளத்தாய் - "திருவெள்ளக் குளம்"என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே! பாடா - உன்னையே பாடிக் கொண்டு. வருவேன் - வருகின்ற அடியேனுடைய. வினை ஆயின - எல்லா பாவங்களையும். பாற்று - நாசமாக்கக் கடவாய்.

கருத்து :—ஒருநாளும் விட்டுப் பிரியாமல், திருமலை யப்ப னுக்குப் பரிவாயிருக்கும் ஸ்ரீ குஹப் பெருமான் போன்ற வேடர் கள் குடிகொண்டு மலிந்திருக்கும் திருவேங்கடமா மலையிலும், நாடெங்கும் நிறைந்த புகழையுடைய விலக்ஷணமான ஞாநாநுஷ் டான ஸம்பந்நராயும், ஸர்வதேச தசாகாலங்களிலும் எம்பெருமா னுக்கு மங்களாஸாசன பரரான பரம வைதிக சிகாமணிகள் நித்ய வாஸம் பண்ணும் திருநாங்கூரில், மலர்ந்த மலர்களோடு கூடி மிகவும் மனோஹரங்களான சோலைகளால் சூழப்பட்ட திருவெள்ளக் குளத் திலேயும், உகந்து நித்ய வாஸம் பண்ணுகிற எம்பெருமானே! உன் கல்யாணகுண சரித்ரங்களையே எப்போதும் பாடிக் கொண்டு, பச் சாத்தாபத்துடன் திரியா நின்ற அடியேனது வினைகளை யெல்லாம் நாசமாக்கி, ஸம்ரக்ஷிக்க வேணும்.

குறிப்பு :—1. உயர்ந்த மலைச் சிகரத்திலே விளங்கும் அகண்ட மங்கள தீபம், எப்படி நாற்புறத்திலுமிருக்கும் இருளைப் போக்கி, ஸ்வயம் ப்ரகாசமாய், ஜனங்களுக்கு நல்ல வழி காட்டி அநேக விதங்களால் உபகாரத்தைப் பண்ணுமோ, அப்படியே திருமலையப்பன் மஹோபகாரகனாய் விளங்குகிறானாகை யாலே, விளக்காக அவனை ஆழ்வார் அபிவர்ணித்தார்.

2. "கண்ணார் கடல்சூழ்" என்னும் திருமொழியைப் போலவே இதுவும் அமைந்துள்ளது.

(5. 3. 4.) அவதாரிகை :—ஸ்ரீ க்ருஷ்ணனா யவதரித்து விரோ திகளை நிரஸித்து ஆச்ரிதரான பஞ்ச பாண்டவர்களைக் காப்பாற்றி யருளி, அந்த வெற்றித் தோன்றத் திருவெள்ளறையிலும், திருவேங் கடத்திலும் வீற்றிருக்கிற பிரானே! அடியேனுக்குப் பரம பக்தியை யருள வேணும்—என்று ப்ரார்த்திக்கிறார்.

அறுசீர்விருத்தம்.

வாம்பரி யுகமன்னர் தம்உயிர் செகஐவர் கட்குஅர சளித்த
காம்பி ளுர்திரு வேங்கடப் பொருப்ப !நின் காதலை அருள்எனக்கு
மாம்பொழில் தளிர்கோ தியமடக் குயில்வா யதுதுவர்ப் பெய்தத்
தீம்பலங் கனித்தே னதுநுகர் திருவெள் ளறைநின் றானே! 5. 3. 4.

பதவுரை:—மாம்பொழில் - மாந்தோப்புகளிலே. தளிர் - கோமலமான தளிர்களை. கோதிய - கொத்தி உண்ட. மட - பருவம் நிரம்பி அழகாயிருக்கும். குயில் - குயில்கள். வாய் அது - தமது வாய். துவர்ப்பு எய்த - துவர்த்துப் போக. அந்த ரஸத்தை மாற்றுவதற்காக. தீம் - இனிமையான. பலங் கனி - பலாப் பழங்களிலுள்ள. தேன் அது - மகரந்தத்தை. நுகர் - பானம் பண்ணப் பெற்ற. திருவெள்ளறை - திருவெள்ளறை (ச்வேதாத்ரி) என்னும் திவ்ய தேசத்திலே. நின்றானே! - நின்றிருக்கும் பெருமானே! வாம்பரி - (பாரதப் போரில்) மேல் விழுந்து வருகிற குதிரைகள். உக - மாளும்படி. மன்னர் தம் - எதிரிகளான அரசர்களினுடைய. உயிர் - ப்ராணங்கள். செக - அழியும்படியாகச் செய்து. ஐவர்கட்கு - பஞ்ச பாண்டவர்களுக்கு. அரசு - ராஜ்யத்தை. அளித்த - க்ருபை செய்தவனும். காம்பின் ஆர் - மூங்கில்களாலே நிறைந்த. வேங்கடம் பொருப்ப - திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருப்பவனுமான எம்பெருமானே! நின் காதலை - உன் விஷயமான பரம பக்தியை. எனக்கு - அடியேனுக்கு. அருள் - பிறப்பித்தருள வேணும்.

கருத்து:—ரமணீயங்களான மாந்தோப்புகளில் பரம ஸுகுமாரங்களான மாந்தளிர்களைக் கொந்தி உண்ட அழகிய குயில்கள், தமது வாய் துவர்த்துப் போக, அந்த ரஸத்தை மாற்றுவதற்காக மதுரமான பலாப் பழங்களின் தேனைப் பானம் பண்ணிக் களித்து, அந்த மகிழ்ச்சிக்குப் போக்கு விடாகப் பஞ்சம ஸ்வரத்தில் பாடும் இடமாய், பரம போக்யமாயுள்ள திருவெள்ளறைத் திவ்ய க்ஷேத்திரத்திலும், ரமணீயங்களான மூங்கில்களாலே நிறைந்த சோலைகளோடே கூடிப் பரம போக்யமாயிருந்துள்ள திருவேங்கட மலையிலும் உகந்து நின்றருளும் பிரானே! பஞ்சபாண்டவர்கட்கு அருள் செய்ய வேண்டிப் படாதனபட்டாய்; பாரதப் போரில் மேல் விழுந்து வருகிற குதிரைகள் மாளும்படியாகவும், எதிரிகளான மன்னர் தம் உயிர் அழியும்படியாகவும் செய்து ஐவர்கட்கு அரசு அளித்தாய்; அப்படி எதேனும் அருமைப்பட வேணுமோ எனக்காக? உனது அடிமையிலே எனக்கு ருசியை விளைவித்து, அடிமை கொள்வாய்; இத்தனையன்றோ நான் வேண்டுவது.

குறிப்பு :—1. 'திருவேங்கட மலையில் நிற்பவனும், திருவெள்ளறையில் எழுந்தருளி யிருக்குமவனும் ஒரு வ்யக்தியே' என்பது தோன்ற "காம்பினூர் திருவேங்கடப் பொருப்ப—திருவெள்ளறை நின்றானே" என்றருளிச் செய்தார்.

2. நின் காதலை யருளெனக்கு—"தேவர் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்துக்குப் பூர்வ க்ஷணவர்த்தியான பரம பக்தியை எனக்குப் பண்ணியருள வேணும்" என்று ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யாந ஸ்ரீ ஸூக்தி.

(5. 5. 1.) அவதாரிகை :—இத் திருமொழி அந்யாபதேசத்தாலே அமைந்தது. அதாவது—ஆழ்வார் ஒரு பெண்பிள்ளையின் நிலைமையை அடைந்தவராய், 'பரகால நாயகி' யென்று பெயர் பெற்று, தம்முடைய செய்திகளையும், ஸ்ரீரங்கநாதன் திறத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையும், திருத் தாயார் எடுத்து உரைப்பதான ஸந்நிவேசத்திலே—இத்திருமொழி அமைக்கப்பட்டது.

அதில் இந்தப் பாசுரத்தில் பரகால நாயகியைப் பெற்றெடுத்த திருத் தாயார், திருவரங்கநாதன் திறத்திலே தன் மகள் காதல் கொண்டு, பித்தேறிக் கிடக்கும் படியைப் பேசி, "எம்பெருமான் இவளை இப்பாடு படுத்தினானே!" என்பதாய்ச் சொல்லுகிறாள்.

அறுசீராசிரிய விருத்தம்.

* வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே [
வேங்கடமே! என்கின் றாளால்
மருவாளால் என்குடங்கால் வாள்நெடுங்கண்
துயில்மறந்தாள் வண்டார் கொண்ட
லுருவாளன் வானவர்த முயிராளன்
ஒலிதிரைநீர்ப் பௌவம் கொண்ட
திருவாளன் என்மகளைச் செய்தனகள்
எங்ஙனம்நான் சிந்திக் கேனே? 5. 5. 1.

பதவுரை :—(என் பெண் பிள்ளையானவள்) வெருவாதாள் - அஞ்சாதவளாய். வாய் வெருவி - வாய் பிதற்றுகின்றவளாய். வேங்கடமே வேங்கடமே - வேங்கடமே வேங்கடமே என்கிறாள். என் குடங்கால் - எனது மடியில். மருவாள் - பொருந்துகின்றிலள். வாள் நெடுகண் - வாள் போன்று நீண்ட கண்களிலே. துயில் - உறக்கத்தை.மறந்தாள் - மறந்து விட்டாள். வண்டு - வண்டு போலவும். ஆர் கொண்டல் - பூர்ண மேகம் போலவும். உரு ஆளன் - திரு

வுருவமுடையவனும். வானவர் தம் - நித்ய ஸூரிகளுக்கு. உயிர் ஆளன் - உயிராயிருப்பவனும். ஒலி - கோஷிக்கின்ற. திரை நீர் - அலை நீர் பொருந்திய. பௌவம் - கடலில் நின்றும். கொண்ட - கொள்ளப்பட்ட. திரு ஆளன் - திருமா மகளை ஆள்பவனுமான எம்பெருமான். என் மகளை - என் பெண் பிள்ளை திறத்து. செய்தனகள் - செய்தவைகளை. நான் - நான். எங்ஙனம் சிந்திக்கேனே - நினைக்கத்தான் முடியுமோ?

கருத்து :—மதித்த வண்டுகள் போலவும், பூர்ணமான மேகம் போலவும் விரும்பத்தக்க திருவுருவ முடையவனும், நித்ய ஸூரிகளுக்கு உயிரா யிருப்பவனும், பெருத்த கோஷத்தோடு கூடின பெரிய பெரிய அலைகளோடு பொருந்திய, கடைந்த பாற்கடலினின்று முதித்த திருமா மகளை மனைவியாகக் கொண்ட எம்பெருமான், எனது பெண் பிள்ளைத் திறத்துச் செய்த வகைகளை நான் நினைக்கத்தான் முடியுமோ? அவன் கொஞ்சமாவது ஈரமும், இரக்கமும் இல்லாமல் என்ன பாடு படுத்திக் கொண்டு இருக்கிறான். ஐயோ! என் மகள் (பரகாலநாயகி) திருவரங்கநாதன் திறத்திலே காதல் கொண்டு பித்தேறிக் கிடக்கிறாள். சிறிதும் அஞ்சாமல் "வேங்கடமே! வேங்கடமே!" என்று வாய் பிதற்றுகின்றாள்; எனது மடியில் கொஞ்சமும் பொருந்துகின்றிலள்; வாள் போன்ற நீண்ட கண்களிலே உறக்கத்தை மறந்து விட்டாள்! ஐயோ! நான் என்ன செய்வேன்? என்ன சொல்லுவேன்?

குறிப்பு :—அழகிய மணவாளன் விஷயமாக ப்ராவண்யம் செல்லா நிற்க, திருவேங்கட மலையின் ஸங்கீர்த்தனம் எப்படிப் பொருந்தும்? என்றால், "அமலனாதிபிரான்" என்கிற பாசுரத்தின் குறிப்பில் இதற்கு நன்றாக ஸமாதானம் சொல்லப்பட்டு இருக்கிறது; அதை இங்கும் சேர்த்துக் கொள்ளுக.

"காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்
ஸ்ரீவாஸுதேவோ ரங்கேசஃ ப்ரத்யக்ஷம் பரமம் பதம்"

"மாயாவீ பரமானந்தம் த்யக்த்வா வைகுண்ட முத்தமம்
ஸ்வாமிபுஷ்கரிணீதீரே ரமயா ஸஹ மோததே".

என்னும் ச்லோகங்கள் இங்கே அநுஸந்தேயங்கள். பரமபதநாதனான பரவாஸுதேவன், முதலில் திருவேங்கட மலையில் தங்கியிருந்து, ஸ்ரீரங்கத்திற்குப் பிறகு சென்று சேர்ந்தான்; ஸ்ரீரங்க நிவாஸத்திற்குத் திருவேங்கட மலையில் இருப்பு மூலகந்தமா யிருக்கின்றது—என்று உள் கருத்து.

(5. 6. 7.) ஸ்ரீய: பதியும், திருவேங்கட நாதனும், திருக்கோவலூரில் எழுந்தருளி யிருக்கும் உலகளந்த பெருமானுமான எம்பெருமானை, அடியேன் ஸேவிக்கப் பெற்றது, திருவரங்கத்திலே தான்—என்று அருளிச் செய்கிறார்.

கொச்சகக் கலிப்பா.

சிந்தனையைத் தவநெறியைத் திருமாலை, பிரியாது
வந்துஎன் மனத்துஇருந்த வடமலையை வரிவண்டார்
கொந்தணைந்த பொழிற்கோவல் உலகளப்பான் அடிநிமிர்த்த
அந்தணனை யான்கண்டது அணிநீர்த்தென் னரங்கத்தே. 5. 6. 7.

பதவுரை :—சிந்தனையை - மனோரதத்திற்கு விஷயமானவனும். தவம் நெறியை - உபாய மார்க்கமாயிருப்பவனும். திருமாலை - திருமகள் கொழுநனும். வட மலையை - வட நாட்டிலிருக்கும் திருவேங்கட மலைக்கு நிர்வாஹகனும். வந்து - அவ்விடத்தில் நின்றும் வந்து. என்து - அடியேனுடைய. மனத்து - நெஞ்சிலே. பிரியாது - ஒரு நொடிப் பொழுதும் விட்டுப் பிரியாமல். இருந்த - பரம ப்ரீதியோடு எழுந்தருளியிருப்பவனும். வரி வண்டு - அழகிய வண்டுகள். ஆர் - படிந்த. கொத்து - பூங்கொத்துக்கள். அணைந்த - நெருங்கி யிருக்கப் பெற்ற. பொழில் - சோலைகளையுடைத்தான. கோவல் - திருக்கோவலூரில். உலகு அளப்பான் - உலகங்களை அளப்பதற்காக. அடி - திருவடிகளை. நிமிர்த்த - நீட்டின. அந்தணனை - ஸ்வாமியாக ஸேவை ஸாதிப்பவனுமான பெருமானை. யான் கண்டது - நான் கண்டு கொண்டது. அணி - பரம ரமணீயமான. நீர் - தீர்த்தம் பொருந்திய. தென் அரங்கத்து - அழகிய திருவரங்கத்திலே தான்.

கருத்து :—ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்வதற்கு இலக்கானவனும், மநோரதித்தபடியே கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெறுவிக்கும் உபாய பூதனும், திருமாமகளார் தனிக்கேள்வனும், பரம போக்யமான திருவேங்கடமலைக்கு நாயகனும், அவைகளோடு வாசியற, அதிநிக்ருஷ்டனான என்னுடைய நெஞ்சிலேயும், ஒரு நொடி நேரமும் விட்டுப் பிரியாமல், எழுந்தருளி யிருப்பவனும், அழகிய வண்டுகள் படிந்த பூங்கொத்துக்கள் நெருங்கி யிருக்கப் பெற்ற சோலைகளை யுடைத்தான திருக்கோவலூரில் உலகங்களை அளப்பதற்காகத் திருவடிகளை நீட்டின பெருமானாக ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானை நான் கண்டு கொண்டது— புண்ய தீர்த்தம் பொருந்திய, ரமணீயமான திருவரங்கத்திலே தான்.

குறிப்பு :—1. எம்பெருமான் பரம போக்யமான திருவேங்கடமலையைத் தனக்கு போக ஸ்தானமாக உடையவனுயிருக்கச் செய்தேயும், அதனை விட்டு, அதிநிஹீநமான என்நெஞ்சிலே நித்ய வாசம் பண்ணுகிறுன். ஆஹா ! என்ன அவனது ஆச்ரித வ்யாமோஹம்? என்ன வாத்ஸல்யம் ? என்ன ஔதார்யம் ? என்ன ஸௌசீல்யம் ?—என்று மோஹித்துக் கிடக்கிறுர் போலும்.

2. பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனும், ஸகல பூத ஸம்ஹ்ருத்தாய் விபவாவதாரங்களை யெடுத்துப் பரமோபாய ஸ்வரூபனுனவனும், திருமலையிலும், திருகோவலூரிலும், திருவரங்கம் பெரியகோயிலிலும், இருப்பவன்—ஒரே வ்யக்தி—என்றும், அவனே ஆழ்வாருடைய நெஞ்சிலே ஒரு நொடிநேரமும் விடாமல் நித்ய வாஸம் பண்ணுகிறுன்—என்றும் ஸூசிதமாய் விட்டது.

(6. 8. 1.) அவதாரிகை :—ஓங்கி உலகளந்த உத்தமன், அப்போது இழந்தவர்களும் அடிபணிந்து உய்யுமாறு திருவேங்கடமலையில் வந்து நின்று, அங்குப் போவதற்கும் சக்தி யில்லாதவர்களுக்காக மிகவும் எளியனுய், திருநறையூரிலே எழுந்தருளி, பரம போக்யமாக ஸேவை ஸாதிக்கிறுன் ; அவனைக் காணப் பெற்றேன்—என்று அருளிச் செய்கிறுர்.

தாவு கோச்சகக் கலிப்பா.

* மான்கொண்ட தோல்மார்வின் மாணியாய் மாவலிமண்
தான்கொண்டு தாளா லளந்த பெருமானைத்
தேன்கொண்ட சாரல் திருவேங் கடத்தானை
நான்சென்று நாடி நறையூரில் கண்டேனே. 6. 8. 1.

பதவுரை :—மான் கொண்ட தோல் - க்ருஷ்ண ஜினத்தை. மார்வின் - மார்பிலே தரித்த. மாணி ஆய் - பிரமசாரியாய். மாவலி - மஹாபலி பக்கலில். மண் - பூமியை. தான் கொண்டு - தான் யாசித்துப் பெற்று. தாளால் - தன் திருவடிகளாலே. அளந்த - ஆக்ரமித்துக் கொண்ட. பெருமானை - பெருமை பொருந்தியவனும். தேன் கொண்ட சாரல் - தேன் பெருகா நின்றுள்ள தாழ்வரைகளையுடைய. திருவேங்கடத்தானை - திருவேங்கட மலையில் எழுந்தருளி யிருக்குமவனே. நான் - அடியேன். நாடி சென்று - தேடிக் கொண்டு போய். நறையூரில்—திருநறையூரில். கண்டேன் - ஸேவிக்கப் பெற்றேன்.

கருத்து:—" அகலகில்லே னிறையும் " என்று திருமார்பில் விட்டுப் பிரியாமல் வீற்றிருக்கும் ஐச்வர்ய—அதிதேவதையான

ஸ்ரீ தேவியை க்ருஷ்ணாஜினத்தினால் மூடிக் கொண்டு திருக்குறள் மாணியாய், மஹாபலியின் யஜ்ஞ பூமியிலே புகுந்து, மூவடி மண் இரந்து பெற்று, மூவுலகங்களையும் அளந்து கொண்ட பெருமான், அப்போது இழந்தவர்களும் அடிபணிந்து உய்யும்வண்ணம், திருவேங்கடமலையில் வந்து நின்று, அங்குப் போவதற்கும் சக்தியில்லாதவர்களும் உஜ்ஜீவிக்கும்படி மிகவும் எளியனாய், பரம ரமணீயமான திருநறையூரிலே எழுந்தருளியிருந்து ஸேவை ஸாதிக்கிறான்—என்னப்பன் பரம கருணாவருணாலயன்; அவனை இன்று கண்ணாரக் காணப் பெற்றேன்; எனது பாக்யமே பாக்யம்! என் அத்ரிஷ்டமே அத்ரிஷ்டம்! தந்யனானேன்; மிகவும் தன்யனானேன்.

குறிப்பு :—1. "மான் கொண்ட தோல் மார்வின்" பெரிய பிராட்டியார் எப்பொழுதும் திருமார்பிலே திகழ்வளாதலால், அவளை மறைப்பதற்காக க்ருஷ்ணாஜினம், இந்த மாயா வாமன ப்ரம்மசாரிக்கு உபயோகப்பட்டது; லக்ஷ்மீபதித்வம் ப்ரகடமானால், இவருக்குத் தானம் கிடைக்குமா?—என்று ஸ்வாரஸ்யம்.

2. "தாளாலளந்த ... திருவேங்கடத்தானை"—"அன்று ஞாலமளந்த பிரான் பரன் சென்றுசேர் திருவேங்கட மாமலை" என்னும் ஸ்ரீ நம்மாழ்வார் பாசுரத்தை அடியொற்றி ஸாதித்தார் போலும்.

3. நான் சென்று நாடி—அறுகாதப் பயணம் போய்த் திருமலை யுச்சியிலே காணவேண்டாமல், விடாய்த்த விடத்திலே தண்ணீர் குடிக்கப்பெறுமா போலே திருநறையூரிலே காணப் பெற்றேன்—என்று உள் கருத்து.

(7. 3. 5.) அவதாரிகை :—பலபல பாபங்களைச் செய்து, அவைகளின் பலனான கொடிய நரகங்களிலே புகுந்து நோவுபடும் ஸமயத்திலும், உதாஸீனனாயிராமல், அங்கும் எழுந்தருளி ஸேவை ஸாதித்து; அபயப்ரதாநம் பண்ணி ரக்ஷித்தருளும் எம்பெருமானையே என்மனம் எப்போதும் சிந்திக்கின்றது—என்கிறார்.

எண்சீர் விருத்தம்.

ஆங்குவெந் நகரத்து அழுந்தும் போது
அஞ்சேலென்று அடியேனை அங்கே வந்து
தாங்கு தாமரை யன்னபொன் னாரடி
எம்பிரானை உம்பர்க் கணியாய் நின்ற

வேங்க டத்தரி யைப்பரி கீறியை
வெண்ணெயுண் டூரலி னிடையாப் புண்ட
தீங்க ரும்பினைத் தேனைநன் பாலினை
யன்றி என்மனம் சிந்தை செய்யாதே. 7. 3. 5.

பதவுரை :—அங்கு வெம் நரகத்து - அப்படிப்பட்ட கோரமான கொடிய நரகங்களிலே. அழுந்தும் - அழுந்தி நோவுபட நேர்ந்த காலத்திலும். அங்கே வந்து - அவ்விடங்களிலே எழுந்தருளி. அஞ்சேல் - பயப்படாதே. என்று - என்று சொல்லி. அடியேனை - நாயேனை. தாங்கு - பாதுகாத்தருளுகின்ற. தாமரை அன்ன - தாமரை போன்று மனோஹரமான. பொன் - அழகான. ஆர் - ஸர்வ லக்ஷண ஸம்பந்நமான. அடி - திருவடிகளையுடையவனும். எம்பிரானை - எனக்கு உபகாரகனும். உம்பர்க்கு - மேலுலகங்களுக்கு. அணி ஆய் நின்ற - அலங்காரமாயிருக்கிற. வேங்கடத்து - திருவேங்கடமா மலையில் எழுந்தருளியிருக்கிற. அரியை - சீரிய சிங்கம் போன்றவனும். பரிகீறியை - குதிரை யுருவாய் வந்த அசுரன் வாயைக் கிழித்தவனும. வெண்ணெய் - வெண்ணெயை. உண்டு - அமுது செய்து, உரலினிடை - உரலோடு கூட. ஆப்படை - கட்டுண்டிருந்தவனும். தீம் கரும்பினை - மதுரமான கருப்பஞ்சாறு போன்றவனும். தேனை - தேன்போல் மதுராதி மதுரமானவனும். நன் பாலினை அன்றி - போக்யமான பசுவின் பால்போல் இருக்குமவனுமான திருநறையூர் நம்பியைத் தவிர (மற்றொருவரை). என் மனம் - அடியேனது நெஞ்சானது. சிந்தை செய்யாது - துளிகூட நினைக்கமாட்டாது.

கருத்து :—பலவகைகளாலும் பலவகைப்பட்ட பல பல பாவங்களைச் செய்து, அவற்றின் பலமாக மிகவும் கொடிய நரகங்களிலே சென்று துர்ப்பாமான யாதனை (நோவு)களை அநுபவிக்கும் ஸமயத்தில், பரம க்ருபையோடு அங்கே எழுந்தருளி 'நான் இருக்க பாபங்களைப்பார்த்து, அஞ்சுவதற்கு ப்ராப்தியுண்டோ? அவைகளை நான் நிச்சேஷமாக்குகிறேன். நீ பயப்பட வேண்டா' என்று அபயப்ரதானம் பண்ணி அடியேனைப் பாதுகாத்தருளுகின்ற எம்பெருமான், பரம ஸுகுமாரமாய், மிக்க அழகு பொருந்தி யிருக்கும் திருவடித் தாமரைகளையுடையவனும், எனக்கு மிக்க உபகாரகனும், மேலுள்ள உலகங்களுக் கெல்லாம் அலங்காரமா யிருக்கின்ற ஸ்வபக சீதலமான திருவேங்கடமலையிலே சீரிய சிங்கம் போல் எழுந்தருளி யிருக்குமவனும், குதிரை யுருவாய் வந்த 'கேசி' என்னும் அசுரன் வாயைக் கிழித் தெறிந்தவனும், வெண்ணெயைக் களவாடி அமுது செய்து, உரலோடே கட்டுண்டிருந்தவனும், இனிமையான கருப்பஞ்சாறு

போன்றவனும், தேன்போல் பரம போக்யமானவனும், இனிய பால் போன்றவனுமாய்ப் பரமபோக்யமான திருநறையூரில் ஸகலகல்யாண குண பரிபூர்ணனாய் எழுந்தருளியிருக்கிறான். அவனைத்தவிர மற்றொருவரை என் நெஞ்சானது துளிகூட நினைக்கமாட்டாது.

குறிப்பு :—1. உம்பர்—மேலுலகங்கள் ; அல்லது, மேலுலகத்தார். முதற் பக்ஷத்தில், திருவேங்கடமலை விண்ணுலகம் வரை ஓங்கி யிருக்கின்றது—என்கிற அதிசயோக்தி வெளியாகிறது ; இரண்டாம் பக்ஷத்தில், நித்ய ஸூரி நிர்வாஹகனாயிருக்குமவன், அவர்களை விட்டு நம்போலியர்க்கு முகங் கொடுக்கத் திருமலையிலே வந்திருக்கிறான்—என்பது வெளியாகும்.

2. பரிகீறியை—'கேசி' என்னும் குதிரை யுருவத்தையுடைய அஸுரனைக் கண்ணபிரான் இருபிளவாக வாய் பிளந்தவரலாறு இங்கு அறியத்தக்கது.

(7. 10. 8.) அவதாரிகை :—அர்த்தநாரீச்வரனைத் தனது பக்கத்திலே வைத்து உகந்திருப்பவனும், ஸூர்யமண்டல மத்யவர்த்தியானவனும், இராப் பகல் பொழுதுக்கு ப்ரவர்த்தகனுமான திருவேங்கடமுடையானை திருக்கண்ணமங்கையுள் கண்டு கொண்டேன்—என்று அருளிச் செய்கிறார்.

**எண்சீர் விருத்தம்.**

எங்க ளுக்குஅருள் செய்கின்ற ஈசனை
 வாச வார்குழ லாள்மலை மங்கைதன்
பங்கனைப் பங்கில்வைத் துகந்தான் தன்னைப்
 பான்மை யைப்பனி மாமதி யம்தவழ்
மங்கு லைச்சுட ரைவட மாமலை
 யுச்சியை நச்சிநாம் வணங் கப்படும்
கங்குலைப் பகலைச் சென்று நாடிக்
 கண்ண மங்கையுள் கண்டுகொண் டேனே. 7. 10. 3.

பதவுரை :—எங்களுக்கு - எங்கள் விஷயத்தில். அருள் செய்கின்ற - கிருபை பண்ணுகிற. ஈசனை - ஸர்வேச்வரனும். வாசம் வார் - பரிமளம் வீசுகின்ற. குழலாள் - கூந்தலையுடையவளான. மலை மங்கை - பார்வதியை, தன் பங்கனை - தனக்குப் பாதி பாகமாக வுடையவனான மஹேசனை. பங்கில் வைத்து - தனது ஒரு பக்கத்திலே வைத்துக் கொண்டு. உகந்தான் தன்னை - உகந்திருப்பவனும். பான்மையை - இப்படிப்பட்ட சீலகுணமே ஸ்வபாவமாயுள்ளவனும். பனி - குளிர்ந்த. மா மதியம் - பூர்ண சந்திரன். தவழ் - தவழப் பெற்ற, மங்குலை - ஆகாசமாய் நிற்பவனும். சுடரை - ஸூரியனுக்கு அந்தர்யாமியா யிருப்பவனும். வடமா மலை - வட நாட்டுக்கு எல்லை

யாயிருக்கிற திருவேங்கட மாமலையின். உச்சியை - சிகரத்துக்கு ஆபரண மாயிருப்பவனும். நச்சி - விரும்பி. நாம் - நம்மால். வணங்கப்படும் - வணங்கப்படுமவனும். கங்குலை - இராப் பொழுதுக்கு ப்ரவர்த்தகனும். பகலை - பகற் பொழுதுக்கு ப்ரவர்த்தகனுமான பெருமானை. சென்று நாடி - தேடித் திரிந்து. கண்ண மங்கையுள் - திருகண்ண மங்கையிலே, கண்டு கொண்டேன் - ஸேவிக்கப் பெற்றேன்.

கருத்து:—அடியேன் ஸ்வாமியைத் திருக் கண்ணமங்கையில் ஸேவிக்கப் பெற்றேன். அவன் எப்படிப் பட்டவன் என்றால்;—

வேறு புகலற்ற அடியேன்போல்வார் திறத்திலே நிர்ஹேதுக மாக க்ருபைபண்ண வல்லவனும், அடியோங்கள் போலன்றியே, ஈச்வராபிமாநம் கொண்டாடி நின்று, வாசம்வார் பூங்குழலாள் மலைமங் கையை தனக்குப் பாதி பாகமாக வைத்துக் கொண்டு போக லீலா ரஸத்தை அநுபவிக்கும் மஹேசனையும், தன் திருமேனியின் ஒரு புறத்திலே வைத்து, அது தன்னைத் தன்பேறாக நினைத்து உகந்திருக் கும் சீல குணத்தால் மிகவும் சிறந்தவனும், இந்தச் சீலம்தான் ஏதோ வொரு காலத்தளவி லன்றிக்கே, எப்போதும் இதுவே இயல்பாக விருக்குமவனும், குளிர்ந்த பூரண சந்திரன் ஸஞ்சரிக்கும் ஆகாசத் திற்கும், ஸூர்யனுக்கும் நியாமகனாய் இருக்குமவனும், வட திரு வேங்கடமலையின் உச்சிக்குத் திருவாபரணமாய் இருக்குமவனும், நம்மால் விரும்பி வணங்கப்படுமவனும், போக மநுபவிப்பதற் குறுப் பான இராப் பொழுதென்ன, அதற்குப் பொருளீட்டுதற் குறுப் பான பகற் பொழுதென்ன, இவ்விரண்டுக்கும் நிர்வாஹகனுமாய் இருக்கிறான்.

இப்படிப்பட்ட பெருமானைத் திருக்கண்ணமங்கையில் அடி யேன் காணப் பெற்றேன்.

(8. 2. 3.) அவதாரிகை:—பரகால நாயகியின் நிலைமையைக் கண்ட அவளது திருத்தாயார் திருக்கண்ணபுரத் தெம்பெருமானையே நோக நோக்கித் தன் பரிதாபத்தைப் பேசுகிறாள்; அன்றிக்கே, தன்னில் தான் நொந்து கொண்டு பேசுகிறாளாகவுமாம்.

வெண்டளையால்வந்த நாலுகோச்சகக் கலிப்பா.

* அருவிசோர் வேங்கடம் நீர்மலை யென்றுவாய்
வெருவினாள் மெய்யம் வினவி யிருக்கின்றாள்
பெருகுசீர்க் கண்ண புரமென்று பேசினாள்
உருகினாள் உள்மெலிந் தாள்இது என்கொலோ? 8. 2. 3.

பதவுரை :—இவள் - இப் பரகால நாயகியானவள். அருவி சேர் - அருவிகள் சொரிகின்ற, வேங்கடம் - திருமலையென்னும். நீர்மலை - திரு நீர்மலை. என்று - என்றும் சொல்லி. வாய் வெருவினாள் - வாய் பிதற்றி னாள். மெய்யம் - திருமெய்யத்தைப்பற்றி. வினவி - கேள்வி கேட்டு. (அதற்குப் பதில் சொல்லாமையாலே) இருக்கின்றாள் - வாளா விருக்கின்றாள். பெருகு நீர் - சீர்மை மிகுந்த. கண்ணபுரம் என்று - திருக்கண்ணபுரம் என்று. பேசினாள் - வாயாற் சொன்னவளாய்க் கொண்டு. உருகினாள் - நீர் பண்டமானாள். உள் - நெஞ்சு. மெலிந்தாள் - சிதிலமாகப் பெற்றாள். இது என் கொல் - இப்படியும் ஒரு நிலையை யுண்டாகக்கடவதோ.

கருத்து :—இப் பாகால நாயகியை நோக்கி ஹிதமாக நான் ஏதேனுஞ் சொன்னாலும், அதை இவள் செவி யேற்பதுமில்லை; அதற்கு மறு மொழியையும் கூறுவதில்லை. "திருவேங்கடம்" "திருநீர்மலை" என்றே எப்போதும் இவள் வாய் வெருவிக் கொண்டு இராநின்றாள் ; சில ஸமயங்களில், "திருமெய்யம்" என்னும் திவ்ய தேசத்திற்கு "மெய்யம்" என்று திருநாமம் என் வந்தது? அடி யவர்கட்கு மெய்யே நின்று காரியஞ்செய்த விடம்—என்கிற காரணத் தினாலோ, அதற்கு அந்தத் திருநாம முண்டாயிற்று? என்று அருகி லுள்ளாரைக் கேட்கிறாள். அதற்கு மறுமொழி கூறுவார் யாரு மில்லாமையாலே, பெரு மூச்சு விட்டு வாளா விருக்கின்றாள்; இன் னும் சில சமயங்களில், "திருக் கண்ணபுரம்" என்று வாய் நிறையப் பேசினவாறே, அந்த க்ஷணத்திலேயே நீர்ப் பண்டமாய் உருகு கின்றாள். நெஞ்சு தளர்கின்றாள். இப்படி இவள் கஷ்டப்படுவதற்கு என் பாவமே தான் காரணம் வேறொரு காரணமும் தெரியவில்லை.

(9. 7. 4.) அவதாரிகை :—என் அன்பார்ந்த நெஞ்சமே! காமாதி போகங்களை யநுபவிக்க வேணுமென்றிருக்குமவர்களின் திர ளிலே புகாமல், நீ உஜ்ஜீவிக்க வேண்டில், பரமபதத்திலும், திரு மலையிலும் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானுடைய 'திருவல்ல வாழ்' என்கிற திருப்பதியைப் பொருந்து—என்று தமது மனஸ்ஸை நோக்கி அருளிச் செய்கிறார்.

எண்சீர் விருத்தம்.

பண்ணுலா மென்மொழிப் பாவைமார்
பணைமுலை யணைதும் நாமென்று
எண்ணுவா ரெண்ணம தொழித்து
நீபிழைத் துயக்கருதி னையேல்

விண்ணுளார் விண்ணின்மீ தியன்ற
வேங்கடத் துளார்வளங் கொள்முந்நீர்
வண்ண ஞார்வல்ல் வாழ்
சொல்லுமா வல்லையாய் மருவுநெஞ்சே! 9. 7. 4.

**பதவுரை** :—நெஞ்சே - ஓ மனமே! பண் உலாம் - இசை விளங்குகின்ற. மெல் மொழி - இனிய பேச்சுகளையுடைய. பாவைமார் - ஸ்த்ரீகளினுடைய. பணை முலை - நெருங்கின ஸ்தநங்களை. நாம் - நாம். அணைதும் என்று - அணைவோமென்று. எண்ணுவார் - சிந்திப்பவர்களினுடைய. எண்ணம் அது - அப்படிப்பட்ட சிந்தனையை. ஒழித்து - தவிர்த்து. நீ பிழைத்து உய்ய - நீ உஜ்ஜீவிக்க. கருதிஞயேல் - விரும்புகிறாயாகில். விண் உளார் - நித்ய ஸூரிகளுக்காக. விண்ணின் மீது - பரமபதத்திலே. இயன்ற - காட்சி கொடுத்துக் கொண்டு இருப்பவரும். வேங்கடத்து - திருவேங்கட மலையில். உளார் - எழுந்தருளி யிருப்பவரும். வளம்கொள் முந்நீர் - அழகிய கடல் போன்ற. வண்ணஞர் - வடிவை யுடையவருமான எம்பெருமானுடைய. வல்ல வாழ் - "திருவல்ல வாழ்" என்னும் திருப்பதியை. சொல்லும் ஆ - வாயாற் சொல்லுவதில். வல்லை ஆய் - ஸமர்த்தையாய். மருவு - பொருந்து.

**கருத்து** :—என் நெஞ்சமே! தங்களுக்கு வசப்படுத்திக் கொள்ளுவதற்காகத் தேனொழுகப் பேசுகின்ற பெண்களை அணைய வேணுமென்று காதலிப்பார் திரளிலே புகாதே, 'அந்தக் காதல் ஸ்வரூப ஹாநி' என்று நிச்சயித்து, அதற்குத்தப்பி உஜ்ஜீவிக்க விருப்பமுண்டாகில், நித்ய ஸூரிகளுக்கு காட்சிகொடுத்துக் கொண்டு பரமபதத்திலிருக்கிறவன், அந்தப் பரம பதத்தோடு ஒரு போலியான ஓக்கத்தை யுடைத்தான திருவேங்கடமலையில் நின்றிருக்கும், கடல் போன்ற அழகிய வடிவை யுடைய எம்பெருமான் நித்ய வாஸம் பண்ணுகிற "திருவல்லவாழ்" என்னும் திவ்ய திருப்பதியிலே பொருந்தப் பார்—என்கிறார்.

(9. 9. 9.) அவதாரிகை :—ஆழ்வார், திருமாலிருஞ் சோலையிலே அதி ப்ராவண்ய முடையவராய், அழகர் வடிவழகில் நெஞ்சு பறியுண்டு, தாமான தன்மையை யிழந்து, தலைவியின் தன்மையை யடைந்து, தம் நிலைமையை, தாய் முகமாக வெளியிடுகிறார்.

"என் மகளுடைய ஆற்றாமையைப் பார்த்தால் சுந்தரத் தோளுடையானோடு அணைந்தல்லது தரிக்கமாட்டாள் போலே இருக்கிறது. அவனை அணைந்து, ஆநந்திக்கும் படியான பாக்யம் இவள் பெற்றவளோ?" என்று பரகால நாயகியின் தாய் வருந்துகிறாள்.

கலி நிலைத்துறை.

* வலம்புரி யாழி யனைவரை யார்திரள் தோளன்தன்னைப்
புலம்புரி நூலவ னைப்பொழில் வேங்கட வேதியனைச்
சிலம்பிய லாறுடை யதிரு மாலிருஞ் சோலைநின்ற
நலந்திகழ் நாரண னைநணு குங்கொல்? என்நன்னுதலே. 9. 9. 9.

பதவுரை :— வலம்புரி - தக்ஷிணாவர்த்தமான 'ஸ்ரீ பாஞ்சஜன்ய'மென்னும் திருச்சங்கையும். ஆழியனை - 'ஸ்ரீ ஸுதர்சன'மென்னும் திருவாழியையும் தனது திருக்கைகளில் ஏந்தி விளங்குமவனும். வரை ஆர் - மலை போன்று. திரள் - திரண்ட. தோளன் தன்னை - திருத்தோள்களையுடையவனும். புலம்புரி நூலவனை - மநோஹரமான யஜ்ஞோபவீதத்தை யுடையவனும். பொழில் வேங்கடம் - சோலை சூழ்ந்த திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்குமவனும். வேதியனை - நிகில வேத ப்ரதி பாத்யனும். சிலம்பு இயல் - 'சிலம்பு' என்று சொல்லப்படுகிற. ஆறு உடைய - நூபுர கங்கையை யுடைத்தான. திருமாலிருஞ் சோலை - "திருமாலிருஞ் சோலை" என்னும் திவ்ய தேசத்தில். நின்ற - நிற்பவனும். நலம் திகழ் - திருக் கல்யாண குணங்கள் விளங்கப் பெற்றவனுமான. நாரணனை - ஸ்ரீமந் நாராயணனை. என் நல் நுதல் - அழகிய நெற்றியை யுடையவளான என் மகள். நணுகும் கொல்— கிட்டப் பெறுவாளோ.

கருத்து :— தன்னடியாருக்கு ஆபத்து வந்தவாறே தாமதமின்றி ரக்ஷித்தருள்வதற்காகத் திருவாழி திருச் சங்குகளை எப்போதும் திருக் கைகளில் ஏந்தி விளங்கா நின்றுள்ளவனும், அந்தத் திருப்படைகளில்லாமலும் ரக்ஷிக்கவல்ல தோள் மிடுக்கை யுடையவனும், ரக்ஷித்தருளா தொழியினும் விட வொண்ணாதபடி மநோஹரமான திவ்ய யஜ்ஞோபவீத மணிந்த அழகு வாய்ந்தவனும், ஆச்ரிதர்கள் வந்து அணுகும்படி பரம ஸுலபனாய், திருவேங்கடமலையில் கோலஞ் செய்து எழுந்தருளி யிருப்பவனும், "அது தானும் பாத்வத் தோடொக்கும்" என்று சொல்லலாம்படி, மிகநீசரானார்க்கும் ஸேவை ஸாதித்துக் கொண்டு திருமாலிருஞ் சோலையிலே வந்து நிற்கையாகிற நீர்மையி லேற்றத்தை யுடையவனுமான ஸ்ரீமந் நாராயணனை என் மகள் நண்ணப் பெறுவளோ !

குறிப்பு :— சிலம்பு - நூபுரம் ; ஒருவகைக் காலணி. 'சிலம்பு' இயல் ஆறு - நூபுர கங்கை. திருமால் உலகமளந்த ஸமயத்தில், பெருமாளுடைய திருவடி ஸத்ய லோகத்தில் சென்றவாறே, பிரமன் தன் கைக்கமண்டல தீர்த்தத்தால் கழுவி விளக்க, அக்காற் சிலம்பினின்று தோன்றியதனால் 'சிலம்பாறு' என்று பெயராயிற்று.

"ஸ்வர்க்கத்தினின்றும் அப்ஸரஸ்ஸுக்கள் வந்து ஆச்ரயிக்க, அவர்களுடைய சிலம்பினுடைய ஸ்வபாவத்தையுடைத்தான ஆறு" என்று ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்தருளினர்.

"சிலம் பொலி ஞெகிழி குன்றும்" என்ற சூடாமணி நிகண்டின்படி 'சிலம்பு' என்று குன்றுக்குப் பெயராம். ஆதலால், குன்றே உருகி ஆறாயிற்றென்ற காரணங் கொண்டு 'சிலம்பாறு' என்னலாயிற்று—என்பர் சிலர்.

(10. 1. 2.) அவதாரிகை :—மிகவும் மோஹந ரூபனாகிய எம்பெருமானை நேற்றுத் திருவேங்கடமலையின் உச்சியில் ஸேவித்தோம்; இன்றைக்குத் திருத்தண்காவிலே போய் ஸேவிக்கிறோம்—என்கிறார்.

கலிவிருத்தம்.

* பொன்னை மாமணி யைஅணி யார்ந்ததோர்
மின்னை வேங்கடத் துஉச்சியிற் கண்டுபோய்
என்னை யாளுடை ஈசனை எம்பிரான்
தன்னை யாம்சென்று காண்டும் தண்காவிலே. 10. 1. 2.

பதவுரை :—பொன்னை - பொன் போல் விரும்பத்தக்கவனும். மா மணியை - இந்திர நீலமணி போன்றவனும். அணி ஆர்ந்தது - அழகு மிக்க. ஓர் மின்னை - ஒரு மின்னல் கொடி போன்று விளங்கா நின்றுள்ளவனும். என்னை ஆளுடை - என்னை அடிமை கொண்ட. ஈசனை - ஸ்வாமியுமான. எம்பிரான் - ஸர்வேச்வரனை. யாம் - அடியோம். (நெருநல் - நேற்று). வேங்கடத்து - திருவேங்கட மலையின். உச்சியில் - சிகரத்தில். கண்டு - ஸேவித்து. இன்று - இன்றைக்கு. தண் காவிலே - திருத்தண் காவிலே. சென்று - போய். காண்டும் - ஸேவிப்போம்,

கருத்து :—பொன் போல் விரும்பத் தக்கவனும், நீலமணி போல் மநோஹர மானவனும், அழகு மிக்கதொரு மின்னற் கொடி போன்று உஜ்வல ஸ்வரூபியானவனும், என்னை அடிமைகொண்டவனுமான எம்பெருமானை, நேற்று அடியோம், திருவேங்கட மலையின் சிகரத்தில் ஸேவித்து, இன்றைக்கு 'திருத்தண்கா' வென்னும் திவ்ய தேசத்திலே போய் ஸேவிப்போம்.

குறிப்பு :—திருத்தண்கா—காஞ்சீபுரத்திலிருக்கும் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதி. திருத்தண்கால்—பாண்டிய நாட்டிலிருக்கிறது; அது வேறு.

(10. 10. 5.) அவதாரிகை :—பரகால நாயகி பைங்கிளியை நோக்கி, "எம்பெருமான் இங்கே வந்து சேரும்படியாகக் கூவவேணும்"—என்று வேண்டிக் கொள்ளுகிறாள்.

வெண்டுறை.

* சொல்லாய் பைங்கிளியே !
சுடராழி வலனுயர்த்த
மல்லார் தோள்வட வேங்கட வனைவரச்
சொல்லாய் பைங்கிளியே. 10. 10. 5.

பதவுரை :—பைங்கிளியே - பசுமை தங்கிய கிளியே! சுடர் ஆழி - ஒளி மிக்க திருவாழிப் படையை. வலன் - வலத் திருக்கையிலே. உயர்ந்த - உயரத் தாங்கி இருந்துள்ளவனும். மல் ஆர் - மிடுக்குடைய. தோள் - திருத் தோள்களை யுடையவனும். வட வேங்கடவனை - வட திசையிலுள்ள திரு வேங்கட மலையில் எழுந்தருளி யிருப்பவனுமான எம்பெருமானை. வர சொல்லாய் - இங்கு வரச் சொல்வாயாக. பைங்கிளியே - என் அன்பார்ந்த பச்சைக் கிளியே! சொல்லாய் - நீ சொல்லமாட்டாயா?

கருத்து :—பைங்கிளியே! என் அன்பார்ந்த பைங்கிளியே! நீ தயவு செய்து அப் பெருமானைக் கருணாநிதியை இங்கே வரச் சொல்லாய்; பைங்கிளியே இங்கு வரச் சொல்லாய்! ப்ராப்தி ப்ரதி பந்தகங்கள் பல பலவா யிருக்க, பரிசுத்தனான அவன் எளிதாக இங்கு வருவானோ? என்று நினைக்கிறாயோ? அப்படி நினைக்க வேண்டா. ஆச்ரிதர்களுடைய நிகில ப்ரதி பந்தகங்களையும் இரு துண்டமாக்கு தற்குப் பாங்கான திருவாழியாழ்வானை, தனது வலத் திருக்கையிலே ஏந்தியுள்ளான்காண்; அவ்வாயுதந்தானும் மிகையாம்படி மிடுக்கில் குறையற்ற திருத்தோள்களையுடையவன் காண்; என்னை அணைவ தற்கென்றே பயண மெடுத்து விட்டுத் திருவேங்கட மலையிலே தங்கியிருக்கிறான் காண்; அன்னவனை இங்குத் தயவுசெய்து வரச் சொல்லாய்.

(11. 3. 7.) அவதாரிகை :—பரகால நாயகி தனது நெஞ்சி னுள்ளே எம்பெருமான் புகுந்து உறையப் பெற்று வைத்தும் திருப்தி யடையாதே, கண்ணாற் காணப் பெறாமையாலே வருந்துகிறாள்.

தரவு கொச்சகக் கலிப்பா.

கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளைகள்
என்னோகழன்ற? இவைஎன்ன மாயங்கள்?
பெண்ணானோம் பெண்மையோம் நிற்க அவன்மேய
அண்ணல் மலையும் அரங்கமும் பாடோமே. 11. 3. 7.

பதவுரை :—கண்ணன் - கண்பிரான். மனத்துள்ளே - என் நெஞ்சி னுள்ளே. நிற்கவும் - எழுந்தருளி யிருக்கச் செய்தேயும். கை வளைகள் -

எனது கையில் அணிந்துள்ள வளைகளானவை. என்னே கழன்ற - ஏனோ கழன்று போகின்றனவே. இவை என்ன மாயங்கள் - இவை என்ன ஆச்சரியங்கள். பெண் ஆனோம் - பெண் குடியில் பிறந்துள்ள நாம். பெண்மையோம் - பெண்மையை வெகு அழகாக உடையவர்களாக யிருக்கிறோம். நிற்க - இது நிற்க. அவன் மேய - அந்த எம்பெருமான் விரும்பிவர்த்திக்குமிடமாய். அண்ணல் - சிறந்ததான, மலையும் - திருவேங்கட மலையையும். அரங்கமும் - திருவரங்கத்தையும். பாடோமே - பாடுகைக்குத் தடையுடையவராயிருக்கிறோமோ?

கருத்து:—எம்பெருமான் தூரஸ்தனா யிருந்தால், அவன் விரஹம் பொறுக்க மாட்டாமல் மேனி மெலிந்து வருந்துதல் தகுதியே; அவன் என் மனத்தினுள்ளே யிருந்து ஸந்நிஹிதனாய் நிற்கச் செய்தேயும், இங்ஙனே என் மேனி மெலிவதற்கு என்ன காரணமோ? தெரியவில்லை; கையில் நின்றும் வளைகள் கழன்று போயினவே தெரியவில்லை; இது ஆச்சர்யமான ஸம்பவமா யிருக்கின்றதே! பெண்ணாய்ப் பிறந்த நாம் பெண்மையை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டோமானோம். கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளை கழலப் பெறுகின்ற நமக்கும் பெண்மைக்கும் வெகு தூரமுண்டு; இந்த விஷய மெல்லாம் ஒருபுற மிருக்கட்டும். உள்ள வரையில் ஆவியைத் தரித்திருப்பதற்காக அவன் விரும்பி உறையும் திருமலையையும், திருவரங்கத்தையும் பாடுகையில் ஒருதடை யுடையவரா யிருக்கிறோமோ?

(11. 5. 10.) அவதாரிகை:—ஆழ்வார் எம்பெருமானது, திவ்ய கல்யாண குணங்களை விலக்ஷணமாக அநுபவிக்கத் திருவுள்ளம் பற்றி, ஏக காலத்திலே இரண்டு பிராட்டியாருடைய நிலைமையையடைந்து, ஏசிப் பேசுகிற ஒருத்தியின் பாசுரத்தாலே ஸௌலப்ய குணத்தையும், ஏத்திப் பேசுகிற மற்றொருத்தியின் பாசுரத்தாலே பரத்வ குணத்தையும் அநுபவிக்கிறார்.

தரவுகொச்சிக்கலிப்பா.

* கள்ளத்தால் மாவலியை மூவடிமண் கொண்டளந்தான்
வெள்ளத்தான் வேங்கடத்தான் என்பரால் காணேடீ!
வெள்ளத்தான் வேங்கடத்தா னேலும் கலிகன்றி
உள்ளத்தி னுள்ளே உளன்கண்டாய் சாழலே! 11. 5. 10

பதவுரை :—மடீ - தோழீ. கள்ளத்தால் - கபட வேஷத்தினால். மாவலியை - மாவலியிடத்தில். மூ அடி மண் கொண்டு - மூன்றடி மண்ணை இரந்து பெற்று. அளந்தான் - அளந்து கொண்டவன். (ஒருவர்க்கும் எளிய னாகாதபடி) வெள்ளத்தான் - திருப்பாற்கடலிலே உள்ளான். வேங்கடத் தான் - திருவேங்கட மலையிலே யுள்ளான். என்பர் காண் - என்று சொல்லு கிறார்களன்றோ. (இப்படி ஒரு தோழி சொல்ல மற்றொரு தோழி சொல்லு கிறாள்). சாழலே - ஓ தோழீ! வெள்ளத்தான் - திருப்பாற் கடலிலுள்ளவ னும். வேங்கடத்தான் எனும் - திருவேங்கட மலையிலுள்ளவனு மாகையால் அருமைப்பட வுள்ளவனே யாகிலும். கலிகன்றி - 'கலியன்' என்னும் பேரையுடைய திருமங்கையாழ்வாருடைய. உள்ளத்தின் உள்ளே - ஹ்ருத யத்தினுள்ளே. உளன் கண்டாய் - எளியனாய் உளன் காண்.

கருத்து :—தோழீ! நீ உகக்கும் பெருமான் பிராமாணிகனல் லன்; வஞ்சகன்; க்ருத்ரிம வேஷத்தாலே மாவலி பக்கலில் மூவடி மண் வாங்கி, மூவுலகையு மளந்தவ னாகையலே மயவஞ்சகன்; அது கிடக்கட்டும்; ஒருவர்க்கும் சென்று கிட்ட வொண்ணாதபடி எங் கேயோ, திருப்பாற்கடலிலும், திருவேங்கட மலையிலும் இருப்பவ னாகச் சொல்லுகிறார்களே யன்றி, எளியனா யிருப்பவனல்லவே! என்ன, பதில் சொல்லுகிறாள் :—

தோழீ! இவ்வளவேயோ நீ யறிந்தது? திருமங்கை யாழ்வா ருடைய திருவுள்ளத்திலே வந்து நித்ய வாஸம் பண்ணுவதற்கு உபாயாநுஷ்டாநம் செய்கிற படியாகவன்றோ, அவன் திருப்பாற் கடலிலும், திருவேங்கட மலையிலும் வஸிப்பது. இப்போது அவ்விடங் களை யெல்லாம் விட்டு, ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே நித்ய ஸந்நி ஹிதனாய் இருக்கிறான் காண்—என்று.

ஆக, இப்படி ஆழ்வார் தோழிகளின் ஸம்வாத முகத்தாலே எம் பெருமானது திவ்ய கல்யாண குணங்களை இனியராய் அநுபவிக்கிறார். இதுவேபரம போக்யமா யிருக்கையாலே பலச்ருதியில்லாமே இத் திருமொழியைத் தலைக்கட்டிற்றாயிற்று.

குறிப்பு :—1. பரமபதம், திருப்பாற்கடல், கோயில், திருமலை, பெரு மாள் கோயில்—முதலான உகந்தருளின நிலங்களில் இருப்பதிற்காட்டிலும் எம்பெருமானுக்கு, மெய்யடியாருடைய ஹ்ருதய பத்மத்திலே வாழ்வதே, பரம போக்யமா யிருக்குமென்றும், ஸமயம் பார்த்து அங்குச் சேருவதற்காகவே திவ்யத் திருப்பதிகளில் எம்பெருமான் தங்கியிருக்கிறான்—என்றும், பரம ரஹஸ்யம் ஸூசிதமாயிற்று.

2. "என்னாதன் தேவிக்கு" "கதிராயிரமிரவி" என்னும் திருமொழிகளில் ஸ்ரீ பெரியாழ்வாரும், "பட்டி மேய்ந்தோர் காரேறு" என்னும் திருமொழியிலே "இங்கே போதக் கண்டீரே ?", "விருந்தாவனத்தே கண்டோமே !" என்று அவர் திருமகளாரும் இந்த ரஸத்தை அநுபவித்தார்கள் ; காண்க.

3. இரண்டு வ்யக்திகளின் அவஸ்தையை ஏககாலத்திலே ஒருவர் அநுபவிக்கக் கூடுமோ ? எனில்; ஞானாநந்தங்களில் தடையற்றால் எல்லாம் கூடும். நித்ய முக்தர்கள் ஏககாலத்தில் அநேக சரீரங்களை ஸ்வீகரித்து எம்பெருமானது அநேக கல்யாண குணகணங்களை அநுபவிக்கின்றார்கள்—என்று ச்ருதியும் சொல்லுகிறது. 'ஸௌபரி' மஹர்ஷியின் அநுபவமும் இங்கு நிதர்சனமாகலாம்.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே பரகாலாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறுந்தாண்டகம்.

---

அவதாரிகை :—விஷயாந்தர ப்ராவணராய்த் திரிந்து கொண்டிருந்த பரகாலனை, எம்பெருமான் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றி, தன் லோகாதி சாயியான திவ்யதிக ஸௌந்தர்யத்தைக் காட்டிக் கொடுத்தான் ; ஆழ்வாரும் அதைக் கண்டு மிகவும், ஆச்சர்யமடைந்து, ஈடுபட்டுப் பெரும் பசியன் சோற்றைக் கண்டாப்போலே, ஓரேயடியாக அதின் அநுபவ ரஸார்ணவத்திலே, மூழ்கிக் கிடந்தார்.

எம்பெருமான், தன் உணர்ச்சி பலித்ததற்கு ஆநந்த மடைந்து, இப்பற்று இவருக்கு நிலை நிற்பதற்காக, திருமந்த்ரத்தை யுபதேசித்து, தனது ஸௌசீல்யாதி கல்யாண குணங்களையும், உகந்தருளின நிலங்களையும் காட்டிக் கொடுத்தான்.

அவைகளின் பலிதமாக ஆழ்வாருக்கு ஸம்ஸாரத்தில் ஜிஹாஸையும், பகவானிடத்தில் ப்ராவண்யாதிரேகமும் உண்டானவாறே, பகுமுகமாகக் கதறினார் ; ஒரு க்ஷணமும் அவனை விட்டுப் பிரிந்திருக்க மாட்டாத ஆழ்வார், மிகுந்த தாஹங் கொண்டவன் நீரிலே விழுந்து, நீரைக் குடிப்பதும், நீரைவாரி மேலே யிறைத்துக் கொள்வதும் செய்யுமா போலே, அப் பெருமானை வாயாலே பேசியும், தலையாலே வணங்கியும், நெஞ்சாலே நினைத்தும் தரிக்கப் பார்க்கிறார்—'திருக்குறுந் தாண்டக' மென்னும் இத்திவ்யப் பிரபந்தத்தினாலே.

தாண்டகம்—என்பது தமிழில் ஓர்வகையான ப்ரபந்தம். இருஅறுசீர் கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது, எண்சீர் கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது, இஷ்ட தேவதையைப் புகழ்ந்து பாடும்—திவ்யப் பிரபந்தமாம்.

அறுசீர் கொண்டது—'குறுந் தாண்டக'மென்றும், எண்சீர் கொண்டது—'நெடுந்தாண்டக'மென்றும் வழங்கப்படும்.

திருக்குறுந்தாண்டகத்தில் திருவேங்கடமுடையான் விஷயமாக ஒரு பாசுரம் அமைந்திருக்கின்றது.

(7.) இந்தப் பாசுரத்தில்— ஆழ்வார் எம்பெருமான், சீல குணத்தில் ஈடுபட்டு, அதனையே எப்போதும் நினைக்க வல்லவர்களான தொண்டர்களே என் தலைமிசை மன்னுதற்கு உரியார்—என்று அருளிச் செய்கிறார்.

அறுசீர் விருத்தம்.

இம்மையை மறுமை தன்னை எமக்குவீ டாகி நின்ற
மெய்ம்மையை விரிந்த சோலை வியன்திரு வரங்கம் மேய
செம்மையைக் கருமை தன்னைத் திருமலை யொருமை யானைத்
தன்மையை நினைவார் என்தன் தலைமிசை மன்னு வாரே. 7.

பதவுரை :—எமக்கு - நமக்கு. இம்மை - இவ்வுலகத்து இன்பத்தைத் தருமவனும். மறுமை தன்னை - பரலோக இன்பத்தைத் தருமவனும். வீடு ஆகி நின்ற மெய்ம்மையை - உண்மையான மோக்ஷோபாயமா யிருப்பவனும். விரிந்த சோலை - பரந்த சோலைகளை யுடையதாய். வியன் - ஆச்சர்யமயமான. திரு அரங்கம் - ஸ்ரீரங்கத்திலே. மேய - நித்ய வாஸம் பண்ணுமவனும். செம்மையை கருமை தன்னை - யுக பேதத்தாலே செந்நிறத்தையும், கருநிறத்தையும் கொண்டுள்ளவனும். திருமலை - திருவேங்கடமலையிலே. ஒருமை யானை - (நின்று கொண்டு, மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும்) ஒருமைப் பட்டிருப்பவனுமான எம்பெருமானுடைய. தன்மையை - சீலத்தை. நினைவார் - நினைக்க வல்லவர்கள். என்தன் - என்னுடைய. தலைமிசை - தலையிலே. மன்னுவார் - பொருந்தத் தக்கவர்கள்.

கருத்து :—இந்த உலகத்திலேயே தன்னைப் பற்றின ஞான விகாஸத்தை யுண்டாக்கி இன்பம் பயந்தும், பரலோகத்திலே நித்ய கைங்கர்யத்திலே மூட்டி இன்பம் பயந்தும், அடியார்களை வாழ்விப்பவனும், கீழ்ச் சொன்ன பிராப்யங்களுக்கு உண்மையான ப்ராபகனா யிருப்பவனும், பரந்த சோலைகளை யுடைத்தாய், மிகவும் ஆச்சர்யகரமான திருவரங்கத்திலே நித்ய வாஸம் பண்ணுமவனும், யுகபேதத்தாலே செந் நிறத்தையும், கரு நிறத்தையும் கொண்டு ஆச்சரிய குண சேஷ்டிதனா யிருப்பவனும், பரம போக்யமான திருவேங்கடமலையிலே நின்று கொண்டு, மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் ஒருமைப்

பட்டிருப்பவனுமான எம்பெருமானுடைய ஸௌசீல்ய குணத்தையே
('சிறந்தவன்' 'தாழ்ந்தவன்'—என்று வேறுபாடில்லாமல் எல்லா
ரோடும் கலந்து பரிமாறும் மஹா குணத்தை) எப்போதும் ஸந்தோஷ
ஆச்சர்ய அபிநிவேசங்களோடு அநுஸந்திக்கும் பரம பாகவதோத்த
மர்களே—அடியேன் தலைமிசை மன்னுதற்கு உரியார்கள்.

குறிப்பு :—செம்மையைக் கருமை தன்னை—உபாஸகாநுக்ரஹார்த்த
மாக எம்பெருமான் ஒவ்வொரு யுகத்திலும், ஒவ்வொரு நிறத்தைக் கொள்
வன்; க்ருத யுகத்திலுள்ளவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர்களாய், சுத்தமான
நிறத்தை உகக்குமவர்களாகையாலே, அவர்களுக்காகப் பால்போன்ற நிறத்
தைக் கொள்வான்; த்ரேதா யுகத்திலே சிவந்த நிறத்தைக் கொள்வன்;
த்வாபர யுகத்திலே பசுமை நிறத்தைக் கொள்வன்; கலி யுகத்திலே நீல
நிறத்தைக் கொள்வன்.

இதை "பாலினீர்மை செம்பொனீர்மை" என்ற திருச்சந்த விருத்தப்
பாசுரத்திலும், "நிகழ்ந்தாய் பால்பொன் பசுப்புக் கார்வண்ணம் நான்கும்"
என்ற நான்முகன் திருவந்தாதிப் பாசுரத்திலும், திருமழிசைப்பிரான் விளக்
கினார்; காண்க.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே பரகாலாய நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருநெடுந்தாண்டகம்.

---

அவதாரிகை :—"இந்தத் திருநெடுந்தாண்டக" திவ்ய ப்ரபந்தத்தில் திருவேங்கடமுடையான் விஷயமாக—மூன்று பாசுரங்கள் அமர்ந்துள்ளன.

(8). அவைகளில் இந்தப் பாசுரத்தில் பல திருப்பதிகளையும் வாயாரச் சொல்லிக் கதறுகிறார்—

**எண்சீர் விருத்தம்.**

நீரகத்தாய் நெடுவரையி னுச்சி மேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகா வுள்ளாய்!
உள்ளுவா ருள்ளத்தாய்! உலக மேத்தும்
காரகத்தாய்! கார்வானத் துள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேராதுஎன் னெஞ்சி னுள்ளாய்!
பெருமான்! உன் திருவடியே பேணி னேனே. 8.

பதவுரை :—நீரகத்தாய் - நீரகமென்னும் திருப்பதியில் உள்ளவனே! நெடுவரையின் - திருவேங்கடமலையின். உச்சி மேலாய் - சிகரத்திலே நித்ய வாஸம் பண்ணுமவனே! நிலாத் திங்கள் துண்டத்தாய் - நிலாத்துண்ட மேந்துகிற திருப்பதியிலுள்ளவனே! நிறைந்த - செழிப்பு நிறைந்த. கச்சி - காஞ்சீபுரத்திலே. ஊரகத்தாய் - திருவூரகமென்னும் திருப்பதியில் உள்ளவனே! ஒண் துறை நீர் - அழகிய நீர்த்துறையின் கரையிலே. வெஃகா - திருவெஃகாவில். உள்ளாய் - திருக்கண் வளர்ந்தருளுமவனே! உள்ளுவார் - சிந்திப்பாருடைய. உள்ளத்தாய் - நெஞ்சிலுறைபவனே! உலகம் - உலகமெல்லாம். ஏத்தும் - துதிக்கும்படியான. காரகத்தாய் - திருக்காரகமென்னும் திவ்ய தேசத்திலே யுள்ளவனே! கார் வானத்து - திருக்கார் வான

மென்னும் திருப்பதியிலே. உள்ளாய் - வஸித்திருப்பவனே! கள்வா - கள்வனே ; திருக்கள்வனூரில் வஸித்திருப்பவனே ! காமரு - விரும்பத்தக்க தாய். பூம் - அழகியதான. காவிரியின் திருக்காவேரியினது. தென்பால் - தென்புறத்திலே. மன்னு - பொருந்தியிருக்கிற. பேரகத்தாய் - திருப்பேர் நகரில் உறைபவனே ! என் - அடியேனது. நெஞ்சில் - ஹ்ருதயத்தில். போரது - போாமல். உள்ளாய் - இருப்பவனே! பெருமான் - ஸர்வ ஸ்வாமி யானவனே ! உன் திருவடியே - உனது திருவடிகளையே. பேணினேன் - ஆசைப்பட்டேன்.

கருத்து :—பரம கருணாமூர்த்தியான எம்பெருமானே ! 'திருநீரக' மென்னும் திருப்பதியிலும், 'திருவேங்கட' மலையின் உச்சியிலும், 'திருநிலாத் திங்கள்துண்ட' மென்கிற திருப்பதியிலும், செழிப்பு நிறைந்த காஞ்சிபுரத்தில் 'திருவூரக' மென்னுந் திருப் பதியிலும், அழகிய நீர்த் துறையின் கரையிலே இருக்கும் திருவெஃகாவிலும், யோகிகளின் ஹ்ருதய கமலங்களிலும், உலக மெல்லாம் துதிக்கும் 'திருக்காரகம்' என்னும் திவ்ய தேசத்திலும். 'திருக் கார்வான' மென்னும் திருப்பதியிலும், 'திருக்கள்வனூர்' என் கிற திவ்ய தேசத்திலும், விரும்பக் கூடியதாய், மிக்க அழகாயிருக் கும் திருக் காவேரியினது தென்புறத்திலே பொருந்தியிருக்கிற திருப் பேர் நகரிலும், உகந்து வஸிப்பதுபோல் அடியேனது நெஞ்சகத் திலும் போாமல் பொருந்தியிருக்கிறாய். ஆஹா ! என்ன உனது ஸௌசீல்யம், வாத்ஸல்யம், காருண்யம் ?

எம்பிரானே ! அடியேன் உனது திருவடிகளையே ஆசைப்படா நின்றேன், அருள்புரிவாயாக.

குறிப்பு :—1. நீரகம்—'திருநீரக'மென்னும் திவ்ய தேசம், கச்சிமா நகரில் திருவூரகமென்று ப்ரஸித்தமான ஸ்ரீ உலகளந்த பெருமாள் ஸந்நிதியில் இருக்கிறது. நீரின் இயல்பையுடைய எம்பெருமானது இருப்பிடமாகையால் 'நீரக'மென்று திருநாமம் வந்தது என்பர்.

2. நெடுவரை—மேலுள்ள உலகங்களிலுள்ளாரும் வந்து ஸேவிக்கும் படி ஓங்கியுள்ள மலை திருவேங்கடமே யாம் ; ஆகையால்தான், 'திருமலை' என்றே அதற்கு நிரூபக நாமமாயிற்று.

3. நிலாத் திங்கள் துண்டம்—இது பெரிய காஞ்சிபுரத்தில் தேவ ராஜ ஆலயத்தினுள் உள்ளது.

4. ஊரகம்—உலகளந்த பெருமாள் ஸந்நிதி. உரக ரூபியாய் எம்பெரு மான் இங்கே ஸேவை ஸாதித்தபடியால், இதற்கு 'ஊரக'மென்று திருநாமம் வந்தது—என்பர்.

5. வெஃகா—யதோக்தகாரி ஸந்நிதி; பிரமன் செய்த யாகத்தை யழிக்க வந்த 'வேகவதி' நதியைத் தடுத்தற் பொருட்டு, அதற்கு அணையாகக் குறுக்கிற் பள்ளிகொண் டருளினதால் 'வேகா ஸேது' என்று வடமொழியில் எம்பெருமானுக்குப் பெயர் வந்தது. அதுதமிழில் 'வேகணை' என்று மொழி பெயர்ந்து, 'வேகணை' என்று விகாரப்பட்டு, அது 'வெஃகணை' எனத் திரிந்து, பின்பு 'வெஃகா'வாகித் திருப்பதியைக் குறிக்கும்.

6. காரகம்—இந்தத் திவ்ய தேசமும் கச்சிமா நகரில் உலகளந்த பெருமாள் ஸந்நிதியில் உள்ளது. மேகத்தின் ஸ்வபாவம், இத் தலத்திலுள்ள எம்பெருமானுக்கு மிருப்பதால் இந்தப் பெயர் வந்தது.

7. கார்வனம்—இந்தத் திவ்ய தேசமும்—உலகளந்த பெருமாள் ஸந்நிதியில் உள்ளடங்கிய திவ்ய தேசங்கள்—ஊரகம், நீரகம், காரகம், கார்வனம்—என்ற நான்கில், ஒன்று.

8. கள்வா—திருக்கள்வனூர். பிறர் அறியாதபடி காரியம் செய்வது கள்ளத்தனம். எம்பெருமான், 'இராமட மூட்டுவாரைப்போலே உள்ளே பதி கிடந்து ஸத்தையை நோக்கிக் கொண்டு போரு'கிறவனுகையாலே கள்வனெனப்படுவான்.

9. பேரகம்—'திருப்பேர் நகர்' என்கிற அப்பக்குடத்தான் ஸந்நிதி.

(9). அவதாரிகை :—எம்பெருமானே! திவ்ய திருப்பதிகளில் நீ கோயில் கொண்டிருக்கு மழகையும், உனது திருமேனியில் அஹங்காரிகளுக்கும் இடங் கொடுத்திருக்கும் சீலத்தையும் வாய் வெருவிக் கொண்டு திரிவேன்—என்று அருளிச் செய்கிறார்.

வங்கத்தால் மாமணிவந் துந்து முந்நீர்
மல்லையாய்! மதிள்கச்சி யூராய்! பேராய்!
கொங்கத்தார் வளங்கொன்றை யலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின் மேலாய்!
பனிவரையி னுச்சியாய்! பவள வண்ணா!
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்ஙனமே உழிதரு கேனே.

பதவுரை :—வங்கத்தால் - கப்பல்களினால். மா மணி - சிறந்த ரத்னங்களை. வந்து - கொண்டு வந்து. உந்து - தள்ளுமிடமான. முந்நீர் - கடற்கரையிலுள்ள. மல்லையாய் - திருக்கடன் மல்லையில் வாழ்பவனே. மதிள் கச்சி - உயர்ந்த திருமதிள்களால் சூழப்பட்ட திருக்கச்சிமா நகரில்

வெஃகாவில்) உறைப்பவனே! பேராய் - திருப்பேர் நகரானே! கொங்கு ஆர் - தேன் நிறைந்ததும். வளம் - செவ்வி பெற்றதுமான. கொன்றை அலங்கல் - கொன்றை மாலையை. மார்பன் - மார்பிலே யுடையவனும். நலம் வரையின் மலைகளுக்கு - ராஜாவான இமயமலையின். மடப்பாவை - பெண்ணான பார்வதியை. இடப்பால் - தனது இடது பக்கத்தில். கொண் டான் - வைத்துக் கொண்டிருக்கும் சிவபிரானை. பங்கத்தாய் - (தனது வலது) பக்கத்தில் வைத்துக் கொண்டு உவந்திருக்குமவனே! பால் கடலாய் - திருப்பாற் கடலில் கண்வளர்ந்தருள்பவனே! பாரின் மேலாய் - பூமியில் ராம க்ருஷ்ணாதி ரூபங்களை எடுத்துக் கொண்டு) ஸஞ்சரித்தவனே! பனி வரையின் - குளிர்ச்சியே வடிவான திருவேங்கட மலையின். உச்சியாய் - சிகா க்ரத்திலே எழுந்தருளி யிருப்பவனே! எங்கு உற்றாய் - எங்கிருக்கிறாய். பவள வண்ணா - திருப்பவள வண்ணனே! எம்பெருமான் - எனக்கு ஸ்வாமி யானவனே! ஏழையேன் - மிகவும் சபலனாகிய அடியேன். உன்னை நாடி - உன்னை தேடிக் கொண்டு. இங்ஙனமே - இவ்வண்ணமாகவே. உழிதருகின் றேன் - அலைச்சல் படாநின்றேன்.

கருத்து:—சிறந்த ரத்னங்களைக் கப்பல்களினால் கொண்டு வந்து தள்ளுமிடமான கடற்கரையிலுள்ள திருக்கடல் மல்லையிலும், உயர்ந்த மதிள்களால் சூழப்பட்ட திருக்கச்சி மாநகரிலும், திருப்பேர் நகரத்தி லும் வாழ்பவனும், தேன் நிறைந்து செவ்வி பெற்ற கொன்றை மாலையைத் திருமார்பிலே தரித்துப் பர்வத ராஜ புத்ரியான பார்வதி யைத் தனது இடது பக்கமாகக் கொண்ட சிவபிரானை, வலது பக்கத்தில் உடையவனும், திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருப்ப வனும், ராம க்ருஷ்ணாதி ரூபியாய், பூமியில் ஸகல மநுஜ நயந கோசர னாய் ஸஞ்சரித்தவனும், குளிர்ச்சியே வடிவான திருவேங்கடமலை யின் சிரோ பூஷணமா யிருக்குமவனுமான எம்பெருமானே! நீ எங்கே யிருக்கிறாய்? திருப்பவள வண்ணனே! கண்ணனே! எம் பிரானே! மிகவும் சபலனாகிய அடியேன் இவ் வண்ணமாகவே அலைச்சல் படாநின்றேன்; க்ருபை செய்தருளாயே.

குறிப்பு:—திருக்கடல் மல்லைத் தலசாயிப் பெருமானைப்பற்றின வரலாறு ஒன்று இருக்கிறது:—

புண்டரீகர்—என்கிற ஒரு பரம பாகவதர், கடலின் இக்கரையிலே ஒரு பெரிய நந்தவனத்தை ஏற்படுத்தி, அதில் சிறந்த புஷ்பங்களை யுண்டாக்கி, அவற்றை மாலையாகத் தொடுத்து, கடலில் பள்ளிகொண்டிருக்கும் எம்பெரு மானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்று பாரித்தார்; கடலைக் கண்டு, 'இக் கடலைக் கையாலே இறைத்துவிட்டு, வெறுந்தரையாக்கி, நடந்தே செல்லுவோ'

மென்று துணிந்து கடலை இறைக்கத் தொடங்கினர். எம்பெருமான்—அவருடைய பக்தி விசேஷத்தைக் கண்டு, வியந்து, உவந்து, தானே கடற்கரையில் ஓடிவந்து, அவரது தோப்பிலே தரைக்கிடை கிடந்து, அவருடைய வழிபாடுகளை ஸ்வீகரித்தருளினன்—என்று.

(16.) அவதாரிகை :—என் மகள் பரகால நாயகியானவள், தனது நாயகன் எதிரே நிற்கிருளுக நினைத்து, மென் கிளிபோல் வார்த்தை சொல்லவும், நாயகன் மறுமாற்றமொன்றும் சொல்லாததினுல், நின்ற நிலைகுலைந்து, கூப்பாடுபோடத் தொடங்கினுள்—என்று அவளது திருத் தாயார் சொல்லுகிருள்.

கன்றுமேய்த்து இனிதுகந்த காளாய்! என்றும்
கடிபொழில்சூழ் கணபுரத்துஎன் கனியே! என்றும்
மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும்
வடதிருவேங் கடமேய மைந்தா! என்றும்
வென்றசுரர் குலம்களைந்த வேந்தே! என்றும்
விரிபொழில்சூழ் திருநறையூர் நின்ருய்! என்றும்
துன்றுகுழல் கருநிறத்து என்துணையே! என்றும்
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின் ருளே. 16

பதவுரை :—(என் மகள்) கன்று மேய்த்து - கன்றுகளை மேய்த்து. இனிது உகந்த - மிகவும் மகிழ்ச்சி கொண்ட. காளாய் என்றும் - இளையோனே! என்றும். கடி பொழில் சூழ் - பரிமளம் மிக்க சோலைகளாலே சூழப்பட்ட. கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே (பழுத்த). என் கனியே என்றும் - என் பழமே யென்றும். மன்று அமர - வீதியார. கூத்து ஆடி - குடக் கூத்தாடி. மகிழ்ந்தாய் என்றும் - மகிழ்ந்தவனே என்றும். வட திருவேங்கடம் மேய - வடக்கே யிருக்கும் திருவேங்கடமலையில் பொருந்தி வாழ்கின்ற. மைந்தா என்றும் - நித்ய யுவாவே! என்றும். அசுரர் குலம் - அசுரக் கூட்டங்களை. வென்று - ஜயித்து. களைந்த - வேரோடே ஒழித்த. வேந்தே என்றும் - வேந்தனே! என்றும். விரி பொழில் சூழ் - விரிந்த சோலைகளோடு சூழப்பட்ட. திருநறையூர் - திருநறையூரிலே. நின்ருய் என்றும் - நின்றருளுமவனே என்றும். துன்று - அடர்ந்திருக்கிற. குழல் - திருக்குழற்கற்றையையும். கரு நிறத்து - கருத்த திருமேனியை யுடையவனாய். என் துணையே என்றும் - அடியேனுக்குத் துணையானவனே! என்றும் சொல்லிக் கொண்டு. துணை முலைமேல் - ஒன்ருேடொன் ருெத்த தனங்களின் மேல். துளி சோர - கண்ணீர் துளிகள் பெருகும்படியாக. சோர்கின்ருள் - தளர்கின்ருள்.

கருத்து :—என் மகள் (பரகால நாயகி) "எம்பெருமானுடைய ரக்ஷகத்வமும், காருண்யமும், ஸௌலப்யமும், ஸௌசீல்யமும் பாவியேனிடத்தில் பலிக்கவில்லையே!" என்று கண்ணுங் கண்ணீருமாய்க் கதறுகின்றாள் :—

"கன்றுகளை மேய்த்து மிகவும் மகிழ்ச்சிப்பெற்ற இளையோனே! ஸர்வ ரக்ஷகனை நீ என் ரக்ஷண கார்யத்தில்நின்றும் கை வாங்கினாயோ? அவ்வவ்வக் காலங்களில் பிற்பட்டாரையும் ரக்ஷிக்கைக்காகவன்றோ, நீ திருக்கண்ணபுரத்தில் வந்து இனிய கனிபோல் நின்றருளுகிறாய். அம்பலத்திலே அவல்பொரி அவிழ்ப்பாரைப் போலே ஸமுதாய ஸ்தலத்திலே ஸர்வஸ்வதானம் பண்ணினாயல்லையோ நீ?

ஒரு ஊரிலே மன்றிலே நின்று கொள்ளை கொடுத்தது மாத்திரமன்றியே, திருவேங்கடத்திலே நின்று உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசியற, அனைவரும் கொள்ளை கொள்ளும்படியான உனது வடிவு எனக்கு அரிதாயிற்றே! அஸுர ராக்ஷஸர்களின் கூட்டங்களைக் கழங்கெடுத்து வெற்றி பெற்ற பெரு வீரனாய், நீ விளங்கும் போதும், நான் இழக்கிறேனே!

வென்று அசுரர் குலங்களைக் களைந்த அவதாரங்களிலும் இழந்தவர்களுக்கும் முகங் கொடுப்பதற்காக திருநறையூரிலே வந்து நின்றருளுமவனே! பிராட்டி பக்கலிலே பிச்சேறித் தன்னூரை அவள் பெயராலே ப்ரஸித்தப்படுத்தி (நாச்சியார் கோவில் என்னும் திருநாமத்தாலே விளங்கச் செய்திற்று) ஒருத்திக்கு கைவழி மண்ணாயிருப்பவனை நீ, இன்னொருத்தியைமட்டும் விஷமாக நினைக்கக் கூடுமா?

மிகவும் நெருங்கி இருண்டிருக்கின்ற திருக்குழல் கற்றையும் காளமேகம் போன்ற வடிவையுமுடைய என்துணைவனே! உன்மீது காதற்கொண்டு வருந்தி பிதற்றும் அடிச்சியை இப்படி உதாஸித்திருப்பது உனக்கு ந்யாயமா?"

என்று இப்படியெல்லாம் சொல்லா நின்று கொண்டு, தன் ஆற்றாமைக்கு ஒரு போக்கடி காணாமையாலே 'கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச், சோர்ந்தாளாயிற்று.

குறிப்பு :—1. கன்று மேய்த் தினிதுகந்த காளாய்! என்று சொல்லித் துணை முலைமேல் துளிசோரச் சோர்கின்றாள்; கடி பொழில்சூழ் கண்ணபுரத் தென்கனியே! என்று சொல்லித் துணை முலைமேல் துளிசோரச் சோர்கின்றாள்—என்று தனித் தனியே கூட்டி உரைத்துக் கொள்ளலாம்.

2. மன்று—நாற்சந்தி. அஃது அமர கூத்தாடுகையாவது—கூத்தாடி முடிந்த பின்பும், அவ்விடம் கூத்தாடுவது போலேயே காணப்படுகையாம். "பெருமாள் எழுந்தருளிப் புக்க திருவீதி போலே காண், திருவாய்ப்பாடியில் அம்பல மிருந்தது" என்று ஸ்ரீ பட்டர் பணிக்கும்படி.

3. மகிழ்ந்தாய்—"கூத்துக் கண்டவர்கள் உகக்கை யன்றியே, உகப்பானும் தானுயிருக்கை; அவர்களை தன் கூத்தாலே எழுதிக் கொள்வானும் தானாய்; உகப்பானும் தானுயிருக்கிறபடி"—என்று ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்தார். ஸஜாதீயர்களை ஈடுபடுத்திக் கொள்ளப் பெற்றோம்—என்று உகந்தவனுயிற்று.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே பரகாலாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ திருமங்கைமன்னன் அருளிச்செய்த சிறிய திருமடலும், பெரிய திருமடலும்.

## (சிறிய திருமடல்.)

---

அவதாரிகை :—எம்பெருமானிடத்தில் ஆழ்வாருக்கு பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலைத் தூக்கினவாறே, காதல் மிகுதியாலே ஒரு நாயகியின் தன்மையை யடைந்து, பாஹ்யஸம்ச்லேஷாபேக்ஷை பிறந்து, அது கிடைக்காமையாலே "இத்தலையை யழித்தாகிலும், முகங் காட்டுவித்துக் கொள்வோம்" என்று நிச்சயித்து, க்ருஷ்ணாவதாரத்திலே குடக் கூத்திலே யகப்பட்டு, அவனைக் கிடையாமை யாலே மடலெடுக்கத் துணிந்தாளொரு பிராட்டியுடைய பாசுரத் திலே தனது க்லேசத்தைத் தெரியப் படுத்துகிறார் இந்த—சிறியதிரு மடல் ப்ரபந்தத்தாலே.

(69.) அவதாரிகை :—அதில் இந்த பாசுரத்தில் இவளுடைய உத்யோகத்தைக் கண்ட தோழி, நீ காணும்படி யென்னென்ன? அவன் குணங்கள் கொண்டாடி யிருக்கும் தேசமெங்கும் புக்கு, என் வடிவைக்காட்டி, அவன் குணத்தை யழித்து பெறக்கடவேன்— என்று பதில் சொல்லுகிறாள்—

................................................................................

சீரார் திருவேங்கடமே.......................................... 69

பதவுரை :—சீர் ஆர் - மண்ணோர்க்கும், விண்ணோர்க்கும் அநுபவிக்கத் தக்க போக்யதையோடு நிறைந்த. திருவேங்கடமே - திருவேங்கட மலையே.

கருத்து :—நித்ய ஸூரிகளுக்கும், ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங் கொடுத்துக் கொண்டு நிற்கிற நிலையாயுள்ள வேற்ற முண்டிறே திருமலைக்கு ; அங்கே சென்று என் வடிவைக் காட்டி அவன் உபய விபூதிக்கும் ஆகாரதபடி பண்ணுகிறேன்.

குறிப்பு :—மடலாவது—தலைவியும், தலைவனும் ஒத்த பருவத்தாராய், புருஷ லக்ஷணங்களான—அறிவு, நிறைவு, ஓர்ப்பு, கடைபிடி—என்கிற குணங்களாலே அவனும், ஸ்திரீ லக்ஷணங்களான—நாண், மடம், அச்சம், பயிர்ப்பு—என்கிற குணங்களாலே இவளும் பூர்ணையாய், இருவரும் குறைவற்றவர்களாயிருக்க, தோழிமாரும் தானுமாக உத்யானத்திலே பூக்கொய்யவென்று புறப்பட, அவனும் வேட்டைக்கென்று புறப்பட்டு சோலையிலே புகுர, தைவயோகத்தாலே கூடினதாகையாலே உயிர்த் தோழியுங்கூட அந்யபரையானவளவிலே, இருவருக்கும் த்ருஷ்டிபந்தம் பிறந்து, அதுவே யடியாக கலவி நேரிட, நற்கெடு வரக் கூடாதென்று நினைத்து தைவம் இவர்களை பிரிக்க, இவர்களுடைய பந்துக்களும், இருவர் வடிவிலேயும் வேறுபாடு கண்டு இருவரையும் காவல் செய்ய, அதுவே அடியாக இவர்களுடைய ஆற்றாமை சதசாகமாகப் பணைக்க, எதிர்த் தலையைக் கிடையாமையாலே, மற்றைத் தலை செய்யும்—துணிச்சலானச் செயல்.

ஆழ்வார்கள்—தங்கள் துணிவைச் சொல்லவே, அவன் வருமென்று சொல்லுகிறார்கள் அத்தனையல்லது, மடலெடுக்கிறார்களல்லர். இவர்கள் ஆற்றமாட்டாதே வழியல்லா வழி போயாகிலும் பெற வேணுமென்று மேல் விழுகிறார்கள். ஆகையால், இது அநுபபன்னமன்று.

## (பெரிய திருமடல்.)

..................................................................

தென்ன னுயர்பொருப்பும் தெய்வ வடமலையும். 6

பதவுரை :—தென்னன் - தென் நாட்டரசர்களதான. உயர் - உயர்ந்த. பொருப்பும் - 'திருமாலிருஞ் சோலையென்னும்' பர்வதமும். தெய்வம் ' தேவதைகளபிமானித்த. வட மலையும் - வட திக்கிலுள்ள 'திருவேங்கட - மென்னும் திருமலையும்.

கருத்து :—ஆகாசத்திலே சஞ்சரிக்கின்ற நக்ஷத்திரங்களாகிற பூக்களினாலே கட்டப்பட்ட மாலையோடே இணங்கினவளாய், மேகங்களாகிற மயிர்முடியை யுடையவளாய், தென் நாட்டரசர்களதான உயர்ந்த திருமாலிருஞ் சோலையையும், தேவதைகள் அபிமானிக்கும் வடதிருவேங்கட மலையையும் இரண்டு ஸ்தநங்களாக உடையவளாய்—பூ பிராட்டி யிருக்கிறாள்—என்று கருத்து.

.....................................................................

மின்னி மழைதவழும் வேங்கடத்துளெம் வித்தகனை. 124

பதவுரை :—மழை - மேகமானது. மின்னி - மின்னிக் கொண்டு. தவழும் - எப்போதும் ஸஞ்சரிக்கின்ற. வேங்கடத்து - திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற. எம் வித்தகனை - எங்கள் உபகாரகனாயிருக்குமவனை.

கருத்து :—மேக மானது மின்னுகிற கை விளக்கைக் கொண்டு குச்சி வழியே புக்கு திருவாராதனம் பண்ண விருக்கிற ஆச்சார்ய பூதனாய் எழுந்தருளியிருக்கும் எங்கள் உபகாரகனை திருவேங்கடமுடையானை.

திருவேங்கடமுடையான் மங்களாசாஸன பாசுரங்கள் முற்றிற்று.

ஸ்ரீ திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார், எம்பெருமானர், ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அநுபந்தம் 1.

## மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கள் திருவாய்மலர்ந்தருளிய திருவேங்கடமுடையான் மங்களாசாஸந பாசுரங்களின்.

# செய்யுள் அகராதி.

[பண், ராகம், தாளம்—முதலியன விவரமும்]

---

| செய்யுள் | ராகம் | தாளம் | பக்கம் |
|---|---|---|---|
| *அகலகில்லேன் (திருவாய் 6-10-10) | நாதநாமக்ரியை † பழம் பஞ்சுரம் | ஆதி ‡ ஏழொத்து | 27 |
| *அடிக்கீழமர்ந்து (திருவாய் 6-10-11) | ,, | ,, | 29 |
| அடியேன் மேவி (திருவாய் 6-10-7) | ,, | ,, | 23 |
| அண்ணல் மாயன் (திருவாய் 3-3-3) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்கராகம் | அட ‡ ஏழொத்து | 6 |
| அன்றிய வாணன் (பெரிய திரு. 4-3-8) | பந்துவராளி | அட | 213 |
| *அமலனாதிபிரான் (அமலனாதிபிரான் 1) | யமுனா கல்யாணி | திரிபுட | 208 |
| அம்பரம் அனல் (பெரிய திரு. 1-8-8) | ,, | ,, | 61 |

* இவை இரண்டுதரம் அநுஸந்திக்கத்தக்கவை.

† இது பண்ணைக் குறிக்கிறது.

‡ இது பழைய தாளத்தைக் குறிக்கிறது.

| | | | |
|---|---|---|---|
| *அருவிசோர் வேங்கடம் (பெரிய திரு. 8-2-3) | ஸைந்தவி | அட | 224 |
| அழைப்பன் திருவேங்கட (நான்முகன் திரு. 39) | அடாணு | அட | 137 |
| ஆங்குவெந் நரகத்து (பெரிய திரு. 7-3-5) | மோஹந | ரூபக | 221 |
| ஆளுத செல்வத்து (பெருமாள் திரு. 4-2) | தன்யாசி | த்ரிபுட | 34 |
| ஆவா என்ளுது (திருவாய் 6-10-4) | நாதநாமகிரியை † பழம் பஞ்சுரம் | ஆதி ‡ எழொத்து | 20 |
| இடந்தது பூமி (1 திருவந்தாதி 39) | ஸஹாணு | த்ரிபுட | 100 |
| இடம் வலமேழ் (3 திருவந்தாதி 73) | மோஹந | ,, | 131 |
| இண்டை யாயினகொண்டு (பெரிய திரு. 2-1-3) | ஆநந்தபைரவி | ரூபக | 86 |
| இன்றிப் போக (திருவாய் 9-3-8) | கேதார † நட்டபாஷை | ‡ எழொத்து | 180 |
| இம்மையை மறுமை (திருக்குறுந்தாண்டகம் 7) | தோடி | ரூபகம் | 234 |
| இறையாய் நிலனுகி (3 திருவந்தாதி 39) | மோஹந | த்ரிபுட | 120 |
| இலங்கைப் பதிக்கு (பெரிய திரு. 1-10-2) | நாதநாமகிரியை | ,, | 76 |
| இசைமின்கள் (திருவிருத்தம் 31) | பைரவி | ஜம்பை | 159 |
| ஈசன் வானவர்கு (திருவாய் 3-3-4) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க | அட ‡ எழொத்து | 7 |
| உணர்வாரார் (1 திருவந்தாதி 68) | ஸஹநா | த்ரிபுடை | 102 |
| உண்டாய் உறிமேல் (பெரிய திரு. 1-10-4) | நாதநாமக்ரியை | ,, | 78 |

| | | | |
|---|---|---|---|
| உம்பருலகாண்டு (பெருமாள் திரு. 4-10) | தந்யாசி | ,, | 41 |
| உறவு சுற்றம் (பெரிய திரு. 2-1-2) | ஆநந்த பைரவி | ரூபக | 85 |
| உறுகின்ற கன்மங்கள் (திருவிருத்தம் 81) | பைரவி | ஜம்பை | 164 |
| *உலகமுண்ட (திருவாய் 6-10-1) | நாதநாமக்ரியை † பழம் பஞ்சுரம் | ஆதி ‡ எழொத்து | 16 |
| உளதென் றிறுமாவார் (2 திருவந்தாதி 45) | பைரவி | த்ரிபுடை | 110 |
| *உளன் கண்டாய் (1 திருவந்தாதி 99) | ஸஹாநா | ,, | 105 |
| உளன் கண்டாய் (3 திருவந்தாதி 40) | மோஹந | ,, | 121 |
| *ஊனேறு செல்வத்து (பெருமாள் திரு. 4-1) | தந்யாசி | ,, | 33 |
| ஊரும் வரியரவம் (1 திருவந்தாதி 38) | ஸஹாநா | ,, | 98 |
| எங்களுக்கு அருள் (பெரிய திரு. 7-10-3) | தோடி | அட | 223 |
| எண்திசைகளும் (பெரிய திரு. 1-8-6) | யமுனா கல்யாணி | த்ரிபுடை | 59 |
| எந்தாய் தண்திரு (திருவாய் 2-6-9) | ஆனந்த பைரவி † பழந்தக்க ராகம் | ஆதி ‡ எழொத்து | 170 |
| எந்நாளே நாம் (திருவாய் 6-10-6) | நாதநாமக்ரியை † பழம் பஞ்சுரம் | ,, | 22 |
| என்னிது மாயம் (பெரியாழ்வார் திரு. 1-8-8) | தேசிய | ஆதி | 185 |
| எந்தை தந்தை தந்தை (திருவாய் 3-3-2) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க ராகம் | அட ‡ எழொத்து | 5 |
| எப்பாவம் பலவும் (பெரிய திரு. 1-9-5) | முகாரி | அட | 69 |

| | | | |
|---|---|---|---|
| எழுவார் விடை கொள்வார் (1 திருவந்தாதி 26.) | ஸஹாநா | த்ரிபுடை | 97 |
| ஒண்பவள வேலை (பெருமாள் திரு. 4-4) | தந்யாசி | ,, | 36 |
| ஒண்ணுதல் மாமை (திருவிருத்தம் 50) | பைரவி | ஜம்பை | 160 |
| ஒளி வண்ணம் (நாச்சியார் திரு. 8-3) | துசாவந்தி | ஆதி | 45 |
| *ஒழிவில் காலம் (திருவாய் 3-3-1) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்காரகம் | அட ‡ எழொத்து | 4 |
| ஓயும் மூப்பு (திருவாய் 3-3-9) | ,, | ,, | 9 |
| *கட்டெழில் சோலை (திருவாய் 6-6-11) | காபீ † முதிர்ந்த குறிஞ்சி | ரூபக ‡ எழொத்து | 176 |
| கடியார் பொழிலணி (பெரியாழ்வார் திரு. 3-3-4) | ஸுருட்டி | ஆதி | 192 |
| கடைந்து பாற்கடல் (திருச்சந்த 81) | ஸுருட்டி | த்ரிபுடை | 152 |
| கண்ணன் மனத்துள்ளே (பெரிய திரு. 11-3-7) | ஸ்ரீராகம் | ரூபக | 229 |
| *கண்ணாய் ஏழுலகுக்கு (பெரிய திரு. 1-9-10) | முகாரி | அட | 73 |
| *கண்ணார் கடல்சூழ் (பெரிய திரு. 1-10-1) | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 75 |
| கண்ணாவான் என்றும் (திருவாய் 1-8-3) | தேசிய † இந்தளம் | ஆதி ‡ எழொத்து | 169 |
| *கன்று மேய்த்து (திருநெடுந்தாண்டகம் 16) | ஸாவேரி | ரூபக | 240 |
| கம்ப மதயானை (பெருமாள் திரு. 4-5) | தந்யாசி | த்ரிபுடை | 37 |
| கயலோ நும கண்கள் (திருவிருத்தம் 15) | பைரவி | ஜம்பை | 157 |

| | | | |
|---|---|---|---|
| கல்லும் கனைகடலும் (பெரிய திருவந்தாதி 68) | செஞ்சுருட்டி | ரூபக | 167 |
| களிறு முகில் (3 திருவந்தாதி 71) | மோஹந | த்ரிபுடை | 130 |
| *கள்ளத்தால் மாவலியை (பெரிய திரு. 11-5-10) | கண்டா ராகம் | ஆதி | 230 |
| *காட்டில் வேங்கடம் (நாச்சியார் திரு. 4-2) | கேதார | அட | 200 |
| காணலுறுகின்றேன் (நான்முகன் திரு. 41) | அடாணு | ,, | 140 |
| காண்கின்றனகளும் (திருவிருத்தம் 8) | பைரவி | ஜம்பை | 154 |
| கார்கலத்து (நாச்சியார் திரு. 8-8) | ஜுசாவந்தி | ஆதி | 51 |
| காவியும் நீலமும் (திருவிருத்தம் 67) | பைரவி | ஜம்பை | 163 |
| *குன்றமேந்தி (திருவாய் 3-3-8) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க | அட ‡ எழொத்து | 10 |
| குன்றொன்றினாய (3 திருவந்தாதி 72) | மோஹந | த்ரிபுடை | 130 |
| குறிப்பு எனக்கு (நான்முகன் திரு. 34) | அடாணு | அட | 136 |
| குலந்தானெத்தனையும் (பெரிய திரு. 1-9-4) | முகாரி | ,, | 68 |
| கூடியாடி யுரைத்ததே (பெரிய திரு. 2-1-9) | ஆனந்த பைரவி | ரூபக | 93 |
| கூறாய் நீறாய் (திருவாய் 6-10-2) | நாதநாமக்ரியை † பழஞ் பஞ்சுரம் | ஆதி ‡ எழொத்து | 17 |
| *கொங்கலர்ந்த மலர் (பெரிய திரு. 1-8-1) | யமுனா கல்யாணி | த்ரிபுடை | 54 |
| கொண்டு குடங்கால்மேல் (நான்முகன் திரு. 44) | அடாணு | அட | 142 |

| | | | |
|---|---|---|---|
| கொன்றேன் பல்லுயிரை (பெரிய திரு. 1-9-3) | முகாரி | ,, | 67 |
| தருக்கினால் சமண் (பெரிய திரு. 2-1-7) | ஆனந்த பைரவி | ரூபக | 90 |
| *தாயே தந்தை (பெரிய திருமொழி 1-9-1) | முகாரி | அட | 65 |
| *தாள் பரப்பி (திருவாய் 3-3-11) | ஸௌராஷ்ட்ர<br>† பழந்தக்க | அட<br>‡ எழொத்து | 13 |
| தாழ்சடையும் (3 திருவந்தாதி 63) | மோஹந | த்ரிபுடை | 126 |
| *திருமாலிருஞ்சோலை (திருவாய் 10-7-8) | தந்யாஸி<br>† தக்கேசி | ஆதி<br>‡ எழொத்து | 181 |
| துணிந்தது சிந்தை (2 திருவந்தாதி 33) | பைரவி | த்ரிபுடை | 109 |
| துவரியாடையர் (பெரிய திரு. 2-1-6) | ஆனந்த பைரவி | ரூபக | 89 |
| தூணாய் அதனூடு (பெரிய திரு. 1-10-5) | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 79 |
| தென்னனுயிர் பெருப்பும் (பெரிய திருமடல் 6) | ,, | ஆதி | 244 |
| தென்னிங்கை மன்னன் (பெரியாழ்வார் திரு. 2-6-9) | தேசீய ராகம் | ,, | 187 |
| தெரியேன் பாலகனாய் (பெரிய திரு. 1-9-7) | முகாரி | அட | 70 |
| தெளிந்த சிலாதலத்தில் (3 திருவந்தாதி 58) | மோஹந | த்ரிபுடை | 123 |
| *தையொரு திங்களும் (நாச்சியார் திரு. 1-1) | ஸாவேரி | ஆதி | 196 |
| *நங்கள் வரிவளை (திருவாய் 8-2-1) | செஞ்சுருட்டி<br>† கொல்லி | அட<br>‡ எழொத்து | 178 |
| நன்மணி வண்ணனூர் (நான்முகன் திரு. 47) | அடாணா | அட | 146 |

| | | | |
|---|---|---|---|
| *நாகத்தி னணையானை (நாச்சியார் திரு. 8-10) | ஜுசாவந்தி | ஆதி | 53 |
| நின்றமா மருதிற்று (பெரிய திரு. 1-8-3) | யமுனா கல்யாணி | த்ரிபுடை | 56 |
| *நீரகத்தாய் நெடுவரை (திருநெடுந்தாண்டகம் 8) | தோடி | த்ரிபுடை | 236 |
| நீரார் கடலும் (பெரிய திரு. 1-1C-3) | நாதநாமக்ரியை | ,, | 77 |
| நெறியார் குழற்கற்றை (2 திருவந்தாதி 53) | பைரவி | ,, | 111 |
| நோற்றேன் பல்பிறவி (பெரிய திரு. 1-9-8) | முகாரி | அட | 71 |
| நோலா தாற்றேன் (திருவாய் 6-10-8) | நாதநாமக்ரியை † பழம் பஞ்சுரம் | ஆதி ‡ எழொத்து | 24 |
| படையாரும் (1 திருவந்தாதி 82) | ஸஹானா | த்ரிபுடை | 105 |
| *பண்டெல்லாம் வேங்கடம் (3 திருவந்தாதி 61) | மோஹந | ,, | 124 |
| பண்ணுலா மென்மொழி (பெரிய திரு. 9-7-4) | தந்யாசி | ரூபக | 225 |
| பயின்றது அரங்கம் (2 திருவந்தாதி 46) | பைரவி | த்ரிபுடை | 111 |
| பற்பநாபன் உயர்வற (திருவாய் 2-7-11) | கல்யாணி † பழம் தக்க | ரூபக ‡ எழொத்து | 172 |
| பற்றேன் ஒன்றுமிலேன் (பெரிய திரு. 1-9-9) | முகாரி | அட | 72 |
| *பல்லாண்டு பல்லாண்டு (திருப்பல்லாண்டு 1) | நாட்டை † தோடயம் | ஜம்பை | 2 |
| *பள்ளியாவது (பெரிய திரு. 1-8-2) | யமுனா கல்யாணி | த்ரிபுடை | 55 |
| பாடும் குயில்காள் (நாச்சியார் திரு. 10-5) | காம்போதி | ,, | 204 |

| | | | |
|---|---|---|---|
| பாரும் நீர் (பெரிய திரு. 1-8-7) | யமுனா கல்யாணி | ,, | 60 |
| பார்த்த கடுவன் (3 திருவந்தாதி 68) | மோஹந | ,, | 127 |
| *பார்த்தற்காய் (பெரிய திரு. 1-8-4) | யமுனாகல்யாணி | ,, | 57 |
| பாற்கடலும் வேங்கடமும் (3 திருவந்தாதி 32) | மோஹந | ,, | 119 |
| பாவியாது செய்தாய் (பெரிய திரு. 2-1-4) | ஆநந்தபைரவி | ரூபக | 87 |
| பிந்நிட்ட சடையானும் (பெருமாள் திரு. 4-3) | தந்யாஸி | த்ரிபுடை | 35 |
| பிறையேறு சடையானும் (பெருமாள் திரு. 4-8) | ,, | ,, | 39 |
| புகுமதத்தால் வாய்பூசி (3 திருவந்தாதி 70) | மோஹந | ,, | 129 |
| புணரா நின்ற (திருவாய் 6-10-5) | நாதநாமக்ரியை † பழம்பஞ்சுரம் | ஆதி ‡ எழொத்து | 21 |
| புரிந்து மதவேழம் (3 திருவந்தாதி 45) | மோஹந | த்ரிபுடை | 122 |
| புரிந்து மலரிட்டு (நான்முகன் திரு. 45) | அடாணா | அட | 143 |
| பெருகு மதவேழம் (2 திருவந்தாதி 75) | பைரவி | த்ரிபுடை | 114 |
| பெருவில்பகழி (1 திருவந்தாதி 40) | ஸஹாநா | ,, | 101 |
| பேசுமின் திருநாமம் (பெரிய திரு, 1-8-9) | யமுனாகல்யாணி | ,, | 62 |
| பொங்கு போதியும் (பெரிய திரு. 2-1-5) | ஆநந்தபைரவி | ரூபக | 88 |
| *பொன்னை மாமணியை (பெரிய திரு. 10-1-2) | தர்பார் | அட | 228 |

| | | | |
|---|---|---|---|
| போகின்ற காலங்கள் (திருவாய் 2-6-10) | ஆநந்தபைரவி † பழந்தக்கராகம் | ஆதி ‡ எடுப்பு | 171 |
| போதர் கண்டாய் (பெரியாழ்வார் திரு. 2-9-6) | கேதாரகௌளை | ஆதி | 190 |
| போதறிந்து வாநரங்கள் (2 திருவந்தாதி 72) | பைரவி | த்ரிபுடை | 113 |
| மங்குல்தோய் சென்னி (நான்முகன் திரு. 43) | அடாணா | அட | 141 |
| மச்சொடு மாளிகை (பெரியாழ்வார் திரு. 2-7-3) | ,, | ரூபக | 188 |
| மண்ணாய் நீரெரிகால் (பெரிய திரு. 1-9-6) | முகாரி | அட | 70 |
| மத்தநன் னறுமலர் (நாச்சியார் திரு. 1-3) | ஸாவேரி | ஆதி | 198 |
| *மதயானை போல் (நாச்சியார் திரு. 8-9) | ஜுசாவந்தி | ,, | 52 |
| மனத்துள்ளான் (2 திருவந்தாதி 28) | பைரவி | த்ரிபுடை | 108 |
| *மந்திபாய் வடவேங்கட (அமலநாதிபிரான் 3) | யமுனாகல்யாணி | ,, | 211 |
| மன்னா இம்மனிச (பெரிய திரு. 1-10-6) | நாதநாமக்ரியை | ,, | 79 |
| *மன்னிய தண் (பெருமாள் திரு. 4-11) | தந்யாஸி | த்ரிபுடை | 42 |
| மழையே மழையே (நாச்சியார் திரு. 10-8) | காம்போதி | ,, | 205 |
| *மான் கொண்டதோல் (பெரிய திரு. 6-8-1) | பைரவி | ஜம்பை | 220 |
| மானேய் கண்மடவார் (பெரிய திரு. 1-9-2) | முகாரி | அட | 66 |
| மானேய் மடநோக்கி (பெரிய திரு. 1-10-7) | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 80 |

| | | | |
|---|---|---|---|
| மாமுத்த நிதிசோரியும் (நாச்சியார் திரு. 8-2) | துசாவந்தி | ஆதி | 44 |
| மாயோன் வடதிருவேங்கட (திருவிருத்தம் 10) | பைரவி | ஜம்பை | 155 |
| *மாரி மாருத (திருவாய் 4-5-11) | தோடி<br>† இந்தளம்-குறிஞ்சி | ரூபக<br>‡ ஒன்பதொத்து | 175 |
| மாற்பால் மனம் சுழிப்ப (3 திருவந்தாதி 14) | மோஹந | த்ரிபுட | 116 |
| மின்னனைய நுண்ணிடை (பெருமாள் திரு. 4-6) | தன்யாசி | த்ரிபுடை | 37 |
| மின்னுகத் தெழுகின்ற (நாச்சியார் திரு. 8-4) | துசாவந்தி | ஆதி | 46 |
| *மின்னி மழைதவழும் (பெரிய திருமடல் 124) | நாதநாமக்ரியை | ஆதி | 245 |
| *மின்னு மாமுகில் (பெரிய திரு. 2-1-10) | ஆநந்தபைரவி | ரூபக | 94 |
| முடிந்த பொழுதில் (3 திருவந்தாதி 89) | மோஹந | த்ரிபுடை | 133 |
| முலையோ முழுமுற்றும் (திருவிருத்தம் 60) | பைரவி | ஜம்பை | 161 |
| *மேயான் வேங்கடம் (திருவாய் 10-5-6) | வஸந்த<br>† நாட்டம் | ஆதி<br>‡ இடையொத்து | 181 |
| வகையறு நுண்கேள்வி (1 திருவந்தாதி 37) | ஸஹாநா | த்ரிபுடை | 98 |
| வங்கத்தால் மாமணி (திருநெடுந்தாண்டகம் 9) | சங்கராபரண | ஆதி | 23 |
| வண்கையான் (பெரிய திரு. 1-8-5) | யமுனாகல்யாணி | த்ரிபுடை | 58 |
| வண்ண மருள் கொள் (திருவாய் 6-10-3 | நாதநாமக்ரியை<br>† பழம் பஞ்சுரம் | ஆதி<br>‡ ஏழொத்து | 19 |
| வந்தாய் என் மனம் (பெரிய திரு. 1-10-9) | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 82 |

| | | | |
|---|---|---|---|
| வந்தாய் போலே | நாதநாமக்ரியை | ஆதி | 26 |
| (திருவாய் 6-10-9) | (பழம் பஞ்சுரம்) | (எழோத்து) | |
| *வலம்புரி யாழியானை | கமாஸ் | ரூபக | 227 |
| (பெரிய திரு. 9-9-9) | | | |
| வழி நின்று நின்னை | ஸஹாநா | த்ரிபுடை | 103 |
| (1 திருவந்தாதி 76) | | | |
| வான்கொண்டு | துசாவந்தி | ஆதி | 47 |
| (நாச்சியார் திரு. 8-5) | | | |
| *வானவர் தங்கள் | ஆநந்த பைரவி | ரூபக | 84 |
| (பெரிய திரு. 2-1-1) | | | |
| வாணுளு மாமதி | தந்யாசி | த்ரிபுடை | 38 |
| (பெருமாள் திரு. 4-7) | | | |
| வாம்பரி யுகமன்னர் | சங்கராபரணம் | ஆதி | 216 |
| (பெரிய திரு. 5-3-4) | | | |
| வார்புனல் அந்தணருவி | நாதநாமக்ரியை | அட | 173 |
| (திருவாய் 3-5-8) | † சீகாமரம் | ‡ இடைபொத்து | |
| விண்ணகரம் வெஃகா | மோஹந | த்ரிபுடை | 125 |
| (3 திருவந்தாதி 62) | | | |
| *விண்ணீல மேலாப்பு | துசாவந்தி | ஆதி | 44 |
| (நாச்சியார் திரு. 8-1) | | | |
| விண்மீ திருப்பாய் | ஸாவேரி | ஆதி | 177 |
| (திருவாய் 6-9-5) | † காந்த | ‡ எழொத்து | |
| *வில்லார் மலி | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 83 |
| (பெரிய திரு. 1-10-10) | | | |
| வீற்றிருந்து விண்ணாள் | அடாணா | அட | 148 |
| (நான்முகன் திரு. 90) | | | |
| *வெருவாதாள் | காம்போதி | ஆதி | 217 |
| (பெரிய திரு. 5-5-1) | | | |
| வெற்பென் றிருஞ்சோலை | பைரவி | த்ரிபுடை | 112 |
| (2 திருவந்தாதி 54) | | | |
| வெற்பென்று வேங்கடம் | மோஹந | ,, | 128 |
| (3 திருவந்தாதி 69) | | | |

| | | | |
|---|---|---|---|
| வெற்பென்று வேங்கடம் (நான்முகன் திரு. 40) | அடாணு | அட | 138 |
| வெள்ளை விளிசங்கு (நாச்சியார் திரு. 5-2) | ஆநந்த பைரவி | ஆதி | 202 |
| வேங்கடங்கள் (திருவாய் 3-3-6) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க | அட ‡ எழொத்து | 9 |
| வேங்கடமும் விண்ணகரும். (1 திருவந்தாதி 77) | ஸஹநா | த்ரிபுடை | 104 |
| வேங்கடமே விண்ணோர் (நான்முகன் திரு. 48) | அடாணு | அட | 147 |
| *வேடார் திருவேங்கடம் (பெரிய திரு. 4-7-5) | தேசிய ராகம் | ஆதி | 214 |
| வைத்த நாள்வரை (திருவாய் 3-3-10) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க | அட ‡ எழொத்து | 12 |
| வைப்பன் மணிவிளக்கா (நான்முகன் திரு. 46) | அடாணு | அட | 144 |
| *சங்கமாகடல் (நாச்சியார் திரு. 8-7) | ருசாவந்தி | ஆதி | 50 |
| சலங்கொடு (நாச்சியார் திரு. 8-6) | ,, | ,, | 49 |
| சாந்தகடுதேய்ப்ப (3 திருவந்தாதி 75) | மோஹந | த்ரிபுடை | 132 |
| சிந்தனையைத் தவநெறியை (பெரிய திரு. 5-6-7) | பைரவி | ரூபக | 219 |
| சிறந்த என்சிந்தையும் (3 திருவந்தாதி 26) | மோஹந | த்ரிபுடை | 117 |
| *சீரார் திருவேங்கடமே (சிறிய திருமடல் 69) | நாதநாமக்ரியை | ஆதி | 243 |
| சுமந்து மாமலர் (திருவாய் 3-3-7) | ஸௌராஷ்ட்ர † பழந்தக்க | அட ‡ எழொத்து | 9 |
| சுற்றும் ஒளிவட்டம் (பெரியாழ்வார் திரு. 1-4-3) | மோஹந | அட | 184 |

| | | | |
|---|---|---|---|
| *செங்கயல் திளைக்கும் (பெரிய திரு. 1-8 10) | யமுனகல்யாணி | த்ரிபுடை | 63 |
| *செடியாய வல்வினை (பெருமாள் திரு. 4-9) | தங்யாஸி | ,, | 40 |
| *சென்னியோங்கு (பெரியாழ்வார் திரு. 5-4-1) | ஸ்ரீராகம் | ,, | 94 |
| சென்றது இலங்கைமேல் (2 திருவந்தாதி 25) | பைரவி | ,, | 107 |
| சென்று வணங்குமினே (நான்முகன் திரு. 42) | அடாணு | அட | 140 |
| *செழும் கொழும் (திருச்சந்தவிருத்தம் 60) | தோடி | ஆதி | 150 |
| சேயன் அணியன் (பெரிய திரு. 1-10-8) | நாதநாமக்ரியை | த்ரிபுடை | 81 |
| சேயனணியன் (பெரிய திரு. 2-1-8) | ஆநந்த பைரவி | ரூபக | 92 |
| சேர்ந்த திருமால் (3 திருவந்தாதி 30) | மோஹந | த்ரிபுடை | 118 |
| *சொன்னால் விரோதம (திருவாய் 3-9-9) | ஸஹநா<br>† முதிர்ந்தகுறிஞ்சி | ஆதி<br>‡ எமொழுத்து | 174 |
| *சொல்லாய் பைங்கிளியே (பெரியதிரு .10-10-5) | பாசு | ஆதி | 224 |
| சோதியாகி (திருவாய் 3-3-5) | ஸௌராஷ்ட்ர<br>† பழந்தக்க | அட<br>‡ எமொழுத்து | 8 |

ஸ்ரீ:

# பாசுரங்களின் யாப்பிலக்கணம்.

---

குறள்வெண் செந்துறை.

இரண்டடியாய் விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் பெற்று வருவது.

நேரிசை வெண்பா.

வெண்டளையும் அளவடியும் பெற்று, ஈற்றடி சிந்தடியாய், நான்கடிகளை யுடையதாகி, இரண்டா மடியின் ஈற்றுச்சீர் தனிச்சொல்லாகி, இறுதியடி சிந்தடியாகி அதன் ஈற்றுச்சீர் காசு, பிறப்பு, நாள், மலர்—என்னும் வாய்பாடுகளுள் ஏற்ற ஒன்றைப்பெற்று ஒருவிகற்பமாயும் இருவிகற்பமாயும் செப்பலோசையிற் குன்றாமல் வருவது—நேரிசை வெண்பா. அளவடி—நாற்சீரடி, சிந்தடி—முச்சீரடி.

கலி வெண்பா.

கலிப்பா, வேற்றுத்தளைகள் விரவி, அளவடியாய்த் துள்ளலோசையும் இறுதியடி சிந்தடியுமாய், அடிவரையின்றி வருவது—கலிவெண்பா. இங்கு வந்துள்ள மடல்கள் முழுதும்—வெண்டளையியைந்து ஒரே எதுகைபெற்று அடிவரையறை யின்றி வந்துள்ள—கலி வெண்பாக்கள் ஆம்.

வெண்டுறை.

மூன்றடி முதல் ஏழு அடிவரையில் வரும். ஈற்றடிகளில் சில சீர்கள் குறைந்து வரும்; திருமங்கை மன்னன் பாசுரங்களில் 10-10-வது நான்கடிகளால் இயன்றும் மூன்றும் அடி நீண்டு ஏனைய அடிகள் குறைந்தும் வெண்பாவுக் கினமாய்த் தூங்கலோசையால் நின்றுள்ளது. அதனால், இது வெண்டுறை யாயிற்று.

வஞ்சித்துறை.

குறளடி நான்குகொண்டு தனியாய் முடிவது. குறளடி—இருசீரடி.

தரவு கொச்சகம்.

அளவடி நான்கு பெற்றுக்கலித்தளையும் சிறுபான்மை வெண்டளையும் பெற்றுத்தனித்து வருவது:

### கட்டளைக் கலித்துறை.

ஐந்தாம்சீர் விளங்காய்ச் சீராகி, வெண்டளை பொருந்தி, நெடிலடி நான்குகொண்டு ஏகாரத்தால் முடிவது. நேரிசை—முதலாகத் தொடங்கும் ஓரடிக்கு ஒற்றொழித்துப் பதினாறெழுத்துக்களும், நிரையசை—முதலாக வரும் ஓரடிக்கு ஒற்றொழித்துப் பதினேழெழுத்துக்களும் வரும் என்னும் கட்டளை யுள்ளமையால், கட்டளைக் கலித்துறை யெனப்படும்.

### கலிநிலைத்துறை.

நெடிலடி நான்குபெற்று அளவொத்து வருவது. நெடிலடி—ஐந்துசீர் உள்ள அடி.

### கலித்தாழிசை.

இத்துணை என்னும்வரை யில்லாத அடிகளைக் கொண்டு, அளவால் ஒத்தும் ஒவ்வாதும் நின்று ஈற்றடி ஏனைய அடிகளை விட நீண்டிசைப்பது.

### கலிவிருத்தம்.

நாற்சீரடி நான்காய் அளவு ஒத்து முடிவது.

### அறுசீர் விருத்தம்.

கழி நெடிலடி நான்கு அளவொத்து முடிவது—இதன் பொது யிலக்கணம். கழிநெடிலடி—ஐந்துக்கு மேற்பட்ட சீர்களை யுடைய அடி.

உலகமுண்ட; திருமாலிரும்; ‘ தையொரு. ’

இவை, மூன்றும் சீரும், ஆறும் சீரும், காயச்சீர்பெற்று ஏனைய நான்கு சீர்களும் இயற்சீர் கொண்டுள்ள நான்கடிகளால் அளவொத்து முடியும்—அறுசீர் விருத்தம்.

“ வார்புனல்; மச்சோடு; சென்னியோங்கு; வாம்பரி.”

இவை, பெரும்பாலும் இயற்சீரே கொண்ட அடிகள் நான்கு பெற்று அளவொத்து முடியும் அறுசீர் விருத்தங்கள்.

“ வெருவாதாள்.,’

இது, முதல் நான்குசீர்கள் காய்ச்சீரும், இறுதிச் சீர்கள் இரண்டும் மாச்சீர்களுமாக வந்த அறுசீர் விருத்தம்.

### எழுசீர்.

இங்கு எல்லா விருத்தங்களும்,—இயற்சீர்கள் ஏழுகொண்ட அடிவொத்த அடிகள் நான்குபெற்று வந்துள்ள— எழுசீர் விருத்தங்கள்.

### எண்சீர்.

" நங்கள்வரி; ' போதர்கண்டாய்; ஆங்குவெந்; பண்ணுலா."

இவை, இயற்சீர்கள எட்டுக்கொண்ட அடிகள் நான்குபெற்று அடிவொத்து முடியும் எண்சீர் விருத்தங்கள்.

" கன்றுமேய்த் தினிது " இது:—

முதலிருசீர்களும், ஐந்தாம்சீரும், ஆறும்சீரும் காய்ச்சீர் பெற்று மூன்று, நான்கு, ஏழு, எட்டு—ஆகிய சீர்கள் இயற்சீராய் அமைந்த அடிகள் நான்குபெற்று அளவொத்து முடியும்—எண்சீர் விருத்தம்.

### ஆசிரியத்துறை.

" எந்தாய்தண்; ' ' போகின்ற காலங்கள். "

ஆகிய இவை—முதலடியும் மூன்றாமடியும் ஏழு சீர்களும், இரண்டு, நான்கு—ஆகிய அடிகள் இரண்டும் ஐந்து சீர்களும் கொண்டு முடிந்த—ஆசிரியத் துறைகள்.

" அமலனாதிபிரான் " இது:—

ஈற்றலடி நீண்டு ஏனைய அடிகள் குறைந்து வந்த ஆசிரியத்துறை.

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்.